த. பா. நி. (க. வெ.) வரிசை எண்—31

# பிரிட்டன் வரலாறு

(கி.பி. 1714 – 1837)

(இரண்டாம் புத்தகம்)

ஆசிரியர்

டாக்டர் கி. ர. அநுமந்தன்,
எம்.ஏ., எம்.எஸ். (விஸ்கான்சின்), U.S.A., பிஎச்.டி.
தலைமைப் பேராசிரியர், வரலாற்றுத் துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—February, 1964
Revised Edition—November, 1969
Third Edition—September, 1972
Fourth Edition—March, 1976

T.N.T.B.S. (C. P.) No. 31


**Political and Constitutional History of England (A D. 1714-1837) Book II**

Dr. K. R. HANUMANTHAN

**Price Rs. 5-25**

'Published by the Tamilnadu Text book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

Printed out of the Paper allotted by the Government of India.

Printed by
Cauvery Printers
Madras—8.

# பதிப்புரை

பிரிட்டன் வரலாறு—II (கி.பி.1714-1837) என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 31 ஆவது வெளியீடாகும். இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின், இப்பொழுது இந் நூல் மீண்டும் வெளிவருகின்றது.

இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப்படுகிறது.

மேலாண்மை இயக்குநர்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்.

# தோற்றுவாய்

பிரிட்டன் வரலாற்றில், பதினெட்டாம் நூற்றூண்டிலும் ஓரளவு பத்தொன்பதாம் நூற்றூண்டிலும் ஏற்பட்ட முக்கிய அரசியல், சமுதாய, பொருளாதார வளர்ச்சிகளை விளக்குவதே இந் நூலின் நோக்கமாகும். ஹனோவரியர்கள் எனும் ஜெர் மானிய வம்சத்தார் இங்கிலாந்தை ஆளத்தொடங்கிய காலத்தி லிருந்து தொடங்கி, முதல் நான்கு ஜார்ஜுகளின் ஆட்சிக் காலத்தையும் நான்காம் வில்லியத்தின் ஆட்சிக் காலத்தையும் இந் நூல் விவரிக்கிறது. ஆங்கிலம் தெரியாத காரணத்தால் ஹனோவரிய அரசர்கள் எங்ஙனம் தம்மை அறியாமலேயே கட்சி ஆட்சி முறையையும், கேபினட் ஆட்சி முறையையும் வளர்த் தனர் என்பதையும், அதன் விளைவாக எங்ஙனம் விக்குகளும் டோரிகளும் நாட்டை முன்னேற்றப் பாதையில் நடாத்திச் சென்றனர் என்பதையும், தொழில், வேளாண்மை, அரசியல் சீர்திருத்தம் போன்ற துறைகளில் எங்ஙனம் பல புரட்சிகரமான மாறுதல்களை அன்னோர் விளைத்தனர் என்பதையும் இந் நூல் பரக்கக் கூறுகிறது. நான்காம் பதிப்பாக வெளிவரும் இந் நூலில் ஆங்காங்கே ஒருசில கருத்துகள் புதியனவாகச் சேர்க்கப் பட்டுள்ளன. ஒவ்வோர் அத்தியாயத்துக்கு முன்பும் கொடுக்கப் பட்டுள்ள குறிப்புகள் மாணவர்களுக்குப் பயன்தரக்கூடுமென நம்புகிறேன்.

கி. ர. அநுமந்தன்

# பொருளடக்கம்

பக்கம்

# அமைச்சரவைகளின் பட்டியல்

## விக்குக் கட்சியினரின் ஆட்சி (1714-1761)

| | | |
|---|---|---|
| ஸ்டான்ஹோப்-டவுன்செண்டு அமைச்சவை | ... | 1714-1717 |
| ஸ்டான்ஹோப் | ... | 1717-1721 |
| வால்போல் | ... | 1721-1742 |
| கார்ட்டரெட் | ... | 1742-1744 |
| பெல்ஹாம் | ... | 1744-1754 |
| நியூகாஸில் | ... | 1754-1756 |
| டெவன்ஷயர்-பிட் | ... | 1756-1757 |
| நியூகாஸில் பிட் | ... | 1757-1761 |

## மூன்றும் ஜார்ஜின் தனியாட்சிக் காலம் (1761-1770)

| | | |
|---|---|---|
| பூட் அமைச்சவை | ... | 1761-1763 |
| கிரென்வில் (விக்) | ... | 1763-1765 |
| ராக்கிங்ஹாமின் முதல் அமைச்சவை (விக்) | ... | 1765-1766 |
| சாத்தாம் (விக்-டோரி) | ... | 1766-1768 |
| கிராஃப்டன் (விக்-டோரி) | ... | 1768-1770 |

## டோரிக் கட்சியின் ஆட்சி (1770-1830)

| | | |
|---|---|---|
| நார்த் | ... | 1770-1782 |
| ராக்கிங்ஹாமின் இரண்டாவது அமைச்சவை (விக்) | | 1782 |
| ஷெல்பர்ன் (கட்சியில்லாதது) | ... | 1782-1783 |
| ஃபாக்ஸ் நார்த் (விக்-டோரி) | ... | 1783 |
| இளைய பிட் | ... | 1783-1801 |
| ஆடிங்டன் | ... | 1801-1804 |

| | | |
|---|---|---|
| இளைய பிட் (இரண்டாம் முறை) | ... | *1804-1806* |
| கிரென்வில் ஃபாக்ஸ் (விக்-டோரி) | ... | *1806-1807* |
| போர்ட்லந்து | ... | *1807-1809* |
| பெர்சிவல் | ... | *1809-1812* |
| லிவர்ப்பூல் | ... | *1812-1827* |
| கானிங் | ... | *1827* |
| காடரிச் | ... | *1827-28* |
| வெல்லிங்டன் | ... | *1828-1830* |

மீண்டும் விக்குகளின் ஆட்சி (*1830-1841*)

| | | |
|---|---|---|
| கிரே (விக்) | ... | *1830-1834* |
| முதல் மெல்போர்ன் (விக்) | ... | *1834* |
| பீலின் முதல் அமைச்சவை (கன்சர்வேடிவ்) | ... | *1834-1835* |
| மெல்போர்னின்இரண்டாம்அமைச்சவை (விக்) | ... | *1835-1841* |

## மன்னர்களின் பட்டியல்

| | | |
|---|---|---|
| முதலாம் ஜார்ஜ் | ... | *1714-1727* |
| இரண்டாம் ஜார்ஜ் | ... | *1727-1760* |
| மூன்றாம் ஜார்ஜ் | ... | *1760-1820* |
| நான்காம் ஜார்ஜ் | ... | *1820-1830* |
| நான்காம் வில்லியம் | ... | *1830-1837* |

## முக்கிய நிகழ்ச்சிகளின் கால அட்டவணை

1714—முதலாம் ஜார்ஜ் அரசு எய்தல்

1715—பதினான்காம் லூயி இறத்தல், பதினைந்தாம் லூயி அரசு எய்துதல்; யாகோபியர்கள் கலகம்.

1716—ஏழாண்டுச் சட்டம்.

1717—முக்கூட்டு உடன்படிக்கை; விக்குக் கட்சியில் முதற் பிளவு.

1719—பிரபுத்துவ மசோதா.

1720—லண்டன் உடன்பாடு; தென்கடல் குமிழி.

1721—வால்போல் மந்திரிசபை.

1722—ஆட்டர்பரி சதி.

1724—விக்குக் கட்சியில் இரண்டாம் பிளவு; டீ, காப்பி ஆகிய பொருள்களுக்குக் கிடங்கு முறை ஏற்படல்.

1725—வியன்னு உடன்படிக்கை.

1726—ஹனேவர் உடன்படிக்கை.

1727—முதலாம் ஜார்ஜ் மரித்தல்; இரண்டாம் ஜார்ஜ் பட்ட மெய்தல்; ஜிப்ரால்டரை ஸ்பானியர்கள் தாக்குதல்; போர்ட்டோபெல்லோவை ஆங்கிலேயர் முற்றுகையிடல்; இணங்காதார்க்கு உத்தரவாதமளிப்புச் சட்டம்.

1729—செவில் உடன்படிக்கை.

1730—டவுன்செண்டு பிரபு ஓய்வுபெறல்.

1731—இரண்டாவது வியன்னு உடன்படிக்கை.

1733—போலந்து வாரிசுரிமைப் போர் துவக்கம் வெல்லப்பாகு சட்டம்; கலால் வரி.

1736—போர்ட்டியஸ் கலகம்.

1737—கேரோலின் இராணி இறத்தல்.

1738—மூன்ருவது வியன்னு உடன்படிக்கை.

1739—ஸ்பெயினுடன் போர்: ஜென்கின்ஸ் காது சண்டை; போர்ட்டோபெல்லோ கைப்பற்றப்படல்.

1740—பேரரசர் ஆரும் சார்லஸ் இறத்தல்; ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர் துவக்கம்.

1741—கார்த்தஜேனு படையெடுப்புத் தோல்வி; டியூப்ளே புதுச்சேரி கவர்னராதல்.

1742—வால்போல் ராஜினாமா செய்தல்; கார்ட்டரெட் மந்திரி சபை.

1743—டெட்டிஞ்சன் போர்க்களம்.

1744—கார்ட்டரெட் பதவி துறத்தல்; பெல்ஹாம் மந்திரிசபை.

1745—யாகோபியர்கள் கலகம்; ஃபாண்டினுய் போர்க்களம்.

1746—கல்லடன்மூர் போர்க்களம்; சென்னையைப் பிரெஞ்சுக்காரர் பிடித்தல்.

1748—ஆச்சன் உடன்படிக்கை.

1750—மாட்ரிட் உடன்படிக்கை.

1751—காலண்டர் சட்டம்; ஆர்க்காடு முற்றுகை; கிளைவின் வெற்றி.

1752—சீர்திருத்தப்பட்ட நாட்குறிப்பு (காலண்டர்).

1754—ஹென்றி பேல்ஹாம் இறத்தல்; நியூகாசில் மந்திரிசபை; விக்குக் கட்சியில் மூன்ருவது பிளவு.

1756—ஏழாண்டுப் போர்த் தொடக்கம்; கல்கத்தா இருட்டறைத் துயர நிகழ்ச்சி; மினுர்க்கா இழப்பு.

1757—பிட், வெளிநாட்டமைச்சர்; பிளாஸிச் சண்டை.

1758—வட அமெரிக்காவில் பிரெஞ்சுக் கோட்டைகளைப் பிடித்தல்.

1759—லாகோஸ், குவிபெரான் குடா, மிண்டன் போர்க்களங்கள்; கியூபெக் பிடிபடல்; பிரிட்ஜ்வாட்டர் கால்வாய் திறக்கப் பெறல்.

1760—இரண்டாம் ஜார்ஜ் இறத்தல்; மூன்ருல் ஜார்ஜ் பட்டத்துக்கு வருதல்.

1761—பிட் ராஜினாமா செய்தல்; பூட் மந்திரிசபை. பெல்லித் தீவு கைப்பற்றப்படல்.

1762—ஹவாணு, மணிலா கைப்பற்றப்படல்.

1763—பாரிஸ், ஹியூபர்ட்ஸ்பெர்க் சமாதானங்கள்.

1764—குடியேற்ற நாட்டு வியாபாரக் கட்டுப்பாடுகள் மீண்டும் கொண்டுவரப்படுதல்.

1765—கிரன்வில் ராஜிநாமா; ராக்கிங்ஹாமின் முதல் மந்திரி சபை.

1766—ராக்கிங்ஹாம் ராஜிநாமா; பிட், கிராஃப்டன் மந்திரிசபை. பத்திர முத்திரைச் சட்டம் ஒழிப்பு; அறிவிப்புச் சட்டம்.

1767—டவுன்செண்டின் சுங்க வரிகள்.

1768—சாத்தம் பிரபு ராஜிநாமா.

1770—கிராஃப்டன் ராஜிநாமா; நார்த் பிரபு மந்திரிசபை.

1772—ஹேஸ்டிங்ஸ் வங்காள கவர்னராதல்.

1773—பாஸ்டன் தேநீர் விருந்து; ஒழுங்குமுறைச் சட்டம் (இந்தியா.)

1774—முதல் அமெரிக்கன் காங்கிரஸ்; கியூபெக் சட்டம்.

1775—லெக்ஸிங்டன், பங்கர்ஹில் போர்கள்; ஆலிவ் கிளை சமாதான விண்ணப்பம்.

1776—அமெரிக்கச் சுதந்திர அறிவிப்பு; பாஸ்டன் இழப்பு.

1777—பிலடெல்ஃபியா கைப்பற்றப்படல்; சாரடோகா போர்; பர்காயின் சரணுகதி.

1778—பிரான்ஸ் போர் தொடுத்தல்.

1779—ஸ்பெயின் போர் தொடுத்தல்; முதல் மராட்டியப் போர்.

1780 ஹாலந்து போர் அறிவிப்பு; படையேந்திய நடுநிலைக் கூட்டுறவு.

1781—கேம்டன், கில்டுபோர்டு போர்கள்; கார்ன்வாலிஸ். யார்க்டவுனில் சரணுகதி; முதல் மைசூர்ப் போர்.

1782—நார்த் ராஜிநாமா; ராக்கிங்ஹாமின் இரண்டாவது மந்திரி சபை; ஷெல்பர்ன் அமைச்சரவை; ஐரிஷ் சட்ட ஆக்க சுயேச்சை; ஜேம்ஸ்வாட் நீராவி இயந்திரம் கண்டு பிடித்தல்.

1783—வெர்சேல்ஸ் உடன்படிக்கை; ஷெல்பர்ன் பதவி துறப்பு; ஃபாக்ஸ் நார்த் அமைச்சவை; பிட்டின் முதல் மந்திரி சபை.

1784—பிட் இந்தியச் சட்டம்.

1785—ஹேஸ்டிங்ஸ் ஓய்வு பெறல்.

1786—பிரான்ஸோடு வியாபார உடன்படிக்கை.

1788—ஹேஸ்டிங்ஸ் மீது அரசியல் துரோகக் குற்றச்சாட்டு விசாரணை ; ஆஸ்திரேலியாவில் கைதிகள் குடியேறல்.

1789—பிரெஞ்சுப் புரட்சி.

1790—இரண்டாவது மைசூர்ப் போர்.

1791—கனடாச் சட்டம் ; ஐக்கிய ஐரிஷ் கழகத் தோற்றம்.

1792—சகோதரத்துவச் சட்டம் [பிரான்ஸ்].

1793—பதினாறாம் லூயி சிரச்சேதம் செய்யப்பெறல் ; மரியா அந்துவானத் சிரச்சேதம் ; பிரெஞ்சுப் புரட்சிப் போர் ; முதலாம் கூட்டுறவு.

1794—முதல் ஜூன் போர்க்களம்; உடலுரிமைக் காப்புச் சட்டம் நிறுத்திவைக்கப் பெறல்.

1795—ஹேஸ்டிங்ஸ் விடுதலை ; பிரான்சில் இயக்குநர் சபை ஆட்சி நன்னம்பிக்கை முனை வெற்றி ; ஸ்பீன்ஹாம்லாந்துத் திட்டம்.

1797—கடற்படையில் கலகங்கள் ; கேம்பர்டவுன், செண்ட் வின்சன்ட் போர்க்களங்கள் ; ரொக்கப் பணம் செலுத்துதல் தடுப்பு.

1798—எகிப்தில் போனபார்ட் ; நைல்நதிப் போர் ; இரண்டாம் கூட்டுறவு ; மூன்றாவது மைசூர்ப் போர் ; வருமான வரி ஐரிஷ் கலகம்.

1799—பிரான்ஸில் கன்சுலேட் ஆட்சி; கூட்டங்கூடல் தடைச் சட்டங்கள்.

1800—அயர்லாந்து-இங்கிலாந்து ஐக்கியம்.

1801—பிட் ராஜிநாமா ; ஆடிங்டன் அமைச்சரவை; படையேந்திய நடுநிலைமை ; கோபன்ஹேகன் போர்.

1802—ஏமியாங் சமாதானம் ; முதல் தொழிற்சாலைச் சட்டம் நெப்போலியன் பேரரசராதல்.

1803—நெப்போலியப் போர் தொடக்கம் ; இரண்டாவது மராத்தியப் போர் ; டாஸ்மேனியாவில் குற்றவாளிகள் குடியேற்றம்.

1804—ஆடிங்டன் ராஜிநாமா ; பிட்டின் இரண்டாவது மந்திரி சபை ; நெப்போலியன் பேரரசராதல்.

1805—மூன்றும் கூட்டுறவு, டிரெபெல்ஹாரி, ஆஸ்டர்லிட்ஸ் போர்க்களங்கள்.

1806—பிட் இறத்தல் ; கிரென்வில் மந்திரிசபை ; ஜீனு போர்க்களம் ; கண்டத்திட்டம் ; நன்னம்பிக்கை முனை மீண்டும் கைப்பற்றப்படல்.

1807—கிரென்வில் ராஜிநாமா ; போர்ட்லண்டு அமைச்சரவை ; ஃபிரீட்லாந்து போர்க்களம் ; டில்சிட் சமாதானம் ; டேனியக் கப்பற்படை கைப்பற்றப்படல் ; அடிமை வியாபாரத்தை பிரிட்டன் ஒழித்தல்.

1808—தீபகற்பப் போர்த் துவக்கம்.

1809—போர்ட்லண்டு ராஜிநாமா ; பெர்சிவல் மந்திரிசபை; கருன்னு, வேக்ராம் போர்க்களங்கள்.

1811—இடைக்காலப் பாதுகாப்பாளர் ஆட்சி.

1812—பெர்சிவல் கொலை செய்யப்படல் ; லிவர்ப்பூல் மந்திரிசபை; நெப்போலியனின் ருஷ்யப் படையெடுப்பு ; அமெரிக்காவுடன் போர் ; க்ளைட் நதியில் நீராவிப் படகு ஓட்டம்.

1813—நான்காவது கூட்டுறவு ; விடுதலைப் போர் ; லீப்ஸ்லிக் போர்க்களம்.

1814—நெப்போலியனின் முடிதுறப்பு ; எல்பாவில் சிறைவைப்பு ; கென்ட் உடன்பாடு.

815—நூறு நாள்கள்; வாட்டர்லூ போர்க்களம்; நெப்போலியன் சென்ட் ஹெலீனுத் தீவிற்கு நாடுகடத்தப்படல் ; வியன்னு காங்கிரஸ் ; தூய கூட்டுறவுத் தானியச் சட்டம்.

816—அல்ஜியர்ஸ் மீது குண்டுவீச்சு.

817—மூன்றுவது மராத்தியப் போர்.

818—ஆச்சன் காங்கிரஸ்.

819—ரொக்கப் பணம் செலுத்தும் முறை மீண்டும் வரல் ; மான்செஸ்டர் படுகொலை ; ஆறு சட்டங்கள் ; நீராவிப் படகால் அட்லான்டிக் கடல் கடக்கப்படல்; இரண்டாவது தொழிற்சாலைச் சட்டம்.

820—மூன்றும் ஜார்ஜ் இறத்தல் ; நான்காம் ஜார்ஜ் பட்டமெய்தல் ; ட்ரோப்பா காங்கிரஸ்.

1821—நெப்போலியன் இறப்பு ; கிரேக்கச் சுதந்திரப் போர் துவக்கம்.

1822—பீல் உள்நாட்டு அமைச்சராதல் ; கேனிங் வெளிநாட்டு அமைச்சர்.

1823—கத்தோலிக்கக் கழகம்.

1824—கூட்டங்கூடல் தடைச் சட்டங்கள்.

1825—ஸ்டாக்டன் டார்லிங்டன் ரயில்வே ; இந்தியாவுக்கு நீராவிப் படகில் பயணம்.

1827—லிவர்ப்பூல் மந்திரிசபை ; கானிங் மந்திரிசபை ; காடரிச் மந்திரிசபை ; நவாரினே போர்க்களம்.

1828—காடரிச் ராஜிநாமா ; வெல்லிங்டன் அமைச்சவை ; கிலேர் தேர்தல் ; சோதனைச் சட்ட மாநகராட்சிச் சட்ட ஒழிப்பு.

1829—அட்ரியனேபில் உடன்படிக்கை ; மெட்ரோபாலிடன் போலீஸ் ; ரோமன் கத்தோலிக்கரின் விடுதலை ; ஸ்வரன் ஆறு உடன்பாடு.

1830—நான்காம் ஜார்ஜ் இறத்தல் ; நான்காம் வில்லியம் பட்டத்துக்கு வரல் ; பிரெஞ்சுப் புரட்சி (ஜூலை) ; பெல்ஜியர் கலகம்.

1831—மெகமெட் அலி சிரியாவைக் கைப்பற்றல்.

1832—முதலாவது பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம்.

1833—பிரிட்டிஷ் பேரரசில் அடிமை முறை ஒழிப்பு : ஆல்தார்பின் தொழிற்சாலைச் சட்டம் ; முதல் கல்வி மானியம் ; கிழக்கிந்தியக் கம்பெனி வாணிபத்தைக் கைவிடுதல் ; ஆக்ஸ்போர்டு இயக்கம் ; உன்கியார் ஸ்கெலெசி உடன்படிக்கை.

1834—கிரே ராஜிநாமா ; முதலாவது மெல்போர்ன் மந்திரிசபை ; முதலாவது பீல் மந்திரிசபை ; இரவலர் சட்டத் திருத்தம்.

1835—டாம்வொர்த் தேர்தல் அறிக்கை ; பீல் ராஜிநாமா மெல்போர்னின் இரண்டாவது மந்திரிசபை ; மாநகராட்சிக் கழகச் சீர்திருத்தம்.

1836—பிறப்பு, இறப்பு, திருமண விவரங்கள் பதிவு ; தென் ஆஸ்திரேலியக் குடியேற்றம் ; பெரும் வெளியேற்றம் (தென் ஆப்பிரிக்கா).

1837—நான்காம் வில்லியம் இறத்தல் ; விக்டோரியா இராணியார் அரசு எய்துதல்.

# 1. பதினெட்டாம் நூற்றாண்டு இங்கிலாந்தின் சிறப்பியல்புகள்

## (Characteristics of the Eighteenth Century England)

வேரூன்றிய சுயநலன்களின் தற்காப்பு (Self-Defence of vested Interests)

விக்குகளின் சேவைகள்-தனிப்பட்ட மேதைகள்

இங்கிலாந்து-பிரான்ஸ் போட்டி

பொருளாதார முன்னேற்றம்

சமூக, சமயத் துறைகள்

விக்குக் கட்சியினரின் தனித் தலைமை (Whig Supremacy)

விக் பணக்காரச் சிறுகுழு ஆட்சிக் காரணங்கள் (Causes for the Whig Oligarchy): அரசர்களின் ஆதரவு—பாராளுமன்றத்தின் ஆதரவு—தலைவர்களின் ஆதரவு—மக்களின் ஆதரவு—விக் பணக்காரச் சிறுகுழு ஆட்சியின் தன்மை—விக்குக் கட்சியின் தலைமையால் விளைந்த பலன்கள்.

புகழ்பெற்ற புரட்சியின் திரண்ட பயனை ஆங்கில மக்கள் பதினெட்டாம் நூற்றாண்டிலேயே நுகர்கின்றனர். எந்தக் கொள்கைகளுக்காக அப்புரட்சியானது ஏற்பட்டதோ அக்கொள்கைகள் இங்கிலாந்தில் நன்கு வேரூன்றிப் பின்னர் விரிவடைந்த காலம் பதினெட்டாம் நூற்றாண்டேயாகும். அதனால்தான் புரட்சி ஏற்பாடு இங்கிலாந்தில் வரப்பெற்ற 1689ஆம் ஆண்டிலிருந்தே அதன் பதினெட்டாம் நூற்றாண்டின் அரசியல் வரலாறு தொடங்கிவிடுகிறது என ட்ரெவெல்யான் என்ற வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின்றார்.[1]

[1] See Trevelyan's History of England, page 505.

## வேரூன்றிய சுயநலன்களின் தற்காப்பு
## (Self - Defence of vested interests)

நாம் ஏற்கெனவே பார்த்தபடி புகழ்பெற்ற புரட்சியானது பெரிய மாறுதலொன்றையும் இங்கிலாந்தில் ஏற்படுத்தவில்லை. தொன்றுதொட்டு இங்கிலாந்தில் இருந்துவரும் நிலையங்களை அப்படியே நிலைக்கச் செய்யவே அப்புரட்சி எத்தனித்தது. பல காலமாக அங்கு வேரூன்றிய சுயநலன்களைக் (vested interests) காக்குமுகத்தான் அமைந்ததே அப்புரட்சியன்றி, மாற்றும் வகையான் அது அமைந்ததொன்றன்று. அந்நலன்களை மாற்ற முயன்றதாலேயே இரண்டாம் ஜேம்ஸ் வெறுக்கப்பட்டார். சுயநலக் கும்பல்கள் யாவும் ஒன்று சேர்ந்து அவரை விரட்டி யடிப்பதில் வெற்றி பெற்றன. அக்கும்பல்களாவன, ஆங்கிலத் திருச்சபை, பல்கலைக் கழகங்கள், நகராட்சி மன்றங்கள், தலஆட்சி நிறுவனங்கள், பாராளுமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்த பரோக்கள் என்பவையாகும். இவை சட்டங்களைத் தங்களுக்கு ஆதரவாக எடுத்துக் காட்டி அரசர் அத்துமீறிவிட்டார் என்பதை நிரூபித்தன. அதன் பின் அவர்கள் தங்களுடைய நலன்களுக்கு எவ்வளவு தற்காப்பைச் செய்யமுடியுமோ அவ்வளவையும் செய்து கொண்டனர். நாட்டின் அரசியலமைப்பு மிகத் தூய்மையானதென்றும், தெய்வீகமானதென்றும், உயிருள்ள தென்றும், அதை மாற்ற முயற்சிப்பது பாவம் என்றும், அடாத செயல் என்றும் ப்ளேக்ஸ்டோன் (Blackstone) போன்ற சட்ட நிபுணர்களும், பர்க் (Burke) போன்ற அரசியல் அறிஞர்களும் கட்டுரைத்து வந்தனர். அவர்களது கூற்றுக்கு மாற்றம் சொல்ல யாருக்கும் துணிவில்லை. எனவே ஒரு நூற்றுண்டுக்கு நாட்டின் அரசியலமைப்பு வளர்ச்சியில் ஒரு தேக்கம் (stagnation) காணப்படுகிறது. நீர் ஒரே இடத்தில் பல்லாண்டுகள் தேங்கினுல் அதில் நாற்றமெடுப்பதே போன்று இங்கிலாந்தின் அரசியல் நிறுவனங்களில் ஊழல்கள் மலியலாயின. மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டினின்றும் விடுதலை பெற்ற தல அதிகாரிகள் (Local officers) தான்தோன்றித்தனமாய் நடக்க ஆரம்பித்தனர். நகராட்சி மன்றங்களில் லஞ்சம் தலைவிரித்தாடியது. வேண்டியவர்களுக்கு வேலை வழங்கும் முறை (favouritism) எங்குப் பார்த்தாலும் காணப்பட்டது. தல ஆட்சி கேலிக் கூத்தாய் போயிற்று. பள்ளிக்குச் செல்லாத பள்ளியாசிரியர்கள் சம்பளம் பெற்றுக் கொண்டு வந்தனர். தேர்வுகளை எழுதாதவர்களும் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றனர். உரிமைச் சாசனங்களைப் பெற்ற அத்தனைக் குழுக்களும் தங்கள் உரிமைகளைத் தீயவழிகளில் பயன்படுத்தின. இங்ஙனம் மாற்றம் விரும்பாப் பழமைவாதிகள்

(Conservatives) தங்களது வேரூன்றிய சுயநலன்களைப் பல வகையிலும் காத்துக் கொண்ட காட்சியை நாம் ஹனேவரியர் களின் காலத்தில் காண்கிறேம்.

## விக்குகளின் சேவைகள் - தனிப்பட்ட மேதைகள்

செல்வந்தர்களின் செல்வாக்கு இக்காலத்தில் நன்கு வளர்ந்தது. செல்வர்கள் நிரம்பிய விக்குக் கட்சியினர் நெடு நாளைக்குப் பதவியிலிருந்தனர். ஆனால், இறுதியில் அவர்களுடைய சாயம் வெளுக்கிறது. பதவியும் பட்டமும் அவர்களிடமிருந்து சடசடவெனச் சரிகின்றன. பதினெட்டாம் நூற்றுண்டின் கடைசியில் டோரிகள் அரசாட்சியைக் கைப்பற்றுகின்றனர். விக்குக் கட்சியினர் பதவியிலிருந்தபோது ஓரளவு கருத்துத் தேக்கம் காணப்படினும் அவை இழிநிலை அடையவில்லை. காபினட் ஆட்சி முறையைத் தங்களை அறியாமலேயே அவர்கள் வளர்த் தனர். பாராளுமன்றத்தின் தலைமையையும் அவர்கள் நிலைநாட் டினர். உறுதியான வெளிநாட்டுக் கொள்கையை அன்னார் கடைப் பிடித்தனர். அதனால் இங்கிலாந்தின் பெருமை வெளிநாடுகளில் உயர்ந்தது. வேறெந்த நாட்டிலும் காணப்படாத சுதந்திரத்தைப் பலரும் அனுபவித்தனர். நன்கு அமையப்பெற்ற குழுக்கள் முன்னேற்றமின்றி முடங்கிக்கிடக்கினும், தனிப்பட்ட மேதைகள் தோன்றி அதை ஈடு செய்தனர். பல தனிப்பட்ட வியாபாரிகளும் தொழில் நிபுணர்களும் பல நாடுகளோடும் போட்டிபோட்டு இங்கிலாந்தின் தலைமையை நிறுவினர். கிளைவ், வாரன்ஹேஸ் டிங்ஸ், பிட்போன்றோர் இங்கிலாந்தின் ஏகாதிபத்தியத்தை வெளி நாட்டில் நிறுவினர். வெஸ்லி போன்றவர்கள் சமயத்துறையில் பல சீரிய பணிகளை ஆற்றினர். பர்க், ஆடம் ஸ்மித் (Adam Smith), ஹியூம் (Hume), ஜேம்ஸ் வாட் (James Watt), டாக்டர் ஜான்சன் (Dr. Johnson), பர்ன்ஸ் (Burns) போன்ற பேரறிஞர்கள் தங்களுக்கு ஒப்பாரும் மிக்காருமின்றிப் பல துறைகளிலும் பல நூல்களை இயற்றினர். நெல்சன், வெல்லிங்டன், பாக்ஸ் (Fox), பிட், காஸில் ரே (Castle Reigh), கானிங் (Canning) போன்ற அரசியல் தலைவர்களும் தளபதிகளும் பிற்காலப் பதினெட்டாம் நூற்றுண்டின் அரசியல் வானை அலங்கரித்ததேபோல் வோர்ட்ஸ் வொர்த் (Wordsworth), காலரிட்ஜ் (Coleridge), ஸ்காட் (Scott), பைரன் (Byron), ஷெல்லி (Shelley), கீட்ஸ் (Keats), காப்பட் (Cobbott), வில்பர்போர்ஸ் (Wilberforce), பென்த்தாம் (Bentham), ஓவன் (Owan) போன்ற பேரறிஞர்கள் இலக்கிய வானை அலங்கரித்தனர்.

## இங்கிலாந்து - பிரான்ஸ் போட்டி

இந்நூற்றாண்டின் இன்னொரு முக்கியப் பண்பாவது,இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்கும் ஏற்பட்ட குடியேற்ற நாட்டு வியாபாரப் போட்டியும், அப்போட்டியால் விளைந்த போராட்டமுமாகும். ஜென்க்கின்ஸ் காதுப் போர் (Jenkins Ear War), ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர் (Austrian Succc ession War), அமெரிக்கச் சுதந்திரப் போர் (American War of Independence), பிரெஞ்சுப் புரட்சிப் போர்கள் (French Revolutionary Wars), நெப்போலியப் போர்கள் (Napoleanic Wars) என்ற பல போர்கள் பிரான்ஸுக்கும், பிரிட்டனுக்கும் இந்நூற்றாண்டில் நடைபெற்றன. எனவே, இந்தப் போராட்டத்தை இரண்டாவது நூற்றாண்டுப் போர் (Second Hundred years War) எனச் சில வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். இந்தப் போராட்டக் காலத்துக்கு முன்பும் பின்பும், வால்போல், இளைய பிட் என்ற இரு பிரதம மந்திரிகளின் அமைதியான ஆட்சிக் காலங்கள் வருகின்றன. பல்லாண்டுகள் நடைபெற்ற இப்போராட்டத்தில் இங்கிலாந்துக்கு இலாபமும், நஷ்டமும் இரண்டும் ஏற்பட்டன. அமெரிக்காவை இங்கிலாந்து இழந்தது. ஆனால், அதற்குப் பதிலாகக் கனடா, ஆஸ்திரேலியா, இந்தியா முதலிய நாடுகளில் ஆங்கிலேயர் வேரூன்றினர். ஆங்கிலப் பேரரசு என்றுமில்லாதபடி விரிவடைந்தது. ஆங்கிலேயரின் கடற்படை பெருகிற்று; வாணிகம் வளர்ச்சியுற்றது.

## பொருளாதார முன்னேற்றம்

பொருளாதாரத் துறையில் இங்கிலாந்து இந்நூற்றாண்டில் பெருமுன்னேற்றமடைந்தது. குடியேற்ற நாடுகளிடமிருந்து மூலப் பொருள்களை இங்கிலாந்து ஏராளமாகப் பெற்றது. அவற்றைச் செய்பொருள்களாக்கி விற்று இங்கிலாந்து பெரு இலாபம் அடைந்தது. வணிகர்கள் அரசியலில் செல்வாக்குப் பெற்றனர். மற்றும் இந்நூற்றாண்டின் இறுதியில் விவசாயத்திலும், தொழில் முறையிலும் பெருத்ததோர் மாற்றம் ஏற்பட்டது. அவை விவசாயப் புரட்சி (Agrarian Revolution), தொழில் புரட்சி(Industrial Revolution)எனக் குறிக்கப்படும். பழைய கிராமியச் சமுதாயம் மாறி நாகரிகம் மிக்க நகரச் சமுதாயம் (Urban Society) உருவாயிற்று. முதலாளித்வம் (Capitalism) வளர்ந்தது. அதே சமயம் அம் முதலாளித்வத்தால் விளைந்த பல தீமைகளும் இந்நூற்றாண்டின் கடைசியில் இங்கிலாந்தை அலைக்கழித்தன.

## சமூக, சமயத்துறை

சமயத்துறையில் இந்நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஒரு வித மாற்றமின்மை காணப்படுகிறது. ஆனால் நாளடைவில் மெத்தாடிஸ்டுகள் (Methodists) என்ற கூட்டத்தார் தோன்றி, சமயத்தில் விழிப்புணர்ச்சியையும் உற்சாகத்தையும் ஊட்டுகின்றனர். சமூக, மதத்துறைகளில் பகுத்தறிவு பயன்படுத்தப்படுகிறது. 'பகுத்தறிவுக் காலம்' (Age of Reason) என்று இந்நூற்றாண்டு பெயர் பெறுகிறது. அறிவு செறிந்த ஒரு நடுநிலை வகுப்பு இங்கிலாந்தில் வளர்ச்சியடைந்தது. அந் நடுநிலை வகுப்பாரே நாட்டின் அரசியல் தலைவர்களாகவும் சட்ட வல்லுநராயும், மருத்துவ நிபுணராயும் பல துறைகளிலும் அரும்பணியாற்றி நாட்டின் நல்வளத்தை வளர்த்தவராவர்.

## விக்குக் கட்சியினரின் தனித் தலைமை
## (The Whig Supremacy, 1714 - 1760)

புகழ் பெற்ற புரட்சியானது விக்குக் கட்சியினரின் கொள்கைகளுக்குப் பெருத்ததோர் வெற்றியைத் தேடித் தந்ததேயெனினும் அவர்களுக்கு அதனால் உடனடியான நன்மை எதுவும் ஏற்படவில்லை. ஏனெனில் மூன்றாம் வில்லியமும், அதற்குப்பின் வந்த ஆன் இராணியும் தங்களது மந்திரிகளை இரு கட்சிகளிலிருந்தும் மாறிமாறிச் சந்தர்ப்பத்துக்கேற்றவாறு பொறுக்கிக் கொண்டார்களேயன்றி, ஏதாவதொரு கட்சியை ஆதரிக்கும் வழக்கத்தை மேற்கொள்ளவில்லை. முதல் இரண்டு ஜார்ஜுகளின் காலத்தில் தான் விக்குகளின் செல்வாக்கு வளர்ந்தது. டோரிக் கட்சியினருக்குக் கொஞ்சநஞ்சமிருந்த செல்வாக்கும், 1715ஆம் ஆண்டில் ஏற்பட்ட யாகோபியர்களின் கலகத்துக்குப் பின் மாய்ந்தது. ஏனெனில், அவர்கள் யாகோபியர்களின் ஆதரவாளர்கள் என்பது அக்கலகத்தால் நன்கு திட்டவட்டமாக மெய்ப்பிக்கப்பட்டு விட்டது. எனவே 1714ஆம்ஆண்டிலிருந்து 1760ஆம் ஆண்டுவரை விக்குக்கட்சியினரே இங்கிலாந்தில் தனித்தன்மை பெற்று விளங்கினர்.

ஏறக்குறைய ஓர் எழுபது பெருங் குடும்பத்தினர் ஒன்று சேர்ந்து நாட்டின் அதிகாரங்களையெல்லாம் கைப்பற்றிக் கொண்டு, அரசாங்கப் பதவிகளையெல்லாம் தமக்குள் பங்குபோட்டுக் கொண்டனர். அவர்களிற் பெரும்பாலோர் பணம் படைத்த பெருநிலக்கிழார்களாயிருந்தனர். எனவேதான் அவர்தம் ஆட்சி 'விக் பணக்காரச் சிறு குழு ஆட்சி' (Whig Oligarchy) என வழங்கப்படுகிறது. இங்ஙனம் 1688ஆம் ஆண்டுப் புரட்சியினால் நாட்டில் பாராளுமன்ற ஜனநாயகம் வெற்றி பெறுவதற்குப்

பதிலாகப் பாராளுமன்றப் பணநாயகமே வெற்றி பெற்றது. பெரும்பான்மையோருக்குப் பதிலாகச் சிறுபான்மையினரே வெற்றி பெற்றனர். சிறுபான்மையினராயிருந்தும் அவர்கள் தம்முள் கொண்டிருந்த ஒற்றுமையினுலும், கட்டுப்பாட்டினுலும், பிளவுபட்டுச் சிதறிக் கிடந்த பெரும்பான்மையினர் மீது ஆதிக்கம் செலுத்த முடிந்தது.

## விக் பணக்காரச் சிறு குழு ஆட்சிக்குக் காரணங்கள்

### அரசர்களின் ஆதரவு

நாம் மேற்சொன்னபடி டோரிக் கட்சியினரின் வீழ்ச்சி விக்குக் கட்சியினரின் செல்வாக்குக்கு வழிகோலியது. அதோடு முதல்இரண்டு ஜார்ஜுகளும் ஆங்கில மொழியையோ ஆங்கிலப் பழக்க வழக்கங்களையோ அறியாதவர்களாயிருந்ததால், அவர்கள் தமக்கே சொந்தமான சில உரிமைகளைத் தங்களது மந்திரிகளின் கைகளிலேயே ஒப்படைத்தனர். மந்திரிசபைகளை அமைத்தல், பாராளுமன்றத்தைக் கலைத்தல், அரசாங்க, திருச்சபைப் பதவிகளை வழங்கல் முதலிய இன்றியமையாத அதிகாரங்களையும் அம்மன்னர்கள் தங்களது மந்திரிகளுக்கே விட்டுவிட்டனர். இங்கிலாந்தைவிட ஹனேவர் நாடே அவர்களின் அன்பையும் கவனத்தையும் ஈர்த்தது. இங்ஙனம் அரசர்கள் அளித்த ஆதரவுதான் விக்குகளின் செல்வாக்குக்கு முக்கிய காரணமாகும். மூன்றும் ஜார்ஜ் மன்னர் அவர்களை ஆதரிப்பதை நிறுத்தியவுடனே அவர்கள் வீழ்ச்சியுற்றதிலிருந்து மேற்சொன்ன உண்மை நன்கு விளங்குகின்றது.

### பாராளுமன்றத்தின் ஆதரவு

புகழ்பெற்ற புரட்சியின் வெற்றியானது பாராளுமன்றத்தின் வெற்றியாகும். அப் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களை விக்குக் கட்சியினர், நல்வழிகளாலும், அல்வழிகளாலும் தங்கள் கைக்குள் போட்டுக் கொண்டனர். இதுவே அவர்களின் வெற்றியின் இரகசியமாகும். இங்ஙனம் அவர்கள் பாராளுமன்றத்தைத் தம் கைப்பாவையாக ஆக்குவதற்குச் சூழ்நிலை சாதகமாயிருந்தது. பாராளுமன்றத்தின் மேல்சபையில் விக்குகளே பெரும்பான்மையினராயிருந்தனர். எனவே, அவர்கள் கீழ்ச்சபையான பொதுமக்கள் சபையைக் கைப்பற்றுவதில் தங்கள் கவனத்தைச் செலுத்தினர். பொதுமக்கள் சபை அக்காலத்தில், உண்மையில், சாதாரண மக்களின் பிரதிநிதிகளைக் கொண்டதாயில்லை. பணக்காரர்களோ, பணக்காரர்களின் கையாட்களோதான் பாராளுமன்றத்தில்

இடம்பெற வசதி இருந்தது. மற்றையவர்கட்கு அங்கு இட மில்லை. ஷயர் தொகுதிகளில் நாற்பது ஷில்லிங் ஆண்டொன்றுக்கு வருமானமுள்ள நிலக்கிழார்களுக்கே வாக்குரிமை இருந்தது. இந்த நிபந்தனையானது 1438ஆம் ஆண்டுச் சட்டமொன்றுல் விதிக்கப்பட்டது. அப்பொழுது நாற்பது ஷில்லிங் என்பது ஒரு பெருந்தொகையாகக் கருதப்பட்டது. ஆனுல் 18ஆம் நூற்றுண் டில் பணத்தின் மதிப்புப் பெரிதும் குறைந்துவிட்டதால் அத் தொகை மிகச் சிறியதாகவே உண்மையில் இருந்தது. எனவே, பெரு நிலக்கிழார்கள் தங்களது நிலங்களின் சிறுசிறு பகுதிகளைத் தம்மைச் சார்ந்தவர்களுக்கு உரிமையாக்கி அவர்களது வாக்கு களை எளிதில் பெறமுடிந்தது. இங்ஙனம் ஷயர்களில் உரிமை மானியதார்களுக்கே (Free Holders) வாக்குரிமை வழங்கப்பட்ட தன் விளைவாகப் பெரு நிலப்பிரபுக்களும் அவர்களைச் சார்ந்தவர் களும் எளிதில் பாராளுமன்றத்தில் இடம்பெற முடிந்தது. பரோத் தொகுதிகளில் வாக்குரிமையானது இடத்துக்கு இடம் மாறிக் காணப்பட்டது. ஒரு சில பரோக்களில் பர்க்கேஜ் (Burgage) என்ற குறிப்பிட்ட சில நிலப்பகுதிகளுக்குச் சொந்தமானவர் களுக்கே வாக்குரிமை இருந்தது. பணக்காரர்கள் இவ்வித நிலப் பகுதிகளை எளிதில் வாங்கிக் கொள்ள முடிந்தது. அவ்விதம் வாங் கப்பட்ட இடங்களில் அச்செல்வந்தர்கள் தங்களுக்குப் பிரியமான வர்களைப் பொது மக்கள் சபையின் உறுப்பினராக நியமித்தனர். இன்னும் சில பரோக்களில் நகராட்சி மன்றங்களால் நியமிக்கப்பட்ட சுயேச்சைக் குடிமக்களுக்கே (Free Men) வாக்குரிமையிருந்தது. செல்வச்சீமான்களுக்கு நகராட்சி மன்றங்களில் நல்ல செல்வாக்கு இருந்ததால் அதைக்கொண்டு, தங்களுக்கு வேண்டிய ஆட்களையே சுயேச்சைக் குடிமக்களாக நியமித்துக்கொண்டு, அவர்களின் வாக்குகளை அவர்கள் எளிதில் பெற்றனர். வேறு சில பரோக்களில், பரோ நகராட்சி மன்ற உறுப்பினர்க்கு மட்டுமே வாக்குரிமை அளிக்கப்பட்டிருந்தது. மேற்சொன்னபடி நகராட்சி மன்றங்கள் அநேகமாகப் பணக்காரர்களின் தயவுக்குக் கட்டுப்பட்டிருந்த தால் அவர்கள் செல்வாக்குகளையும் எளிதிலேயே பெற முடிந்தது. சில பரோக்கள் பெரும் பணக்காரர்களுக்கே சொந்தமாயிருந்தன. அவைகளின் பிரதிநிதிகளை அப்பணக்காரர்களே பார்த்து நியமித் தனர். அவ்வித பரோக்கள் 'பாக்கெட் பரோக்கள்' (Pocket Boroughs) எனப்பட்டன. உதாரணமாக பெட்போர்டு கோமகனுக்கு டாவிஸ்டாக் (Tavistok) பரோ முழுதும் சொந்தமாயிருந்தது. ஒரு காலத்தில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்திருந்த சில பரோக் கள் நாளடைவில் சீரழிந்துவிட்டன. ஆனுல் அவைகளுக்கு அளிக்கப்பட்டிருந்த பிரதிநிதித்துவம் மட்டும் மாருமல் அப்படியே இருந்தது. அப் பரோக்களில் ஒரு சிலரே வசித்து வந்ததால்

பெரும் பணக்காரர்கள் லஞ்சம் கொடுத்து அவர்களின் வாக்குகளை எளிதில் பெற முடிந்தது. இத்தகைய பரோக்களுக்கு 'நசித்துப் போன பரோக்கள்' (Rotten Boroughs) எனப் பெயர். உதாரணமாகப் பாராளுமன்றத்திற்கு இரண்டு உறுப்பினர்களை அனுப்பி வந்த 'ஓல்டு சாரம்' (Old Sarum) என்ற தொகுதியில் ஓர் ஓய்ந்துபோன குன்றம் மட்டுமே இருந்தது. மற்றும் அக்காலத்தே மறைவுத் தேர்தல் முறை (Secret Ballot) கிடையாதாகையால் பணக்காரர்கள் ஏழைகளை அச்சுறுத்தி அவர்களது வாக்குகளைப் பெறமுடிந்தது. ஏழைகள் நிறைந்த சில பரோக்கள் வெளிப்படையாகத் தங்களுக்கு இவ்வளவு பணம் கொடுத்தால் வாக்குரிமை வழங்குவோம் என விளம்பரப்படுத்தின. இவ்விதச் சூழ்நிலைகளை விக்குக் கட்சியினர் நன்கு பயன்படுத்திக்கொண்டு தங்களுக்குக் கட்டுப்படக் கூடியவர்களாகப் பார்த்துப் பொதுமக்கள் சபைக்குத் தேர்ந்தெடுத்துக் கொண்டதோடு, அவர்களுக்கும் அவர்களது உற்றார் உறவினர்களுக்கும் பல பதவிகளை அளித்து அவர்கள் தங்களது விசுவாசத்தில் பிறழாதபடி பார்த்துக் கொண்டனர். இரகசியமாகப் பல பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு உதவித் தொகைகள் (Pensions) வழங்கப்பட்டன. இங்ஙனம் பல வழிகளாலும் விக்குகள் பாராளுமன்ற உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்றதால் அவர்களது தலைமை நாட்டில் நன்கு நிலைநாட்டப்பட்டது.

### தலைவர்களின் தலைமை

விக்குக் கட்சியினருக்கு நல்லவேளையாகப் பல திறமைபெற்ற தலைவர்கள் கிடைத்தனர். பிட், வால்போல் போன்ற பெருந்தலைவர்கள் விக்குக் கட்சியைத் திறம்பட அமைத்து, அதன் வலிமையைப் பெருக்கினர். ஆனால் டோரிக் கட்சியிலோ பாலிங்ப்ரோக்கைத் தவிர, வேறு பெருந்தலைவர்களில்லை. அப்பாலிங்ப்ரோக்கும் வெளிநாட்டுக்கு ஓடிவிட்டார். எனவே, டோரிக் கட்சியினர் மேய்ப்பானில்லா ஆட்டுக் கூட்டம் போல் சிதைந்தனர்.

### மக்களின் ஆதரவு

மேலும் விக்குக் கட்சியினருக்கு மக்களின் ஆதரவும் இருந்தது. கிராமப் புறங்களில் வாழ்ந்த, நாகரிகமும் சொந்த அறிவும் இல்லாத பாமர மக்கள் தங்களது நிலப் பிரபுக்களையே தங்கள் தலைவர்களாகக்கொண்டதில் வியப்பொன்றுமில்லை. பிரபுக்களும், சாமானிய மக்களும் ஏறக்குறைய ஒரே நோக்கங்களைக் கொண்டவர்களாயிருந்தனர். அவர்களுக்குள் பெரிய வேறுபாடுகளும் சமூகத்தில் காணப்படவில்லை. கைத்தொழிற் புரட்சிக்குப்பின்

ஏற்பட்ட பணக்கார, ஏழைப் பூசல்கள் 18ஆம் நூற்றூண்டின் முற்பகுதியில் இல்லை. பிரபுக்களின் தலைமையை மற்றைய சாதாரண மக்கள் விரும்பியேற்றனர். வியாபாரம், கைத்தொழில் குடியேற்றம் முதலிய முயற்சிகளிலீடுபட்டிருந்ததால் அரசியல் விவகாரங்களில் அவர்கள் அக்கறையற்றவர்களாயிருந்தனர். அவைகளைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பைச் செல்வந் தர்க்கே அவர்கள் வலிய விட்டுவிட்டனர். அச்செல்வந்தர்களும் அப்பொறுப்பைச் சரிவர மேற்கொண்டு பொதுமக்களின் நன் மதிப்பைப் பெற்றனர். இங்ஙனம் பல காரணங்களாலும் விக்குக் கட்சியினர் நீண்ட நாள் இங்கிலாந்தில் தலைமை பெற்று விளங்கினர்.

### விக் பணக்காரச் சிறு குழு ஆட்சியின் தன்மை

நாட்டின் தலைமையைப் பெற்றுவிட்ட விக்குக் கட்சியினர் அதைத் தான்தோன்றித்தனமாய்ப் பயன்படுத்திக் கெட்டபெயர் வாங்கிக் கொள்ளவில்லை. எவ்வளவு மிதமாகத் தங்களது அதி காரத்தைப் பயன்படுத்த முடியுமோ, அவ்வளவு மிதமாகவே அவர்கள் அதைக் கையாண்டனர். டோரிக் கட்சியினரைத் துன்புறுத்தி அவர்கள் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள அவர்கள் முயற்சிக்கவில்லை. ஏனெனில் பெருநிலக்கிழார்களில் பெரும் பாலோர் டோரிக் கட்சியினராகவே இருந்தனர். நகரங்களில் ஓரளவு, விக் கட்சியினர் செல்வாக்குப் பெற்றிருந்தாலும், கிராமப் புறங்களில் டோரிகளே பெரும்பான்மையினரின் ஆதரவைப் பெற்றிருந்தனர். ஒரு சில நிலக்கிழார்களும், ஒரு சில பிரபுக்களும், மிகப் பல வணிகர்களும், இணங்காதாரும் கூடிய ஒரு சிறுபான் மைக் கட்சியாகவே விக்குக் கட்சி திகழ்ந்தது. எனவே, டோரிக் கட்சியினரையும், ஆங்கிலத் திருச்சபையினரையும் விக்குகள் துன்புறுத்தவில்லை. புகழ்பெற்ற புரட்சியால் நாட்டில் ஏற்பட்ட சட்டத்தின் ஆட்சியால் (Rule of Law) அரசாங்கத்தின் அதிகாரம் வரையறுக்கப்பட்டுவிட்டது. மக்களின் சுதந்திரத்தையும் உரிமை களையும் காக்கச் சட்டங்கள் காத்திருந்தன. அவைகளை மறுக்கு மளவுக்கு விக்குகள் துணிவு பெறவில்லை. அப்படியே அவர்கள் சட்டங்களை மீற நினைத்திருந்தாலும், அந்நினைவு செயலாக்கப் படுவதற்கான சாதனங்கள் அவர்களுக்கில்லை. சேனையும், போலீஸ் படையும் வெகு சிறியனவாக இருந்தன. எனவே விக்குகள் ஏற் கெனவே இருந்த சட்டங்களையும் நிறுவனங்களையும் கொண்டே தமது ஆட்சியை நடத்தலாயினர். பாராளுமன்றத்தை ஒழிப் பதற்குப் பதிலாக அதை அவர்கள் தம் வசப்படுத்திக் கொண்டனர். பொதுமக்கள் சபையிலும் அவர்களது கையாட்

களே இருந்தார்களாதலால் அச்சபையின் தலைமையை அவர்கள் ஒப்புக் கொண்டனர். அதைப் பற்றிப் பிரபுக்கள் சபையும் ஒன்றும் கவலைப்படவில்லை. ஏனெனில் பிரபுக்களின் மூத்த மக்கள் யாவரும் பிரபுக்கள் சபையின் உறுப்பினர்களாயிருக்க, அவர்களின் இளைய புதல்வர்கள் பொதுமக்கள் சபை உறுப்பினர்களாயிருந்தனர். ஆனால் நாளடைவில் சாதாரண நடுத்தர மக்களும், அச்சபையில் உறுப்பினராயினர். அப்போதுதான் பிரபுக்கள் சபை, கீழ்ச் சபையின் அதிகார வளர்ச்சியைத் தடுக்க முயன்றது. ஹனோவரியர்கள் காலத்தில் பொதுமக்கள் சபையே தலைதூக்கி நின்றது. மற்றும் தல ஆட்சியில் டோரிகளான பெருநிலக்கிழார்களே எல்லா அதிகாரங்களையும் தம் கைகளில் கொண்டிருந்தனர். மத்திய ஆட்சியிலிருந்த விக்குக் கட்சியினர் அவர்களது ஆட்சியில் தலையிடவில்லை. அதனால் தல அதிகாரிகள் ஓரளவு சமுதாயத்தில் கொடுங்கோன்மை புரிந்து வந்தனரென்றே கூறலாம். 1714 முதல் 1760 வரை இங்கிலாந்தில் ஏதாவது கொடுங்கோன்மை இருந்ததென்றால், அது இந்த அமைதிகாண் நீதிபதிகளான பெருநிலக்கிழார்களின் சமுதாயக் கொடுங்கோன்மையேயன்றி, பாராளுமன்றத்தின் கொடுங்கோன்மையோ காபினெட்டின் கொடுங்கோன்மையோ அன்று. எனவே டிஸ்ரேலி என்ற அமைச்சர் குறிப்பிட்டுள்ளபடி விக் கட்சியினரின் சிறு குழு ஆட்சியை வெனிஸ் நகரச் சிறு குழு ஆட்சியோடு ஒப்பிட்டுக் கூற முடியாது.[1] ஏனெனில் வெனிஸ் ஆட்சியில் ஒரு சிறு குழுவானது அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்டு கொடுங்கோன்மை புரிந்தது. அச்சிறு குழுவும் வணிகச் செல்வர்களடங்கியதாகும். ஆனால், இங்கிலாந்தில் ஆட்சி புரிந்த சிறு குழுவில் நிலப் பிரபுக்களே அடங்கியிருந்தனர். அவர்களும் நாட்டினரின் உரிமைகளுக்குத் தடைவிதிப்பதற்குப் பதிலாக அவைகளை வளர்த்தனர். அவர்களாகப் பார்த்து நியமித்த பொதுமக்கள் சபை உறுப்பினர்கள் திறமையுடன் பணிபுரிந்து நற்பெயர் வாங்கவேண்டுமென அவர்கள் விரும்பினர். எனவே ஊக்கமும் உற்சாகமும் அறிவொளியும் நிரம்பிய இளைஞர்களையே அவர்கள் தேர்ந்து பொதுமக்கள் சபையில் நியமித்தனர். இங்ஙனம் நியமிக்கப்பட்டவர்கள்தான் பிட், கிளாட்ஸன் போன்ற பெருந் தலைவர்களாவர். பொதுமக்களே தேர்ந்தெடுத்திருந்தால்கூட அப்படிப்பட்ட தலைவர்களை அவர்கள் பொறுக்கியிருப்பார்களாவென்பது சந்தேகம்தான். பொதுமக்கள் சபையில் எப்போதும் அரசாங்கத்தை எதிர்க்கும் கட்சியொன்று இருந்துகொண்டே இருந்தது. அதன் கண்டனங்களையும் பத்திரிகைகளின் கண்டனங்களையும் விக்குகள் அலட்சியம் செய்யாது அனுதாபத்துடன் கவனித்தனர்.

[1] See Trevelyan's History of England, page 512.

எனவே, விக்குகளின் ஆட்சியில் மக்களின் குரலுக்கு நல்ல மதிப்பிருந்ததென்றே தெரிகிறது. பொது வாழ்க்கையில் ஒழுக்க அமைதி (Public Morality) பெருமளவுக்குக் காக்கப்பட்டு வந்ததென்பதற்கு மூத்த பிட், இளைய பிட் போன்ற தலைவர்களின் அரசியல் வாழ்க்கைகளே தக்க சான்றாகும். விக்குக் கட்சியினர் தம் அதிகாரத்தைக் காப்பாற்றிக் கொள்ளப் பல ஊழல்களிலீடுபட்டனரென்பது உண்மைதான். ஆனால்,பரவலாக அம்முறைகள் காணப்படவில்லை. பொதுவாக அவ்வூழல்கள் பலராலும் வெறுக்கப்பட்டன. அவ்வெறுப்பே முடிவில் விக்குகள் வீழ்ச்சியுற்றமைக்குக் காரணமாகும்.

விக்குக் கட்சித் தலைமையால் விளைந்த பலன்கள்

**விக்குகள்** அரசரது ஆதரவைப் பயன்படுத்திக் கொண்டு நிருவாகத் துறையிலும், திருச்சபையிலும், சேனையிலும், கடற்படையிலும் தங்களது கட்சியினரையே நிரப்பினர். சட்டத்துறையில்கூட விக்குக் கட்சி ஆதரவாளர்களுக்கே மேல் பதவிகள் எளிதில் கிட்டின. ஷயர்களிலிருந்த லெப்டெனண்ட் பிரபுக்கள் அநேகமாக விக்குக் கட்சியினராகவே இருந்தனர். அவர்களே அமைதிகாண் நீதிபதிகளை நியமிப்பவர்கள். எனவே கூடுமான வரை விக்குகளையே அவர்கள் தல அதிகாரிகளாக நியமித்தனர். பிரபுக்கள் சபையில் அவர்களுக்கு எப்போதுமே நல்ல ஆதரவு இருந்தது. பொதுமக்கள் சபையும் மேற்சொன்னபடி அவர்களின் விருப்பப்படியே நடந்தது. காபினெட் மந்திரிகளனைவரும் விக்குகளாகவே இருந்தனர். எனவே, பாராளுமன்றத்தில் பெரும்பான்மையானவர்களின் ஆதரவு பெற்ற ஓர் அமைச்சுக் குழு நாட்டை ஆளமுடிந்தது. மன்னர்கள் அவ்வாட்சியில் தலையிடுவது நின்றது. மன்னரின் ஒப்பம் பெற்ற ஒரு காபினெட் ஆட்சிமுறை நாட்டில் வேரூன்ற விக்குகளே வித்திட்டுச் சென்றனரெனலாம். பேச்சுரிமையும், எழுத்துரிமையும் இக்காலத்தே நன்கு வளர்ச்சி பெற்றன. வெளிநாட்டுக் கொள்கையிலும் இங்கிலாந்து நல்ல புகழ் பெற்றது. விக்குகளின் அயரா உழைப்பால்தான் குடியேற்ற நாட்டுப் பெருக்கமும், வாணிகத் துறையில் தலைமையும் இங்கிலாந்திற்குக் கிட்டிற்று எனலாம்.

ஆனால், விக்குகள் இங்கிலாந்தின் மேன்மையை வளர்க்கக் கையாண்ட முறைகள் தவறானவை. அவர்களது குடியேற்ற நாட்டுக் கொள்கை நாளடைவில் தோல்வியுற்றது. அமெரிக்கச் சுதந்திரப் போர் அவர்களின் தோல்விக்கு ஒரு சான்றாகும். அதே போன்று அவர்கள் கையாண்ட லஞ்சக்கொள்கைபோன்ற கொள்கைகளும் நாளடைவில் நிருவாகத்தைக் கெடுத்து, அவர்களின் செல்வாக்கையும் தொலைத்தது.

# 2. முதலாம் ஜார்ஜ்

ஜார்ஜின் குணதிசயங்கள்

விக்குக் கட்சியினரின் செல்வாக்கு

யாகோபியர்களின் கலகம் 1715 — பெர்த் — லீத் — எடின்பர்க் — டம்ப்ரீஸ்— வில்லியம் கோட்டை—கெல்ஸோ—பிரெஸ்டன்—ஷெரிப்மியூர்.

ஏழாண்டுச் சட்டம் 1715 (Septennial Act)

ஸ்டான்ஹோப்பு மந்திரி சபை—வெளிநாட்டுக் கொள்கை -- முக் கூட்டுறவு (Triple Alliance, 1716)—நால்வர் உடன்பாடு (Quadruple Alliance)— சமயப் பொறை.

உள்நாட்டுக் கொள்கை

பிரபுத்துவச் சட்டம் (Peerage Bill)

தென் கடல் குமிழி (South Sea Bubble)

## ஜார்ஜின் குணதிசயங்கள்

இங்கிலாந்தை இன்றுவரை ஆண்டு வருகின்ற ஹனேவர் அரச குடும்பத்தினருள் முதன்முதல் அதையாண்ட பெருமை முதலாம் ஜார்ஜுக்குரியதாகும். அவர் 1714ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தன்று ஆங்கில அரசுரிமை நிர்ணயச் சட்டப்படி இங்கிலாந்தின் மன்னரானார். அப்போது அவருக்கு வயது ஐம்பத்து நான்கு. எனினும் அவர் நல்ல உடற்கட்டுடன் விளங்கினார். சிறு வயது முதற்கொண்டே அவர் பல போர்களில் ஈடுபட்டவர். ஒரு ஜெர்மானிய வீரனுக்குரிய தீரமும், திடசித்தமும் ஒரு ஜெர்மானிய இளவரசனுக்கு இயல்பாக இருக்கக்கூடிய தானென்ற அகம்பாவமும் அவரிடம் ஒருங்கே குடிகொண்டிருந்தன. எனினும், பிரிட்டனின் அரசனாதற்குரிய தகுதி அவர்பால் சிறிதும் இல்லை. ஏனெனில் ஆங்கில மொழியையோ ஆங்கிலப் பழக்க வழக்கங்களையோ அவர் எட்டுணையும் அறியாதவர். தம்து அமைச்

சர்களுடன் பேசும்போதுகூட அவர் பிரெஞ்சு அல்லது பழைய லத்தீன் மொழியிலேதான் உரையாடுவது வழக்கம். சமயச் சார்பான விவகாரங்களில்கூட அவருக்குச் சிறிதேனும் உற்சாகமில்லை. அரண்மனை வாழ்க்கையிலும் அவருக்கு அதிக நாட்டமில்லை. ஏனெனில் அவர் சட்டப்படி மணந்த சோபியா டாரொதி (Cophia Dorothea) என்பவர் விபசாரக் குற்றம் சாட்டப்பட்டு, சிறையில் கிடந்து தவித்துக்கொண்டிருந்தார். அரசர் இங்கிலாந்துக்கு வந்தபோது அவருடன் இரண்டு காமக்கிழத்தியர் வந்தனர். அவருள் ஒருவரான கெண்டால் கோமகள் (Duchess of Kendal) அரசியலிலும் அவ்வப்போது ஓரளவு பங்கு கொண்டாள். ஜார்ஜ் ஜெர்மானியர்களையே தமது நம்பிக்கைக்குகந்த நண்பர்களாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். ராபித்தான் (Robethon) எனும் ஜெர்மானியர் அவரது அந்தரங்கக் காரியதரிசியாவார். ஹெனேவரில் அவருக்கு அமைச்சராயிருந்த பெர்ன்ஸ்டார்ப் (Bernstorff) என்பவரும், ஹெனேவருக்கும் இங்கிலாந்துக்கும் இடையே பேச்சுவார்த்தை நடத்திவந்த பாத்மார் (Bothmar) என்பவரும், அவரது நெருங்கிய நண்பர்களாவர். இந் நண்பர்களும் காமக் கிழத்தியரும் அரசாங்கத்தின் பல ஊழல்களுக்குக் காரணமாயிருந்தனர்.

## விக்குக் கட்சியினரின் செல்வாக்கு

இங்கிலாந்தின் அரசுரிமை தமக்குக் கிட்டியதற்கு மூலகாரணமானவர்கள் விக்குக் கட்சியினரே என்பது ஜார்ஜின் எண்ணம். மற்றும் டோரிகள் அனைவரும் யாகோபியர்கள் என்பதும் அவருடைய நம்பிக்கை. எனவே, அவர் டோரிகளை நஞ்செனவெறுத்தார். இங்கிலாந்துக்கு வரும் முன்பே டோரி மந்திரிகளையெல்லாம் பதவியினின்று நீக்கிவிடும்படி அவர் உத்தரவிட்டார். விக்குக் கட்சியினரே மந்திரிகளாயும் மற்றும் அரசாங்க அதிகாரிகளாயும் நியமிக்கப்பட்டனர். டோரிகளை அதிகார பீடத்தினின்றும் விரட்டியடிப்பதற்கென இரகசியக் குழு ஒன்று பொதுமக்கள் சபையில் ஏற்படுத்தப்பட்டது. அச்சபை வெளியிட்ட அறிக்கையின்படி ஆக்ஸ்போர்டு பிரபு, பாலிங்ப்ரோக் பிரபு, ஆர்மாண்ட் பிரபு, ஸ்டாராபோர்டு பிரபு ஆகியோர்மீது அரசியல் துரோகக் குற்றம் சாட்டப்பட்டது. அதையறிந்த பாலிங்ப்ரோக் பிரபுவும் ஆர்மாண்ட் பிரபுவும் நாட்டைவிட்டே ஓடிவிட்டனர். பாலிங்ப்ரோக் பிரபு பிரான்ஸுக்குச் சென்று அங்குப் போலிச் (Pretender) செயலாளரானர். ஆக்ஸ்போர்டு பிரபு மட்டுமே மனவுறுதியுடன், விசாரணையை வரவேற்றார். அவருக்கு இரண்டாண்டுச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

ஜார்ஜ் மன்னர் இங்கிலாந்தின் அரசாங்கத்தில் முக்கியமான பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று விரும்பினர். அதனால் தம்மை மறுத்துச் சொல்லக்கூடிய விக் பிரமுகர்களை அவர் மந்திரிப் பதவியினின்றும் நீக்கிவிட்டுச் சாதாரணமானவர்களையே நியமித்துக்கொண்டார். எனினும் நடைமுறையில் ஜார்ஜ் எண்ணியது நிறைவேறவில்லை. காபினெட் மந்திரிசபைக் கூட்டத்தில் மந்திரிகள் தமக்குள் ஆங்கிலத்தில் பேசிக் கொள்வதை அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர் பேசும் அரைகுறை லத்தீனை அமைச்சர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த இக்கட்டான நிலையால் ஜார்ஜ் காபினெட் கூட்டங்களுக்குப் போவதையே நிறுத்திக் கொண்டார். அங்கு என்ன நடைபெறுகிறது என்பதை மந்திரிகளைக் கேட்டு அறிந்துகொண்டார். மந்திரிகளிடமே எல்லா நிருவாக சம்பந்தமான அலுவல்களையும் அவர் ஒப்படைத்தார். இங்ஙனம் விக்குக் கட்சியினரின் செல்வாக்கு அதிகரித்தது. ஆனால், அவர்கள் நாம் மேற்சொன்னபடி டோரிக் கட்சியினரை ஒதுக்க ஆரம்பித்ததால் நாட்டின் ஒரு பாதியினரின் செல்வாக்கைப் பெற்றிருந்த அக்கட்சினர் விக்குகளை எதிர்க்கலாயினர்.

## யாகோபியர்களின் கலகம் (1715)

ஆங்கிலேயரிற் பெரும்பாலோர் பழைய ஸ்டுவர்ட்டு மன்னர்களிடையே மாறு விசுவாசம் பூண்டிருந்தனர். அந்நிய மொழி பேசிக்கொண்டு ஆங்கிலேயரை அலட்சியம் செய்யும் முதலாம் ஜார்ஜைக் காண அவர்களுக்குச் சற்றும் பிடிக்கவில்லை. அவர் ஒரு பிராடெஸ்டண்டு மதத்தவர் என்பதைத் தவிர, வேறு எந்த வகையிலும் அவரை ஆங்கில மக்களுக்குப் பிடிக்கவில்லை. அதோடு அவரும் விக்குகளும் சேர்ந்துகொண்டு அடக்குமுறையில் ஈடுபட்டதால் மக்களின் அதிருப்தி மேலும் வளர்ந்து, இலண்டன் நகரத்திலும் வேல்ஸ் மாகாணத்திலும் பல சிறுசிறு கலகங்கள் தோன்றின. அவற்றைச் சமாளிக்க கலகச் சட்டம் (Riot Act) ஒன்று பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டது. பன்னிரண்டு பேருக்கு மேல் கூட்டம் கூடுவது சட்டவிரோதமெனவும், அங்ஙனம் கூடுபவர்கள் கலைந்து போகச்சொன்ன பின்பும் கலையாமலிருந்தால், மரண தண்டனை விதிக்கப்படுமென்றும் அச்சட்டம் கூறியது.

யாகோபியர்கள் இரண்டாம் ஜேம்ஸின் மைந்தரான ஜேம்ஸ் எட்வர்ட் அல்லது மூத்த போலி (Old Pretender) என்பவரை ஆங்கில அரியணையில் அமர்த்தத் திட்டமிட்டனர். அதற்காக அவர்கள் பிரெஞ்சு மன்னர் பதினான்காம் லூயியின் உதவியை

நாடினர். பாலிங்ப்ரோக் பிரபு, லூயியை அவ்வப்போது யாகோபியர்களுக்கு உதவி செய்யுமாறு தூண்டி வந்தார். ஆனால் லூயி 1715ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் திடீரென இறந்து போனார். அவருக்குப் பின் வந்த பிரான்சின் மன்னரான பதினைந்தாம் லூயி ஒரு நோயாளியான சிறு பையன். எந்த நேரத்திலும் அவர் இறந்துவிடக்கூடுமென யாவரும் நினைத்தனர். அவருக்கு இடைக்காலப் பாதுகாப்பாளராக இருந்து (Regent) பிரான்ஸை ஆண்டுவந்த ஆர்லியன்ஸ் கோமகன் என்பார் லூயி இறந்துவிட்டால் தாமே பிரான்ஸுக்கு மன்னராகிவிட வேண்டுமென விரும்பினார். ஸ்பெயினில் அப்போது மன்னராகஇருந்தவரும் பதினான்காம் லூயியின் பேரருமரான ஐந்தாம் பிலிப் அவருக்குப் போட்டியாக வரக்கூடும் என அவர் அஞ்சினார். இங்கிலாந்துடன் நட்புடனிருக்க விரும்பினார். அதனால் யாகோபியர்களுக்கு உதவ அவர் மறுத்துவிட்டார். இனி வெளிநாடுகளின் உதவி தங்களுக்குக் கிட்டாதென்று முடிவுக்கு யாகோபியர்கள் வந்தனர். பிராடெஸ்டண்டு மதத்தைத் தழுவ மறுத்த ஜேம்ஸ் எட்வர்டுக்காகக் கலகம் செய்ய ஆங்கிலேய யாகோபியர்கள் தயாராயில்லை. மேலும் மக்களைத் தட்டி எழுப்பக்கூடிய ஊக்கமும், உறுதியும் ஜேம்ஸ் எட்வர்டுக்கில்லை. அவர் மந்த புத்தியுடையவர். தோற்றப் பொலிவற்றவர். கலகத்தை நடத்தி வெற்றி பெறச் செய்யும் திறமை அவருக்கில்லை. ஸ்காட்லாந்தியர் மட்டுமே ஓரளவிற்கு யாகோபியர்களுக்கு ஆதரவாயிருந்தனர். 1707ஆம் ஆண்டு இங்கிலாந்தோடு ஸ்காட்லாந்து இணைக்கப்பட்டதைப் பல ஸ்காட்லாந்தியர் வெறுத்தனர். தங்கள்மீது அந்நிய ஆதிக்கம் சுமத்தப்பட்டுவிட்டதாக அவர்கள் எண்ணினர். எனவே மூத்த போலி அவர்களின் உதவியை நாடினார். ஆனால் ஸ்காட்லாந்தியரை நம்பிக் காரியத்திலிறங்குவது மண்குதிரையை நம்பி ஆற்றில் இறங்குவதாக முடியும் எனவும், ஆங்கில டோரிக்கட்சியினருக்குச் சில வாக்குறுதிகள் தந்து அவர்களது ஆதரவைப் பெறுவதே நல்லதென்றும் பாலிங்ப்ரோக் பிரபு மூத்த போலிக்கு அறிவுறுத்தினார். ஆனால் அவரது அறிவுரை ஜேம்ஸ்எட்வர்டுக்குச் செவிடன் காதில் ஊதிய சங்காய் முடிந்தது. மண்ணாசையால் கண்கள் மறைக்கப்பட்டவராய் மூத்தபோலி, பாலிங்ப்ரோக்குக்கும் தெரியாமல் ஸ்காட்லாந்தியரைக் கலகத்திலிறங்கும்படி உத்தரவிட்டுவிட்டார்.

ஸ்காட்லாந்தில் வழக்கம்போல் மேல்நிலத்தார் அல்லது மலைநாட்டு மக்கள் (Highlanders) தாம் மார் எர்ல் (Earl of Mar) என்பவரது தலைமையில் கலகத்தில் இறங்கினர். ப்ரேமார் (Braemar) எனுமிடத்தில் அவர் போலியை இங்கிலாந்து

ஸ்காட்லாந்து மன்னரென அறிவித்தார். மார் எர்ல் ஒரு வீரரே யெனினும் ஒரு தளபதிக்கு இருக்க வேண்டிய குணங்கள் அவரிடம் சிறிதும் இல்லை. எளிதில் ஒரு முடிவுக்கு வரும் ஆற்றலும் அவர்பால் இல்லை. இதனால் அவரைப் பலரும் 'சஞ்சலப் புத்தியுடைய ஜான்' (Bobbing John) என அழைத்தனர். சுறுசுறுப்புடன் தமது படையை நடத்திச் சென்று தாழ்நிலத்தார் அல்லது சமவெளி வாசிகளின் (Lowlanders) உதவியையும் பெறுவதற்குப் பதிலாக அவர் தாம் புறப்பட்ட இடமான பெர்த் (Perth) நகரைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டிருந்தார். அவரைக் கண்டு பொறுமைப்பட்ட ஆத்தோல் (Atholl) என்ற ஹைலாந்துப் பிரமுகர் அவருக்கு மறைமுகமாக இடைஞ்சல்களைச் செய்து வந்தார். இதற்கிடையில் அவருக்கு எதிராகக் கேம்ப்பெல் (Campbell) குடும்பத்தினரின் தலைவரான ஆர்கைல் கோமான் (Duke of Argyle) ஒரு படையைத் திரட்டிக்கொண்டு புறப் பட்டார். ஸ்டர்லிங் (Stirling) நகரைக் கைப்பற்றி, மார் எர்ல், பெர்த் நகரையும், மேலும் பல கிழக்குத் துறைமுகங்களையும் கைப்பற்றினார். லீத் (Leith) நகரைக் கைப்பற்றி, ஒரு படையை முன்னதாகவே அனுப்பினார். ஆனால் அவர் அதிகம் முன்னேறக் கூடவில்லை. வெடிமருந்துப் படை அவரது கைவசமில்லாதது அவருக்கு ஒரு பெருங் குறையாயிருந்தது. ஒவ்வொரு நகரத்திலும் அவருக்குப் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. எடின்பர்க் கோட்டை யைக் கைப்பற்ற அவர் செய்த முயற்சிகள் வீணாயின. அங்ஙனமே டம்ஃப்ரிஸ் (Dumfries), வில்லியம் கோட்டை (Fort William), இன்வெராரே (Inveraray) போன்ற இடங்களை அவர் கைப்பற்றச் செய்த முயற்சிகளும் தோல்வியடைந்தன. மூத்தபோலி வந்து தம்மொடு சேர்ந்துகொள்வாரென மார் பிரபு ஒரு மாதம் எதிர்பார்த்தார். ஆனால், அவர் வருவதாகக் காணோம். வடக்கு ஸ்காட்லாந்தியர் ஜார்ஜ் மன்னருக்கு ஆதரவாகக் கலகத்தி லிறங்கத் தயாராயிருந்தனர்.

ஸ்காட்லாந்தின் எல்லைப்புறத்தில் மார் பிரபுவுக்கு உதவி செய்ய ஒரு படையை ஃபார்ஸ்டர் (Forster) என்ற நார்த்தம் பர்லாந்து பெருநிலக்கிழாரொருவர் திரட்டினார். டெர்வெண்ட் வாடர் பிரபுவும் வேறு பல பிரபுக்களும் அவருடன் சேர்ந்தார் கள். கெல்சோ (Kelso) என்னுமிடத்தில் மூன்று படைகளும் ஒன்று சேர்ந்தன. கென்மியூர் (Kenmure) நித்ஸ்டேல் (Nithsdale) பிரபுக் களது தலைமையில் வந்த தாழ்நிலத்தார்களும் ஃபார்ஸ்டரால் திரட்டப்பட்ட ஆங்கிலேயர்களும், பெர்த் நகரிலிருந்து வந்த மேல்நிலத்தார்களும் அங்கு ஒன்று கூடினர். யாவரும் ஒன்று சேர்ந்து இரண்டாயிரம் பேர் கொண்ட அக்கூட்டப் படை மார்

பிரபுக்கு உதவிசெய்ய வடக்குநோக்கிப் புறப்பட்டது. இத் திட்டத்தைக் கைவிடும்படி மார்பிரபுவே கேட்டுக்கொண்டும் பயனில்லை. பிரஸ்டன் (Preston) என்ற போர்க்களத்தில் கலகக் காரர்கள் 1715ஆம் ஆண்டு நவம்பர் 13ஆம் தேதியன்று படுதோல்வி யடைந்தனர். கலகத் தலைவர்கள், கார்பெண்டர் என்ற அரசரது தளபதியிடம் சரணடைந்தனர்.

அதே நவம்பர் 13ஆம் தேதியன்று மார் பிரபு டம்ப்ளேன் (Dumblane) என்ற நகரைக் கைப்பற்றப் போய்க் கொண்டிருந்த போது வழியில் ஷெரிப்மியூர் ((Sheriffmuir) எனுமிடத்தில் தாக்கப் பட்டார். இப்போரில் இருசாராரின் இடதுசாரிப் படைகளும் தோல்வியுற்றன. ஆனால் யாருக்கும் வெற்றி நிச்சயமாகக் கிடைக்கவில்லை. ஆர்கைல் பிரபுவால் மார் பிரபு தோற்கடிக்கப் பட்டுப் போர்க்களத்தினின்றும் பெர்த் நகரை நோக்கிப் பின் வாங்கினார். மலைநாட்டினர் பலர் மனமுறிந்து தங்கள் தாயகத் துக்குச் திரும்பிவிட்டனர். இந்தச் சமயத்தில்தான் மூத்த போலியான ஜேம்ஸ்எட்வர்ட், பீடர்ஹெட்டில் (Peterhead) வந்திறங்கினார். அங்கிருந்து நேரே சென்று மார் எர்லோடு பெர்த் நகரில் ஒன்று சேர்ந்தார். 1716ஆம் ஆண்டு ஜனவரி மாதம் ஸ்கோன் (Scone) என்னுமிடத்தில் அவர் முடிசூட்டப்பட்டார். அவர் மார்பிரபுவோடு சேர்ந்து இங்கிலாந்தை நோக்கிப் படை யெடுக்க விரும்பினார். ஆனால் மார் பிரபு இனி வெற்றி எதுவும் யாகோபியர்களுக்குக் கிட்டாது எனத் திட்டவட்டமாகக் கூறி விட்டார். ஜேம்ஸும் ஸ்காட்லாந்தியரைத் தட்டியெழுப்பக் கூடிய திறமையுடையவராயில்லை. அவர் சோம்பலும் மந்தபுத்தி யும் உடையவராயிருந்தார். அவருக்குச் சிரிக்கவேதெரியாது எனப் பல ஸ்காட்லாந்தியர் எண்ணினர். இந்நிலையில் பிராடெஸ்டண்டு களுக்குச் சாதகமாக டச்சுப் படையொன்று ஸ்காட்லாந்தில் அச்சமயம் வந்திறங்கியது. ஒரு மாதம் அங்குமிங்கும் சுற்றிப் பார்த்த ஜேம்ஸ் தமக்கு வெற்றிகிட்டுதல் முயற்கொம்பெனத் தெரிந்து கொண்டார். ஆர்கைல் பிரபு அவரைத் துரத்தி வருகிறு ரெனக் கேள்விப்பட்டு அவர் வந்தவழியே பிரான்ஸுக்குத் திரும்பி விட்டார். மலைநாட்டினரின் படைகள் சிதறுண்டன. அவைகளை டச்சுப் படைகள் துரத்திச் சென்று பல வீரர்களைக் கொன்றன. இங்ஙனம் 1715ஆம் ஆண்டு யாகோபியர்களின் கலகம் தோல்வியுற்றது.

கலகத்திலீடுபட்டவர்கள்மீது விக்குகள் மிகவும் கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவில்லை. முக்கியமான ஒரு சிலரே தண்டிக்கப்பட்டனர். கென்மியூர், டெர்வெண்ட் வாட்டர் என்ற இருகலகத் தலைவர்களின் தலைகளும் துணிக்கப்பெற்றன

ஃபார்ஸ்டர் என்பவர் தப்பிவிட்டார். நித்ஸ்டேல் பிரபுவும் தம்மைப் பார்க்கவந்த மனைவியின் உடையில் மாறுவேடம் பூண்டு சிறையினின்றும் தப்பினார். அவர்களோடு சேர்ந்த சுமார் முப்பது சாதாரணக் கலகக்காரர்கள் கொல்லப்பட்டனர். நூற்றுக்கணக் கானவர்கள் மேற்கிந்தியத் தீவுகளுக்கு அனுப்பப்பட்டனர். யாகோபியர்களின் பலம் அழிந்தது. அவர்களுக்கு உறுதுணையா யிருந்த பாலிங்ப்ரோக்கையும், கத்தோலிக்கரின் பேச்சைக் கேட்டு ஜேம்ஸ் எட்வர்டு செயலாளர் பதவினின்றும் நீக்கிவிட்டார். பாலிங்ப்ரோக் இங்கிலாந்தின் அரசாங்கத்திடம் வந்து சரண டைந்தார். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தூண்டுதலால் பிரெஞ்சு அரசாங்கம் ஜேம்ஸை முதலில் அவிக்னன் (Avignon) நகருக்கும், பின்னர் இத்தாலிக்கும் துரத்திவிட்டது. ஜேம்ஸூம், தாம் இனியும் இங்கிலாந்தின் அரசராகலாமென்ற எண்ணத்தைக் கைவிட்டார்.

## ஏழாண்டுச் சட்டம் [Septennial Act (1715)]

1715ஆம் ஆண்டுக் கலகத்தினால் இன்னொரு முக்கியமான பலன் விளைந்தது. இரண்டாண்டுகளுக்குப் பின் நடைபெறப் போகும் பாராளுமன்றத் தேர்தலில் வெற்றி பெற முடியுமா என்பது பற்றி விக்குகள் ஐயமுற்றனர். எனவே அவர்கள் தங்களது பதவிக் காலத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டி ஏழாண்டுச் சட்டத்தைக் கொணர்ந்தனர். அதன்படி பாராளு மன்றத்தின் ஆயுட்காலம் மூன்றாண்டுகளிலிருந்து ஏழு ஆண்டு களுக்கு நீடிக்கப்பட்டது. 1911ஆம் ஆண்டுவரை இச் சட்டம் மாற்றப்படவில்லை.. அதனால் விக்குகள் தங்களது அதிகாரத்தைத் தொடர்ந்து நடத்தவும் தங்களது செல்வாக்கை வளர்த்துக் கொள்ளவும் ஒரு வாய்ப்புக் கிட்டியது. அதே சமயத்தில் தட்டிக் கேட்க ஆளில்லாத காரணத்தால் விக்குக் கட்சியில் லஞ்சமும் ஊழலும் மலிந்தன. ஆனால் ஹெனோவரியர்களின் ஆட்சி நன்கு பலப்படுவதற்கு இச்சட்டம் பெரிதும் உதவியாயிருந்தது.

## ஸ்டோன்ஹோப்பு மந்திரிசபை

## (Stanhope Ministry)

### வெளிநாட்டுக்கொள்கை—முக்கூட்டுறவு [TripleAlliance (1716)]

ஆன் இராணியார் காலத்தில் போரை ஆதரித்த விக்குக் கட்சியினர் 1716ஆம்ஆண்டளவில் அமைதியை விரும்பி நின்றனர். போர்க்கொள்கையைப் பரப்பிவந்த ஸோமெர்ஸ், ஹாலிபாக்ஸ் (Halifax), வார்ட்டன் (Wharton) முதலியோர் 1716ஆம் ஆண்டு

முடிவதற்குள் இறந்துவிட்டனர். உயிரோடிருந்த மார்ல்பரோ பிரபு நோய்வாய்ப்பட்டுப் படுத்தபடுக்கையாய்க் கிடந்தார். எனவே போர் வேண்டுமெனக் கூறக்கூடிய தலைவர்கள் அப்போது விக்குக் கட்சியில் ஒருவருமில்லை. விக்குகளின் இவ்வமைதிக் கொள்கைக்குப் பிரான்ஸில் நடைபெற்ற நிகழ்ச்சிகளும் சாதகமாயிருந்தன. அங்கே அப்போது அரசராயிருந்தவர் பதினைந்தாம் லூயியென்னும் நோயாளியாவார். அவர் சிறுபையனாக இருந்ததால் பிரான்ஸின் ஆட்சிப் பொறுப்பை லூயியின் இடைக்காலப் பாதுகாப்பாளரான ஆர்லியன்ஸ கோமகன் வகித்து வந்தார். லூயி திடீரென இறந்துவிட்டால் ஸ்பெயின் அரசரான ஐந்தாம் பிலிப்பு (Philip V - பதினான்காம் லூயியின் பேரன்) பிரெஞ்சு மகுடத்துக்கும் உரிமை கொண்டாடக் கூடுமென்ற பயம் பிரெஞ்சுத் தலைவர்களை வாட்டிற்று. ஆனால் யுட்ரெக்ட் சமாதானப்படி அங்ஙனம் உரிமை கொண்டாடுவதில்லை எனப் பிலிப் வாக்குறுதி யளித்திருந்தார். எனினும், பிலிப் தம் வாக்குறுதியை மீறிவிடக்கூடுமென ஆங்கிலேயர் பயந்தனர். எனவே, ஆர்லியன்ஸ் கோமகனார் இங்கிலாந்தின் நட்பைப் பெற விரும்பினார். இரு நாடுகளுக்கும் பேச்சு வார்த்தை ஏற்பட்டபின் 1716ஆம் ஆண்டு நவம்பர் 28ஆம் தேதி அவைகளுக்கிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது, அதன்படி பிரான்சின் இடைக்காலப் பாதுகாப்பாளர். ஹெனோவரியர்களை இங்கிலாந்தின் மன்னர்களாக ஏற்றுக்கொண்டு ஆதரிக்கவேண்டும். ஐந்தாம் பிலிப் பிரான்ஸின் மன்னராகாதபடி பிரான்ஸுக்கு இங்கிலாந்து உதவ வேண்டும். டன்கர்க் மார்டைக், என்ற இரண்டு இடங்களிலிருந்த கோட்டைகள் தகர்த்தெறியப்பட வேண்டும். மூத்த போலி ஆல்ப்ஸ் மலைக்கு அப்பால் துரத்தப்படவேண்டும். இந்த உடன்பாட்டுக்கு டச்சுக்காரர்களும் தங்களது ஆதரவைச் சில வாரங்களுக்குள் தெரிவித்தனர். எனவே இவ்வுடன்படிக்கை முக்கூட்டுறவு என்னும் பெயர் பெறுகிறது.

## நால்வர் உடன்பாடு
## Quadruple Alliance [1718—1720]

வெளிநாட்டு உறவுகளைப் பொறுத்தவரையில் விக்குகள் அரசரது கருத்தையும் மதிக்க வேண்டியிருந்தது. அரசர் இங்கிலாந்திலிருந்தாலும் தமது சொந்த நாடான ஹெனோவர்மீது எப்போதும் மிகுந்த அக்கறை காட்டிவந்தார். அந்நாட்டை விரிவுபடுத்த வேண்டுமென்பது அவரது முதல் ஆசை. இரண்டாவதாக அவர் தமது புதல்வனை ஜார்ஜ் என்னும் வேல்ஸ் இளவரசரைத் தண்டிக்க விரும்பினார். இருவருக்கும் மனக் கசப்பு வளர்ந்து கொண்டே வந்தது.

தமது முதல் ஆசையைப் பூர்த்திசெய்ய ஜார்ஜ் 1715ஆம் ஆண்டில் ப்ரெமன், வெர்டுன் (Bremen, Verdun) என்ற இரண்டு இடங்களை நான்காம் பிரடரிக் என்னும் டென்மார்க் அரசரிடமிருந்து விலைகொடுத்து வாங்கினார். இதை விக்கு மந்திரிகளிற் பெரும்பாலோர் அனுமதித்தனரேனும், டவுன்செண்ட் (Townshend, வால்போல் Walpole போன்றவர்கள் அரசரது செய்கையைக் கண்டித்தனர். தமது நாடான ஹெனோவருக்காகவும், தமது காமக்கிழத்தியருக்காகவும் இங்கிலாந்தின் பணத்தை விரயமாக்குகிறார் என அவர்கள் ஜார்ஜின்மேல் குற்றம் சாட்டினர். மேலும் அவர்கள் வேல்ஸ் இளவரசரோடு நட்புறவு கொண்டிருந்தது ஜார்ஜுக்குப் பிடிக்கவில்லை. எனவே, அவர் டவுன்செண்டை அமைச்சர் பதவியினின்றும் நீக்கி, அயர்லாந்துக்கு அதன் உதவித் தளகர்த்தராக நியமித்தார்.

ப்ரமென், வெர்டுன் என்ற பிரதேசங்கள் ஆதியில் ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்தவை. ஸ்வீடன்அரசர் பன்னிரண்டாம் சார்லஸ், ருஷ்யர்களிடம் சண்டையிட்டுத் தோற்றுத் துருக்கி நாட்டிற்கு ஓடிவிட்டார். அச்சமயம் பார்த்து டென்மார்க் அரசர் மேற் சொன்ன இரண்டு இடங்களையும் பிடித்து அவற்றை ஹெனோவர் அரசருக்கு விற்றுவிட்டார். பன்னிரண்டாம் சார்லஸ் 1714ஆம் ஆண்டில் துருக்கியிலிருந்து திரும்பிவந்துவிட்டார். ப்ரெமென், வெர்டுன் பிரதேசங்களை அவர் மீட்க விரும்பினார். தமது தலை மறைந்தவுடன் தம் நாட்டின் பகுதிகளைக் கவர்ந்து கொண்ட டென்மார்க் அரசரோடு அவர் போரிட்டார். பிரிட்டன். ஹெனோவர் நாட்டைக் காக்க ஒவ்வோர் ஆண்டும் ஒரு படையை அனுப்பிவந்தது. ஸ்வீடன் அரசர் ஸ்பெயினோடு பேரம் பேசினார், ஸ்பெயினின் உதவிகொண்டு ஸ்காட்லாந்துமீது படையெடுத்து யகோபியர்களுக்கு உதவவேண்டுமென அவர் விரும்பினார். ஸ்பெயினில் அப்போது அல்பெரோனி (Alberoni) என்ற ஒரு மந்திரி, ஐந்தாம் பிலிப்பின் அன்பைப் பெற்றவராய் நாட்டின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளை வகுத்து வந்தார். அவரும் பிலிப்பும் சேர்ந்துகொண்டு யுட்ரெக்ட் சமாதானத்தால் ஸ்பெயின் இழந்துவிட்ட ஸிஸிலி, சார்டினியா, நெதர்லாந்து, நேபில்ஸ், மிலான், ஜிப்ரால்டர் போன்ற அனைத்திடங்களையும் மீண்டும் கைப்பற்றத் திட்டமிட்டனர். ஆஸ்திரியப் பேரரசர் ஆறும் சார்லஸ் தாம் யுட்ரெக்ட் சமாதானத்தாற் பெற்ற ஆஸ்திரிய நெதர்லாந்தையும், மிலான் நேபில்ஸ் நாடுகளையும் இழந்து விடாமல் பாதுகாக்க விரும்பினார். சார்டினியாவை மட்டும் அவர் விட்டுவிடத் தயாராயிருந்தார். ஆனால் அதற்குப் பதிலாக ஸிஸிலியைப் பெற விரும்பினார். இந்நிலையில் ஸ்பானிய

இராணியான எலிஸபெத் ஃபார்னெசி (Elizebeth Farense) என்பார் தமது மகனுன டான்கார்லோ (DonCarlos) என்பவருக்கு பார்மா (Parma) பியாஸன்ஸா (Piacenza) என்ற இரண்டு இடங்களையும் கைப்பற்றித்தர விரும்பினுர். வடக்கே ருஷ்ய மன்னர் மகாபிட்டர் என்பவர் பால்டிக் பிரதேசத்தில் தமது செல்வாக்கைப் பரப்பத் திட்டமிட்டார். இங்ஙனம் ஸ்வீடன், ருஷ்யா, ஸ்பெயின் இம்மூன்று நாடுகளாலும், ஆஸ்திரியா, பிரான்ஸ், ஹனேவர், ஹாலாந்து, பிரிட்டன் ஆகிய நாடுகளுக்குச் சொந்தமான இடங்களுக்கு ஆபத்து வரும்போல் இருந்தது. இந்த இக்கட்டான நிலையைப் பயன்படுத்திக்கொண்டு ஜார்ஜூம் ஸ்டான்ஹோப்பும் பிரான்ஸின் ஆதரவைப் பெறச் சித்தமாயினர். ஜார்ஜ், ஹெனேவரில் தங்கியிருந்தபொழுது (1716) பிரான்ஸோடு பேச்சுவார்த்தையைத் தொடங்கினுர். அரசர் வெளிநாட்டில் தங்கக்கூடாது என்று கூறும் அரசுரிமை நிர்ணயச் சட்டத்தின் ஷரத்து, ஜார்ஜூக்காக ரத்து செய்யப் பட்டது.

டவுன்செண்டும், வால்போலும், அரசர் வெளிநாட்டில் தங்கியிருப்பதையும், இங்கிலாந்தின் கப்பற்படையை ஹெனேவர் நாட்டுக்காகப் பயன்படுத்துவதையும் கண்டித்துப் பேசினர். மேலும் வேல்ஸ் இளவரசருக்கு அதிக அதிகாரம் தரவேண்டுமெனவும் அவர்கள் கோரினர். இதனுலெல்லாம் கோபமுற்ற ஜார்ஜ், டவுன்செண்டை 1717ஆம் ஆண்டில் பதவியை விட்டு நீக்கினுர். அதைத் தொடர்ந்து வால்போல் தமது பதவியை ராஜினுமா செய்தார். ஸ்டான் ஹோப், ஸண்டர்லாந்து போன்றவர்கள் ஆட்சியை நடத்தினர். ஆனுல் அவர்களது ஆட்சி அவ்வளவு பலமுடையதாக இல்லை. திருச்சபையிலும், ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திலும் டோரிகள் மீண்டும் யாகோபியர்களுக்குச் சாதகமாகப் பேச ஆரம்பித்தனர். அவற்றைத் தாக்கி 'ஸ்பெக்டேடர்' போன்ற பத்திரிகைகள் பல கட்டுரைகளை எழுதின. ஆர்ச் பிஷப் வேக் (Wake) என்பார். அரசாங்கத்துக்கு ஆதரவாக எழுதினுர். இங்ஙனம் கட்சிப் பூசல்களால் இங்கிலாந்து அலைக் கழிக்கப்பட்டது.

ஸ்டான்ஹோப் மந்திரிசபை 'இணங்காதாருக்கு, அது கொடுத்திருந்த வாக்குறுதியை நிறைவேற்ற விரும்பி, சமயப் பொறைச் சட்ட மொன்றை அயர்லாந்தில் நிறைவேற்றியது. அதன்படி பிராடெஸ்டண்டுகளுக்கு அங்கே தொழுகைச் சுதந்திரம் கிடைத்தது. இங்கிலாந்தில் சிலவேளை இணக்கச் சட்டமும், பிளவுச்சட்டமும் ரத்துச்செய்யப்பட்டன. சோதனைச் சட்டத்தையும் மாநகராட்சிச் சட்டத்தையும் ரத்துசெய்ய ஸ்டான்ஹோப்

விரும்பினர். ஆனல் பாராளுமன்றத்தில் வால்போலின் ஆதரவாளர்கள் அதைப் பலமாக எதிர்த்தனர். எனவே அம்முயற்சியை ஸ்டான்ஹோப் கைவிட்டார்.

ஸ்டான்ஹோப் மந்திரிசபையின் இன்னொரு முக்கியமான சாதனையாவது, ஆஸ்திரியா, ஹாலந்து, பிரான்ஸ் முதலிய நாடுகளோடு 1718ஆம் ஆண்டில் ஏற்படுத்திய நால்வர் உடன்பாடு ஆகும். இதன்படி ஆஸ்திரியப் பேரரசர், ஸ்பெயின் அரசர் பதவிக்கு உரிமைக் கொண்டாடக் கூடாது. பேரரசருக்கு ஸிஸிலி தரப்படவேண்டும். செவாய் கோமகன் ஸிஸிலியைப் பேரரசருக்குக் கொடுத்துவிட்டு அதற்குப்பதிலாக ஸார்டீனியா (Sardunia) நாட்டைப் பெறவேண்டும். ஸ்பெயின் இளவரசர் டான்கார்லோ என்பாருக்கு பார்மா, பியாசென்ஸா என்ற இரு சிறு நாடுகளும் தரப்படவேண்டும். இந்த உடன்படிக்கையால் ஆஸ்திரியாவையும் ஸ்பெயினையும் சமாதானப் படுத்திவிடலாம் என ஜார்ஜ் நினைத்தார். ஆனல் அது முடியவில்லை.

ஏற்கெனவே 1717ஆம் ஆண்டில் அல்பெரோனி என்ற ஸ்பானிய மந்திரி ஒரு படையை அனுப்பி ஸார்டீனியாவைக் கைப்பற்றிவிட்டார். எனவே அவர் நால்வர் உடன்பாட்டை ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டார். 1718ஆம் ஆண்டில் அவர் ஸிஸிலியைத் தாக்கினர். ஸ்டான்ஹோப், மாட்ரிட் நகருக்கு நேரில் சென்று, ஜிப்ரால்டரை ஸ்பெயினுக்குத் தந்துவிடுவதாகக் கூறியும் போரை நிறுத்த அல்பெரோனி ஒருப்படவில்லை. 1718 ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் கடல் தளகர்த்தரான பிங் (Byng) என்பார் ஸ்பானியக் கப்பற்படையை ஸிஸிலித் தீவின் தென்கிழக்கிலுள்ள பஸ்ஸாரோ முனைக்கருகில் (Cape Pasaro) தோற்கடித்தார். இதே சமயத்தில் ஸ்டான்ஹோப்பின் முயற்சியால் துருக்கியருக்கும் ஆஸ்திரியருக்கும் பெஸ்ஸோரோவிட்ஜ் (Passarowetz) எனுமிடத்தில் ஒரு சமாதான உடன்பாடு ஏற்பட்டது. பிரிட்டிஷ் கப்பற்படையானது ஸிஸிலியிருந்த ஸ்பானியச் சேனைக்கு ஸ்பெயினிலிருந்து மேல் உதவி செல்லாவண்ணம் தடுத்தது. இன்னொரு பிரிட்டிஷ் கடற்படையானது பால்டிக்கடலுக்கு அனுப்பப்பட்டதால் ஸ்வீடன் ஹெனேவரைத்தாக்குவது நின்றது. 1718ஆம் ஆண்டு டிசம்பர் பதினேராம் தேதி ஸ்வீடன் மன்னரான பன்னிரண்டாம் சார்லஸ், ஃபிரீட்ரிக்ஷால் (Friedrick-shall) எனுமிடத்தில் முற்றுகையில் ஈடுபட்டிருக்கையில் மாண்டார். எனவே அவர் யாகோபியர்களோடு சேர்ந்து கொண்டு ஸ்காட்லாந்துமீது படையெடுக்கக்கூடிய அபாயமும் தீர்ந்தது. 1719ஆம் ஆண்டில் ஒரு ஸ்பானியக் கப்பற்படையானது யாகோ

பியர்களுக்கு உதவி செய்ய ஸ்காட்லாந்துக்குப் போய்க்கொண்டிருக்கும் வழியில் புயலில் சிக்கி அழிந்தது. புயலுக்குத் தப்பிய ஸ்பானியர், பிரிட்டிஷாரிடம் சரணடைந்தனர். ஸ்டான்ஹோப், பிரெஞ்சுக்காரரைத் தூண்டி பிரெஞ்சுப் படையொன்றை ஸ்பெயினுக்குள் நுழையச் செய்தார். இதையெல்லாம் கண்ட பிலிப் மன்னர், அல்பொாரானியைப் பதவியை விட்டு 1719ல் நீக்கினுர். நால்வர் உடன்பாட்டை ஐந்தாம் பிலிப் ஏற்றுக்கொண்டார். யுட்ரெக்ட் சமாதான உடன்படிக்கைக்கு இணங்குவதாகவும் அவர் ஒப்புக்கொண்டார். ஸ்வீடன் நாடும், ப்ரெமன், வெர்டென் என்ற இரண்டு இடங்களையும் ஹெனேவருக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டது. செவாய் கோமகன், ஸிஸிலியைப் பேரரசருக்குக் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாக ஸார்டீனியாவைப் பெற்ருர். ருஷ்யாவும் ஸ்வீடனும் சமாதானம் செய்துகொண்டன. ஸ்டான்ஹோப்பின் முயற்சியினுல் அடுத்த பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஐரோப்பாவில் அமைதி நிலவியது. பால்டிக் கடலில் பிரிட்டிஷ் வியாபாரம் அதனுல் பாதுகாக்கப்பட்டது. ருஷ்யா, பால்டிக் பிரதேசத்தில் முக்கியத்துவம் அடைவதைத் தடுக்க அதன்மேல் போர்த்தொடுக்க வேண்டுமென ஸ்டான்ஹோப் மற்றைய நாடுகளைத் தூண்டிப் பார்த்தார். ஆனுல் முடியவில்லை. அதன் விளைவாக 1721ஆம் ஆண்டில் நிஸ்டாட் உடன்படிக்கையின்படி (Peace of Nystad) ஸ்வீடனைச் சேர்ந்த எஸ்தோனியா (Esthonia) முதலிய பால்டிக், கடற்கரைப் பிரதேசங்கள் ருஷ்யாவுக்குத் தரப்பட்டன. ஆனுல் ருஷ்யா, பால்டிக் துறைமுகங்களான ரீகா, நார்வா போன்ற பட்டினங்கள்மீதுஆதிக்கம் பெற்றது.

## உள்நாட்டுக் கொள்கை

விக்குகளின் உள்நாட்டுக் கொள்கையானது பழிவாங்கும் எண்ணத்துடன் கூடியதாயிருந்தது. தாராளக் கொள்கையுடைய விக்குகளே திருச்சபையில் உயர்ந்தப் பதவிகளைப் பெற்றனர். ஆர்ச் பிஷப்பாக வேக் (Wake) எனும் தாராளக் கொள்கையினர் நியமிக்கப்பட்டார். குருமார்களின் திருக்கூட்டத்தை அவர் எதிர்த்துப் பேசி அத்திருக் கூட்டத்தினரின் அதிகாரத்தை விட அரசாங்கத்தின் அதிகாரமே உயர்ந்தது எனக் கூறினுர். இலண்டன் நகர் பிஷப்பான கிப்ஸன் (Gibson) என்பவர் ஒரு விக் கட்சியினர். பேங்கார் நகர பிஷப்பான ஹோட்லி (Hoadley) என்பார் திருச்சபையானது சுதந்திரமுள்ள தனிமனிதர்களின் கூட்டமே என்று சொற்பொழிவாற்றினுர். அதைக் குருமாரின் திருக்கூட்டம் கண்டித்தது. அங்ஙனம் கண்டித்ததற்காக அக் குருமார் கூட்டமானது அரசாங்கத்தால் கலைக்கப்பட்டது.

இணங்காதாருக்கு' விக்குகள் ஏற்கெனவே தந்திருந்த வாக்குறுதிகளைக் காப்பாற்றவேண்டி சில வேளை இணக்கச்சட்டத்தையும், மாநகராட்சிச் சட்டத்தையும் ரத்துச் செய்ய ஸ்டான்ஹோப் விரும்பினார். ஆனால் வால்போலின் ஆதரவாளர்கள் அதை வன்மையாகக் கண்டித்ததால் அம்முயற்சி கைவிடப்பட்டது.

## பிரபுத்துவ சட்டம் (Peerage Bill 1719)

விக்குக் கட்சியே பிரபுக்களின் சபையின் பெரும்பான்மைக் கட்சியாயிருந்தது. அக்கட்சி நிரந்தரமாகவே பிரபுக்கள் சபையில் செல்வாக்குடனிருக்க விரும்பியது. 1712ஆம் ஆண்டில் தனக்கு வேண்டியவர்களை ஆன்ராணியார் பிரபுக்கள் சபையில் உறுப்பினர்களாக நியமித்துத் தமது செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டது போன்று மற்ற அரசர்களும் செய்யாமல் தடுக்க வேண்டி ஸண்டர்லாந்து பிரபு 'பிரபுத்துவச்சட்டம்' ஒன்றை 1719ஆம் ஆண்டில் கொண்டு வந்தார். அச்சட்டமானது பிரபுக்கள் சபையில் 184 உறுப்பினருக்கு மேல் இருக்கக்கூடாதெனக் கூறிற்று. ஏற்கெனவே 178 பேர் பிரபுக்கள் சபையில் இருந்ததால் மேற்கொண்டு 6 பேர் மட்டுமே அரசரால் நியமிக்கப்படலாம். அதன்பின் யாராவது ஒரு பிரபு இறந்தால் மட்டுமே அரசருக்கு நியமிக்கும் அதிகாரமுண்டு. ஸ்காட்லாந்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டுப் பிரபுக்கள் சபையில் இடம் பெற்றிருந்த பதினாறு உறுப்பினர்களுக்குப்பதிலாக இருபத்தைந்து பரம்பரைப் பிரபுக்களை அரசர் நியமிக்க வேண்டும். இந்தச் சட்டமானது பிரபுக்கள் சபையில் நிறைவேறியது. ஆனால் பொதுமக்கள் சபையில் அது பெரிதும் கண்டிக்கப்பட்டது. வால்போல் தமது பேச்சுவன்மையால் அதைப் பொதுமக்கள் சபையில் தோற்கடித்தார். இச்சட்டம் அங்கும் நிறைவேறியிருந்தால் பிரபுத்துவம் என்பது ஒரு சிலருக்கே உரிய பரம்பரைச் சொத்தாகப் போயிருக்கும். பொதுமக்கள் சபையில் நற்பணியாற்றிய பெரு மக்களுக்கு அரசர்கள் பிரபுப் பட்டம் கொடுக்கும் வழக்கம் நின்றுபோயிருக்கும். பிரபுக்களை நியமனம் செய்கிற அரசரது தனிச்சிறப்பதிகாரம் அநாவசியமாகப் பலஹீனமடைந்திருக்கும்.

## தென்கடல் குமிழி (South Sea Bubble)

ஸ்டான்ஹோப் மந்திரிசபை உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கைகளில் தோல்விமேல் தோல்வி எய்தி வந்த நிலையில் அதற்கு முத்தாய்ப்பு வைத்தாற்போல் 'தென்கடல் நீர்க்குமிழி' என்ற விபத்தும் நாட்டுக்கு வந்து சேர்ந்தது. 1689ஆம் ஆண்டிலி

ருந்து இங்கிலாந்து பல போர்களில் ஈடுபட்ட காரணத்தால் செலவு ஏராளமாக அதிகரித்தது. அதைச்சமாளிக்க அரசாங்கம் அவ்வப்போது பலதரப்பட்ட மக்களிடமிருந்து கடன் வாங்கியிருந்தது. அக்கடன் தொகை 1719ஆம் ஆண்டில் 54 மிலியன் பவுன்களாக உயர்ந்தது. அக்கடன்களை அரசாங்கம் திருப்பித்தரவேண்டிய நிர்ப்பந்தமில்லாவிடினும் அவற்றுக்குரிய வட்டிகளைக் கொடுப்பது அவசியமாயிற்று. வட்டிகளின் வீதம் ஐந்து சதவீதத்திலிருந்து பத்துச் சதவீதம் வரைப் பலவிதமாயிருந்தது. வட்டித் தொகை கொடுப்பதற்கே முடியாமல் அரசாங்கம் திணறியது. இச்சமயத்தில் அரசாங்கத்துக்கு உதவிசெய்யத் 'தென் கடல்' கம்பெனி என்னும் ஒரு வியாபாரச் சங்கம் முன்வந்தது.

தென்கடல் கம்பெனியானது 1711ஆம் ஆண்டு ஹார்லி என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. யுட்ரெக்ட் சமாதானத்தால் இங்கிலாந்துக்குக் கிடைத்த வியாபாரத் தனிச் சிறப்புரிமையானது அக்கம்பெனிக்கு அரசாங்கத்தால் அளிக்கப்பட்டது. ஸ்பானியக் குடியேற்ற நாடுகளுக்கு, நீக்ரோ அடிமைகளை விற்றும், மற்றும் ஆண்டு ஒன்றுக்கு ஒரு கப்பல் சமான்களை போர்ட்டோபெல்லோ என்ற தென் அமெரிக்கத் துறைமுகத்துக்கு அனுப்பியும் அக்கம்பெனி ஏராளமான இலாபத்தைப் பெற்றது. மேலும் தனது செல்வாக்கை வளர்த்துக்கொள்ள அக்கம்பெனி விரும்பியது. தனக்குத் தரப்பட்டுள்ள சிறப்புரிமைகளை இன்னும் அதிகமாக்கும்படி அக்கம்பெனி அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டது. அங்ஙனம் வழங்கப்படும் சிறப்புரிமைகளுக்குக் கைம்மாறாக ஐந்து சதவீத வட்டியில் அரசாங்கத்துக்கு வேண்டிய கடன் அனைத்தையும் தான் தருவதாக அக்கம்பெனி வாக்கு அளித்தது, அரசாங்கத்துக்குக் கடன் கொடுத்தவர்களெல்லாம் அக்கம்பெனியில், தாங்கள் கொடுத்த கடன் தொகைக்கேற்ற பங்குகளைப் பெற்றுக் கொள்ளலாமென்றும் அக்கம்பெனி அறிவித்தது. பணத்தைக் கேட்பவர்களுக்கு அதைத் திருப்பித் தருவதற்காக அரசாங்கத்திடம் அக்கம்பெனி 79 மிலியன் பவுன்களை ஒப்படைத்தது. இந்தத் திட்டத்தால் அரசாங்கம் பலதரப்பட்ட கடன்களிலிருந்தும்; பலதரப்பட்டவட்டி வீதத்திலின்றும் விடுபட ஒரு வசதி ஏற்பட்டது. மேலும் அக்கம்பெனியின் வட்டி வீதம் மிகக் குறைவாக இருந்ததால் அரசாங்கத்துக்கு அதனால் ஆண்டொன்றுக்கு ஒரு லக்ஷம் பவுன்கள் மீதி ஏற்படவேண்டுமெனவும் கணக்கிடப்பட்டது. எல்லா வகையிலும் அக்கம்பெனியின் திட்டம் மிக நல்ல திட்டமாகவே காணப்பட்டது. எனவே அதை அரசாங்கம் ஒப்புக்கொண்டது. அரசாங்கத்துக் கடன் கொடுத்தவர்கள் தென்கடல் கம்பெனியில் பங்குதாரர்

களாகச் சேர மனமுவந்து முன்வந்தனர். கம்பெனியின் கொள்ளை இலாபத்தில் தங்களுக்கும் பங்கு கிடைக்குமென்ற நம்பிக்கையால் அவர்கள் உளம் பூரித்தனர். அதிகச் சிறப்புரிமைகளால் தனது இலாபம் அதிகரிக்கும் எனக் கம்பெனியும் நம்பியது. ஆனால் நடைமுறையில் இவர்களது ஆசையெல்லாம் நிராசையாகப் போய்விட்டது.

மக்களிடையே தென்கடல் கம்பெனியின் இலாப நிலையைப் பற்றி ஓர் அலாதியான நம்பிக்கை ஏற்பட்டது. அதில் பங்குதாரராகச் சேர்ந்தால் கண்டிப்பாக செல்வந்தராகிவிடலாமென ஒவ்வொருவரும் நினைத்தனர். எனவே, கம்பெனிப் பங்குகளின் மதிப்பு விறுவிறு என்று விஷம்போல் நாளுக்குநாள் ஏறியது, பிப்ரவரி மாதத்தில் 130 பவுனாக இருந்த பங்கின் மதிப்பானது ஜூன் மாதத்தில் 1050 பவுனாக உயர்ந்தது. ஒருவிதச் சூதாட்டப் பைத்தியம் மக்களைப் பிடித்தது. ஆகஸ்ட் மாதத்தில் ஒரே வாரத்தில் மட்டும் 36,000 பங்கு மாற்றங்கள் நிகழ்ந்தனவென்றால் மக்களின் சூதாட்ட மனப்பான்மை எந்நிலையிலிருந்தது என்பது சொல்லாமலே விளங்கும். இந்த மனப்பான்மையைச் சில பொருளாதாரச் சழக்கர்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ள முன்வந்தார்கள். அரசாங்கத்திடம் உரிமைச் சாசனம் பெறாமலேயே அவர்கள் பல கம்பெனிகளைத் தோற்றுவித்தனர். அவைகளின் நோக்கங்கள் விசித்திரமானவைகளாயும், நகைப்புக்கிடமானதாயு மிருந்தன. கடல் நீரிலிருந்து தங்கம் பிழியவென்று ஒரு கம்பெனி, பாதரசத்தைக் கெட்டியான உலோகமாக்கவென்று ஒரு கம்பெனி, ஸ்பெயினிலிருந்து ஆண் கழுதைகளைக் கொண்டு வரவென்று ஒரு கம்பெனி, இப்படிப் பல அசம்பாவிதமான கம்பெனிகள் நீர்க்குமிழிகள்போல் தோன்றின. இக்கம்பெனிகள் யாவும் சட்டத்துக்கு விரோதமாக ஆரம்பிக்கப்பட்டனவாதலால் தென்கடல் கம்பெனியானது அவர்கள்மீது சட்ட நடவடிக்கை எடுத்துக் கொள்ள ஆரம்பித்தது. இதனால் பல கம்பெனிகள் இருந்த இடம்தெரியாமல் மறைந்தன. நீர்க்குமிழிகள் வெடித்து விட்டன. அக்கம்பெனிகளில் முதல் போட்டிருந்தவர்களெல்லாம் பெரு நஷ்டத்துக்குள்ளானார்கள். பொதுவான இந்நெருக்கடி தென்கடல் கம்பெனியையும் பாதித்தது. அதன் பங்குகளின் மதிப்பு விறுவிறுவென்று இறங்கியது. ஜூலை மாதத்தில் 1000 பவுனுக்கு விற்ற பங்குகள் நவம்பரில் 135 பவுனுக்கே விற்கப்பட்டன. எங்குப்பார்த்தாலும் ஒரே அமளியாயிருந்தது. எல்லோரும் அரசாங்கத்தின் மீது குறைசொல்ல ஆரம்பித்தார்கள். அக்குறைகளை ஆராய இரகசியக் குழுவொன்று நியமிக்கப்பட்டது. அக்குழுவின் சிபாரிசுப்படி, பொதுமக்கள் சபையானது கருவூலத் தலைவரான அய்ஸ்லபி (Aislabia) என்பவரைச் சிறைப்

படுத்தியது. தபால் இலாகாத் தலைவரான கிரேக்ஸ் (Craggs) என்பவர் நஞ்சுண்டு தற்கொலை செய்துகொண்டார். மந்திரி ஸ்டான்ஹோப், ஊழல் எதிலும் கலந்து கொள்ளாவிடினும் மனமுடைந்து வலிப்பு கண்டு இறந்துபோனார். ஸண்டர்லாந்தும் தாம் இலஞ்சம் வாங்காமலிருந்தும் மந்திரிசபையை விட்டு விலகினார். டவுன்செண்ட் அரசாங்கச் செயலாளராகவும், வால்போல் கருவூல முதற் பிரபுவாகவும் நியமிக்கப்பட்டனர். வால்போல் நாட்டின் பொருளாதார நிலையைச் சீர்திருத்தி ஒழுங்குபடுத்தினார். கம்பெனியின் டைரக்டர்களுக்குச் சொந்தமான சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன. நாட்டுக்கடனை மீண்டும் அரசாங்கம் மேற்கொண்டது. கம்பெனி முதலாளிகளுக்கு அவர்கள் போட்ட முதலில் மூன்றில் ஒரு பகுதி கிடைத்தது. நாட்டின் உண்மையான செல்வ நிலையை இந்நிகழ்ச்சியொன்றும் அதிகமாகப் பாதிக்கவில்லை. பணக்காரர்கள் பலர் அழிந்தனரென்றாலும் வேறு சிலர் புதிய செல்வந்தர்களானார்கள். பணம் கைமாறியதைத் தவிர வேறு தீயபலன்கள் ஒன்றும் ஏற்படவில்லை. ஆனால் மக்களிடையே ஒரு நம்பிக்கையின்மை ஏற்பட்டது. எதிலும் முதல்போட அவர்கள் பயந்தனர். இது ஒன்றே தென்கடல் நீர்க்குமிழியால் ஏற்பட்ட பெருந்தீங்காகும்.

வால்போல், நாட்டுமக்களின் நன்மதிப்பைப் பெற்றார். அவருடைய எதிரிகளான ஸண்டர்லாந்து, மார்ல்பரோ ஆகிய இருவரும் இறந்து விட்டதால் அவரது கைமேலும் ஓங்கிற்று. ஸ்டான்ஹோப்பின் அனுதாபியான கார்ட்டெரெட் (Carteret) என்பார். அயர்லாந்தின் கவர்னராக அனுப்பப்பட்டுவிட்டார். அவருக்குப் பதிலாக நியூகாஸில் கோமகனை ஒரு பணக்கார வாலிபர் மந்திரி சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். நியூகாஸிலின் சகோதரரான பெல்ஹாமும் (Pelham) அவரது சகாவாக நியமிக்கப்பட்டார். டோரிகள் யாவரும் யாகோபியர்களாகக் கருதப்பட்டதால் அவர்களிடமிருந்து வால்போலுக்கு ஒன்றும் பயமில்லை. கத்தோலிக்கரும், இராஜ விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்ளாதவர்களும் (Nonjuors)தங்களது வரும்படியில் பவுன் ஒன்றுக்கு ஐந்து ஷில்லிங் வீதம் வரி செலுத்தும்படி வற்புறுத்தப்பட்டனர். இதனல் அவர்களது எதிர்ப்பு ஒடுங்கியது. பாலிங்ப்ப்ரோக் பிரபுவுக்கு அரசரின் விருப்பப்படி மன்னிப்பு வழங்கப்பட்டது. ஆனால் பிரபுப்பட்டம் அவருக்கு மறுக்கப்பட்டது. இச்சமயத்தில் முதலாம் ஜார்ஜ், ஹெனோவர் நாட்டுக்குப் போய்க்கொண்டிருக்கும் வழியில் திடீரென மாண்டுபோனார். அவருக்குப்பின் இங்கிலாந்தின் மன்னரான இரண்டாம் ஜார்ஜ் மன்னர், வால்போலை அறவே வெறுத்தவர் எனினும் அவரது இராணியாரின்அன்பையும்

ஆதரவையும் வால்போல் பெற்றிருந்தார். இராணியார் தம் கணவரிடம் சொல்லி வால்போலைக் காப்பாற்றினர். மன்னருடைய சொந்தச் செலவுக்காக அளிக்கப்பெறும் பணத்தொகையைச் சற்று அதிகரித்ததின் மூலம் வால்போல், மன்னரின் ஆதரவைப் பெற்ருர். அடுத்த 21 ஆண்டுகளுக்கு வால்போல், இங்கிலாந்தில் முடிசூடா மன்னராக விளங்கினர்.

# 3. இரண்டாம் ஜார்ஜ்

குணதிசியங்கள்

விக்குகளும் டோரிகளும்

சர் ராபர்ட் வால்போல் — வாழ்வும் செயலும்—இளமைக் காலம் — குணதிசியா
கள்—அரசியல் வாழ்வு—உள்நாட்டுக் கொள்கை—உத்தரவாத மளிப்பு
சட்டம் (Act of Indemnity)—கடன் கழிவு நிதி—வியாபார வளர்ச்சி—
நாணயச் சீர்திருத்தம்—குடியேற்ற நாட்டுக் கொள்கை—போர்ட்டியஸ
கலகம்.

வெளிநாட்டுக் கொள்கை : பிரான்ஸுடன் நட்பு—ஆஸ்திரியா, ஸ்பெயின்—
முதல் வியன்னு உடன்படிக்கை [1725]—போலந்து வாரிசுரிமைப்போர்—
[1733]—குடும்ப ஒபபந்தம்—(Family Compact) — ஜென்கின்ஸ் காது
சண்டை (Jenkins Ear War)

வால்போல் செய்த சேவைகளின் முக்கியத்துவம்

கட்சியாட்சியும் காபினெட் வளர்ச்சியும் : கட்சிகளின் தோற்றம் — கட்சியாட்
யின் வளர்ச்சி—வால்போலும் காபினெட் ஆட்சியும்—கருத்தொருமை
(Homogenity)—பொது மக்கட் சபைக்குப் பொறுப்பு [Responsibility
the House of Commons] — பிரதமரின் தலைமை (Primacy of th
Premier) மன்னரது தலையீடின்மை - காபினெட்டும் ஆங்கில அரசி
லமைப்பும்.

## குணதிசயங்கள்

இரண்டாம் ஜார்ஜ் பட்டத்துக்கு வந்தபொழுது அவருக் வயது நாற்பது. தமது தந்தையைப்போல அவரும் ஜெர்மா யர்களையே பெரிதும் விரும்பினர். ஜெர்மானியப் பணியாட்க யும், காவலாளிகளையுமே தமது அரண்மனையில் அவர் நியமித்து கொண்டார். எனினும் அவர் தமது தந்தையைப் போலன் ஆங்கிலத்தில் தெளிவாகப் பேசக் கற்றுக்கொண்டார். ஆங்கி யரைப் பற்றியும் அவர் நன்கு அறிந்து வைத்திருந்தார். பிரிட்டி விவகாரங்களில் அவருக்குத் தமது தந்தையைவிட அதிக அனுப மிருந்தது. தைரியத்தில் அவர் ஒரு சிங்க ஏறுவெனத் திகழ்ந்தா

அவர் நல்ல போர் வீரர். ஒழுக்கமும் நேர்மையும் உடையவர். தமது நண்பர்களைத் தமது விருப்பு வெறுப்புக்குட்பட்டே தேர்ந்தெடுத்தாரெனினும், ஒருமுறை ஒருவரை அவர் நம்பினால் கடைசி வரை அவருக்கு உண்மையாக நடந்து கொள்வார். வெளிநாட்டு விவகாரங்களை அவர் எளிதில் புரிந்துகொள்ளும் ஆற்றல் உடையவர். இந்நற்குணங்களோடு சில துற்குணங்களும் அவர்பால் காணப்பட்டன. அவர் குறுகிய புத்தியை உடையவர்; சுயநலமிக்கவர்; வீண் பகட்டில்விருப்பமுள்ளவர்; முன்கோபி; பணப்பிரியர்; கல்வியை அவமதிப்பவர்;தமது மனைவியான ஆன்ஸ்பேக் நாட்டுக் கரோலின் (Caroline of Anspach) என்பவர்மீது அளவுக்கு மீறிய அன்புடையவர்; அதனால் மனைவியின் சொற்களுக்கு மாற்றங் கூறாதவர். கரோலின் ஆதரவால்தான் வால்போல், ஜார்ஜின் மந்திரியாக வரமுடிந்தது. அவரது ஆட்சிக் காலத்தில் அரசியல் கலத்தைச் செலுத்திய மாலுமிகள் சர்ராபர்ட் வால்போல், ஹென்றி பெல்ஹாம், மூத்த பிட் என்ற முப்பெரும் அரசியல் நிபுணர்களாவர்.

## விக்குகளும் டோரிகளும்

வால்போலும், பெல்ஹாமும் முப்பதாண்டுகள் அதிகாரம் செலுத்தினர். அப்போது விக்குக் கட்சியினரின் செல்வாக்கு மென்மேலும் அதிகரித்தது. வால்போல் விக்குக் கட்சியின் தலைவராகத் திகழ்ந்தார். எனினும் அவரைத் தற்கால வழக்குப்படி ஒரு பிரதம மந்திரி எனக் கருத இடமில்லை. இராணியார் இறந்த பின்னர் வேல்ஸ் இளவரசது எதிர்ப்பால் அவரது செல்வாக்குக் குறைந்தது. இரண்டாம் ஜார்ஜ் தமது பிரியம் போலவே மந்திரிகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். 1744ஆம் ஆண்டிலும் 1757ஆம் ஆண்டிலும் அவர் தமக்கு வேண்டியவர்களையே காபினெட் மந்திரிகளாக நியமித்தார். திருச்சபையிலும், சேனையிலும், அரண்மனையிலும் அரசர் தமக்குப் பிரியமானவர்களையே நியமித்துக் கொண்டார். வெளிநாட்டு விவகாரங்களில் அரசர் சொற்படியே மந்திரிகள் நடந்தனர். முதல் இரண்டு ஜார்ஜுகளும் தங்களது ஆட்சிக் காலமான நாற்பத்தாறு ஆண்டுகளில் பதினெட்டுமுறை ஹனோவருக்குச் சென்று வந்தார்கள். இதனால் இங்கிலாந்தின் நலன்களுக்குக் கெடுதல் ஏற்பட்டதேயன்றி நன்மை எதுவும் ஏற்படவில்லை. இங்ஙனம் மன்னரும் மந்திரிகளும் சேர்ந்து நடத்திய ஒரு கூட்டாட்சியையே நாம் மன்னர் ஜார்ஜின் காலத்தில் காண்கிறோம். இவ்வாட்சியை எதிர்த்த டோரிகள் மூன்றும் வில்லியத்தின் காலத்துக் கொண்டிருந்த அதே கொள்கைகளையே கொண்டிருந்தார்கள். நிலைப்

படை வைத்துக்கொள்வதையும், மிகுந்த வரிபோடுவதையும், விக்குக் கட்சியினருக்குப் பதவியும் பணமும் அளிப்பதையும், ஹெனேவரியர்களுக்குச் செலவு செய்வதையும் இன்ன பல அரசாங்கத்தின் அத்துமீறிய செயல்களையுமே அக்கட்சியினர் கண்டித்தனர். கவுண்டிகளிலும், ப்ரோக்களிலுமே தேர்ந்தெடுக்கப்பட்ட பல உறுப்பினர்கள் டோரிகளாயிருந்தனர். இவ்வெதிர்ப்புக்கள் காரணமாக விக்குகள் பெரிய மாற்றங்களை அரசியலமைப்பில் ஏற்படுத்தவில்லை.

## சர் ராபர்ட் வால்போல் : வாழ்வும் செயலும்

### இளமைக் காலம்

இங்கிலாந்தின் வரலாற்றிலேயே மிக நீண்ட காலம் (21 ஆண்டுகள்) பதவியிலிருந்த வால்போல் அந்நாட்டின் மாபெரும் தலைவர்களிலொருவராவார். அவர் 1676ஆம் ஆண்டு, ஒரு நிலக்கிழாரின் மகனாக, நார்போக் (Norfolk) மாகாணத்தில் பிறந்தார். அவர் குடும்பத்தின் மூத்த பிள்ளையாதலால் அவரைத் திருச்சபையில் ஊழியராகச் சேர்த்துவிட வேண்டுமென்ற எண்ணத்தில் அவரது தந்தையார் அவருக்கு நல்ல கல்வியைப் புகட்டினார். ஆனால் அவரது மூத்த சகோதரர் திடீரென இறந்துவிட்டபடியால் குடும்பத்தின் பூர்வீகச் சொத்தனைத்துக்கும் அவரே உரிமையுள்ளவரானார். எனவே அவர் தம்மை அரசியல் வாழ்க்கைக்கென அர்ப்பணம் செய்து கொண்டார்.

### குணாதிசயங்கள்

வால்போல் பார்வைக்குக் கம்பீரமான தோற்றமுடையவர். அவரது பருத்த உடலும், சிரித்த முகமும், உரத்த குரலும் அவரது நண்பர்களால் என்றும் மறக்க முடியாதவை. வேட்டையாடுவதிலும், திறந்தவெளி விளையாட்டுகளிலும் அவருக்குப் பிரியமதிகம். அறுசுவை உண்டியில் அவர் விருப்பமதிகமுடையவர். இனிய கதைகளைக் கேட்பதில் அவருக்கு அதிக ஆர்வமுண்டு. தனிப்பட்ட வாழ்க்கையில் அவர் நடத்தை கெட்டவர். உயர்ந்த ஒழுக்கத்தில் அவருக்கு நம்பிக்கை கிடையாது. கற்பனையுலகில் மிதக்கும் இலட்சியவாதிகளை அவர் எள்ளி நகையாடுவது வழக்கம். நல்வழியிலோ, தீயவழியிலே எப்படியும் காரியத்தைச் சாதிக்க வேண்டுமென்பதே அவருடைய குறிக்கோள். உருப்படியான காரியம் செய்யக் கையாலாகாத வாய்ச்சொல் வீரர்களை அவர் வெறுப்பவர். கல்விகேள்விகளிலும், இசை நாடகம் போன்ற நுண்கலை

களிலும் அவருக்குச் சிறிதும் ஈடுபாடு இல்லை எனினும், வண்ண மிக்க ஓவியங்களைக்கண்டு ரசிக்கும் கலைப்பண்பு அவர்பால் காணப் பட்டது. அவர் மெச்சத்தக்க பொது அறிவு நிரம்பப் பெற்றவர். மனிதர்களின் தராதரத்தை நன்கு எடைபோடுவதில் வல்லவர். இங்கிலாந்துக்கும் பொதுமக்கள் சபைக்கும் தேவையானவை எவை என்பதை அவர் நன்கு அறிந்திருந்தார். பாராளுமன்ற விவா தத்தில் அவர் தன்னிகரற்று விளங்கினர். நிதானமாகக் காரியங் களைக் கவனித்துச்செய்வதில் வல்லவர். நல்ல உழைப்பாளி. பழிக் குப் பழி வாங்கும் குணம் அவரிடம் மருந்துக்கும் கிடையாது. தவறுகளை மறந்து மன்னித்துத் தமது எதிரிகளையும் அணைத்துக் கொண்டு காரியங்களை வெற்றிகரமாக முடிப்பதில் அவர் சமர்த்தர்.

அரசியல் வாழ்வு

1700ஆம் ஆண்டு அவர் விக்குக் கட்சியின் பிரதிநிதியாகப் பாராளுமன்றத்தில் நுழைந்தார். வெகு சீக்கிரத்திலேயே அவர் நற்பெயர் பெற்ருர். 1708ஆம் ஆண்டு மார்ல்பரோ பிரபுவின்கீழ் போரமைச்சராக நியமிக்கப்பட்டார். 1710ஆம் ஆண்டு விக்குக் கட்சி வீழ்ச்சியுற்றபோது அவரது பதவியும் பறிபோயிற்று. டோரிகள் அவரை எப்படியாகிலும் ஒழித்துக் கட்டவேண்டுமென முயன்றனர்; அவர்மேல் பல குற்றங்களைச் சுமத்தினர்; பொது மக்கள் சபையினின்றும் அவரை விலக்கிச் சிறையில் தள்ளினர். ஆனால் அவர்மீது சுமத்தப்பட்ட குற்றங்கள் யாவும் பொய் யெனத் தெரிந்ததால் அவரைச் சீக்கிரமே விடுதலை செய்தனர்.

முதலாம் ஜார்ஜ் பட்டத்துக்கு வந்தபோது வால்போல், செல்ஸா மருத்துவமனையின் (Chelsea Hospital) சம்பளப் பட்டு வாடா அதிகாரியாக (Pay Master) நியமிக்கப்பட்டார். விரை விலேயே அவர் சம்பளபட்டுவாடாத் தலைமையதிகாரியாக (Pay Master General) நியமனம் பெற்ருர். 1715ஆம்ஆண்டு அவர் கருவூல முதற் பிரபுவாக (First Lord of Treasury)வும், இறுதியில் கருவூலத் தலைவராகவும் (Chancellor of Exhequer) நியமிக்கப் பட்டார். ஆனல் அவரும் அவரது மைத்துனரான டவுன்செண்ட் பிரபுவும், ஸ்டான்ஹோப்பின் வெளிநாட்டுக் கொள்கையைக் கண்டித்து 1717ஆம் ஆண்டு மந்திரி சபையினின்றும் வெளியேறி னர். அதன்பின் மூன்று ஆண்டுகள் வரை அவர்கள் எதிர்க்கட் சியில் இருந்துவிட்டுத் 'தென்கடல் குமிழி' விபத்துக் காரணமாக மீண்டும் பதவியிலமர்ந்தனர். அதன்பின் இருபத்தோர் ஆண்டு களுக்கு 1721 - 1742 வால்போல் கருவூல முதற் பிரபுவாகச் சிலகாலமும் கருவூலத் தலைவராகச் சில காலமும்.

தொடர்ந்து அரசியற் பணியாற்றினர். அவரது நெடுநாளைய அரசியல் வாழ்வில் அவர் ஒரு பிரதம மந்திரியைப் போன்றே நடந்து கொண்டார். எனினும் ஆங்கில அரசியல் அமைப்புச் சட்டத்தில் பிரதம மந்திரி பதவிக்கு இடமில்லையாதலால் தம்மைப் பிரதம மந்திரி எனப் பிறர் அழைப்பதை வால்போல் கண்டித்தார். அவர் தமது கட்சிக்காரர்களின் தனித் தலைவராகத் திகழ்ந்தார், மன்னரின் ஆதரவும், இராணியாரின் அன்பும் அவருக்கு நிறைய இருந்தன. அக்காலத்திய வழக்கப்படி அவர் லஞ்சம், பட்டம் பதவி, முதலியவைகளை தாராளமாக வழங்குவதன் மூலம் பொது மக்கள் சபையைக் கட்டுப்படுத்தினர் என்பது தவறாகும். அவர் பொதுமக்கள் சபையினரின் உணர்ச்சிகளை, அதாவது விருப்பு வெறுப்புகளை மதித்து நடந்ததே அவரது செல்வாக்குக்கு உண்மையான காரணமாகும். பொதுமக்கள் சபையினருக்குப் பிடிக்காத காரியங்களில் அவர் ஈடுபடுவதைத் தவிர்த்தார். வணிகர்களுக்கும் இணங்காதார்களுக்கும் அவர் பல உதவிகள் செய்து அவர்களது ஆதரவைப்பெற்றார். அவரது மிதவாத அமைதிக்கொள்கை பொதுவாக மக்களுக்குப் பிடித்திருந்தது. எனவேதான் அவரைப் பதவியினின்றும் நீக்க அவரது எதிரிகள் எவ்வளவுமுயன்றும் முடியவில்லை. அவரை எதிர்த்தவர்கள்அனைவரையும் வால்போல் பதவியினின்றும் நீக்கினர். கார்ட்டெரெட் பிரபு (Lord Carteret) 1624ஆம் ஆண்டிலும் புல்டினிபிரபு(Pulteny) 1725ஆம் ஆண்டிலும்,டவுன்செண்ட் பிரபு (Townshend) 1730ஆம் ஆண்டிலும் செஸ்டர்பீல்ட் பிரபு (Chesterfield) 1733ஆம் ஆண்டிலும் வால்போலிடம் பகைத்துக் கொண்டு மந்திரிசபையை விட்டு வெளியேறி எதிர்க்கட்சியில் சேர்ந்தனர். அவர்கள் யாவரும் வால்போலைவிடத் திறமைசாலிகளாதலால் அவர்களால் தமது பதவிக்கு ஆபத்து நேருமென்று கருதி, வால்போல் அவர்களை வெளியேற்றிவிட்டார் எனச் சிலர் கருதுவர். உண்மை அதுவன்று. அவர்கள் அத்தனைபேரும் சேர்ந்து வால்போலை அசைக்க முடியாதொன்றினலேயே வால்போல் அவர்கள் யாவரையும்விடத் திறமைசாலி என்பது நன்கு பெறப்படுகின்றது. தம்மை எதிர்த்த வில்லியம்பிட் போன்ற விக்கு இளைஞர்களை வால்போல் ‘பையன்கள்’ (Boys) என ஏளனமாக அழைப்பது வழக்கம். பாலிங்ப்ரோக் பிரபு தமது கிராப்ட்ஸமேன் (Craftsman) என்ற பத்திரிகையில் வால்போல்மீது வசைமாரி பொழிவதையே தமது தொழிலாகக் கொண்டிருந்தார். 1735ஆம் ஆண்டில் ஓய்வுபெற்று டோரிக் கட்சியின் கொள்கைகளை ஆதரித்து, ‘தேச பக்தியுள்ள அரசரைப் பற்றிய குறிக்கோள்,’ (The Idea of Patriot King) என்ற நூலை எழுதினர். இத்தனை எதிர்ப்புக்களையும் வால்போல் மிக எளிதாகச் சமாளித்து வந்தார். 1739ஆம் ஆண்டு பொதுமக்கள் சபையின் வற்புறுத்

தலின்பேரில் தமது விருப்பத்துக்கு மாறாக அவர் ஸ்பெயின்மீது போர்தொடுத்தார். அப்போரை அவர் சரிவர நடத்த முடியாத தால் பொதுமக்கள்சபை அவரைக் கண்டித்தது. கொஞ்சம் கொஞ்சமாக அவருக்குப் பொதுமக்கள் சபையில் ஆதரவு குறைந்தது. அவருடைய சகாவான நியூகாசில் பிரபுவே அவருடைய எதிரிகளிடம் சேர்ந்து கொண்டு அவருக்கு விரோத மாகச் சதிசெய்தார். 1742ஆம் ஆண்டில் அவர் ஒரு சிறிய விவகாரத்தில் பொதுமக்கள் சபையில் தோல்வியுற்றார். உடனே அவர் தமது பதவியை ராஜிநாமாச் செய்தார். அதன்பின் அவரது சேவைகளை மெச்சி அவருக்கு என்ஃபோர்டு எர்ல் (Earl of Enford) எனும் பட்டம் வழங்கப்பட்டது. 1745ஆம் ஆண்டில் அவர் இறந்தார்.

### வால்போலின் உள்நாட்டுக் கொள்கை

உள்நாட்டு விவகாரங்களில் வால்போல் கடைப்பிடித்த கொள்கை மிக அலாதியானதொன்றாகும். 'தூங்கும் நாய்கள் தூங்கட்டும்' (Let the sleeping dogs lie) என்ற கொள்கையை அவர் கடைப்பிடித்தார். இங்கிலாந்தின் பழைய நிறுவனங்களை மாற்றவே கூடாது என்பதும், எதிர்ப்புகளைக் கிளப்பக் கூடிய சீர்திருத்தங்கள் எதையும் நாட்டில் புகுத்தக் கூடாதென்பதும் அவரது குறிக்கோளாகும். உண்மையில் மக்களுக்குநலன்பயக்கும் வினைகளேயாயினும், எதிர்ப்புகளுக்கு இடையில் அவர் எதையும் செய்ய விரும்பவில்லை. ஒரு காரியம் உண்மையிலேயே நல்லதா கெட்டதா என்பது ஐயப்பாட்டுக்குரியதாயிருந்தால் அதை அப்படியே விட்டுவிடுவது நல்லது என்பதே அவரது கொள்கை யின் சாராம்சமாகும்.

### உத்தரவாதமளிப்புச் சட்டம்

மேற்சொன்ன கொள்கையின்படி அவர் தமக்குப் பேராதரவு அளித்த 'இணங்காதார்களுக்கும்' துணிந்து நன்மை செய்ய முன்வரவில்லை. அவர்கள்மீது விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகளை அவர் நினைத்திருந்தால் ஒழித்திருக்கலாம். ஆனால் அப்படிச் செய்தால் நாட்டில் எதிர்ப்புக் குரல்கள் கிளம்பக்கூடும் என்ற பயத்தால் அவர் அங்ஙனம் செய்யவில்லை. அதே சமயத்தில் இணங்காதார்களுக்கு உதவி செய்யவும் அவர் விரும்பினார். பல இணங்காதார்களுக்கு அவர் பதவிகளை வழங்கினார். ஆண்டுக் கொருமுறை அவர் சோதனைச் சட்டத்தாலும், மாநகராட்சிச் சட்டத்தாலும் விதிக்கப்பட்ட தண்டனைகளை ரத்துச் செய்தார். இதற்காக ஒவ்வோராண்டும் உத்தரவாதமளிப்புச் சட்டம்

(Act of Indemnity) எனும் சட்டத்தை வால்போல் இயற்றி மேற்சொன்ன சட்டங்கள்மூலம் இணங்காதார்க்கு எவ்வித இடையூறும் ஏற்படாவண்ணம் உத்தரவாதமளித்தார். ஓர் ஆண்டுக்குமேல் இணங்காதாருக்குத் தண்டனைகளிலிருந்து விடுதலை அளிக்கப் பெறுததால் அதை ஒருவரும் எதிர்க்கவில்லை. இங்ஙனம் அவர் தமக்கு வேண்டியவர்களுக்கு நன்மை செய்வதில் கூட எதிர்ப்பில்லாமல் பார்த்துக் கொண்டார்.

கடன் கழிவு நிதி

பொருளாதாரத் துறையிலும் வியாபாரத்துறையிலும் அவர் கடைப்பிடித்த கொள்கைகள் அவரது பெருமைக்குச் சிறந்ததொரு சான்றாகும். 'தென்கடல் நீர்க்குமிழி' விபத்தை அவர் வெகு திறமையாகச் சமாளித்த விதத்தை நாம் ஏற்கெனவே கண்டோம். 'நாட்டுக் கடனை' (National Debt) அடைப்பதற்காகக் 'கடன் கழிவு நிதி' (Sinking Fund) யொன்றை அவர் ஏற்படுத்தினார். ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை அரசாங்க வருமானத்தினின்றும் தனியாக அவர் ஒதுக்கினார். அத்தொகை ஒரு குறிப்பிட்ட அளவுக்கு உயர்ந்ததும் அதை நாட்டுக் கடனைத் தீர்ப்பதற்காகவே பயன்படுத்தினார்.

வியாபார வளர்ச்சி--கலால் வரி (Excise duty)

நாட்டின் வியாபாரம் வளர வேண்டுமானால் ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்கள்மீது விதிக்கப்பட்டிருந்த நூற்றுக் கணக்கான வரிகள் நீக்கப்படவேண்டியதன் அவசியத்தை தவால்போல் நன்கு உணர்ந்தார், ஆனால் சுங்கவரிகளையும் காப்பு வரிகளையும் (Tariffs) ஒரேயடியாக நீக்கிவிட்டால் எதிர்ப்புகள் கிளம்பும் என்பதையும் அவர் உணர்ந்தார். எனவே அவர் பல பண்டங்கள் மீது விதிக்கப்பட்டிருந்த ஏற்றுமதி வரிகளை நீக்கினார். மற்றும் சில பண்டங்கள்மீது விதிக்கப்பட்டிருந்த இறக்குமதி வரிகளைக் குறைத்தார். நிலவரியை நான்கு ஷில்லிங்கிலிருந்து ஒரு ஷில்லிங்காகக் குறைத்தார். குடியேற்ற நாடுகளிலிருந்து இங்கிலாந்துக்கு மட்டுமே அனுப்பப்பட வேண்டுமெனக் குறிப்பிட்டிருந்த பொருள்களின் பட்டியலைச் சிறிது குறைத்தார்.

1724ஆம் ஆண்டில் அவர் டீ, காபி ஆகிய இரண்டு பொருள்களுக்கும் கிடங்கு முறையை (System of bonded Warehouses) ஏற்படுத்தினார். இம்முறைப்படி அவ்விரண்டு பொருள்கள்மீதும் துறைமுகங்களில் விதிக்கப்பட்ட இறக்குமதி ஏற்றுமதி வரிகள் ரத்து செய்யப்பட்டன. இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களைக்

கிடங்குகளில் சேமித்து வைத்துக் கொள்ள வியாபாரிகள் அனுமதிக்கப்பட்டனர். விற்பனைக்காக அப்பொருள்களைக் கிடங்கு களில் இருந்து வெளியே எடுக்கும்போது மட்டும் அவைகளின்மீது வரி விதிக்கப்பட்டது. இதனால் உண்மையாக விற்கப்பட்ட பண்டங்கள் வரியினின்றும் தப்பிக்க வழியில்லாமல் போயிற்று. இதற்கு முன்பெல்லாம் டீயும், காப்பியும் ஏராளமாக நாட்டில் கள்ளத்தனமாக இறக்குமதி செய்யப்பட்டன. அதனால் அரசாங் கத்துக்கு வரும் இறக்குமதி வரியினின்றும் அவை தப்பித்துக் கொண்டன. இப்போதோ அதற்கு வழியில்லாமல் போய்விட்டது. கள்ளக் கடத்தல் நின்றது. விற்கப்பட்ட பொருள்களுக்கே வரி விதிக்கப்பட்டதாலும், விற்கப்படாத எஞ்சிய சரக்கை ஏற்றுமதி வரியின்றி வேறிடங்களுக்குக் கொண்டுபோக அனுமதியளிக்கப் பட்டதாலும் வியாபாரிகள் இம்முறையை நன்கு வரவேற்றனர். நாட்டின் வருமானம் பெருகிற்று. இதைக்கண்ட வால்போல் புகையிலை, சாராயம் என்ற இரு பொருள்களுக்கும் அதே முறையைக் கையாள ஒரு மசோதா கொண்டு வந்தார். அவை களின்மீது இறக்குமதி வரி விதிப்பதற்குப் பதிலாகக் கிடங்கு களினின்றும் அவை வெளிப்படும்போது மட்டும் அவைகள்மீது கலால்வரி (Excise Duty) விதிக்கப்படும் என்று அவர் அறிவித் தார். மக்கள் அவரது முறையைச் சரிவரப் புரிந்து கொள்ளவில்லை. அரசாங்க அதிகாரிகள் தனிப்பட்ட வியாபாரிகளின் கிடங்குகளைச் சோதனைப் போடுவதை யாவரும் எதிர்த்தனர். அம்மசோதா சட்டமானால் ஏராளமான வரி வசூலிப்போர் நியமிக்கப்பட வேண்டிவரும் என்றும் அவ்வரி வசூலிப்போரெல்லாம் வால் போலையே ஆதரிப்பர் என்றும், இங்ஙனம் அவர்களது வாக்குகளைப் பெறவேண்டியே வால்போல் மறைமுகமாகச் சூழ்ச்சி செய்கிறு ரென்றும் நாட்டில் கூக்குரல் கிளம்பிற்று. வால்போலின் எதிரிகள் இதுதான் சமயமென்று அவரது கொள்கையை வன்மையாகக் கண்டித்தனர். இதைக்கண்ட வால்போல் அம்மசோதாவைக் கைவிட்டார். இங்ஙனம் மக்களுக்கு நலம் பயக்கக் கூடிய ஒரு முறையை, ஒரு சிலர் எதிர்க்கிறுர்கள் என்பதற்காக வால்போல் செயலாக்காது நிறுத்தி விட்டார்.

### நாணயச் சீர்திருத்தம்

1724ஆம் ஆண்டில் வால்போல் அயர்லாந்தின் நாணய வகையைச் (Coinage) சீர்திருத்த விரும்பினுர். அங்கு நிலவிய நாணயப் பற்ருக்குறையை நீக்குவதற்காக அவர் புதிய செப்பு அரை பென்னி நாணயங்களை அச்சிட முன்வந்தார். அந்நாணயங் களை அச்சிடுவதற்காகத் தனி உரிமையானது வில்லியம்வுட் (Williamwood) என்பவருக்கு வழங்கப்பட்டது. புதிய நாணயங்

கள் மிக இலேசாக இருப்பதால் அவை பயனற்றவை என ஸ்விப்ட் (Swift) என்னும் அறிஞர் 'டிரேபியரின் கடிதங்கள்' (Drapier's Letters) எனும் தமது கட்டுரைகளில் வாதித்தார். எல்லா அயர்லாந்தியர்களும் ஸ்விப்டின் வாதங்களை ஏற்றுக் கொண்டு புதிய நாணய முறையை ஒருமுகமாக எதிர்த்தனர். இதைக் கண்ட வால்போல் தமது திட்டத்தைக் கைவிட்டார்.

## குடியேற்ற நாட்டுக் கொள்கை

குடியேற்ற நாடுகளின் வியாபாரத்தைப் பொறுத்தவரையில் வால்போல் தமது முன்னோர்கள் கடைப்பிடித்த "மெர்க்கண்டலிஸம்'(Mercantilism) கொள்கையையே பின்பற்றினார். குடியேற்ற நாட்டுப் பண்டங்கள் இங்கிலாந்தைத் தவிர வேறு நாடுகளுக்குக் கொண்டுபோவதை அவர் தடுத்தார். இங்ஙனம் தாய்நாட்டின் நன்மைக்காகக் குடியேற்ற நாடுகள் சுரண்டப்பட்டன. அதனால் இங்கிலாந்தின் தொழில்வளம் பெருகியது. மான்செஸ்டர், லீட்ஸ் போன்ற தொழிற்பட்டணங்கள் சிறப்புற்றன. ஆனால் குடியேற்ற நாடுகள் மனக்கசப்புற்றன. பிற்காலத்தில் இவ் அதிருப்தி ஒரு போராட்டமாக வடிவெடுத்தது. அப்போராட்டம் வால்போலின் காலத்தில் ஏற்படவில்லையென்றால் அதற்குக் காரணம் அவரது தாராளக் கொள்கையேயாகும். நாவாய்ச் சட்டங்களை (Navigation Laws) அவர் கண்டிப்பாக அமுல் நடத்தவில்லை. கள்ளக்கடத்தல்கள் பார்த்தும் பாராமலும் விடப்பட்டன. பிரிட்டிஷ் மேற்கிந்திய தீவினரைத் திருப்தி செய்யும் பொருட்டு 'வெல்லப்பாகுச் சட்டம்' ஒன்றை (Molasses Act) 1733ஆம் ஆண்டில் வால்போல் கொணர்ந்தார். அமெரிக்கர்கள், பிரெஞ்சு மேற்கிந்தியத் தீவுகளினின்றும் வெல்ல 'இறக்குமதி செய்யக் கூடாதென்றும், பிரிட்டிஷ் மேற்கிந்தியத் தீவுகளிடமிருந்தே வெல்லத்தை அவர்கள் வாங்க வேண்டுமெனவும் அச்சட்டம் கூறியது. அச்சட்டத்தை நிறைவேற்றிய வால்போல் அதை அமுல் நடத்துவதில் அக்கறை காட்டவில்லை. 1730ஆம் ஆண்டில் அவர் நெல்மணிகள் அமெரிக்காவிலிருந்து நேரே மத்தியதரைக் கடற் துறைமுகங்களுக்கு அனுப்பப்பட அனுமதியளித்தார். 1739ஆம் ஆண்டில் சர்க்கரைக்கும் இதே போன்று அனுமதியளித்தார்.

## போர்டியஸ் கலகம்

வால்போலின் கொள்கையைச் சோதிப்பது போன்று ஸ்காட்லாந்தில் ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. போர்ட்டியஸ் (Porteous)

என்பார் எடின்பர்க் நகரத்து காவற்படையின் தலைவராயிருந்தார். ஒரு சமயம் கள்ளக் கடத்தலிற் சம்பந்தப்பட்ட இருவர் மீது மரண தண்டனை விதிக்கப்பட்டது. அத்தண்டனை நிறைவேற்றப்பட விருந்த தருணத்தில் அவர்களை விடுவிக்க மக்கட் கூட்டம் ஒன்று முயன்றது. அதைத் தடுக்கவேண்டி அக்கூட்டத்தின் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்யும்படி தமது வீரர்களுக்கு போர்ட்டியஸ் உத்தரவிட்டார். வீரர்கள் சுட்டதில் ஆறுபேர் மாண்டனர். இக்குற்றத்திற்காகப் போர்ட்டியஸ் எடின்பர்க் நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்டு மரணதண்டனை விதிக்கப்பட்டார். ஆனல் இங்கிலாந்தின் இராணி தமது மன்னிப்பளிக்கும் அதிகாரத்தைக் கையாண்டு போர்ட்டியஸை மரண தண்டனையினின்றும் காப்பாற்றினர். இதையறிந்த எடின்பர்க் மக்கள் பலவந்தமாகச் சிறைச்சாலையுள்புகுந்து போர்ட்டியஸைக் கைப்பற்றித் தூக்கிலிட்டுக் கொன்றனர். இந்த அக்ரமத்தைக் கண்டிக்கப் போர்ட்டியஸ் மசோதாவொன்று பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. எடின்பர்க் நகரச் சாஸனம் பறிமுதல் செய்யப்பட வேண்டுமெனவும், அதன் காவற்படை கலைக்கப்படவேண்டும் எனவும் அம்மசோதா கூறியது. ஸ்காட்லாந்து பிரதிநிதிகள் இம் மசோதாவைக் வன்மையாகக் கண்டித்தனர். எனவே வால்போல் மசோதாவைக் கைவிட்டார். எடின்பர்க் மக்கள்மீது இரண்டாயிரம் பவுன் அபராதம் விதிக்கப்பட்டு அத்தொகை போர்ட்டியஸின் மனைவிக்குத் தரப்பட்டது. இங்ஙனம் அவர் ஸ்காட்லாந்தில் ஏற்படவிருந்த ஒரு கலகத்தைத் தமது விட்டுக்கொடுக்கும் கொள்கையால் தடுத்தார்.

## வால்போலின் வெளிநாட்டுக் கொள்கை

### பிரான்ஸுடன் நட்பு

பிரிட்டனை வெளிநாட்டுப் போர்களினின்றும் காப்பாற்ற வேண்டுமென்பதே வால்போலின் குறிக்கோளாகும். எனவே அவர் பிரான்ஸோடு நட்பை வளர்த்தார். பிரெஞ்சு மன்னர் பதினைந்தாம் லூயியும் அவரது பாதுகாப்பாளரான ஆர்லியன்ஸ் கோமகனும் இங்கிலாந்து நட்பை விரும்பினர். ஸ்பெயின் மன்னரான ஐந்தாம் பிலிப், எங்குப் பிரஞ்சு மகுடத்துக்கு உரிமை கொண்டாடுவாரோ என்ற பயத்தாலேயே ஆர்லியன்ஸ் கோமகன் இங்கிலாந்தை ஆதரித்தார். வால்போல், பிரஷ்யாவின் மன்னரோடும் நட்பை வளர்த்துவந்தார்.

ஆஸ்திரியா, ஸ்பெயின்-முதல் வியன்ன உடன்படிக்கை (1725)

ஆனல் ஆஸ்திரியாவும் ஸ்பெயினும் பிரிட்டனுக்கு விரோதமாகச் சதித் திட்டங்களை உருவாக்கி வந்தன. இவ்விரு நாடுகளும் ஆரம்பத்தில், விரோதிகளாயிருந்தன. ஆஸ்திரியப்பேரரசர். ஆறும் சார்லஸ், ஸ்பானிய மகுடத்தை அடைய ஆசைப்பட்டவர், ஆனல் நாளடைவில் அவருக்கு அந்த ஆசை போய் விட்டது. அவருக்கு ஆண் குழந்தைகள் இல்லை. எனவே அவர் இறந்த பின்னர் அவரது மகளான மேரியாதெரிசாவே பட்டத்துக்கு வரவேண்டுமென அவர் விரும்பினர். அதற்காக அவர் ஐரோப்பிய வல்லரசர்களின் சம்மதத்தைக் கோரினர் ஸ்பெயின் மன்னரான ஐந்தாம் பிலிப் என்பார் யுட்ரெக்ட் சமாதானத்தில் ஸ்பெயின் இழந்து விட்ட நாடுகளைப் பெற விரும்பியதோடு தமது இரு புதல்வர்களுக்கும் இத்தாலியப் பிரதேசங்கள் சிலவற்றைப் பெற விரும்பினர். **1725**ஆம்ஆண்டு ரிப்பர்டா(Ripperda)என்னும் ச்சுக்காரரின் உதவியால் ஆஸ்திரியாவுக்கும், ஸ்பெயினுக்கும் 'முதல் வியன்ன உடன்படிக்கை'எனும் உடன்பாடு ஏற்பட்டது; அதன்படி பேரரசர் பிரிட்டனிடம் பேச்சுவார்த்தை நடத்தி ஜிப்ரால்டரையும், மினர்க்காவையும் வாங்கித் தருவதாயும், பிலிப்பின் மகனை டான்கார்லோஸ் (Don Carlos) என்பவர் பார்மா கோமகனக வருவதை ஒப்புக் கொள்வதாயும் வாக்களித்தார். அதே போன்று பேரரசரின் மரணத்துக்குப் பின் அவரது மகளான மேரியா தெரிசாவை ஆஸ்திரிய அரசியாக அங்கீகரிப்பதாகவும் பிலிப் வாக்குறுதியளித்தார்.

ஆஸ்திரிய ஸ்பெயின் கூட்டுறவுக்கு எதிராக இங்கிலாந்து, பிரான்ஸ், ஹாலந்து, ஹெனேவர், ப்ராண்டன்பர்க் ஆகியநாடுகளை ஒன்று சேர்க்க டவுன்சென்ட் பிரபு முயன்று வெற்றிபெற்ருர். **1726**ஆம் ஆண்டில் அவைகள் பிலிப்புக்கும் சார்லசுக்கும் எதிராக ஒரு நட்புடன்படிக்கையைச் செய்து கொண்டன. இவ்வுடன்படிக்கைகளையொட்டிச் சில சண்டைகள் **1727**ஆம் ஆண்டில் நடைபெற்றன. ஸ்பானியக் கப்பற்படை ஒன்று ஜிப்ரால்டரைத் தாக்கித் தோல்வியுற்றது. ஆங்கிலேயக் கப்பற்படையும் அங்ஙனமே போர்ட்டோ பெல்லோ (Porto Bellow)என்ற துறைமுகத்தைத் தாக்கித் தோல்வியுற்றது. வால்போல் சண்டைகளை வளரவிடாமல் தடுக்க விரும்பினர். **1729**ஆம் ஆண்டில் ஸ்பெயினேடு செவில் (Sevile) உடன்படிக்கையை அவர் செய்து கொண்டார். அதன்படி பிலிப்பின் மகன் பார்மா கோமகனுவதை இங்கிலாந்து ஒப்புக்கொண்டது. ஸ்பெயின், ஆஸ்திரியாவின் ஆஸ்டெண்டு கிழக்கிந்தியக் கம்பெனிக்கு அங்கீகாரம் அளிப்பதில்லை என வாக்குறுதி அளித்தது. **1731**ஆம் ஆண்டில் இங்கிலாந்து

ஆஸ்திரியாவோடு ஓர் உடன்படிக்கையை வியன்னுவில் செய்து கொண்டது. அதன்படி ஆறும் சார்லஸின் மரணத்துக்குப் பின் அவரது மகள் பட்டவுரிமை பெறுவதை இங்கிலாந்து ஒப்புக் கொண்டது. அதற்குப் பதிலாகப் பிலிப்பின் மகன் பார்மா கோமகனுவதைப் பேரரசர் தடுக்கக்கூடாது எனத் தீர்மானிக்கப் பட்டது. 1731ஆம் ஆண்டில் பார்மா கோமகன் இறந்தார். பிலிப்பின் மகன் டான்கார்லோ, பர்மாவைப் பெருமல் தடுக்கப் பேரரசர் நினைத்தார். ஆனல் வால்போலின் தலையீட்டால் மேற்சொன்ன வியன்னு உடன்பாடு ஏற்பட்டு, அதன்மூலம் ஸ்பெயினும் ஆஸ்திரியாவும் சண்டையிடுவது தவிர்க்கப்பட்டது.

### போலந்து வாரிசுரிமைப் போர் (1733)

*1733*ஆம் ஆண்டு, போலந்தின் அரசர் இரண்டாம் அகஸ்டஸ் இறந்து விட்டார். அங்கு உடனே வாரிசுரிமைப் போர் நடைபெற்றது. அப்போரில் கலந்து கொள்ள வால்போல் மறுத்துவிட்டார். ரஷ்யரவும், ஆஸ்திரியாவும் போலந்தைப் பங்கு போட்டுக் கொண்டன.

### குடும்ப ஒப்பந்தம்

*1733*ஆம் ஆண்டில் ஸ்பெயினும் பிரான்ஸும் தமக்குள் குடும்ப ஒப்பந்தம் (Family Compact)என்ற ஓர் உடன்படிக்கையை செய்து கொண்டன. இரு நாடுகளும் சேர்ந்து ஆஸ்திரியா வையும் இங்கிலாந்தையும் எதிர்ப்பதென அவ்வுடன்படிக்கை தீர்மானித்தது.

### ஜென்கின்ஸ் காதுச்சண்டை

ஸ்பெயின், இங்கிலாந்தின் மீது பல குற்றங்களைச் சுமத் தியது. அசியண்டோ உடன்படிக்கைக்கு மாருகப் பல கள்ளக் கப்பல்கள் தென் அமெரிக்காவோடு வியாபாரம் செய்வதாக ஸ்பெயின் புகார் செய்தது. சந்தேகப்பட்டால் ஆங்கிலக் கப்பல் களைச் சோதிக்கவும் தமக்குரிமை உண்டென்று ஸ்பானியர் வாதித் தனர். அவர்கள் கூறியதென்னவோ உண்மைதான். ஆங்கிலேயர் பலர் தென்னமெரிக்காவோடு கள்ள வியாபாரம் செய்துவந்தனர். அங்ஙனம் செய்துவந்த ஜென்கின்ஸ் என்பவரை ஸ்பானியர்கள் பிடித்து அவரது காதை அறுத்துவிட்டனர். ஜென்கின்ஸ் தமது அறுபட்ட காதை ஒரு பெட்டியில் போட்டு எடுத்துக்கொண்டு வந்து பாராளுமன்றத்தாரிடம் காட்டித் தமக்கும் தம்நாட்டிற்கும் மானபங்கமிழைத்த ஸ்பெயின் மீது போர் தொடுக்கும்படி

வேண்டினர். பொதுமக்கள் சபையானது ஸ்பெயின்மீது பழிக்குப்பழி வாங்க வேண்டுமென வால்போலே ஏவிற்று. வால்போல் சற்றுத் தயங்கினர். பின்னர், பாராளுமன்றத்தின் பிடிவாதத்தைக் கண்டு, மனமின்றி ஸ்பெயின்மீது போர் தொடுத்தார். இதற்கு ஜென்கின்ஸ் காதுச் சண்டை (The War of Jenkins Ear) எனப் பெயர். வால்போல் ஒரு போர் மந்திரியாயிருப்பதற்குச் சற்றும் தகுதியற்றவர்; போர் சரிவர நடைபெறவில்லை; அதற்குக் காரணம் வால்போலே என்று யாவரும் குறை கூறினர். பெரும்பான்மையோரின் நம்பிக்கையை இழந்த வால்போல் 1742ஆம் ஆண்டுத் தம் பதவியை ராஜிநாமா செய்தார்.

வால்போல் செய்த சேவைகளின் முக்கியத்துவம்

வால்போல் இங்கிலாந்திற்குப் பல ஆண்டுகள்வரை அமைதியை வழங்கினர். அதனல் ஆங்கிலேயர் தங்களது உலகியல் செல்வாக்கை வளர்த்துக் கொண்டனர். வாணிகத்தில் அவர்கள் நன்கு முன்னேறி நாட்டின் செல்வநிலையைப் பெருக்கினர். குடியேற்ற நாட்டுப் பெருக்கம் ஏற்படுவதற்கும் நாட்டின் அமைதியான சூழ்நிலை துணை புரிந்தது. ஹெனேவரியர்களின் ஆட்சி நன்கு நிலைப்பட்டது. வால்போல் தமது ஒப்பற்ற சேவையால் நாட்டைப் பொருளாதாரப் படுகுழியினின்றும் காப்பாற்றினர்; நாட்டின் கடனைப் பெருமளவுக்குக் குறைத்தார்; பிரான்ஸோடு நட்பை வளர்த்ததன் மூலம் மத்தியதரைக் கடலில் ஆங்கிலேயரின் வியாபாரத்தை வளர்த்தார். வணிகர்களுக்கு அவரால் நல்ல இலாபம் ஏற்பட்டது. எனவே, அவர்கள் வால்போலைப் போற்றி ஆதரித்தார்கள். அவரது கலால் வரிமுறையும் குடியேற்ற நாட்டு வியாபாரக் கொள்கையும் போற்றற்குரியவை. ஆங்கிலக் காபினெட் ஆட்சி முறைக்கு அவர் தந்தையாவார்.

இங்ஙனம் நாட்டுக்கு நல்லபல சேவைகளைச்செய்த வால்போல் ராம்ஸேமியூர் (Ramsay Muir) போன்ற ஆசிரியர்களால் கோழை என்றும், பிரச்சினைகளை நேரடியாகச் சமாளிக்காமல் ஒத்திப்போடும் குணமுள்ளவரென்றும் வர்ணிக்கப்படுகிருர். இணங்காதார் மாட்டும், அயர்லாந்துச் சிக்கலிலும் ஸ்காட்லாந்து விவகாரத்திலும் அவர் கோழைபோன்றும், மனவுறுதியற்றவர் போன்றும் நடந்து கொண்டதென்னவோ உண்மைதான். ஆனல் நாட்டின் அமைதியைக் காக்கவே அவர் அங்ஙனம் நடந்து கொண்டார் என்பதை நோக்கும்போது அவரது விழிப்பான நடத்தை பாராட்டப்படுதற்குரியதாகிறது. இலஞ்ச ஊழலைப் பெரிதும் கையாண்டு நாட்டின் ஒழுக்க நிலையைச் சிதைத்தவர் என்றும் அவர் மீது பழி சுமத்தப்படுகிறது. ஆனல் அவர் காலத்தில்

லஞ்சம் தருவதும் அதன்மூலம் ஆதரவு தேடுவதும் எல்லாருக்குமே சகஜமாயிருந்தது. இலஞ்சம் கொடுக்கும் கலையில் எல்லாரையும் மிஞ்சிவிட்டார் என்ற குற்றமொன்றே அவரைச் சாரும். அவர் வாழ்ந்த காலத்திய கண்ணோட்டத்துடன் அவரது செய்கைகளை நோக்கும்போது, அவர் உண்மையில் ஓர் ஒப்பற்ற தலைவராகவே நமக்குக் காட்சியளிக்கிறார்.

## கட்சியாட்சியும் காபினெட் வளர்ச்சியும்

முதல் இரண்டு ஹனோவரிய அரசர்களும் தங்களை அறியாமலேயே ஆங்கில அரசியல் அமைப்பின் வளர்ச்சிக்கு அரியதொரு பணியைச் செய்துவிட்டுச் சென்றார்கள். இன்று உலகமே கண்டு வியக்கின்ற பிரிட்டனின் காபினெட் அரசாங்க முறைக்கு வித்திட்டவர்கள் அவ்விருவருமேயாவர், ஆங்கிலமொழி பேசத் தெரியாத காரணத்தால் அவர்கள் காபினெட் எனும் அமைச்சர் குழுவுக்குப் பெருமளவு சுதந்திரத்தைக் கொடுத்து அதன் வளர்ச்சிக்கு உதவி புரிந்தார்கள். 'காபினெட், பொதுமக்கள் சபையிலிருந்த பெரும்பான்மைக் கட்சியின் பிரதிநிதியாகவே விளங்கிற்று. கட்சியாட்சியின் கனிந்த கனியே காபினெட் ஆட்சிமுறையாகும். இக்கட்சியின் வரலாற்றைத் தொடர்ந்து நோக்குதல் பயனுடைத்தாகுமென்பதில் ஐயமில்லை.

**கட்சிகளின் தோற்றம்**

குறிப்பிட்ட சில அரசியல் பொருளாதாரக் கொள்கைகளுக்காக ஒற்றுமையுடன் பாடுபடும் ஒரு கூட்டத்துக்கே கட்சி என்ற பெயர் பொருந்தும். முதலாம் சார்ல்ஸ் காலத்தில் அரசரை ஆதரித்த கவலியர்களும் (Cavliers) பாராளுமன்றத்தை ஆதரித்த உருண்டைத் தலையர்களும் (Round Heads) தனிப்பட்ட கட்சியினர் என்று சொல்லக்கூடிய அளவில் தங்களுக்குள் போதிய பிணிப்பும், அமைப்பும் பெற்றிருக்கவில்லை. இரண்டாம் சார்ல்ஸ், இரண்டாம் ஜேம்ஸ் காலத்தில் நாட்டில் தோன்றிய விக்குகள், டோரிகள் என்ற இரு கூட்டத்தினரே உண்மையில் கட்சிகள் என அழைக்கப்படத் தக்கவர்களாவர், அவர்கள் காலத்திலிருந்தே கட்சியாட்சியின் வரலாறு தொடங்குகிறது. டோரிகள் பரம்பரையாக வரும் முடியரசையும் ஆங்கிலிகத் திருச்சபையையும் ஆதரித்தனர். விக்குகள் ஆங்கில மத ஏற்பாட்டுக்கு இணங்காதாரையும் வரையறைக்குட்பட்ட முடியரசையும் ஆதரித்தனர். பதினான்காம் லூயியோடு போர்கள் நடைபெற்றபொழுது விக்குக் கட்சி அதை ஆதரிக்க, டோரிக்கட்சி சமாதானத்தை நாடி நின்றது. 1713ஆம் ஆண்டில் ஏற்பட்ட யுட்ரெக்ட் சமாதானம், 'டோரி சமாதானம்' என்ற பெயர் பெற்றது.

### கட்சியாட்சியின் வளர்ச்சி

ஒரே கட்சியிலிருந்து எல்லா மந்திரிகளும் நியமிக்கப்பட வேண்டும் என்ற கொள்கை 1714ஆம் ஆண்டில்தான் முதன் முதலாக இங்கிலாந்தில் நிலைநாட்டப்பட்டது. வில்லியம் முதலில் இருகட்சியிலிருந்தும் தமது மந்திரிகளைத் தேர்ந்தெடுத்தார். ஏனெனில் பதினான்காம் லூயிக்கு விரோதமாக அவர் நடத்திய போரை நாட்டு மக்கள் அனைவரும் ஆதரிக்கவேண்டுமென அவர் விரும்பினார். ஆனால், விரைவிலேயே இருகட்சியினரும் பொதுவான ஒரே கொள்கையைப் பின்பற்ற முடியாது என்பதை அவர் கண்டு கொண்டார். போரை ஆதரித்த விக்குகளையே மந்திரிகளாக நியமித்தார். புகழ்பெற்ற 'விக்ஜெண்டோ' என்ற அமைச்சுக்குழு அவ்விதம் அவர் அமைத்ததொன்றேயாகும். ஆன் இராணியாரும் மர்ல்பரோவும் முதலில் இரு கட்சியினரையும், மந்திரிசபையில் சேர்த்துக் கொண்டனர். ஆனால் டோரிகள் ஐரோப்பியப் போரை அவ்வளவாக விரும்பவில்லை என்று தெரிந்ததும், மார்ல்பரோ விக்குகளை மட்டுமே மந்திரிகளாக 1708ஆம் ஆண்டு நியமித்தார். 1710ஆம் ஆண்டில் ஹார்லியும், சென்ட்ஜானும் டோரிகள் மட்டுமே அடங்கிய மந்திரிசபையை அமைத்தனர். 1714ஆம் ஆண்டில் விக்குகள் ஹெனோவரிய அரசர்களை இங்கிலாந்தின் அரியணையில் அமர்த்துவதில் வெற்றிபெற்றனர். எனவே முதலாம் ஜார்ஜ், விக்குகளையே தமது மந்திரிகளாக நியமித்தார். 1714ஆம் ஆண்டிலிருந்து 1761ஆம் ஆண்டுவரை விக்குக்கட்சியினரே நாட்டையாண்டனர்.

### வால்போலும் காபினெட் ஆட்சியும்-கருத்தொருமை

முதல் இரண்டு ஜார்ஜுகளின் காலத்தில் காபினெட் ஆட்சி முறையின்இலக்கணங்கள் என்று கருதப்படுகின்ற ஒரு சில கோட்பாடுகள் நன்கு நிலைப்பெற்றன. மந்திரிகள் அனைவரும் ஒருமித்த கருத்துடையவர்களாய் இருக்க வேண்டுமென்ற கொள்கை அவர்கள் காலத்தில் நன்கு வேரூன்றியது. ஆன் இராணியார் காலத்து ஏற்பட்ட டோரி மந்திரிசபையில் ஒரே கட்சியார் பதவியிலிருந்துங் கூட அவர்கள் தம்முள் கருத்து வேறுபாடு கொண்டவர்களாயிருந்தனர். ஹார்லி என்பவர் இணங்காதார்களை ஆதரிக்க விரும்பிய போது, சென்ட்ஜான் அவர்களைத் துன்புறுத்த நினைத்தார். ஆனால் வால்போல் மந்திரிகளிடையே அரசியல் கருத்தொருமையை (Political Unanimity) வற்புறுத்தினார். வால்போலின் அமைதிக் கொள்கையை விரும்பாத டவுன்செண்டு, பல்டனி, கார்ட்டரெட் போன்றவர்களை அவர் மந்திரி சபையினின்றும் வெளியேற்றினார். வால்போல் தமது தலைமைப் பதவினின்றும் வீழ்ச்சியுற்றபோது, மறுபடியும் 1744ஆம் ஆண்டில் இருகட்சியினரும் மந்திரிசபையில்

இடம்பெற்ருர்கள். ஆனுல், மூன்ரும் ஜார்ஜ் காலத்தில் வில்லியம் பிட் என்பவரது முயற்சியால் மந்திரிசபை 1783ஆம் ஆண்டிலிருந்து 1801ஆம் ஆண்டு வரை ஒரே கருத்துடையவர்களைக் கொண்டு விளங்கிற்று. இங்ஙனம் ஹெனேவரியர்களது காலத்தில் காபினெட் மந்திரிகள் ஒரே கட்சியிலிருந்து நியமிக்கப்பட 'வேண்டுமென்பதும் அவர்கள் ஒரே கொள்கையுடையவர்களாயிருக்க வேண்டுமென்பதும் நன்கு நிலைநாட்டப்பட்டன.

பொதுமக்கட் சபைக்குப் பொறுப்பு

மந்திரிகள், பொதுமக்கள் சபையில் பெரும்பான்மையாக இருக்கும் கட்சியிலிருந்தே பொறுக்கப்பட வேண்டுமென்பதும் பெரும்பான்மைக் கட்சியின் ஆதரவிழந்தவுடன் மந்திரிசபை ராஜிநாமா செய்யவேண்டுமென்பதும் காபினெட்,ஆட்சிமுறையின் இன்னெரு மரபு ஆகும். இந்தப் பழக்கத்தை முதன்முதலில் கையாண்டவர் வால்போலேயாவார். அவர், பொதுமக்கள் சபையே பாராளுமன்றத்தில் மிக முக்கியத்துவம் வாய்ந்த உறுப்பு என நம்பினர். எனவே மந்திரிகள் அப்பொதுமக்கள் சபையின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கவேண்டுமென்று அவர் விரும்பினர். முன்பெல்லாம் மந்திரிகள் அரசர்களது நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களாக நடந்துகொள்ள வேண்டுமென்ற முறையிருந்து வந்தது. அரசர்களுக்கே அவர்கள் பொறுப்பாளிகளாயிருந்தனர். ஆனுல், இப்போது அவர்கள் பொதுமக்கள் சபைக்கே பொறுப்பாளிகளாயிருக்க வேண்டுமென்பது வற்புறுத்தப்பட்டது. சிப்பன்ஹாம் தேர்தல் விஷயத்தில் வால்போல் பொதுமக்கள் சபையால் தோற்கடிக்கப்பட்டார். பொதுமக்கள் சபையின் நம்பிக்கையை இழந்தவுடன் வால்போல் தமது பதவியை ராஜிநாமா செய்தார். முன்பெல்லாம் ஒரு மந்திரியைப் பதவினின்றும் நீக்க வேண்டுமானுல் அவர்மீது 'அரசியல் துரோகக் குற்றம்' சாட்டுவது பொதுமக்கள் சபையின் வழக்கமாயிருந்தது. ஆனுல் தற்போதோ மந்திரிகளின் மசோதாக்களைத் தோற்கடிப்பதென்ருலேயே பொதுமக்கள் சபையானது அவர்களைப் பதவியினின்றும் நீக்க முடியுமென்பது நிலைநாட்டப்பட்டது. அரசரது உத்தரவின்றிப் பொதுமக்கள் சபையின் விருப்பத்துக்குப் பணிந்து தமது பதவியை ராஜிநாமா செய்த முதல் பிரதம மந்திரி வால்போலேயாவர். அதன்பின் 1782ஆம் ஆண்டில் நார்த் பிரபு (Lord North) தமது மந்திரிசபைக்குப் பொதுமக்கள் சபையில் ஆதரவிருக்காது எனத் தெரிந்தவுடனே தமது சகாக்களுடன் பதவி துறந்தார். இங்ஙனம் காபினெட் அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் நம்பிக்கையை இழந்தவுடன் கூட்டாகப் பதவி துறக்கவேண்டும் என்ற கொள்கைக்குக் கூட்டுப்பொறுப்பு (Collective Responsiblity) என்று பெயராகும்.

### பிரதம மந்திரியின் தலைமை

பிரதம மந்திரியின் முதன்மை (Primacy of the Primier) என்பது காபினெட் ஆட்சியின் இன்னொரு தத்துவமாகும். மந்திரி சபை ஒற்றுமையாகச் செயல்பட வேண்டுமானால் அதற்கொரு தலைவர் தேவை. முதல் இரண்டு ஜார்ஜுகளும் காபினெட் கூட்டங்களுக்கு வருவதையே நிறுத்திக் கொண்டதால் கூட்டங்களுக்குத் தலைமை வகிக்க ஒருவர் தேவைப்பட்டார். காபினெட் கூட்டங்களில் நடைபெறுபவைகளை மன்னருக்கு அறிவிக்கவும் அவ்விதத் தலைவர் ஒருவர் இருப்பது அவசியமாயிருந்தது. இதையெல்லாம் கருத்திற் கொண்டு வால்போல் காபினெட் கூட்டங்களுக்குத் தலைமை வகித்து வந்தார். ஆனால், தம்மைப் பிரதம மந்திரி என்று சொல்லிக்கொள்ளவில்லை. அப்படித் தம்மை அழைத்தவர்களையும் அவர் கண்டித்தார். ஆனால் பிரதம மந்திரியின் பேச்சை மற்ற மந்திரிகள் கேட்க வேண்டும் என்ற கொள்கையை அவர் நிலைநாட்டினார். பிரதம மந்திரி பதவியானது அரசியலில் முதன்முதல் ஒப்புக் கொள்ளப்பட்டது. இளையபிட்டின் காலத்தில்தான். பிரதம மந்திரியின் தனித்தலைமையை அவர் 1783ஆம் ஆண்டு முதல் 1801ஆம் ஆண்டுவரை நன்கு செலுத்தி வந்தார்.

### மன்னரது தலையீடின்மை

காபினெட் கூட்டங்களில் மன்னர் கலந்து கொள்ளக்கூடாதென்பது இன்னொரு மரபாகும். முதல் இரண்டு ஜார்ஜுகள் காலத்தில் இந்நிகழ்ச்சி தற்செயலாக ஏற்பட்டது. மூன்றும் ஜார்ஜ் பட்டத்துக்கு வந்தவுடன் அவர் காபினெட் கூட்டங்களுக்குச் சென்று அவைகளுக்குத் தலைமை வகித்தார். ஆனால் நாளடைவில் மன்னர் அங்குச் செல்வதை நிறுத்திக்கொண்டார். இம் மரபு இன்று வரை ஆங்கில அரசியல் அமைப்பு முறையில் பிசகாமல் கடைப்பிடிக்கப்படுகிறது. மூன்றும் ஜார்ஜ் மன்னர், நார்த் மந்திரி சபைக் காலத்தில் (1770-1782) காபினெட்டின் அதிகாரத்தைக் குறைக்க எத்தனித்தார். நிருவாக விவகாரங்களில் அவர் பெரிதும் தலையிட்டார். ஆனால் சீரவிலேயே இளையபிட் என்பவர் காபினெட்டின் அதிகாரத்தை மீண்டும் நிலை நாட்டி விட்டார்.

### காபினெட்டும் ஆங்கில அரசியலமைப்பும்

ஆங்கிலேய அரசியலமைப்பில் சமீபகாலம் வரை 'காபினெட் என்ற அமைச்சுக் குழுவுக்கும், பிரதம மந்திரி' என்ற பதவிக்கும்

சட்டப்படி இடமில்லாமலேயேஇருந்து இன்றும் பிரிவிகவுன்ஸி லின் ஒரு கமிட்டியாகவே காபினெட் ஒரு சிலரால் கருதப்படு கிறது. ஆனால் உண்மையில் சர்வ வல்லமை வாய்ந்த நிறுவனமாய் அது விளங்குகிறது. ஓரளவுக்கு அது பாராளுமன்றத்தின் ஒரு கமிட்டியாகத்திகழ்கிறது. அதனால் பாராளுமன்றத்துக்கும் நிருவா கத்துக்கும்(Executive)இடையே இருந்த பகையொழிந்து ஒற்றுமை ஏற்பட வழிபிறந்தது. காபினெட் மந்திரிகளின் பெயர் இலண்டன் கெஜட்டில் வெளியிடப்படுவதில்லை. ஆனால் பிரிவிகவுன்ஸிலர்களின் பெயர்கள் அதில் வெளிவருகின்றன. 1917ஆம் ஆண்டுவரை பிரதம மந்திரியும் அரசியல் அமைப்பில் அங்கீகரிக்கப்படாத வரேயாவர். அவர் கருவூலத் தலைவராகவோ வெளிநாட்டு மந்திரி யாகவோ, பணியாற்றுவதன் மூலம்தான் அவருக்குச் சம்பளம் வழங்கப்பட்டது. பிரதம மந்திரி காபினெட்டையும் அரசரையும், பாராளுமன்றத்தையும், இணைத்து வைக்கும் சங்கிலியாக விளங்கு கிறார். பொதுவாகப் பெரும்பான்மைக் கட்சித் தலைவரையே அரசர், பிரதமராக நியமிப்பது வழக்கமாகிவிட்டது. பிரதமர் மற்ற மந்திரிகளைத் தம் பிரியம்போல் அப்பெரும்பான்மைக் கட்சித் தலைவரையே அரசர், பிரதமராக நியமிப்பது வழக்கமாகிவிட்டது. பிரதமர் மற்ற மந்திரிகளைத்தம் பிரியம்போல் அப்பெரும்பான்மைக் கட்சியிலிருந்தே பொறுக்கிக் கொள்ள வேண்டும். எல்லா மந்திரி களையும் அவரே கட்டி மேய்ப்பவர். பொதுவாக மற்ற மந்திரிகளின் அலுவல்களில் அவர் தலையிடமாட்டார். ஆனால் ஏதாவது ஒரு சிக்கல் ஏற்பட்டால் அப்போது அது சம்பந்தபட்ட அமைச்சரை அழைத்து யோசித்து ஒரு தீர்ப்புச் சொல்வார். வெளிநாட்டு விவகாரங்களை அவர் முக்கியமாகக் கண்காணிக்க வேண்டும். காபினெட் கூட்டங்கள் இரகசியமாகவே நடைபெறும், அங்கு நடைபெறுபவற்றைக் குறித்துவைக்கும் வழக்கமில்லை. காபினெட் டில் அலுவல்கள் மிகப்பெரிய அளவுக்கு வளர்ந்து விட்ட இக் காலத்தில் தான் அங்கு நடைபெறுபவைகளைக் குறித்து வைக்கும் வழக்கம் ஏற்பட்டுள்ளது. காபினெட் கூட்டங்களில் மந்திரிகளி ஒருவரோ டொருவர் விவாதிக்கலாம்; கருத்தில் வேறுபடலாம், ஆனால் கடைசியில் பிரதம மந்திரியின் கருத்தை மற்ற அனைவரும் ஏற்றுக்கொள்ளவேண்டும். அங்கு நிறைவேறும் தீர்மானங்கள் யாவும் ஏகோபித்த தீர்மானங்களாக இருக்கவேண்டுமென்பதே மரபு. மந்திரி சபையின் தீர்மானத்தை ஏற்றுக்கொள்ள விரும்பாதவர் உடனே சபையினின்றும் வெளியேறவேண்டும். முடியுமானால் அவர் தமது கருத்தைப் பொதுமக்கள் சபையில் தெரிவித்து காபினெட்டின்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றி, அதைக் கலைத்து விடலாம். ஆனால் அது அநேகமாய் முடியாததொன்று.

இங்ஙனம் காபினெட் ஆட்சிமுறை இங்கிலாந்தில் வளர்ச்சியுற்றது. மன்னரது அதிகாரங்களை எல்லாம் காபினெட் மந்திரிகளும் பிரதம மந்திரியுமே உண்மையில் செலுத்துகிறார்கள். அரசர் வெறும் பொம்மையாகவே இருக்கிறார். காபினெட்டின் வெற்றி பொது மக்களின் வெற்றியாகும். அதே சமயம் அது மன்னனின் தோல்வியுமாகும்.

# 4. இரண்டாம் ஜார்ஜ் காலத்திய குடியேற்றநாட்டுப் போர்கள்

**ஜென்கின்ஸ் காதுச் சண்டை** War of Jenkins Ear (1739-48) காரணங்கள்-போரின் போக்கு-போர்ட்டோ பெல்லோ (1739) கார்ட்டஜீனு (1739) ஆச்சன் உடன்பாடு (1748)-மாட்ரிட் உடன்பாடு (1750).

**ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர்** War of Austrian Succession (1740-56)-பேரரசர் தனிக்கட்டளை (Pragmatic sanction) வாரிசுரிமைச் சிக்கல்-மகாபிரடரிக்கின் பேராசை - முதல் சைலீஷியப் போர் - மோல்விட்ஸ் (1740) - பிரெஸ்லா உடன்பாடு (1742) - மியூனிச் (1742) - டெட்டிஞ்சன் (1742) மதராஸ் (1746) - எய்க்ஸ் - லா - சாப்பெல்லா உடன்பாடு (1748): ஃபாண்டினுகி (1745)

**ஏழாண்டுப் போர்** Seven years war (1756-1763) காரணங்கள்-மரியாதெரிஸாவின் முன்னேற்பாடு. போரின் போக்கு-ஆரம்பத் தோல்விகள்-மினுர்க்கா (1756), ஆஸ்லேகாகோட்டை - ஹேஸ்டென்பெக் (1757) - க்ளாஸ்டர் செவன் உடன்பாடு - ராஸ்பேச், வியூதன - டியூகிஸன் கோட்டை (1756) - பிட்டின் போர்க்காலச் சேவைகள் - லேகாஸ் முனைப்போர் குவிபெரான்குடா கடற்போர் - மின்டஸ் (1759) - பிளாசிச் சண்டை (1757) - வந்தவாசி (1760) - லூயிபர்க்; கியூபெக் மாண்ட்ரீல் - பாரிஸ் உடன்படிக்கை (1763).

இரண்டாம் ஜார்ஜின் ஆட்சிக் காலத்தில் பிரான்ஸுக்கும் பிரிட்டனுக்குமிடையே மூன்று பெரும் போர்கள் நடைபெற்றன. அவையாவன, ஜென்கின்ஸ் காதுச் சண்டை, ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர், ஏழாண்டுப் போர் என்பனவாகும். இம் மூன்று போர்களுக்கும் வெளிப்படையான காரணங்கள் வேறு பல இருப்பினும் உண்மையான காரணம் இவ்விரு நாடுகளுக்கிடையே இருந்த வியாபாரப்போட்டியும் குடியேற்ற நாட்டுப் போட்டியுமேயாகும். அமெரிக்கா, இந்தியா போன்ற இடங்களில் இரண்டு நாடுகளுக்கும் குடியேற்ற நாடுகள் இருந்தன. இருப்பினும் இங்கிலாந்தின் வசமே நல்ல செழிப்பான பிரதேசங்கள்

யாவும் இருந்தன. அதைக் கண்டு பொறாமை கொண்ட பிரான்ஸ், இங்கிலாந்தின் செல்வாக்கை அழிக்க விரும்பியது. இப் பொறாமையாலும், போட்டியாலும் ஏற்பட்டவைகளே ஆஸ்திரிய வாரிசுரிமைப்போரும், ஏழாண்டுப் போரும், வியாபாரத் துறையில் ஸ்பெயினுக்கும் இங்கிலாந்துக்கும் இடையே இருந்த போட்டியினால் ஜென்கின்ஸ் காதுச்சண்டை ஏற்பட்டது.

## ஜென்கின்ஸ் காதுச் சண்டை (1739-1749)

**காரணங்கள்**

யுட்ரெக்ட் சமாதான உடன்படிக்கைமூலம் பிரிட்டனுக்கு அளிக்கப்பட்ட 'அசியண்டோ' ('The Asiento') உரிமைப்படி பிரிட்டன் ஆண்டொன்றுக்கு 4800 நீக்ரோ அடிமைகளையும், ஒரு கப்பல் நிறைய வியாபாரப் பண்டங்களையும் மட்டுமே தென் அமெரிக்காவுக்கு அனுப்பி விற்பனை செய்யலாம். ஆனால், தென் அமெரிக்க வாசிகளுக்கு ஒரு கப்பலுக்கும் மேற்பட்ட சரக்குகள் தேவையாயிருந்தன. எனவே ஆங்கிலேய வியாபாரிகள் அம் மிகுதிப் பொருள்களைக் கள்ளத்தனமாகக் கொண்டுசென்று விற்பனை செய்யலாயினர். ஸ்பெயின் அரசு இக் கள்ளக் கடத்தல் வியாபாரத்தைத் தடுக்கத் தக்க முயற்சிகளை எடுத்துக்கொண்டது. கரிபியன் கடலுள் [Caribbean sea]நுழையும் கப்பல்களையெல்லாம் ஸ்பானிய அதிகாரிகள் சோதனையிட ஆரம்பித்தனர். ஆங்கிலேய திருட்டுக் கப்பல்கள் அவர்கள் கையில் சிக்கினால் அவற்றின் மாலுமிகள் கடூரமாகத் தண்டிக்கப்பட்டனர். ஆங்கிலக் கப்பல்களைச் சோதிப்பதையும், ஆங்கில மாலுமிகள் நடத்தப்படும் விதத்தையும் பிரிட்டிஷ்மக்கள் வன்மையாகக் கண்டித்தனர். அப்போது வால்போல், பிரிட்டனின் பிரதம மந்திரியாக இருந்தார். ஆங்கில மாலுமிகளை ஸ்பானியக் கொடுங்கோலர்களிடமிருந்து காக்க வகையறியாத கோழையென வால்போலை எதிர்கட்சிக்காரர்கள் பழித்தனர். தங்கள் கூற்றுக்கு ஆதாரமாக அவர்கள் ஜென்கின்ஸ் என்ற மாலுமியைக் கொண்டு பொதுமக்கள் சபையில் ஒரு சிறு நாடகத்தையே நடத்திவிட்டனர். ஜென்கின்ஸ் காதறுந்த கோலத்துடன் சபையில் கொணர்ந்து நிறுத்தப்பட்டார். தம்முடைய கப்பலைச் சோதித்த ஸ்பானியர்கள், தம் காதையும் அறுத்துவிட்டதாக ஜென்கின்ஸ் கூறியதோடு அறுபட்ட காதை அவர் அனைவருக்கும் காட்டினார். உப்பில் தோய்த்து அக்காதை அவர் அழுகாமல் பாதுகாத்து, ஒரு பெட்டியில் போட்டுக் கொணர்ந்திருந்தார். காதை அறுக்கும்போது அவரது உணர்ச்சி எப்படியிருந்தது எனப் பொதுமக்கள் சபையினர் ஜென்கின்ஸைக் கேட்டனர். அதற்கு அவர் அப்போது எனது ஆன்மாவைக் காக்கும் பொறுப்பை

இறைவனுக்கும், எனது மானத்தைக் காக்கும் பொறுப்பை எனது தாய்நாட்டிற்கும் ஒப்படைத்தேன்' என மறுமொழி கூறினர். அதைக் கேட்ட விக்குள் ஒரே ஆரவாரம் செய்தனர். ஸ்பெயின் மீது போர்தொடுக்கும்படி வால்போலைத் தூண்டினர். பொது மக்களின் விருப்பத்துக் கிணங்க வால்போலும் ஸ்பெயின்மீது போர் தொடுத்தார்.

ஆங்கிலக் கப்பல்களைச் சோதிப்பதை எதிர்த்து இப்போர் தொடங்கப்பட்டாலும் அதற்கு வேறு காரணங்களும் இருந்தன. முப்பதாண்டுகளுக்கு மட்டுமே இங்கிலாந்து, தென் அமெரிக்காவோடு வியாபாரம் செய்ய 'அஸியண்டோ' ஒப்பந்தம் உரிமை அளித்தது. அம் முப்பதாண்டு முடியும் காலம் வந்தது. அவ்வுரிமை மேலும் நீடிக்கப்படவேண்டுமென விரும்பினர். மேலும், வட அமெரிக்காவில் ஸ்பானியர் ஏற்படுத்திய ப்ளாரிடா (Florida) என்ற குடியேற்ற நாட்டுக்கும், ஆங்கிலேயர் ஏற்படுத்திய ஜார்ஜியா என்ற குடியேற்றப் பிரதேசத்துக்குமிடையே எல்லைத் தகராறுகள் பல எழுந்தன. அத் தகராறுகள் போர்முனையில்தான் தீர்க்கப்பட வேண்டுமென்ற நிலைமை ஏற்பட்டது.

போரின் போக்கு

போரின் ஆரம்பத்திலேயே இரு தரப்பிலும் உற்சாகம் காணப்படவில்லை. கடல் தளபதி வெர்னன் (Vernon) என்பார் 1739 ஆம் ஆண்டில் ஆறு கப்பல்களுடன் பனமாவிலுள்ள போர்ட்டோ பெல்லோ (Porto Bello) என்ற துறைமுகத்தைத் தாக்கிக் கைப்பற்றினர் 1739). ஆனல், அவரும் வெண்ட் வொர்த் என்பாரும் சேர்ந்து கார்ட்டஜீனவைத் (Cartagena) தாக்கச் செய்த முயற்சிகள் தோல்வியுற்றன. ஹெட்டாக் (Haddock) என்னும் கடல் தளபதி 1739 ஆம் ஆண்டில் இரண்டு ஸ்பானிய நிதிக் கப்பல்களை மத்தியத் தரைக்கடலில் கைப்பற்றினர். ஆன்ஸன் (Anson) எனும் தளபதி 1750 ஆம் ஆண்டில் ஆறு கப்பல்களுடன் புறப்பட்டார். நான்கு ஆண்டுகள் கழித்து அவர் நன்னம்பிக்கைமுனை வழியாக உலகைச் சுற்றிக்கொண்டு தாய்நாடு திரும்பினர். ஒரு ஸ்பானிய நிதிக் கப்பலை அவர் கைப்பற்றியதால் இங்கிலாந்துக்கு ஐந்து லக்ஷம் பவுன்கள் கிடைத்தன. மற்றபடி சிறந்த வெற்றிகள் எதுவும் ஆங்கிலேயருக்குக் கிட்டவில்லை. இந்நிலையில் ஐரோப்பாவில் பல மாற்றங்கள் ஏற்பட்டதால் ஜென்கின்ஸ் காதுச்சண்டை ஆஸ்திரிய வாரிசுரிமைப் போரோடு ஒன்று கலந்தது. 1948 ஆம் ஆண்டில் ஆச்சன் (Aachan) உடன்பாட்டின்படி சமாதானம் ஏற்பட்டது. அதன்படி யுட்ரெக்ட் உடன்பாட்டினல் கிடைத்த வியாபார

உரிமையை பிரிட்டன் விட்டுக்கொடுத்தது. தென்கடல் கம்பெனிக்கு ஸ்பெயின் 100,000 பவுன் நஷ்ட ஈடு கொடுத்தது.

## ஆஸ்திரிய வாரிசுரிமைப்போர் (1740-1756) (The war of Austrian Succession)

### பேரரசர் தனிக்கட்டளை

ஆஸ்திரியப் பேரரசரான ஆறும் சார்லஸ், தமக்குப் பின் யார் பட்டத்துக்கு வருவதென்பதுபற்றித் தாம் உயிரோடிருக்கும் போதே மிகவும் கவலை கொண்டார். ஏனெனில், அவருக்கு ஆண்மகவோ, சகோதரரோ ஒருவருமில்லை. எனினும், ஆஸ்திரியப் பட்ட உரிமையானது ஹாப்ஸ்பர்க் குலத்துக்கே சேரவேண்டு மென்பதில் அவர் மிகவும் அக்கறை கொண்டார். எனவே, தமக்குப்பின் தமது மகளான மரியாதெரிஸாவுக்கே பட்டம் உரியதாகும் என அவர் அறிவித்தார். பேரரசரின் தனக்கட்டளை (Pragmatic sanction) என்ற ஒரு பத்திரத்தில் அவர் தமது மேற் சொன்ன எண்ணத்தை வெளியிட்டு, அதை ஒப்புக்கொள்ளும்படி பல ஐரோப்பிய அரசர்களையும் கேட்டுக் கொண்டார். பவேரியா நாட்டுத் தேர்வாளரைத் தவிர, மற்ற ஐரோப்பிய அரசர்களெல்லோரும் சார்லஸின் தனிக்கட்டளையை ஏற்றுக் கொண்டனர். எனவே, 1700 ஆம் ஆண்டு ஸ்பெயின் மன்னரான இரண்டாம் சார்லஸ் இறந்தபோது, அங்கு ஒரு வாரிசுரிமைப் போர் தோன்றினதைப் போன்று, தாம் இறந்த பின்பும் ஒரு வாரிசுரிமைப் போர் தோன்றுது என்ற மனநிறைவு ஆறும் சார்லஸுக்கு ஏற்பட்டது. அமைதியுடன் அவர் 1740 ஆம் ஆண்டில் உயிர் துறந்தார். அவர் இறந்தவுடனேயே அவர் அதுகாறும் செய்துவந்த முயற்சிகளெல்லாம் வீணே என்பது வெட்டவெளிச்சமாயிற்று.

### வாரிசுரிமைச் சிக்கல்

ஜெர்மனியில் பேரரசர் ஒருவர் இறந்தவுடன் அவருடைய வாரிசு யார் என்பதை நிருணயிக்கும் பொறுப்பு ஒன்பது தேர்வாளர்கள் (Electors) கையில் இருந்தது. பொதுவாக அவர்கள் ஆஸ் திரிய ஹாப்ஸ்பர்க் குலத்தினரையே - பரம்பரையாகத் தேர்ந் தெடுத்து வந்தார்கள். ஆனல் இச்சமயம் பேரரசர்-ஆண் சந்ததி யின்றி இறந்து போனதால், அவர்கள் தங்கள் பிரியம்போல் பவேரியாத் தேர்வாளர் ஒருவரைப் பேரரசராகத் தேர்ந்தெடுத்த னர். சார்லஸ் ஆல்பர்ட் என்ற அத்தேர்வாளர் ஏழாம் சார்லஸ் பேரரசரென அறிவிக்கப்பட்டார். ஆறும் சார்லஸ் மன்னரது அண்ணன் மகளை அவர் மணந்திருந்ததால் ஒருவகையில் அவர் பேரரசராக்கப் பட்டது நியாயமானதாகவே இருந்தது, ஆறும்

மன்னரது அண்ணன் மகள் இன்னொருத்தியை மணந்திருந்த ஸாக்ஸனித் தேர்வாளரும் மரியாதெரிஸாவை எதிர்த்தார்.

### மகா பிரடரிக்கின் பேராசை

இங்ஙனம் மரியாதெரிஸாவுக்கு உள்நாட்டிலேயே பல எதிர்ப்புகள் கிளம்பிக்கொண்டிருக்கும்போது, வெளி நாட்டிலிருந்தும் ஆபத்துகள் கிளம்பின. ஆஸ்திரியாவுக்கு அருகிலிருந்த பிரஷ்யா நாட்டு மன்னரான மகாபிரடரிக் என்பவர் ஆஸ்தியாவைச் சேர்ந்த சைலீஷியா (Silesia) மாகாணத்தின் மீது படையெடுத்தார். பேரரசரின் தனிக்கட்டளை'யை ஒப்புக்கொண்டவர்களுள் அவரும் ஒருவர். ஆனால், பேரரசர் இறந்தவுடன் அவரது கட்டளையும் அவரோடு மாண்டுவிட்'டதுபோல் தோன்றிற்று. பருந்துகள்போல் பல ஐரோப்பிய நாட்டு அரசர்களும் ஆஸ்திரியப் பேரரசின்மீது பாய்ந்தனர். பிரான்ஸ், ஆஸ்திரிய-நெதர்லாந்தை அடைய விரும்பியது. ஐந்தாம் பிலிப் மிலானைப் பயமுறுத்தினர். ஸாக்ஸனியத் தேர்வாளர் மொரேவியா (Moravia) மீதும், பவேரியத் தேர்வாளர் பொஹீமியா மீதும் படை எடுத்தனர். சர்வதேசசியக் கட்டுப்பாடு அக்காலத்தில் எவ்வளவு இழிந்த நிலையிலிருந்த தென்பதற்கு இந்நிகழ்ச்சிகள் நல்ல சான்று பகர்கின்றன.

### முதல் சைலீஷியப் போர்

மகாபிரடரிக், சைலீஷியாவைச் சூறையாடினர். மோல்விட்ஸ் (Molwitz) என்னுமிடத்தில் அவர் ஆஸ்திரியப் படைகளை முறியடித்தார் (1740). மரியாதெரிஸா, வால்போலின் உதவியை நாடினர். வால்போல் ஓர் அமைதி விரும்பியாதலால் 'அந்த மிகப் பெரிய நாய்க்கு அது வேண்டுகின்ற எலும்பைக் கொடுத்துவிடு' என்று மரியாவுக்கு அறிவுருத்தினர். மரியாவும் தயக்கத்தோடு வேறு வழியின்றி அந்த யோசனையை ஒப்புக்கொண்டார். ப்ரெஸ்லா (Breslau) உடன்படிக்கையின்படி (1742) மரியா, சைலீஷியாவைப் பிரடரிக்குக்குக் கொடுத்தார். இங்ஙனம் முதல் சைலீஷியப் போர் முடிந்தது.

பிரடரிக்கோடு சமாதானம் செய்துகொண்டபின், மரியா தெரிஸா தனது மற்ற எதிரிகள்பால் கவனத்தைச் செலுத்தினர். பவேரியாவை அவர் படையெடுத்து அதன் தலைநகரான மியூனிச் நகரைக் (Munich) கைப்பற்றினர் (1742). அச்சமயம் இங்கிலாந்தில் கார்ட்டரெட் மந்திரிசபை அதிகார பீடத்திலிருந்தது. கார்ட்டரெட் புதிய கொள்கையைக் கடைப்பிடித்தார். ஆஸ்திரியாவுக்கு உதவியாக பிரிட்டிஷ் படை ஒன்று ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டது. பவேரியாவுக்கு உதவியாகப் பிரெஞ்சுப்படை

ஒன்று வந்தது. எனவே, பிரிட்டிஷ் படையும், பிரெஞ்சுப் படையும் கைகலந்தன. பிரிட்டிஷ் படையை இரண்டாம் ஜார்ஜ் மன்னரே தலைமை தாங்கி நடத்தினர்.

டெட்டிஞ்சன் (Dettingen) என்னுமிடத்தில் 1743ஆம் ஆண்டு அவர் பிரெஞ்சுப் படைகளைத் தோற்கடித்தார். அதே ஆண்டில் பிரிட்டிஷ் கப்பற் படையொன்று நேபில்ஸுக்கு அருகில் சென்று, அதன் மன்னர் ஆங்கிலேயருக்கு விரோதமாகப் போரிலிறங்காதவாறு தடுத்தது.

டெட்டிஞ்சன் போருக்குப் பின்னர், பிரிட்டனும் பிரான்ஸும் ஒன்றையொன்று எதிரியாகக் கருதிப் போரிட ஆரம்பித்தன. அவைகள் முறையே ஆதரித்த ஆஸ்திரியாவும் பிரஷ்யாவும் போரிட்ட நிகழ்ச்சிகூட இரண்டாந்தரமாகவே தோன்றிற்று. பிரிட்டனும் பிரான்ஸும் உலகின் பல பாகங்களில் போரிட்டுக்கொண்டன. இந்தியாவில் பிரெஞ்சுக் கவர்னராயிருந்த ட்யூப்ளே (Dupleix) ஆங்கிலேயருக்குச் சொந்தமான மதராஸ் நகரை 1746ஆம் ஆண்டில் கைப்பற்றினர். பிரெஞ்சுக்காரரின் அதிகாரம் இந்தியாவில் பெருக ஆரம்பித்தது. அமெரிக்காவில் பிரெஞ்சுக்காரர்களை ஆங்கிலேயர்கள் தோற்கடித்து லூயிபர்க் (Louisberg) எனும் நகரைக் கைப்பற்றினர். ஆனல், கனடாமீதோ ஸ்பானிஷ் தென் அமெரிக்காமீதோ ஆங்கிலேயர் படை எடுக்கவில்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஊக்கமின்மையே அதற்குக் காரணம், பிரிட்டிஷ் கடற்படையானது பிரெஞ்சுக்காரர் வங்காள விரிகுடாவில் ஆதிக்கம் செலுத்தியதைத் தடுக்கவில்லை. ஆனல், டௌலன் நகரிலிருந்த பிரெஞ்சுக் கப்பற்படையைப் பிரிட்டிஷ் கப்பற்படை தாக்கி அது ஸ்பானியக் கப்பற்படையோடு சேராவண்ணம் தடுத்தது.

ஐரோப்பாவில் பிரடரிக் 1744ஆம் ஆண்டில் பொஹீமியாவைத் தாக்கினர். ஆனல் அங்கு அவர் தோல்வியுற்றார். பிரெஞ்சுப் படைகள் ஆஸ்திரிய-நெதர்லாந்தைத் தாக்கின. ஃபான்டிஞய் (Fontenoy) என்ற இடத்தில் நடைபெற்ற போரில் ஆங்கிலப்படைத் தளகர்த்தரான கம்பர்லாந்து பிரபு, பிரெஞ்சுப் படையால் தோற்கடிக்கப்பட்டார் (1745). இங்கிலாந்தில் (1745)ஆம் ஆண்டில் யாகோபியர்கள் கலகத்திலிறங்கியதால் ஆங்கிலப் படையின் பெரும்பகுதி நெதர்லாந்திலிருந்து தாய் நாட்டுக்குத் திரும்பிவிட்டன. பிரிட்டனும் ஆஸ்திரியாவும் பிரஷ்யாவோடு சமாதானம் செய்துகொண்டன. அதன்படி பிரடரிக், சைலீஷியாவைப் பெற்றார். மரியாதெரிஸாவின் கணவரான பிரான்ஸிஸ் என்பவரைப் பேரரசராகப் பிரடெரிக் ஒப்புக்கொண்டார்.

ஆஸ்திரியாவும் இங்கிலாந்தும் பிரான்ஸுடன் தொடர்ந்து போரை நடத்திக்கொண்டு வந்தன. பிரெஞ்சுக்காரர் நிலத்திலும், ஆங்கிலேயர் கடலிலும் சில வெற்றிகளைப் பெற்றுர்கள். கடைசியில் 1748ஆம் ஆண்டு எய்க்ஸ்லா சேப்பெல் (Aix-la-Chapelle) என்னுமிடத்தில் ஏற்பட்ட சமாதான உடன்பாட்டின் படி போர் நிறுத்தப்பட்டது. அதன்படி பிரெஞ்சுக்காரரும் பிரிட்டிஷாரும் அவரவர் இழந்த நாடுகளைத் திரும்பப் பெற்றனர். பிரஷ்யா, சைலீஷியாவைப் பெற்றது. மிலான், சார்டீனியா அரசருக்குத் தரப்பட்டது. இவ்வுடன்பாடு யாருக்கும் திருப்தியளிக்கவில்லை. மதராஸ் ஆங்கிலேயருக்குத் திருப்பித்தரப்பட்டதை டியூப்ளே விரும்பவில்லை. பிரெஞ்சு ஆங்கிலேயக் குடியேற்ற நாட்டுப் போட்டிக்கு ஒரு தீர்வு ஏற்படவில்லை. சைலீஷியாவை இழக்க மரியாதெரிஸாவுக்கு மனம் வரவில்லை. எப்படியும் அதை மீண்டும் கைப்பற்றிவிட வேண்டுமென அவர் மனத்துள் தீர்மானித்து அதற்கான முயற்சிகளைச் செய்யலானுர். எனவே போர் தற்காலிகமாக நின்றதேயன்றி வேறில்லை.

## ஏழாண்டுப் போர் (Seven Years War 1756-1763)

### காரணங்கள்

ஆஸ்திரிய வாரிசுரிமைப் போரின் தொடர்ச்சியாகவே ஏழாண்டுப் போரைக் கருதலாம். (ஐரோப்பிய சக்திச் சமநிலையைக் காப்பாற்றவும், பிரெஞ்சுப் பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டுப் போட்டியில் யார் வெற்றி பெறுவதென்பதைத் தீர்மானிக்கவுமே ஏழாண்டுப் போர் நிகழ்ந்ததெனக் கூறலாம்.) முக்கியமாக இந்தியாவிலும் அமெரிக்காவிலும் இரு நாடுகளுக்கும் போட்டி வலுத்தது. இந்தியாவில் டியூப்ளே சுதேச அரசர்களின் உள் நாட்டு விவகாரங்களில் தலையிட்டார். பிரெஞ்சுக்காரரும், ஆங்கிலேயரும் ஹைதராபாத்திலும், கர்நாடகத்திலும் மாறுபட்ட கட்சியினரை ஆதரித்து அதன் விளைவாகப் போரிட்டு வந்தனர். வட அமெரிக்காவில் பிரெஞ்சுக்காரர்கள் சென்ட்லாரென்ஸ் வளைகுடாவிலிருந்து மெக்ஸிகோ வளைகுடாவரை பல கோட்டைகளைக் கட்ட ஆரம்பித்தனர். அதில் அவர் வெற்றி பெற்றுல் ஆங்கிலேயர்கள் அலிகனிமலைக்கும் மேற்கே போக முடியாமல் கடலுக்கும் மலைக்கும் இடையில் அடைபட வேண்டிய நிலைமை ஏற்படுமென ஆங்கிலேயர் பயந்தனர். பிரெஞ்சுக்காரரோடு போரிட அவர்கள் ஒரு தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். ஐரோப்பாவில் ஏற்பட்ட ஏழாண்டுப் போர் அத்தருணத்தை அவர்கட்கு நல்கியது.

### மரியாதெரிஸாவின் முன்னேற்பாடு

நாம் மேலே சொன்னபடி மரியாதெரிஸா, சைலீஷியாவைத் திரும்பவும் பெற்றுவிடவேண்டுமெனத் தீர்மானித்தார். அத்தீர்மானத்தை நடைமுறையில் கொணரவேண்டுமானால் ஆங்கிலேயரின் உதவியை நம்புவதில் பயனில்லை என அவர் முடிவு செய்தார். அவரது பிரதம மந்திரியான கௌனிட்ஸ் (Kaunitz) என்பார் பிரான்ஸோடு கூட்டுச் சேர்வதன் அவசியத்தை அவருக்கு எடுத்துக் கூறினார். ஆனால் பிரான்ஸும் ஆஸ்திரியாவும் ஒரு நூற்றாண்டுகளுக்கு மேல் ஒன்றையொன்று பகைத்து வந்தவை. திடீரென எப்படி அவை ஒன்று சேரமுடியும் என மரியாதெரிஸா ஐயமுற்றார். ஆனால் கௌனிட்ஸ் விடாமுயற்சியோடு தம் எண்ணத்தைச் செயலாக்கிட முனைந்தார். பிரஷ்யாவுக்கும் பிரான்ஸுக்கும் வளர்ந்து வந்த மனக்கசப்பை அவர் நன்கு பயன்படுத்திக்கொண்டார். பிரெஞ்சு மன்னர் பதினைந்தாம் லூயியின் ஆசைநாயகியான மேடம் பாம்பதர் (Madam Pompadar) என்பவளைப் பிரஷ்ய மன்னர் பிரடரிக் ஏளனமாகப் பேசிவந்தார். அதனால் அம்மங்கை பிரஷ்யாவுக்கெதிராக ஆஸ்திரியாவை ஆதரிக்க முன்வந்தாள். அவளது தூண்டுதலின் பேரில் பிரான்ஸுக்கும் ஆஸ்திரியாவுக்கும் 1756ஆம் ஆண்டு ஒரு நட்புடன்படிக்கை ஏற்பட்டது. இவ்வுடன்பாடானது ஐரோப்பிய இராஜதந்திர வரலாற்றிலேயே ஒரு பெருத்த சாதனை எனக் கருதப்படுகிறது. ஏனெனில், நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக எதிரிகளாயிருந்த இருநாடுகள் இவ்வுடன்பாட்டால் திடீரென இணைந்தன. இவ்வுடன்படிக்கை ஏற்பட்ட சில ஆண்டுகளுக்குப் பின், பதினைந்தாம் லூயியின் பேரனுக்கும் (பதினாறும் லூயி) மரியாதெரிஸாவின் மகளான மரியா அந்துவானெத் (Maria Antoinette) என்பவருக்கும் திருமணம் நடந்தேறியது. ருஷ்யாவும், ஸாக்ஸனியும், பின்னர் ஸ்பெயினும் ஆஸ்திரியாவோடு சேர்ந்துகொண்டன. இங்கிலாந்து ஹெனோவரைக் காக்க வேண்டி பிரஷ்யாவோடு சேர்ந்து கொண்டது. பிரடரிக் ஸாக்ஸனிமீது போர் தொடுத்தார். பிரெஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் இதற்கு முன்பே தம்முள் சண்டையிடலாயினர்.

### போரின் போக்கு

ஏழாண்டுப் போரின் ஆரம்பத்தில் ஆங்கிலேயருக்குத் தோல்வி மேல் தோல்வி ஏற்பட்டது. 1756-ஆம் ஆண்டில் பிரெஞ்சுக் கப்பற்படையும் நிலப்படையும் திடுமென மினார்க்கா மீது பாய்ந்து அதைக் கைப்பற்றிக் கொண்டன. அதை மீட்கச் சென்ற ஆங்கிலக் கடல் தளபதி பிங் (Byng) என்பார் பிரெஞ்சுக்காரரின் பலம் அதிகமாயிருப்பதையறிந்து ஜிப்ரால்டருக்குப் பின் வாங்கினார். துணிந்து போரிட்டிருந்தால் அவர் வெற்றி பெற்

திருக்கலாம். ஆனால் அவர் முன் எச்சரிக்கையோடு நடந்து கொண்டார். ஜிப்ரால்டரைக் காக்கவேண்டி மினார்க்காவைக் கைவிட்டார். அவருடைய தோல்விக்கு முக்கிய காரணம் நியூ காஸில் என்ற பிரிட்டிஷ் மந்திரியின் திறமையின்மையேயாகும். ஆனால், பொதுமக்கள் பிங் என்பாரையே குறை கூறினர். நியூ காஸில் தம் குறையை மறைக்கப் பிங் என்பாரைச் சுட்டுக் கொல்லும்படி உத்தரவிட்டார்.

அமெரிக்காவில் பிரிட்டிஷ் வியாபார ஸ்தலமான ஆஸ்லேகா கோட்டை பிரெஞ்சுக்காரர் கையில் விழுந்தது. ஐரோப்பாவில் கம்பர்லாந்து கோமகன் (இரண்டாம் ஜார்ஜின் மகன்) ஹேஸ்டன்பெக் (Hastenback) என்னுமிடத்தில் தோல்வியுற்றார் (1757). அவர் மனமுடைந்து தமது படைகளைக் கலைத்து விடுவதாகவும் ஒரு கேவலமான உடன்படிக்கையை எதிரிகளுடன் செய்து கொண்டார். அதற்கு க்ளாஸ்டர் செவன் (Kloster Seven) உடன்பாடு எனப்பெயர். ஆனால் பிரடரிக் பிரெஞ்சுக் காரரை ராஸ்பேக்கிலும் (Rossbach), ஆஸ்திரியர்களை லியூதெனிலும் (Leutheu) தோற்கடித்தார். அமெரிக்காவில் ஆங்கில தளகர்த்தரான பிரேடாக் (Braddock) என்பார் டியூகிஸன் கோட்டையை (Fort Dequesne) முற்றுகை செய்து தோல்வியுற்றார். இந்தியாவில் சிராஜ் உட்டௌலா எனும் நவாப் கல்கத்தாவைப் பிடித்துக் கொண்டார். 1757-ஆம் ஆண்டில் இங்கிலாந்து ஒரு பெரிய ஆபத்தில் இருப்பதாகத் தோன்றியது, இந்தச் சமயத்தில் 'நாட்டைக் காப்பாற்ற நானிருக்கிறேன்' என்று கூறிக்கொண்டு மார்தட்டி முன்வந்தார் மூத்த வில்லியம் பிட் (Pitt the Elder) என்பவர்.

### மூத்தபிட்டின் போர்க்காலச் சேவைகள்

பிட் தமது அயரா உழைப்பாலும் ஆற்றலாலும் தோல்விகளையெல்லாம் வெற்றிகளாக மாற்றினார். 150,000 படைவீரர்களையும், 50,000 மாலுமிகளையும், 400 போர்க் கப்பல்களையும் அவர் திரட்டினார். ஸ்காட்லாந்திய மலைநிலமக்கள் கூட்டத்தினரிலிருந்து முரட்டு வீரர்களைப் படையில் சேர்த்தார். தகுந்த தளகர்த்தர்களை அவர் பொறுக்கி எடுத்து, அவர்களைப் பல போர்முனைகளுக்கும் அனுப்பினார்; பிரிட்டிஷ் கடற்படையை நன்கு பலப்படுத்தினார். அப்படையைக் கொண்டு அவர் பிரெஞ்சுக் கப்பற்படைத் தளங்களையும் முற்றுகையிட்டு, பிரெஞ்சு சேனைகளும், கடற்படையும் வெளியேவராதபடி பார்த்துக் கொண்டார். பிரெஞ்சுக்காரர் தம் குடியேற்ற நாடுகளுக்கு உதவியனுப்ப

முடியாதபடி அவர்களைத் திணறடித்தார். அக்கப்பற்படை அவ்வப்போது பிரெஞ்சுக் கடற்கரையைத் தாக்கி பிரெஞ்சுக்காரரை அலட்டிக் கொண்டிருந்தது. பிரெஞ்சுக்காரரின் வியாபாரத்தையுப், பிரிட்டிஷ் கடற்படை தடைசெய்தது. மேலுப் குடியேற்ற நாடுகளுக்கும் இந்தியாவுக்கும் படைகளை அனுப்பவும் கடற்படையை பிட் நன்கு பயன்படுத்தினர். பிட், அமெரிக்காவுக்குப் பெருஞ்சேனை ஒன்றை அனுப்பினர்; ஐரோப்பாவுக்கு ஒரு படையை அனுப்பிப் பிரெஞ்சுப் படைகளுக்குச் சதாவேலை கொடுத்துக் கொண்டிருந்தார். பிரடரிக்கிடமிருந்து பெர்டினன்டு என்ற சிறந்த தளகர்த்தரைப் பெற்று, அவரைத் தமது ஐரோப்பியப் படைக்குத் தலைவராக்கினர். பிரடரிக்கும் அவர் ஆண்டுதோறும் மானியமும் போர்வீரரையும் வழங்கினர். இங்ஙனம் கடற்படையின் வலிமையாலும், பிரடரிக்கின் உதவியாலும் பிட், இங்கிலாந்துக்கு முடிவில் வெற்றியைத் தேடித் தந்தார்.

1759-ஆம் ஆண்டில் பிரான்ஸ், இங்கிலாந்துமீது படைஎடுக்க டூலோன் (Toulon), ப்ரெஸ்ட் (Brest) என்ற துறைமுகங்களில் தனித்தனியே இரு கப்பற்படைகளைத் திரட்டியது. இவ்விரு கப்பற்படைகளும், சேர்ந்துக் கொண்டால் ஆங்கிலக் கப்பற் படையை ஆங்கிலக் கால்வாயில் எளிதில் தோற்கடித்துவிடலாம். ஆனல் அவை ஒன்று சேராவண்ணம் ஆங்கிலக் கப்பற்படை தடுத்து விட்டது. டூலோன் துறைமுகத்தினின்றும் புறப்பட்ட பிரெஞ்சுக் கப்பற்படையை, பிரிட்டிஷ் கப்பற்படைத் தலைவரான பாஸ்கோவென் (Boscowen) என்பார் லாகாஸ் (Lagos) முனைக் கருகில் தோற்கடித்தார். ப்ரெஸ்ட் துறைமுகத்தினின்றும் வெளிக்கிளம்பிய கப்பற்படையை ஹாக் Hawke எனும் பிரிட்டிஷ் கடல்தளகர்த்தர் குவிபெரான் குடாவில் Quiboron Bay தோற்கடித்தார். இவ்விரு தோல்விகளாலும் பிரெஞ்சுக்காரர் களின் கடலாதிக்கம் ஒழிந்தது.

ஐரோப்பாவிலும் பிட் பல வெற்றிகளைப்பெற்ருர். க்ளாஸ்டர் செவன் ஒப்பந்தம் செல்லாதென அவர் அறிவித்தார். பெர்டினண்டு தளகர்த்தர் பிரெஞ்சுக்காரர்களை ஹெனேவர் நாட்டினின்றும் துரத்தினர். 1759-ஆம் ஆண்டில் பெர்டினண்டு பிரெஞ்சுக்காரரை மின்டன் Minden போர்க்களத்தில் தோற்கடித்தார். பிரடரிக் போரில் சலிப்புற்ருர். பிட்டின் உதவியால்தான் அவர் போரைத் தொடர்ந்து நடத்தி வந்தார்.

இந்தியாவிலும் பிரிட்டிஷாருக்கு வெற்றியே கிடைத்தது. 1759-இல் சிராஜ் உட்டௌலாவை ப்ளாசிச் சண்டையில் கிளைவ்

தோற்கடித்தார். ஸர் அயர்கூட் என்னும் பிரிட்டிஷ் கடல்தள கர்த்தர் பிரெஞ்சுத் தலைவராகிய கௌண்டிலாலியை வந்தவாசி



என்னுமிடத்தில் 1760-இல் தோற்கடித்தார். இதனால் வங்காளத்திலும், கருநாடகத்திலும் ஆங்கில ஆட்சி நிலைபெற்றது.

இதற்கிடையில் அமெரிக்காவில் ஆங்கிலத் தளகர்த்தரான ஆம்ஹெர்ஸ்ட், லூயிபர்க் நகரைப் பிடித்தார். கியூபெக் என்ற கனடாவின தலைநகருக்குப் போகும் வழியிலிருந்த இந்நகர் பிடிபட்டது மிகச் சிறந்ததொரு வெற்றியாகும். அடுத்து டியூகிஸன் கோட்டையை ஆங்கிலேயர் பிடித்தனர். இங்ஙனம்

ஓஹியோ பள்ளத்தாக்கு முழுவதும் ஆங்கிலேயர் வசமாயிற்று. இதன்பின் வுல்ஃப் (Wolfe) என்னும் தளகர்த்தர் லாரன்ஸ் நதி வழியே சென்று, ஏற முடியாதது எனக் கருதப்பட்ட ஆப்ரஹாம் குன்றுகளைக் கடந்து, கியூபெக் நகரைத் தாக்கிக் கைப்பற்றினர். அடுத்தாண்டு மாண்ட்ரீல் (Mcntreel) நகரும் அவர் வசம் சிக்கியது. இதனால் கனடா முழுவதும் ஆங்கிலேயர் வசமாயிற்று.

அச்சமயத்தில் பிரான்ஸும் ஆஸ்திரியாவும் போரில் களைப்புற்றுச் சமாதானத்தை நாடின. ஸ்பெயின், பிரான்ஸோடு ஒரு 'குடும்ப ஒப்பந்தம்' என்னும் தேச உடன்படிக்கையைச் செய்து கொண்டது. இங்கிலாந்து, பிரான்ஸுடன் உடனே சமாதானம் செய்துகொள்ளாவிடில் இங்கிலாந்தின்மீது போர் தொடுப்பதாக ஸ்பெயின் பயமுறுத்தியது. பிட் உடனே ஸ்பெயின்மீது போர் தொடுக்கத் துடித்தார். பாராளுமன்றமும், மூன்றும் ஜார்ஜும் அதற்கு இணங்காததால் அவர் தம் பதவியை ராஜினமா செய்தார். போர் தொடர்ந்து நடைபெற்று வந்தது. காடலூப், மணிலா என்ற இடங்களை ஆங்கிலேயர் கைப்பற்றினர். ஸ்பெயினும் போரில் இறங்கிற்று. இந்த நெருக்கடியில் இங்கிலாந்தில் ஆட்சி புரிந்த பூட்மந்திரி சபையானது (Bute Ministry) பிரஷ்யாவைக் கைவிட்டுப் போரை நிறுத்தியது. பிரான்ஸும் ஸ்பெயினும் போரில் சலிப்புற்றன. இனியும் போர் நடத்துவதில் பயனில்லையென அறிந்த அந்நாடுகள் இங்கிலாந்துடன் 1763-ஆம் ஆண்டில் பாரிஸ் உடன்படிக்கையைச் செய்து கொண்டன.

பாரிஸ் உடன்படிக்கை (1763)

பாரிஸ் உடன்படிக்கையின்படி பிரிட்டனுக்கு நோவா கோஷியா டொபேகோ, டாமினிகா, செண்ட்வின்ஸெண்ட், க்ரெனடா, செனீகல், ட்ஸீர்க்கா, பிளாரிடா, ப்ரெட்டன் முனைத்தீவு, கனடா ஆகிய பிரதேசங்கள் கிடைத்தன. பிரான்ஸ் புதுச்சேரியையும் வேறு நான்கு துறைமுகங்களையும், பெல் காடலூப், மார்டினீக் முதலிய பிரதேசங்களையும், நியூபவுண்ட்லாந்து தீவுக்கருகில் மீன்பிடிக்கும் உரிமையையும் பெற்றது. ஸ்பெயினுக்கு கியூபா, பிலிப்பைன் தீவுகள் கிடைத்தன.

பாரிஸ் சமாதானம் பிரெஞ்சு ஆதிக்கத்தை இந்தியாவிலும் அமெரிக்காவிலும் ஒழித்து, ஆங்கிலச் செல்வாக்கையும் அதிகாரத்தையும் அதிகரித்தது, இங்கிலாந்தில் கடல்வன்மை நன்கு நிலைநாட்டப்பட்டது. ஆனால் இங்கிலாந்தின் நாட்டுக்

கடன் அதிகமாயிற்று. அதைக் குறைக்க இங்கிலாந்து அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின்மீது வரி விதிக்க முயன்றது. அதன் விளைவாக அமெரிக்கச் சுதந்திரப்போர் ஏற்பட்டது. அமெரிக்காவில் பிரெஞ்சுக்காரரிடமிருந்து அமெரிக்கர்களுக்கு விளையக்கூடிய அபாயம் தவிர்க்கப்பட்டதும் அன்னாரின் சுதந்திர உணர்ச்சி வளர்ச்சிக்கு ஒரு முக்கிய காரணமாகும்.

# 5. இரண்டாம் ஜார்ஜ் (தொடர்ச்சி)

மூத்த பிட்டின் வாழ்வும் செயலும் - மூத்த பிட்டின் வாழ்க்கைக் குறிப்பு

மூத்த பிட்டின் சேவைகள் : குணநலன்கள் — உள்நாட்டுக் கொள்கை — வெளி நாட்டுக் கொள்கை — போர்க்காலச் சேவை — குணங்குறைகள்.

1745 - ஆம் ஆண்டு யாகோபியர்கள் கலகம் : க்ளென் பின்னன் — எடின்பர்க் — டன்பார் — பிரெஸ்டென் பான்ஸ் — டெர்பி — ஃபால்கிர்க் — ஸ்டர்லிங் கல்லடன் மூர்.

பெல்ஹாம் மந்திரி சபையின் உள்நாட்டுச் சீர்திருத்தம் : பொருளாதாரச் சீர்திருத்தம் — காலண்டர் சீர்திருத்தம் — ஹார்டுவிக் மணவினைச் சட்டம் (Hardwick's Marriage Act).

விக்குக் கட்சியின் வீழ்ச்சி

## மூத்த பிட்டின் வாழ்வும் செயலும் - மூத்த பிட்டின் வாழ்க்கைக் குறிப்பு

'பொதுமக்கட் பெருமகன்' (The Great Commoner) என்று புகழப்படும் வில்லியம் பிட் என்பார், 1708ஆம் ஆண்டில் ராபர்ட் என்பவரின் மைந்தனாக வெஸ்ட்மின்ஸ்டர் நகரில் பிறந்தார். அவர் சென்னைக் கவர்னராயிருந்து, பெரும்பொருள் திரட்டிப் பல பரோக்களைச் சொந்தமாக வாங்கிய, புகழ்பெற்ற தாமஸ் பிட்டின் பேரனுவார். அவர், ஈடன் ஆக்ஸ்போர்டு என்ற இடங்களில் கல்வி பயின்றார். கிரேக்க மொழியில் அவர்

நல்ல பயிற்சி பெற்றிருந்தார். இளவயதில் அவர் கீல்வாத நோயால் பீடிக்கப்பப்பட்டிருந்தார். அதனுல்தான் அவர் வெளி விளையாட்டுக்களில் கலந்து கொள்ளாமல் கல்வியில் மிகுந்த ஊக்கம் காட்டி, டெமாஸ்தனீஸ் என்பாரின் நூல்களை ஆர்வத்துடன் பயின்முர். இக்கல்வி பிற்காலத்தில் அவரது பாராளு மன்றச் சொற்பொழிவுகளுக்குப் பெரிதும் உதவியாயிருந்தது.

1731ஆம் ஆண்டில் அவர் கோப்ஹாம் படைப்பகுதியில் ஒரு கொடியேந்தியாக வேலையிலமர்ந்தார். 1735ஆம் ஆண்டில் அவர் பழைய சாரம் (Old Sarum) என்னும் பரோவின் பிரதிநிதியாகப் பொதுமக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார் தமது சொல்வன்மையாலும் ,தைரியத்தாலும் அவர் அச்சபையின் நன்மதிப்பைப் பெற்முர். வால்போலின் கொள்கைகளை அவர் வன்மையாகக் கண்டித்தார். அவரது சொற்பொழிவுகளால் தான் வால்போல் ஸ்பெயினேடு போர் தொடுத்தாரென்று கூறலாம். 1742ஆம் ஆண்டில் வால்போல் தம் பதவியை ராஜிநாமா செய்தார். அதன்பின் வில்மிங்டன் பிரபுவின் (Lord Wilmington) தலைமையில் ஒரு மந்திரி சபை அமைக்கப்பட்டது. அதில் கார்ட்டரெட் பிரபுதான் வெளிநாட்டுக் கொள்கையை வகுத்து நடத்தி வந்தார். பெல்ஹாம் சகோதரர்களும் அம் மந்திரி சபையில் இடம் பெற்றனர். பிட்டுக்கு இச்சபையில் இடம் கிடைக்கவில்லை. கார்ட்டரெட் ஆஸ்திரிய வாரிசுமைப் போரை நடத்துவதில் சுறுசுறுப்புக்காட்டினுர். எனினும், அவரது ஊக்கம் போதாது எனப் பிட் அவரைக் குறைகூறி வந்தார். 1743ஆம் ஆண்டில் வில்மிங்டன் இறந்துவிடவே ஹென்றி பெல்ஹாம் தலைமையில் மீண்டும் மந்திரி சபை திருத்தி அமைக்கப்பட்டது. அதில் எல்லா விக்குப் பிரிவினரும் இடம் பெற்றனராதலால் அதன் ஆட்சியானது பரந்த அடிப்படையில் அமைந்த ஆட்சி (Broad Bottom Administration) என அழைக்கப் பட்டது. பிட்டுக்குப் படையினர்க்குச் சம்பளம் வழங்கும் உத்தியோகம் கிடைத்தது. அதில் அவருக்குப் பலவகையிலும் மேல்வரும்படி பெறுவதற்குச் சந்தர்ப்பமிருந்தும் அவர் எதையும் வாங்காமல் தம் கடமையை உண்மையுடன் செய்தார். பதவி வழங்கப்பட்டதால் அவர் அரசாங்கத்தைக் கண்டிப்பதை நிறுத்திக் கொண்டார். நியூகாஸிசில் பிரபு, ஜார்ஜ் மன்னரால் பெரிதும் விரும்பப்பட்டார். அதனுல் அவருக்கு ‘கோமகன்’ என்ற பட்டமும் வழங்கப்பட்டது. ஆனுல் அவர் கோழை; திறமையற்றவர். அவரது இளைய சகோதரரானுன ஹென்றி பெல்ஹாம் உண்மையில் திறமை படைத்தவர். அவ்விருவருமே வால்போலின் நண்பர்கள். எனவே அவரது கொள்கையையே

அவர்களும் பின்பற்றி வந்தார்கள். ஹென்றி பெல்ஹாம் 1754ஆம் ஆண்டு இறந்தார். அதன்பின் நியூகாஸில்பிரபு மந்திரி சபையை அமைத்தார். பிட்டுக்கு அச்சபையில் இடமளிக்கப்படவில்லை. ஏழாண்டுப்போர் இச்சமயத்தில்தான் ஏற்பட்டது. அதைச் சரிவர நடத்த முடியாமல் நியூகாஸில் ராஜிநாமா செய்தார். பின்னர், டெவன்ஷயர் கோமகன் தலைமையில் 1756இல் ஏற்பட்ட மந்திரி சபையில் பிட் உள்நாட்டு அமைச்சரானார். இச்சமயத்தில்தான் அவர் மலைநில குலமக்களைப் படையில் சேர்த்து அவர்களுக்குத் திருப்தியை விளைத்தார். மன்னரும் நியூகாஸிலும் சேர்ந்துகொண்டு பிட்டின் செல்வாக்கைப் பலவகையிலும் குறைத்தனர். எனவே அவர் ஆரம்பத்தில் ஏழாண்டுப் போரை நன்கு நடத்த முடியவில்லை. அவருக்குப் பாராளுமன்றத்திலும் பெரும்பான்மையோரின் ஆதரவு கிட்டவில்லை. எனவே 1757-ஆம் ஆண்டில் நியூகாசில் மறுபடியும் மந்திரி சபையை அமைக்கும்படி அழைக்கப்பட்டார். அப்போது அவர் பிட்டையும் சேர்த்துக் கொண்டார். இச்சமயம் நியூகாஸில் தமது செல்வத்தையும், செல்வாக்கையும் பயன்படுத்திப் பாராளுமன்றத்தில் அரசாங்கத்துக்கு ஆதரவு தேடி தந்தார். பிட் ஏழாண்டுப் போரை வெற்றியுடன் நடத்தினார். 1761ஆம் ஆண்டில் ஸ்பெயினோடு போர் செய்யும்படி பிட் சொன்னபோது பாராளுமன்றம் அதற்கிணங்காததால் அவர் ராஜிநாமா செய்தார். 1762இல் நியூகாஸில் பிரபுவும் ராஜிநாமா செய்தார். பூட் பிரபு (Lord Bute) என்பாரை மூன்றும் ஜார்ஜ் மந்திரி சபைத்தலைவராக நியமித்தார். அவர் ஏழாண்டுப் போரை முடித்துச் சமாதானம் செய்து கொண்டார்.

பூட் மந்திரி சபையும் அதன்பின் வந்த க்ரென்வில் (Grenville), ராக்கிங்ஹாம் (Rockingham) மந்திரிசபைகளையும் பிட் கண்டித்து வந்தார். அவர்களது அமெரிக்கக் கொள்கைகளை அவர் வன்மையாகத் தாக்கினார். ராக்கிங்ஹாம் மந்திரி சபையையும் மன்னர் கலைத்துவிட்டுப் பிட்டினை அழைத்து மந்திரிசபை அமைக்குமாறு அவர் வேண்டினார். பிட் அப்போது வயது முதிர்ந்தவராய் உடலும் உள்ளமும் சோர்ந்தவராகக் காணப்பட்டார் எனினும் அவர் ஒரு கூட்ட மைச்சை ஏற்படுத்தினார். ஆனால் பொதுக் கொள்கையின்மையால் அவ்வமைச்சர் குழு திறம்படச் செயல்பட முடியவில்லை. அவர் கீல்வாத நோய் காரணமாக மற்ற மந்திரிகளைக் கட்டியாள முடியவில்லை. டவுன்செண்ட்பிரபு, பிட்டைக்கேளாது அமெரிக்காமீது வரி விதித்து, சங்கடத்தை ஏற்படுத்தினார். இதையெல்லாம் கண்டு

பொறுத பிட் தம் பதவியைத் துறந்தார். அதன்பின் கிராப்டன் (Grafton) அமைச்சரவையை ஏற்படுத்தினார். ஆனால் விரைவில் வீழ்ச்சியுற்றார். அதன்பின் நார்த் பிரபு மந்திரி சபையை அமைத்தார். அவர் காலத்தில் அமெரிக்கச் சுதந்திரப் போர் ஏற்பட்டது. நார்த் பிரபுவின் மந்திரி சபையைப் பிட் குறை கூறினார், அவரது அரும்பெருஞ் சேவைகளை மெச்சி அவருக்குச் 'சாத்தாம் எர்ல்' (Earl of Chatham) என்ற பட்டம் 1766-ஆம் ஆண்டு வழங்கப்பட்டது. ஆங்கிலப் பேரரசு சிதைக்கப்படுவதை நொந்து கொண்டே அவர் 1778-ஆம் ஆண்டு இறந்தார்.

## மூத்த பிட்டின் சேவைகள்

**குணநலன்கள்**

உள்ளம் சோர்ந்து ஊக்கம் குன்றித் தோல்விகளாற் குழப்பப்பட்டுச் செய்வதின்னதெனத் தெரியாது திகைத்து நின்ற ஆங்கிலேயரை தட்டி எழுப்பி உற்சாகம் ஊட்டி, வெற்றிப் பாதையில் வீரநடை போடும்படி செய்த பெருமை வில்லியம் பிட்டுக்கே உரியதாகும். மிக இக்கட்டான நிலையில் அவர் துணிந்து பதவியேற்றுப் பணி புரிந்தார். அவர் ஆங்கிலேய மக்களின் பெருமையை அவர்களுக்கு நினைப்பூட்டிப் பெரும் லட்சியங்களை அவர்கள் முன் வைத்தார். அரசியலில் கடமை: ஒழுங்கு, கண்ணியம் இவைகளை வற்புறுத்தியதனால் மக்களின் ஒழுக்கநிலை உயர்ந்தது. அவர்களுக்குத் தங்களிடமும் தங்கள் நாட்டினிடமும் ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. அவரது சொந்த வாழ்க்கையே மற்றவர்களுக்கு ஓர் எடுத்துக் காட்டாய் விளங்கியது. அவர் இங்கிலாந்தையும், அதன் அரசியல் நிறுவனங்களையும் உள்ளன்போடு நேசித்தார். அவரது நாட்டுப் பற்று தொத்துநோய்போல் அவரை அண்டியிருந்தவர்களுக் கெல்லாம் பரவியது. அவர் தனி வாழ்க்கையிலும் தூய்மையும் நேர்மையும் கடைப் பிடித்தார். சத்தியசீலர் என்ற பெயரும் புகழும் அவருக்கு ஏற்பட்டது. நியூகாஸில், ஃபாக்ஸ் போன்றவர்கள் ஊழல்களில் மிதந்து கொண்டிருந்தபோது அவர் மட்டும் ஒழுக்கசீலராய் விளங்கியது அவரது பெருமையை மேலும் ஓங்கச் செய்தது. அவர் தம்மை பொதுமக்களின் பிரதிநிதியாகவே கருதினார். அங்ஙனம் எண்ணிக் கொள்வதில் அவர் இறுமாப்புக் கொண்டார். பொதுமக்கள்சபையில் அவருடைய சொற்பொழிவுகளுக்கு நல்ல மதிப்பு இருந்தது. உணர்ச்சி வசப்

பட்டு ஆவேசமாய் அவர் ஆற்றிய உரைகளைப் பாராளுமன்றத்தார் பரவசத்துடன் பருகி இன்புற்றனர். அவர் முன்னமேயே தயாரித்து உரைகளை நிகழ்த்தாமல் அவ்வப்போது உள்ளிருந்து வரும் உணர்ச்சிகளுக்கேற்பவே பேசியதால் அவை, கேட்போரைப் பிணிக்குந் தகையனவாய் விளங்கினவாயினும், தர்க்கரீதியாகவும், பொருள் செறிந்ததாகவும் இல்லை. சொல்வன்மையில் அவருக்கு இணையாவார் எவரும் அவர் காலத்தில் இல்லை. அவருக்கு முன்னும் பின்னும்கூட அவருக்கு ஒப்பாரும் மிக்காரும் இருந்ததில்லை எனப் பொதுவாக நம்பப்படுகிறது. அவருடைய எதிரிகளை அவர் தமது ஒரே பார்வையில் அடக்கிவிடக்கூடிய திறமை பெற்றவர். அவரது பார்வை கழுகுப் பார்வைக்கு ஒப்பிடப்படுகிறது. எதிரிகள் அப் பார்வையின் முன் கருடனைக் கண்ட பாம்புபோல் அடங்கினர். தமது கடல்மடை திறந்தன்ன சொற்பெருக்காலும், நாட்டுப் பற்றாலும், தூயவாழ்வாலும் பொதுமக்கள் சபையின் உள்ளங் கவர்கள்வனாக அவர் விளங்கியதாலேயே அவர் ‘பொதுமக்கள் பெருமகன்’ என்று அழைக்கப்படுகிறார். 1766-ஆம் ஆண்டில் அவர் எர்லாக ஆக்கப்பட்டது அவரது பெருமைக்கு ஓரளவு ஊறு விளைத்தது என்றே கூறலாம்.

உள்நாட்டுக் கொள்கை

அவரது உள்நாட்டுக் கொள்கை ஜனநாயகத் தன்மை வாய்ந்தது. பேச்சுரிமை, எழுத்துரிமை, பிரசுர உரிமை முதலியவைகளை அவர் ஆதரித்தார். பாராளுமன்றம் சீர்திருத்தப்படவேண்டுமென்ற கருத்து அவருக்குண்டு. மூன்றாண்டுகளுக்கொருமுறை பாராளு மன்றம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமெனவும், அரசர் பாராளுமன்ற உறுப்பினருக்கு உத்தியோகம் வழங்கி அவர்களின் ஆதரவைப் பெறுகின்ற தீய பழக்கம் ஒழியவேண்டுமெனவும் அவர் விரும்பினார். அதே சமயம் பாராளுமன்றத்தினர் தமது சிறப்புரிமைகளை அளவுக்கு மீறி வற்புறுத்தியதையும் அவர் கண்டித்தார். அயர்லாந்தின் ஆட்சிமுறையைச் சீர்திருத்தி அதைத் திறம்படச் செய்ய வேண்டுமென்பது அவரது பேரவாவாகும். இந்தியாவின் ஆட்சியிலிருந்து ஊழல்கள் களையப் படவேண்டுமெனவும், அதற்காக வேண்டி இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பை இங்கிலாந்தின் முடியரசே ஏற்க வேண்டுமெனவும் அவர்

கூறிவந்தார். குடியேற்ற நாடுகள் தாய்நாட்டின் குழந்தைகளாகக் கருதப்பட்டு வளர்க்கப்பட வேண்டுமேயன்றி அடிமைகள்போல் கருதப்பட்டு நசுக்கப்படக்கூடாது என்ற கருத்தை அவர் கொண்டவர். இச்சீரிய கொள்கைகளைப் பிட், செயலில் கொண்டுவரத் தயங்கி வாளாவிருந்துவிட்டதே அவரது ஒரு பெருங்குறையாகும்.

வெளிநாட்டுக் கொள்கை

இங்கிலாந்து பெற்றெடுத்த ஏகாதிபத்தியவாதிகளுள் பிட்டும் ஒருவர். பிரான்ஸைத் தோற்கடித்து, அதனுல் பிரிட்டிஷ் பேரரசை வளர்க்க வேண்டுமென்பது அவர் பேராவலாகும். அவர் செய்த போர்களெல்லாம் இந்நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டவைகளேயாம். அமெரிக்கா சுதந்திரம் பெற்றுப் பேரரசினின்றும் பிரிந்து போவதை அவர் சற்றும் ஆதரிக்கவில்லை. அக்கால வழக்கப்படி அவர் போர்பென்களின் ஆட்சியை வெறுத்தார்; அதனுல் ஸ்பெயினையும் பிரான்ஸையும் பிரிட்டனின் எதிரிகளாகக் கருதினுர். பிரான்ஸுக்கு எதிராக அவர் அமைத்த திட்டங்கள் போற்றற்குரியவை.

போர்க்காலச் சேவை

படைகளை நடத்துவதிலும், போர்களை அமைப்பதிலும் அவர் தன்னிகரற்றவர். பிரிட்டன், கடல் வலிமையாலேயே பிரான்ஸை முறியடிக்க முடியுமென்று அவர் நன்கு உணர்ந்தார். எனவே, நிலப்போரை இரண்டாம் படியாகவும், கடற்போரை முதல்தரமாகவும் அவர் கருதினுர். கடற்படை, நிலப்படை இரண்டையும் எங்ஙனம் சேர்த்தால் வெற்றி ஏற்படுமென்ற இரகசியத்தை நன்குணர்ந்தவர். குடியேற்றநாடுகளில் போர் செய்வதன் அவசியத்தை அவர் நன்கு அறிந்தார். ஐரோப்பாவில் போர் நடந்துகொண்டிருப்பதால் பிரான்ஸ் தன் படைகளை அமெரிக்காவுக்கு அனுப்ப முடியாதென அறிந்த அவர், 'நான் அமெரிக்காவை ஐரோப்பாவில் ஜெயிப்பேன்' என்று கூறினுர். கனடாவிலும் இந்தியாவிலும் அவர் தக்க தளபதிகளை நியமித்தார். வுல்ப், கிளைவ் போன்ற தளகர்த்தர்களின் உண்மைத் திறமையை அவர் நன்கு உணர்ந்திருந்தார். கடற்படையை அவர் பெரிதும் பேணி வளர்த்தார். அவரது திட்டங்கள் பரவலானவை. உலகெங்கும் ஒரே சமயத்தில் போர்களை நடத்த அவர் திறம் பெற்றிருந்தார். அவர் ஒப்பற்ற செயல் வீரராகத் திகழ்ந்தார். ஆனுல் அரசாங்கத்துக்கு ஆகும் செலவைப் பற்றி அவர் கிஞ்சித்தும் கவலைப்பட்டதாகத்

தெரியவில்லை. அரசாங்கத்தின் பணத்தை ஓரளவு ஊதாரித்தனமாகவே அவர் செலவிட்டார் என்று கருதலாம்.

குணங்குறைகள்

அவர் விக்குக் கட்சியைச் சேர்ந்தவர்: யாகோபியர்களை வெறுத்த பிராடெஸ்டண்ட் மனிதாபிமானி: எதையும் பகட்டாகச் செய்ய வேண்டுமென்ற ஆசையுடையவர். பாராளுமன்றத்திலும் வெளியிலும் அவர் ஒரு நடிகரைப் போலவே நடையுடை பாவனைகளைக் கொண்டு விளங்கினர். எளிமை என்பது அவரிடம் காணப்படாததொன்று. தம்முடைய திறமையில் அளவுக்கு மீறிய நம்பிக்கையுடையவராதலால் அவர் ஒரு குறிப்பிட்ட கட்சிக்குக் கட்டுப்பட மறுத்தார். விக்குக் கட்சியிலிருந்தாலும் அவர் சுதந்திரமாகவே எண்ணியும் பேசியும் வந்தார். மற்றவர்களின் உணர்ச்சிகளை மதித்து அவர்களையும் இணைத்துக்கொண்டு காரியங்களைச் செய்யும் குணம் அவருக்கில்லை எல்லாம் தாமே செய்ய வேண்டும், அல்லது ஒன்றும் செய்யாமலிருக்க வேண்டும். என்ற கொள்கையுடையவர். மற்றவர்க்கு அடங்கி நடப்பதென்பது அவருக்கு முடியாத காரியம். அவர் பொறுமை சிறிதேனுமில்லாதவர்; விருப்புகளுக்கு எளிதில் வசமாகி விடுபவர். இத்தனை குறைகளிருந்தும் அவரது குணங்கள் அவற்றை மறைத்தன. அவரது அப்பழுக்கற்ற வாழ்க்கையில் கவர்ச்சியுற்ற பொதுமக்களின் புகழை நாடி ஓடவில்லை. தம் மனத்திற்பட்டதை அவர் பயமின்றி எடுத்துரைத்தார். பிங் என்பாரைக் கொல்லவேண்டுமென மக்கள் கூக்குரலிட்டபோது அவர் அதைக் கண்டித்தார். மக்களால் போற்றப்பட்ட வில்க்ஸ், என்பாரை அவர் பழித்தார். இங்ஙனம் புகழை விரும்பாது நாட்டின் நன்மையொன்றையே கருத்திற்கொண்டு ஓயாது உண்மையுடன் உழைத்ததாலேயே இங்கிலாந்தின் வரலாற்றில் அவர் அழியாததோர் இடத்தைப் பெற்றுள்ளார்.

## 1745-ஆம் ஆண்டு யாகோபியர்கள் கலகம்

பெல்ஹாம் மந்திரிசபையின் காலத்தில் யாகோபியர்கள் தமது கடைசி முயற்சியைச் செய்து பார்த்தனர். ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர் நடந்துகொண்டிருக்கும்போதே அவர்களின் கலகம் ஸ்காட்லாந்தில் எழும்பியது பழையபோலியின் மைந்தனை சார்லஸ்எட்வர்டு என்பவரைப் பிரெஞ்சுக்காரர்கள் வேண்டும் என்றே ஒரு படையைத் தந்து இங்கிலாந்துக்குப் போகும்படி தூண்டினார்கள். இங்கிலாந்தின் கவனத்தைச் சிதறடித்து, அதைத் தோற்கடிக்க வேண்டும் என்ற எண்ணத்

தாலேயே அவர்கள் அங்ஙனம் செய்தனர். சார்லஸ் எட்வர்டுக்கு உதவி செய்ய 15 ஆயிரம் வீரர்கள் அடங்கிய படை ஒன்றை டன்கர்க் நகரில் சேகரித்தனர். ஆனால் பிரிட்டிஷ் கடற்படையானது அப்படை ஸ்காட்லாந்துக்குச் செல்லாவண்ணம் தடுத்து விட்டது. எனவே, அப்படையானது ஃப்ளாண்டர்ஸ் (Flanders) போர் முனைக்கு மாற்றப்பட்டது. சார்லஸ் எட்வர்டு அல்லது




இளைய போலி (Young Ptretender) எப்படியும் ஒரு கலகத்தைச் செய்து பார்த்துவிடவேண்டுமென்ற உறுதி பூண்டார். கைக்குக் கிடைத்த துப்பாக்கிகளை எடுத்துக்கொண்டு பிரிட்டிஷ் கப்பல்களை ஏமாற்றி விட்டு, அவர் ஏழே போர்வீரர்களுடன்

ஸ்காட்லாந்துக்குள் மாய்டார்ட் (Moidart) என்னுமிடத்தில் 1745ஆம் ஆண்டு வந்திறங்கினர். வீரமிக்க மலை நாட்டினர்களும் அவரது கட்சியில் சேரச் சற்று தயங்கினர்கள். வீரம் செறிந்த காளையாகிய இளையபோலியைக் கண்ட வேறு சில பிரபுக்கள் வலிய வந்து அவருக்கு ஆதரவு தந்தார்கள். காமரோன் )Cameron(, மாக்டனல்டு (Macdonald), பெர்த்ஷயா (Berth shire) குடும்பத்தினர் அவருக்கு உதவி செய்ய முன் வந்தனர். க்ளென்பின்னன் (Glenfinnan) என்னுமிடத்தில் கலகம் முதலில் தொடங்கியது. கலகத்தை அடக்க சர் ஜான் கோப் (Sir John Cope) என்பவர் இங்கிலாந்தினின்றும் அனுப்பப்பட்டார். அவரது தலைமையின்கீழ் 3000 போர் வீரர்கள் சென்றனர். ஆனல் இளைய போலி அவரை ஏமாற்றிவிட்டு வெகு விரைவில் எடின்பர்க் நகரை அடைந்தார். அவருடன் வந்த மலைநிலத்தார்கள் வீராவேசத்துடன் எடின்பர்க் கோட்டையைத் தாக்கினர். அரசரது படைகளிற் சில கோட்டைக்கருகில் மலைநிலத்துமக்களால் தோற்கடிக்கப்பட்டன. எனினும் கோட்டை பிடிபடவில்லை. தளபதி கோப் கப்பல் வழியாக டன்பார் நகரை வந்தடைந்தார். மலைநாட்டு வீரர்கள் தளபதி கோப்பின் படைகளை பிரஸ்டன்பான்ஸ் (Prestonpans) என்னுமிடத்தில் முறியடித்தனர். கோப்பின் படைகள் பயத்தால் பீடிக்கப்பட்டுச் சிதறுண்டு போனர்கள். இதன்பின் மேலும் வீரர்களையும் பொருளையும் திரட்ட சார்லஸ் எட்வர்ட்டு எடின்பர்க்கிலேயே சிறிது காலம் தங்கினர். பிரஸ்டன்பான்ஸில் ஆங்கிலேயர், தோல்வியுற்றதையும் இளவரசர் எடின்பர்க்கைக் கைப்பற்றி விட்டதையும் அறிந்து, ஆங்கில அரசாங்கம் ப்ளாண்டர்ஸ் தேசத்தில் குவித்துவைக்கப்பட்டிருந்த ஆங்கிலேய வீரர்களை இங்கிலாந்துக்கு வரவழைத்து. இளைய போலியானவர் மாய்டார்ட் என்னுமிடத்திலிருந்து எடின்பர்க் நகரத்துக்கு விரைந்து சென்றதுபோல் இங்கிலாந்தின் தென் பகுதியை நோக்கி மின்னல் வேகத்தில் வந்திருப்பாரேயானல், அவருக்கு வெற்றி எளிதில் கிட்டியிருக்கும். இலண்டன் நகர் அவர் கையில் சிக்கியிருக்கும். ஆனல் அவர் ஐந்து வாரங்களை வீணே கழித்து விட்டார். அதற்குள்ளாக ஐரோப்பாக் கண்டத்திலிருந்து ஆங்கிலப்படைகள் இங்கிலாந்துக்கு வந்துவிட்டன. அதில் நல்ல பயிற்சி பெற்ற வீரர்களும் தளபதிகளும் இருந்தனர், சார்லஸ் எட்வர்டும் ஆறுயிரம் வீரர் கொண்ட ஒரு படையைத் திரட்டிக்கொண்டு தெற்கு நோக்கிப் புறப்பட்டார். விரைவிலேயே அவர் டெர்பி நகரத்தை அடைந்தார். இலண்டனுக்குள் நுழைய இன்னும் சிறிது தூரமே எஞ்சியிருந்தது. இலண்டன் மக்கள் பீதியடைந்தனர். பலர் தாங்கள் பாங்கிகளில் போட்டு

வைத்திருந்த பணத்தை எடுக்கலாயினர். இரண்டாம் ஜார்ஜ், ஹெனேவருக்கு ஓடிவிடச் சித்தமானூர். இந் நிலையில் ஸ்காட்லாந்தியப் பிரபுவான ஜார்ஜ் மர்ரே என்பார், ஆங்கிலேயரின் படைவலி அதிகமாயிருப்பதால் ஸ்காட்லாந்துக்குத் திரும்பி விடுவதே உசிதம் என இளைய போலிக்கு அறுவுறுத்தினர்- அதை ஒப்புக்கொண்டு சார்லஸ் ஸ்காட்லாந்துக்குத் திரும்பினர். வழியில் ஹாலி (Hawley) என்னும் அரசரது தளகர்த்தரை ஃபால்கிர்க் (Falgirk) என்னுமிடத்தில் தோற்கடித்தார் (1746). பின்னர், ஸ்டர்லிங் (Stirling) நகரை முற்றுகையிடுவதில் பல நாட்கள் வீண்காலம் கழித்தார். அதற்குள் கம்பர்லாந்து கோமகன் அவரைப் பின்தொடர ஆரம்பித்தார். கல்லடன்மூர் (Cullodanmure) என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் இளைய போலி தோல்வியடைந்தார். அவரது சார்பில் சண்டையிட வந்த மக்டனல்டு குடும்பத்தினர் போர்க்களத்தில் வாளாவிருந்தனர். காமரூன் குடும்பத்தினர் வலதுசாரியில் போரிடும் கௌரவம் கொடுக்கப்பட்டுத் தங்களது குடும்பத்துக்கு இடதுசாரியில் போரிடமட்டும் இடம் தந்ததை வெறுத்தே மக்டனல்டுகள் அவ்விதம் சமயத்தில் பேசாமலிருந்து விட்டனர். சார்லஸ் தோல்வியுற்றுப் பிரான்ஸுக்கு ஓடிவிட்டார். அவரது தலையைக்கொண்டு வருபவர்களுக்கு 30,000 பவுன் வெகுமதி கிடைக்குமெனப் பறையறைவிக்கப்பட்டது. அவருக்கு உதவி செய்த கம்பர்லாந்து பிரபு கலகம் செய்த மலைநாட்டு வீரர்களை ஈவிரக்கமின்றிக் கொன்று குவித்துக் 'கொலைகாரர்' (Butcher) என்ற பட்டத்தைப் பெற்ருர்.

இங்ஙனம் 1745-ஆம் ஆண்டுக் கலகம் தோல்வியுற்றது. இனிமேலும் கலகத்திலீடுபடலாமென்ற எண்ணத்தை இளைய போலி அறவே விட்டு விட்டார். ஹெனேவரியரின் ஆட்சி நன்கு உறுதியடைந்தது. மலைநாட்டினர் நாகரிகமில்லாத நிலையில் வைத்திருக்கப்பட்டதன் அபாயம் கலகத்தினுல் நன்கு தெரிய வந்தது. அங்குப் பரம்பரையாக அதிகாரம் செலுத்திவந்த தலைவர்கள் ஒழிக்கப்பட்டனர். மலைநிலத்துக் குலத்தினரின் போர்க்கருவிகள் பறித்துக் கொள்ளப்பட்டன. பிற்காலத்தில் வில்லியம் பிட் மலைநாட்டினர்களைச் சேனையில் சேர்த்து அவர்களது சிறந்த சேவையைப் பெற்ருர்.

## பெல்ஹாம் மந்திரிசபையின் உள்நாட்டுச் சீர்திருத்தம்

### பொருளாதாரச் சீர்திருத்தம்

பெல்ஹாம் 1744-ஆம் ஆண்டிலிருந்து 1753-ஆம் ஆண்டு வரை பிரதமமந்திரியாக இருந்தார். அவரும் வால்போலைப்

போலவே திடீர் மாறுதல்களை விரும்பாதவர். எதிர்க் கட்சிக் காரர்களைப் பண்போடு நடத்துவதில் அவர் வால்போலைவிடக் கெட்டிக்காரர். பணத்தைப் பெருக்குவதில் நிபுணர். ஆஸ்திரிய வாரிசுரிமைப் போருக்குப் பின் அவர் நாட்டுக்கடன் (£78,000,000) பளுவைக் குறைக்க விரும்பினார். நாட்டுக் கடனை அவர் குறைக்கவில்லை. அதற்குக் கொடுக்கப்பட்டு வந்த வட்டி வீதத்தை மட்டும் அவர் குறைக்க விரும்பினார். அவர் விருப்பப் படியே வட்டி வீதம் 3½ விழுக்காடாகவும், பின்னர் 3 விழுக்காடாகவும் குறைக்கப்பட்டது.

**காலண்டர் சீர்திருத்தம்**

பெல்ஹாம் காலத்தில் காலண்டரில் ஒரு மகத்தான சீர்திருத்தம் கொண்டு வரப்பட்டது. 1752-ஆம் ஆண்டுத் துவக்கத்திலிருந்து, இங்கிலாந்தில் கிரிகோரியன் காலண்டர் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. 1751-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் அவ்வாண்டு முடிவுபெற வேண்டுமென்பதும், 1752-ஆம் ஆண்டில் ஜனவரியிலிருந்து புதிய காலண்டர் ஆரம்பிக்க வேண்டுமெனவும் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. அதற்கு முன்பு, இங்கிலாந்தில் ஜூலியன் காலண்டரே இருந்து வந்தது. அதன்படி ஒவ்வோராண்டும் மார்ச்சு மாதம் 25-ஆம் தேதியன்று தொடங்கியது. மேலும் அக்காலண்டர் சற்றே தவறானது என வான சாஸ்திர ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்தனர். கிரிகொரி என்ற போப்பாண்டவர் திருத்தப்பட்ட புதிய காலண்டரைக் கொணர்ந்தார். அதுவே இங்கிலாந்தின் காலண்டராக 1752-ஆம் ஆண்டிலிருந்து இன்றுவரை விளங்கி வருகிறது.

## ஹார்டுவிக் மணவினைச் சட்டம் (Hardwick's Marriage Act)

இளைஞர்களிடையே பொறுப்பற்ற முறையில் நிகழும் காதல் திருமணங்களைத் தடுக்க பெல்ஹாம் மந்திரிசபை 1753-ஆம் ஆண்டு ஒரு சட்டம் கொணர்ந்தது. அது ஹார்டுவிக் மணவினைச் சட்டம் எனப் பெயர்பெறும். அதன்படி ஒவ்வொரு திருமணமும் அது நிறைவேறுவதற்கு மூன்று வாரங்களுக்கு முன்பிருந்தே திருச்சபையில் வாராவாரம் அறிவிக்கப்பெற வேண்டும். பின்னர், குறிப்பிட்ட நாளில் திருமணமானது காலை ஆறு மணியிலிருந்து மதியம் பன்னிரண்டு மணிவரை நடைபெற வேண்டும். இச் சட்டத்தால் பெற்றோரும் பாதுகாப்பாளரும் அறியாமல் பணக்காரப் பெண்மணிகளை வாலிபர்கள் அபகரித்துச் சென்று, இரகசியமாகத் திருமணம் செய்து கொள்வது தடுக்கப்

பட்டது. சட்டபூர்வமான திருமணங்களுக்கு ஆர்ச் பிஷப்பின் அனுமதியைப் பெற்றுகவேண்டும் என்றும் அச்சட்டம் கூறியது. பெல்ஹாம் காலத்தில் பிரிட்டிஷ் கண்காட்சிசாலையை அவர் (Museum) தோற்றுவித்தார். இலண்டன் போலீஸ் படையும் அவர் காலத்தில்தான் தோன்றியது. மற்றெரு சட்டமானது உடலைக்கெடுக்கும் ஜின் என்ற போதைப் பொருளை அருந்தும் வழக்கத்தைத் தடுத்தது. தொழிலாளிகள் தங்கள் கூலிகளை உயர்த்திக்கொள்ளச் சங்கங்கள் அமைப்பதை இன்னெரு சட்டம் தடை செய்தது. நியூஇங்கிலாந்து தாய்நாட்டோடு கைத்தொழி வில் போட்டி போடுவதை மற்றுமொரு சட்டம் தடுத்தது. 1753-இல் யூதர்களுக்குக் குடியுரிமை வழங்க ஒரு சட்டம் கொண ரப்பட்டது. ஆனுல் பொதுமக்கள் அதை வன்மையாக எதிர்த்த தால் அது கைவிடப்பட்டது. அரசியலிலும், கட்சியிலும் கொள்கைகளே ஒன்றும் இல்லாததுபோன்று தென்பட்டது.

## விக்குக் கட்சியின் வீழ்ச்சி

1754-ஆம் ஆண்டு பெல்ஹாம் இறந்துவிட்டார். அதன் பின் அவரது சகோதரரான நியூகாஸில் பிரபு மந்திரியானுர். அவர் ஹென்றி பெல்ஹாமைப் போன்று அவ்வளவு அறிவும் ஆற்றலும் பெற்றிருக்கவில்லை. பொதுமக்கள் சபையினரின் ஆதரவைப்பெற்று அதைக் கட்டுப்படுத்தக் கூடிய திறம் அவருக் கில்லை. ஸர் தாமஸ் ராபின்ஸன் (Sir Thomas Robinson) என்ப வரை அவர் தமது சகாவாகச் சேர்த்துக் கொண்டார். ஆனுல் சில நாளைக்குள்ளாகவே அவரை விலக்கிவிட்டார். ஹென்றி ஃபாக்ஸ் (Henery Fox) பொதுமக்கள் சபையின் தலைவரானுர். அவர் நல்ல நாவன்மையுடையவர். சிறந்த முறையில் கட்சி நிர்வாகம் செய்யத் தெரிந்தவர். ஆனுல் சுயநலமும், லஞ்ச ஊழ லும் அவர்பால் மிக அதிகமாகக் காணப்பட்டன. இதையெல் லாம் பிட் என்னும் பொதுமக்கள் சபை உறுப்பினர் வன்மை யாகத் தாக்கினுர். அதனுல் அவரது பதவி பறிபோயிற்று. ஏழாண் டுப் போர் ஆரம்பித்தபோது நியூகாஸிலின் திறமையின்மை நன்கு வெளிப்பட்டது. 1756-ஆம் ஆண்டு அவர் பதவியைவிட்டு விலகிக் கொண்டார். டெவன்ஷயர் கோமகன் (Duke of Devonshire) தலைமையில் மந்திரிசபை அமைந்தது. பிட் என்பாரும் அதில் பதவி யைப் பெற்றுர். நியூகாஸில் பாராளுமன்றத்தில் மிகுந்த செல் வாக்குடையவராயிருந்தார். அதனுல் மந்திரிகள் கோரிய மானி யங்களைப் பாராளுமன்றம் கொடாவண்ணம் அவர் தடைசெய்து வந்தார். தாமும் அதிகாரத்தைச் செலுத்தாது மற்றவர்களையும் அதைச் செலுத்தவிடாது அவர் முட்டுக்கட்டை போட்டுவந்தார்.

கடைசியாகப் பிட்டும் நியூகாஸிலும் ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டனர். அதன்படி மீண்டும் நியூகாஸில் பிரதம மந்திரியானார். பிட் உள்நாட்டு அமைச்சரானார். பிட் ஏழாண்டுப் போரை வெற்றிகரமாகச் சமாளிப்பதில் ஓயாது பாடுபட்டார். நியூகாஸில் அரசாங்கம் பொதுமக்கள் சபையின் நம்பிக்கையை இழக்காமல் பார்த்துக் கொண்டார். 'நியூகாஸில் வேண்டியதை எல்லாம் கொடுத்தார். பிட் வேண்டியதை எல்லாம் செய்தார்' என்று இக்கால அரசாட்சியைச் சிலர் விவரிப்பர். இந்தக் கூட்டு முயற்சியால் போரில் நல்ல வெற்றி கிட்டியது. ஆனால், போர் முடியுந்தறுவாயில் ஸ்பெயின், இங்கிலாந்துக்கு விரோதமாகப் பிரான்ஸுடன் சேர்ந்துகொண்டு அதனுடன் ஓர் ஒப்பந்தத்தைச் செய்துகொண்டது. பிட் உடனே ஸ்பெயின் மீது போர் தொடுக்க வேண்டுமென்றார். பாராளுமன்றம் அவரது கொள்கையைக் கண்டித்தது. எனவே, அவர் பிரதம மந்திரி பதவியிலிருந்து விலகிக் கொண்டார். 1762-இல் நியூகாஸில் பிரபுவும் பதவியை ராஜினாமா செய்தார். மூன்றாம் ஜார்ஜ் பட்டத்துக்கு வந்தவுடன் விக் கட்சியினரின் ஆட்சிக்கு அவர் ஒரு முற்றுப்புள்ளி வைத்தார். டோரிகள் மீண்டும் பதவிக்கு வந்தார்கள்,

# 6. மூன்றும் ஜார்ஜின் தனியாட்சி

**குணதிசயங்கள் - நோக்கங்கள்**

தனியாட்சி செலுத்தக் கையாண்ட முறைகள்: டோரிக் கட்சி—அரசாது நண்பர்கள் கட்சி ஆதரவைப் பெறல்...விக்குக் கட்சியின் பிளவுகளைப் பயன்படுத்திக் கொளல்...அன்றாட ஆட்சி முறையில் தலையீடு—ஒத்து வராத மந்திரி சபைகளைக் கலைத்தல்—பணிவுமிக்க நார்த் பிரபு மந்திரிசபை.

## வில்க்ஸ் என்பாரைப் பற்றிய நிகழ்ச்சிகள்---

## பொதுவாரண்டுகள்: (General Warrants)

## மூன்றும் ஜார்ஜின் தனியாட்சி

**குணதிசயங்கள் — நோக்கங்கள்**

மூன்றும் ஜார்ஜ் 1760-ஆம்ஆண்டு இங்கிலாந்தின் மன்னரனெ முடிசூட்டிக் கொண்டார். முதல் இரண்டு ஜார்ஜுகளையும்விட அவர் பலவகையிலும் மேம்பட்டவராகக் காணப்பட்டார். அவ்விரண்டு ஜார்ஜுகளும் பெயரளவிற்கு இங்கிலாந்தின் மன்னர்களாய் இருந்தனரேயன்றி உண்மையில் அவர்களது எண்ணமெல்லாம் ஹெனேவர் நாட்டின்மீதுதான் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. ஆனல், மூன்றும் ஜார்ஜ் இங்கிலாந்திலேயே பிறந்தவர். ஹெனேவர் நாட்டுக்கு அவர் ஒரு முறைகூடச் சென்றதில்லை. தமது பாட்டனரைப் போலன்றி அவர் நன்கு ஆங்கிலம் பேசவல்லவர்; ஆங்கில மொழியிலேயே கல்வி பயின்றவர். இங்கிலாந்தின் மீது அவருக்கு உண்மையிலேயே நல்ல பற்று இருந்தது. தமது முன்னேர்களைப் போலன்றி, அவர் தனி வாழ்க்கையில் தூய்மையும், ஒழுக்கமும் மதப்பற்றும் நிறைந்தவர் ஆங்கிலேயரைப் போலவே அவரும் நல்ல உழைப்பும், உண்மையும், பிடிவாதமும், குறைந்த கற்பனைத்திறனும்

உடையவராயிருந்தார். அதனால் ஆங்கிலேயர், அவரை நேசித்தனர்.

வெறும் பெயரளவில் மட்டும் அரசர்களாயிருந்த முதல் இரண்டு ஜார்ஜுகளைப் போலன்றி உண்மையிலேயே இங்கிலாந்தின் மன்னராயிருக்கவும், மன்னருக்குரிய அதிகாரங்களைச் செலுத்தவும் அவர் விரும்பினார். அவரது அவ்விருப்பத்திற்கு முக்கிய காரணம் அவரது தாயாரேயாவார். அவள் குறுகிய புத்தியும் பிடிவாதமும் கொண்டவள். பாலிங் ப்ரோக் என்பார் எழுதிய 'தேசபக்த அரசர்' (Patriot King) என்ற நூலில் விவரிக்கப்பட்டிருந்த, கட்சிக்குக் கட்டுப்படா வல்லரசனாகத் தனது மைந்தன் விளங்க வேண்டுமென்பது அவளது ஆசை. அதற்கேற்ப அவள் அடிக்கடி தனது மகனின் காதுகளில் 'ஜார்ஜ்! நீ மன்னனாயிரு'[1] என்ற மந்திரத்தை ஓதி வந்தாள். அந்த எண்ணம் இளவயதினரான மூன்றும் ஜார்ஜின் மனதில் பசுமரத்து ஆணிபோல் பதிந்தது. சமயம் வந்தவுடன் அவர் தமது எண்ணத்தைச் செயலாக்க முனைந்தார். ஜார்ஜ், ஐரோப்பாவில் அப்போது புகழுடன் ஆண்ட வல்லரசர்களான ஆஸ்திரியா அரசர் இரண்டாம் ஜோசப், பிரஷ்ய அரசரான மகாபிரடரிக் முதலியவர்களைப் போன்று உண்மையான அதிகாரம் செலுத்த ஆசைகொண்டார்.

## தனியாட்சி செலுத்தக் கையாண்ட முறைகள்

### டோரிக் கட்சி—அரசரது நண்பர்கள் கட்சி ஆதரவைப் பெறல்

ஜார்ஜ் தமது ஆசையை நிறைவேற்றிக்கொள்ள அதற்குத் தடையாக நின்ற விக்குகளின் செல்வாக்கை முதலில் ஒழிக்க விரும்பினார். அவருக்கு உதவிசெய்ய டோரிகள் முன் வந்தார்கள். டோரிக் கட்சியினர் பாலிங்ப்ரோக் பிரபுவின் தலைமையில் முற்றிலும் புதியவர்களாக மாறிவிட்டார்கள். பாலிங்ப்ரோக், ஆரம்பத்தில் ஸ்டுவர்டுகளை ஆதரித்துப் பார்த்துப் பின்னர் ஏமாந்தவர். பல நாள் பிரான்ஸில் இருந்துவிட்டுப் 'பழைய போலியால்' கைவிடப்பட்டபின், விக்குகளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு திரும்பியவர். அவர் ஓயாது பத்திரிகைகளில் எழுதி டோரிக் கட்சியைப் புதிய முறையில் சீர்திருத்தி அமைக்க முயன்றார். ஸ்டுவர்ட்டுகள் மீது கொண்டிருந்த விசுவாசத்தை, ஹனோவரியர்கள்பால் திருப்பும்படி அவர் அவர்களை வேண்டிக்கொண்டார். டோரிகள் பரம்பரையாகவரும் அரசர்களை ஆதரிக்கும் கொள்கையுடவர்கள். மூன்றும் ஜார்ஜின் பாட்டனாரும், முப்பாட்டனாரும் இங்கிலாந்தின் மன்னர்களாயிருந்திருப்பதால் அவருக்கும் மன்னவராவதற்குரிய பாரம்பரிய உரிமை இருக்கிறதென்பதை

1. George be King

டோரிகள் ஒப்புக் கொண்டனர். முன்பு ஸ்டூவர்வடுகளை ஆதரித்ததுபோல் அவர்கள் இப்போது ஜார்ஜை ஆதரிக்கலாயினர். டோரிகளின் உதவியைக் கொண்டு மட்டும் விக்குகளின் செல்வாக்கைப் பாராளுமன்றத்தினின்றும் நீக்கிவிட முடியாதென்பது ஜார்ஜுக்குத் தெரியும். எனவே, அவர் பாராளுமன்றத்தில் தமக்கென ஒரு கட்சியை ஏற்படுத்திக் கொண்டார். 'முள்ளை முள்ளால் எடு' என்ற பழமொழிக்கேற்ப அவர் விக்குகளை, அவர்கள் கடைப்பிடித்த அதே கொள்கையைக் கையாண்டு தோற்கடித்தார். பணமும் பட்டமும் அளித்து விக்குகள் பாராளுமன்றத்தின் ஆதரவைப் போன்று அவரும் பதவிகளையும் பட்டங்களையும் தாராளமாகப் பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு வழங்க ஆரம்பித்தார். இறைச்சித் துண்டை எறிந்தால் ஓடிவரும் நாய்கள் போல, பாராளுமன்ற உறுப்பினர்கள் பலர் ஜார்ஜிடம் பதவிகளையும், பணவுதவிகளையும் பெற்றுக் கொண்டு அவரை ஆதரிக்கலாயினர். அவர்கள் 'அரசரின் நண்பர்கள்' (King's Friends) என அழைக்கப்பட்டனர். அரசரின் நண்பர்களும், டோரிகளும் சேர்ந்தபோது அவர்கள் பாராளுமன்றத்தில் பெரும்பான்மையினராகி விட்டனர். எனவே மன்னருக்குப் பிடிக்காத மந்திரிகளைப் பதவியினின்று நீக்குவதிலும், அவருக்கு வேண்டியவர்களை மந்திரிகளாக நியமிப்பதிலும் அவர்கள் ஜார்ஜுக்கு உறுதுணையாய் அமைந்தனர்.

**விக்குக் கட்சியின் பிளவுகளைப் பயன்படுத்திக் கொள்ளல**

மேலும் விக்குக் கட்சியும் ஜார்ஜின் காலத்தில் ஒற்றுமையின்றிப் பல பிரிவுகளாகப் பிரிந்து விட்டது. நியூகாஸில் பிரபுவும், அவரைச் சார்ந்த உயர்வகுப்பினரும் ஒரு பிரிவாகப் பிரிந்தனர். பிட்டும், அவரது நண்பர்களும் ஜனநாயகவாதிகளாகத் தனியே நின்றனர். பெட்போர்டு (Bedford) என்பாரும் க்ரென்வில் (Grenville) என்பாரும் தனித்தனியே தம் நண்பர்களுடன் பிரிந்து நின்றனர். 'ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்கும் கொண்டாட்டம்' என்ற பழமொழிப்படி விக்குகளின் ஒற்றுமையின்மை ஜார்ஜின் அதிகார ஆசை நிறைவேறுவதற்கு வசதியாயிருந்தது. விக்குகளில் ஒரு கூட்டத்தினரை இன்னொரு பிரிவின்மீது ஏவிவிட்டு அவர் வேடிக்கை பார்த்ததோடு தம் காரியத்தையும் சாதித்துக் கொண்டார்.

மூன்றும் ஜார்ஜிடம் சில கெட்ட குணங்கள் இருந்தன. பொதுக்காரியங்களைப் பற்றி பிட் போன்றவர்கள் பேசியதை எல்லாம் அவர் தம்மையே குறிப்பதாக எடுத்துக் கொண்டார்.

அதனால் அவர், பிட் இறந்தபோது அவருக்கு இராஜரீதியான சவஊர்வலம் அளிக்க மறுத்தார். அவர் பிடிவாதமுள்ளவர். எடுத்த முடிவு தவறாயிருந்தாலும் மாற்றிக்கொள்ள அவர் ஒருப்படார். இந்தப் பிடிவாதமே அவர் அமெரிக்கச் சுதந்தரப் போரில் தோல்வியுறுவதற்கு முக்கிய காரணமாகும். பலஹீன மும் எளிதில் கோபமடையக்கூடிய தன்மையும் அவர்பால் காணப்பட்ட வேறு சில குறைகளாகும்.

அவர் தனியாட்சி செய்ய நினைத்தபோது, ஸ்டுவர்ட்டுகளைப் போல் அடக்குமுறை ஆட்சி செலுத்த வேண்டுமென்று விரும்பவில்லை. ஆனால் மூன்றும் வில்லியத்தைப் போன்று வரம்புக்குட்பட்ட முடியாட்சியையே அவர் செலுத்த விரும்பினார். பாலிங்ப்ரோக் எழுதிய நூலில் கண்டபடி அவர் கட்சிகளின் ஆதிக்கத்தை நாட்டில் ஒழித்துவிட வேண்டுமென விரும்பினார். மந்திரிகள், கட்சிகளின் கைப்பாவைகளாக இருக்கக் கூடாதென் பதும் மன்னரின் கையாட்களாக இருக்க வேண்டுமென்பதும் அவரது விருப்பம். நல்லவேளையாக அவரது எண்ணம் கடைசியில் ஈடேறவில்லை. அவர் தமது நோக்கத்தில் வெற்றி பெற்றிருப்பாரே யாகில் பிரிட்டனில் கட்சியாட்சியும் காபினெட் ஆட்சிமுறையும் புதையுண்டு இருக்குமிடந்தெரியாமல் அழிந்து போயிருக்கும்.

### அன்றாட ஆட்சிமுறையில் தலையீடு

ஜார்ஜ் தம் நோக்கத்தை நிறைவேற்றவேண்டி அரசியலில் பெரிதும் தலையிடலானார். 'அரசரது பேருரை' (King's Speech) எனப்படும் பிரதம மந்திரியின் சட்டசபைத் தொடக்க உரையில் அவர் தம் பிரியம்போல் மாறுதல்களைச் செய்தார். பாராளுமன்ற உறுப்பினர் தேர்தலின்போது அவர் தம் பணத்தையும் செல்வாக் கையும் பயன்படுத்தித் தமக்கு வேண்டியவர்களே தேர்ந்தெடுக்கப் பட முயற்சி செய்தார். அவ்வப்போது அவர் பயமுறுத்தியும் தம் விருப்பங்களை நிறைவேற்றிக் கொண்டார். தம் சொற்படி கேளாதவர்களின் பதவிகளை அவர் பறித்துக் கொண்டார். தளகர்த்தர் கான்வே (Conway) என்பவர் அரசருக்கு எதிராகப் பாராளுமன்றத்தில் வாக்களித்தார் என்பதற்காகத் தம் பதவியை இழக்கவேண்டியதாயிற்று. மன்னரது விருப்பங்கள் யாவை என்பதை வாக்கெடுப்புக்கு முன்பேயே அறிவித்துவிட்டு, அதற் கேற்ப வாக்களிக்காதவர்களை எல்லாம் பின்னால் அவர் தண்டித்தார்.

### ஒத்துவராத மந்திரிசபைகளைக் கலைத்தல்

தம் சொற்படி ஆடுகின்ற ஒரு மந்திரிசபை கிடைக்கும் வரை அவர் பல மந்திரிசபைகளை ஒன்றன்பின் ஒன்றாகக் கூட்டிக்கலைத்து

வந்தார். அவர் பட்டத்துக்கு வந்தபோது, பிட் நியூகாஸில் மந்திரிசபை பதவியிலிருந்தது. அவ்விருவரையும் கூடக் கேளாமல் ஜார்ஜ் அம்மந்திரிசபையில் தமது ஆசிரியரான பூட் (Bute) என்பவரை நியமித்தார். பூட், மன்னரது நோக்கத்தை நிறைவேற்ற அமைதியை விரும்பினார். அதற்கு எதிராகப் பிட் இருந்ததால் அவர் மந்திரிசபையில் ஒற்றுமையின்மையை வளர்த்தார். ஸ்பெயின்மீது போர் தொடுப்பது பற்றிய விவாதத்தில் பிட் ராஜிநாமாச் செய்தார். அவருக்குப்பின் நியூகாஸிலுக்கும் அரசர் பல தொல்லைகளைக் கொடுத்ததால் 1762-இல் அவரும் ராஜிநாமாச் செய்தார். பின்னர், பூட் தலைமையில் கூடிய மந்திரிசபை, பாரிஸ் சமாதானத்தால் ஏழாண்டுப் போரை முடித்தது. இவ்வுடன்படிக்கையைப் பாராளுமன்றம் ஒப்புக் கொண்டபோது, 'இப்போதுதான் என் மகன் உண்மையான அரசன்' என அவரது தாய் கூறினாளாம். இதன்பின் பூட் தம் செல்வாக்கை இழந்தார். அவர் ஒரு ஸ்காட்லாந்தியர் என்பதால் அவரை ஆங்கிலேயர் வெறுத்தனர். இளவரசியை அமர் காதலிக்கிறாரென்று பொய் வதந்தி இலண்டனில் பரவியது. அவருக்கு எதிராகப் பலர் இலண்டன் நகரில் கூச்சல் போட்டனர். எனவே பூட் 1763-ஆம் ஆண்டில் தம் பதவியை ராஜிநாமாச் செய்தார். அதன்பின் கிரென்வில் என்பவரால் மந்திரி சபை அமைக்கப்பட்டது. ஆனால் அவர் ஜார்ஜுக்கு அவரது கடமையைப் பற்றி அறிவுரை கூறியதால் அவரது மந்திரிசபையும் கலைக்கப்பட்டது. கிரென்வில் காலத்தில்தான் முத்திரைக் காகிதச் சட்டம் (Stamp Act) ஏற்பட்டது. வில்க்ஸ் என்பாரைப் பற்றிய வழக்குகளும் இக்காலத்தில்தான் தோன்றின. கிரென்வில்லுக்குப்பின் ஜார்ஜ், ராக்கிங்ஹாம் (Rockhingham) என்ற செல்வாக்கு மிக்க பிரபுவைக் கொண்டு மந்திரிசபையை அமைத்தார். அவர் உயர்ந்த கொள்கையுடையவர். பத்திர முத்திரைச் சட்டத்தையும், வில்க்ஸ் மேலிருந்த வழக்குகளையும் அவர் ரத்து செய்தார். இஃது அரசருக்குப் பிடிக்கவில்லை. எனவே அவர் தம் நண்பர்களைக் கொண்டு அவரையும் பதவியைவிட்டு ஓட்டிவிட்டார். அதன்பின் அவர் மூத்த பிட்டினை மந்திரிசபை அமைக்குமாறு வேண்டிக் கொண்டதன்பேரில் அவரும் கட்சிச் சார்பற்ற ஓர் அமைச்சரவையை ஏற்படுத்தினார். நோய் காரணமாகப் பிட் அரசியல் விவகாரங்களில் அதிகம் கலந்து கொள்ள முடியவில்லை. அவருக்குப் பிடிக்காத பல காரியங்கள் அவர் பெயரால் செய்யப்பட்டன. எனவே 1768-ஆம் ஆண்டில் அவர் ராஜிநாமாச் செய்தார். அவருக்குப்பின் அவரது மாணுக்கரான கிராப்டன் கோமகன் (Duke of Graften) தலைமை அமைச்சரானார். அவர் அரசியல் விஷயங்களைவிடக் குதிரைப் பந்தயத்திலேயே அதிக

ஊக்கம் காட்டியதால் அவரை எதிர்த்து, 'மார்னிங் அட்வைஸர்' (Morning Advisor) என்ற பத்திரிகையில் 'ஜுனியஸ்' (Junius) என்ற கையொப்பமிட்ட கண்டனக் கடிதங்கள் பல வெளிவந்தன 1770-ஆம் ஆண்டில் கிராப்டனும் ராஜிநாமாச் செய்தார்.

### பணிவுமிக்க நார்த் மந்திரி சபை

இதன் பின்னரே ஜார்ஜின் எண்ணம் முற்றிலும் கைகூடியது. நார்த் பிரபு என்ற டோரித் தலைவர் தலைமை அமைச்சரானார். அவர் அரசர் ஆட்டியபடி எல்லாம் ஆடினார். உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கைகள் எல்லாம் மன்னராலேயே வகுக்கப்பட்டன. நீதி, சிவில், இராணுவம், சமயம் ஆகிய எல்லாத் துறைகளிலும் பதவி வழங்கும் அதிகாரத்தை ஜார்ஜ் தம் கைகளிலேயே வைத்துக் கொண்டார். நார்த் பிரபு அமைதியையே விரும்புபவரெனினும் ஜார்ஜின் விருப்பத்திற்கேற்ப அமெரிக்கச் சுதந்திரப் போரில் ஈடுபட்டார். மன்னரது செல்வாக்கு அதிகமாவதைப் பொதுமக்கள் சபை கண்டித்தது. 1780-ஆம் ஆண்டில் டன்னிங் (Dunning) என்பவரால் அச்சபையில் கொண்டுவரப்பட்ட தீர்மானமானது, 'அரசரின் செல்வாக்கு அதிகரித்துவிட்டது; இனியும் அதிகரித்துக் கொண்டே போகிறது; அதைக்குறைக்க வேண்டுவதவசியம்' என்று கூறியது. 1782-ஆம் ஆண்டில் பர்க் (Burke) என்பார் கொண்டுவந்த 'பதவிச் சட்டமும்' (Place Act) மன்னரின் ஊழல்களைப் பெருமளவுக்குப் குறைத்தது. பதவியிலிருந்த பலருக்கு வாக்குரிமை இச்சட்டத்தால் மறுக்கப்பட்டது. 1782-ஆம் ஆண்டில் ராக்கிங்ஹாம் கொண்டுவந்த 'சிவில் பட்டியல் சட்டமும்' (Civil List Act) பாராளுமன்ற உறுப்பினர்கள். தபால் துறை, வருமானத் துறைகளில் வேலை செய்வதையும், அப்படி வேலை செய்பவர்கள் வாக்குகளைக் கையாள்வதையும் தடுத்தது. இரகசியமாக உதவிப்பணம் கொடுக்கும் முறையையும் அச்சட்டம் நிறுத்தியது. 1782-ஆம் ஆண்டு நார்த்பிரபு திடீரென ஜார்ஜிடம்கூடச் சொல்லிக் கொள்ளாமல் ராஜிநாமாச் செய்தார். எனவே, விக்குக் கட்சியினர் மீண்டும் தலையெடுத்தனர். ஷெல்பர்ன் பிரபுவின் தலைமையில் இன்னொரு அமைச்சரவை ஏற்பட்டது. அதன்பின் இளைய பிட் பிரதமராக்கப்பட்டார். அரசரும் சித்தப்பிரமையுற்று வருந்தியதால் அவர் தமது அதிகாரங்களையெல்லாம் பிரதம மந்திரியான இளைய பிட்டிடமே ஒப்படைத்தார். இளைய பிட் அரசரைவிட மனவுறுதி கொண்டவராயிருந்தார். எனவே அரசர் அவரைத் தம் பிரியம்போல் ஆட்டிப் படைக்க முடியவில்லை. அரசரின் தனியாட்சி ஒழிந்தது.

## வில்க்ஸ் என்பாரைப் பற்றிய நிகழ்ச்சிகள்

'வில்க்ஸ்' என்பார் மூன்றும் ஜார்ஜின் காலத்தில் மக்களின் கவனத்தைப் பெரிதும் ஈர்த்த ஒரு விசித்திரப் பேர்வழி, அவர் ஒரு நல்ல ஆவேசப் பேச்சாளர். ஆனால் ஒழுக்கமென்பது மருந்துக்கும் அவரிடம் கிடையாது. பார்வைக்கு மிகவும் விகார மான தோற்றமுடையவர். ஆனால், மிகவும் கெட்டிக்காரர். பூட் என்பவரின் எதிரியான அவர் மக்களின் உரிமைகளுக்காகப் போராடிய வீரர்போல் தம்மைக் காட்டிக் கொண்டார். பூட்டின் ஆதரவாளர் ஸ்மோலெட் (Smollet) என்பவரால் நடத்தப் பெற்ற 'தி பிரிட்டன்' (The Briton) பத்திரிகைக்கு எதிராக 'நார்த் பிரிட்டன்' (North Briton) என்ற பத்திரிகையை வில்க்ஸ் ஆரம்பித்தார். அவர் அதில் எழுதியவற்றுக்காகவும். வேறு சில காரியங்களுக்காகவும், பல முக்கிய அரசியலமைப்புப் பிரச்சினை களில் அவரது பெயர் அடிபட்டது.

நார்த் பிரிட்டன் பத்திரிகை 45-ஆவது இதழில் வில்க்ஸ், 'அரசரது பேருரை' என்ற சட்டசபைத்தொடக்க உரையைத் தாக்கி எழுதினர். பாரிஸ் உடன்படிக்கையைப் பற்றி அதில் சொல்லப்பட்டவை தவறு என அவர் எடுத்து எழுதினர். அரசர் அதை அறிந்ததும், அப்பத்திரிகையானது தனிப்பட்ட முறையில் தம்மைத் தாக்கியிருப்பதாகவும் அதனல் தமக்குப் பெருத்ததோர் அவமானம் ஏற்பட்டு விட்டதாகவும் நினைத்தார். எனவே, அப்பத்திரிகையாசிரியர்மீது வழக்குத் தொடரும்படி அவர் உத்தரவிட்டார். அப்போது உள்நாட்டு அமைச்சராக (Secretary of State) இருந்த ஹாலிபாக்ஸ் பிரபு (Lord Halifax) உடனே ஒரு பொதுவாரண்டைப் (General warrant) பிறப்பித்து, அதன் மூலம் வில்க்ஸ் உட்பட 49 பேர்களைச் சிறை செய்து விசாரணைக்குக் கொணர்ந்தார். பொதுவாரண்ட் என்பது தனிப்பட்ட எந்த நபரையும் குறிப்பிடாமல் பொதுவாக ஒரு குறிப்பிட்ட ஒரு காரியத்தில் சம்பந்தப்பட்ட அனைவரையும் கைது செய்யும்படியும் அவர்கள் வீட்டைச் சோதனை போடும் படியும் பிறப்பிக்கப்படும் உத்தரவாகும். இங்ஙனம் ஓர் அதிகாரிக்கு உத்தரவிட உள்நாட்டு அமைச்சருக்கு உரிமை உண்டு. இதன்படிதான் ஹாலிபாக்ஸ் பிரபு தம் உதவிச் செயலாளரான வுட் என்பாருக்கு மேற்படி உத்தரவைப் போட்டார். ஒரு காலத்தில் நாட்டில் கலவரங்கள் மலிந்திருந்த போது அவைகளை ஒடுக்கவேண்டி, உள்நாட்டு அமைச்சருக்கு மேற்கண்ட தனிச் சிறப்புரிமையானது வழங்கப்பட்டது. ஆனல் அமைதிக்காலத்திலும் அதுமேலும் நீடிக்க வேண்டுமா

என்பது உரிமைவாதிகளின் கேள்வியாயிருந்தது. வில்க்ஸ் என்பவர் நீதி மன்றத்தில் விசாரிக்கப்பட்டபோது மேற்படிக் கேள்வியானது நன்கு ஆராயப்பட்டது. தாம் பாராளுமன்ற உறுப்பினராதலால், பாராளுமன்றச் சிறப்புரிமையின்படி தம்மைச் சிறை செய்ய யாருக்கும் உரிமையில்லை எனக் கூறி வில்க்ஸ் சிறையினின்றும் விடுதலை பெற்றார். பின்னர் நடைபெற்ற விசாரணையில் தலைமை நீதிபதி பிராட் (Pratt) என்பவர், 'பொது வாரண்ட்' பிறப்பிக்கப்படுவது சட்ட விரோதமென அறிவித்ததோடு, சட்டத்துக்கு விரோதமாகச் சிறையிட்டதற்காக வில்க்ஸுக்கு ஆயிரம் பவுன் நஷ்டஈடு செலுத்தும்படி ஹாலிபாக்ஸ் பிரபுவுக்கும், அவரது வீட்டைச் சட்ட விரோதமாகச் சோதனையிட்டதற்காக ஆயிரம் பவுன் நஷ்டஈடு செலுத்தும்படி, உதவி மந்திரியான (Under Secretary) (Wood) என்பவருக்கும் கட்டளை பிறப்பித்தார்.

தலைமை அமைச்சரான கிரென்வில் (Grenville) நீதி மன்றங்களில் தமக்கு ஆதரவில்லை என்பதை அறிந்து கொண்டு பொது மக்கள் சபையின் உதவியை நாடினார். வில்க்ஸின் வழக்கு, பொது மக்கள் சபைமுன் கொண்டுவரப்பட்டது(*1763*). அச்சபையானது வழக்கைத் தீர ஆராய்ந்தபின் 'நார்த் பிரிட்டன்' பத்திரிகையின் 45-ஆவது இதழானது பொய்யும் அவதூறும் நிறைந்ததொன்றெனவும், அதை வெளியிட்ட ஆசிரியர் பாராளுமன்ற உறுப்பினரேயெனினும், அவருக்கு அம்மன்றத்துக்குரிய சிறப்புரிமைகளைப் பெறத் தகுதியில்லை எனவும் அறிவித்தது.

வில்க்ஸ் 'பெண்ணைப் பற்றிய கட்டுரை' (Essay on Women) என்ற ஒரு கிண்டல் நிறைந்த நூலை எழுதி அதைத் தனிப்பட்ட முறையில் அச்சடித்தார். ஆனால், அதை அவர் வெளியிடவில்லை. அந்நூலின் பிற்குறிப்புகளில் பிஷப்வாபர்டன் என்பவரது பெயர் போடப்பட்டிருந்தது. பிஷப்வாபர்டன் தமது நெருங்கிய நண்பரான சாண்ட்விச் பிரபுவை (Lord Sandwich) விளித்துச் சொல்வதைப்போல் அக்கட்டுரை ஆரம்பித்தது. பிரபுக்கள் சபையைச் சேர்ந்த இருவரைப் பழித்துக் கூறியதால் அக்கட்டுரை ஓர் அவதூறு இலக்கியம் (Libel) எனவும், அதனால் பிரபுக்கள் சபையின் சிறப்புரிமைகள் பாதிக்கப்பட்டுவிட்டன எனவும் பிரபுக்கள் சபையில் ஒரு தீர்மானம் நிறைவேறியது (*1763*). அதையொட்டிப் பொதுமக்கள்சபை, வில்க்ஸ் மீது அவதூறு வழக்கைத் தொடர்ந்தது. சபையின்முன் வரும்படி அது வில்க்ஸுக்கு ஆணையிட்டது. ஆனால் வில்க்ஸ் வரவில்லை. அவருக்கு

ஏராளமான கடன்கள் இருந்தன. கடன்காரர்களால் சிறையிடப் படுவதினின்றும் தப்பவேண்டி அவர் பிரான்ஸுக்கு ஓடிவிட்டார். அவர் இல்லாத வேளையில் அவர் பொதுமக்கள் சபையினின்றும் நீக்கப்பட்டார் (1764). நார்த்பிரிட்டன் 45-ஆவது இதழைப் பிரசுரித்த குற்றத்துக்காக அரசரது பெஞ்சு நீதிமன்றத்தின் முன் அவர் ஆஜராகாததால் அவரை அந்நீதிமன்றம் சமூக விலக்கம் செய்தது (Outlawed).

1768-ஆம் ஆண்டு வில்க்ஸ், பிரான்ஸிலிருந்து திரும்பி வந்தார். வந்தவுடன் அவர் மிடில்செக்ஸ் என்ற தொகுதி யினின்றும் பாராளுமன்ற உறுப்பினராக மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்டார். இருப்பினும் அவர் மீது ஏற்கெனவே இருந்த அவதூறு வழக்கையொட்டி, அவருக்கு 1000 பவுன் அபராதமும் 22 மாதச் சிறைத்தண்டனையும் விதிக்கப்பட்டது.

1769-ஆம் ஆண்டு அவர், வெய்மவுத் (Wey Mouth) என்ற இன்னொரு உள்நாட்டு அமைச்சரைத் தாக்கி எழுதியதற்காகப் பொதுமக்கள் சபையினின்றும் அப்புறப்படுத்தப்பட்டார். அவதூறு செய்த குற்றம் அவர்மீது சுமத்தப்பட்டது. இங்ஙனம் அவதூறுக் குற்றங்களை விசாரிக்கும் உரிமை நீதிமன்றங்களுக்கே உரியது எனினும், வில்க்ஸ் சம்பந்தப்பட்டவரை அவ்வுரிமையைப் பொதுமக்கள் சபையே எடுத்துக்கொண்டது. மேலும், பிரபு ஒருவரை அவதூறு செய்ததால் பொதுமக்கள் சபையின் சிறப்புரிமைகளுக்குக் கேடு நிகழ்ந்துவிட்டதாகக் கருத இடமில்லை. அதற்காகப் பொதுமக்கள் சபை தன்னைச் சார்ந்த ஒருவரை வெளியேற்றியது அரசியலமைப்புச் சட்டத்துக்கு விரோதமாகும். ஒரு குறிப்பிட்ட தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவரை ஏற்றுக்கொள்ள மறுப்பது தேர்வாளர்களை அவமதிப்பாகுமென்ப தைப் பொதுமக்களசபை உணரவில்லை. இந்நிலையில் யாவரும் ஆச்சரியப்படத்தக்க முறையில் வில்க்ஸ் மீண்டும் மிடில்செக்ஸ் தேர்தலில் வெற்றிபெற்றார். அவருக்கு விரோதமாக அரசரால் நிறுத்திவைக்கப்பட்ட கர்னல் லட்டரல் (Colonel Luttrell) என்பவர் தேர்தலில் படுதோல்வி அடைந்தார். எனினும் பொது மக்கள் சபையார் லட்டரலையே மிடில்செக்ஸின் பிரதிநிதியாக ஏற்றுக்கொள்ளக் கூடுமென . அறிவித்தனர். இங்ஙனம் தேர்வாளர்களின் விருப்பதைப் புறக்கணித்தது அவர்களது அடிப்படை உரிமைகளையே அவமதித்ததாகும். உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தைப் பொதுமக்கள் சபையானது கைக்கொள்ள முன்வந்தது சட்டவிரோதமாகும். எனவே, பொதுமக்கள், வில்க்ஸின் சார்பில் கிளர்ச்சி செய்யலாயினர்.

இலண்டன் தெருக்களில் பல கலகங்கள் நடைபெற்றன. வில்க்ஸ் இலண்டனில் நகரத் தந்தையாகத் (Alderman) தேர்ந்தெடுக்கப் பட்டார். 1774-ஆம் ஆண்டு மீண்டும் அவர் மிடில்செக்ஸிலிருந்து பாராளுமன்றத்தின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதைக் கண்ட பாராளுமன்றம் அவரைப் பொதுமக்கள் சபையினின்றும் விலக்கிவைத்த தீர்மானத்தைத் திருப்பிப் பெற்றுக்கொண்டுவிட்டது. அவர் மறுதேர்தலுக்குத் தகுதி யற்றவர் என்ற வாசகம் பொதுமக்கள் சபையின் சஞ்சிகையி னின்றும் நீக்கப்பட்டது. இதனால் பொதுமக்கள் சபையானது தனது உறுப்பினர் ஒருவரைக் கெட்ட நடத்தைக்காகச் சபை யினின்றும் வெளியேற்றலாமேயன்றி, அவர் மீண்டும் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவதைத் தடைசெய்து தேர்வாளர் களின் உரிமைகளைப் பறிக்க முற்படக்கூடாது என்ற கொள்கை நன்கு நிலைநாட்டப்பட்டது.

பொதுமக்கள் சபையின் நடவடிக்கைகளைப் பத்திரிகைகளில் வெளியிடும் உரிமைக்காகவும் வில்க்ஸ் போராடினார். வெபில் (Wheble) என்ற அச்சக முதலாளி மீது ஆன்ஸ்லோ (Onslow) என்ற பொதுமக்கள் சபை உறுப்பினர் ஒரு வழக்குத் தொடர்ந்தார் பொதுமக்கள் சபையில் தாம் பேசாதவைகளை எல்லாம் பேசியதாக அவர்தம் பத்திரிகையில் வெளியிட்டதாக ஆன்ஸ்லோ அவர்மீது குற்றம் சாட்டினார். வழக்கு, நகரத் தந்தையான வில்க்ஸின் முன் கொணரப்பட்டது. வில்க்ஸ், அவ்வச்சக முதலாளியைக் குற்றமற்றவரெனக் கூறி விடுதலை செய்தார். பாராளுமன்றத்தில் பேசப்படுபவைகளைத் தவறாகப் பிரசுரித்த தற்காக மில்லர் என்ற அச்சக முதலாளியைச் சிறையிலிடும்படி பொதுமக்கள் சபை ஒரு தூதனை அனுப்பியது. ஆனால் கிராஸ்பி (Grosby) என்ற மேயரும், வில்க்ஸூம் சேர்ந்து மில்லரை விடு வித்துப் பாராளுமன்றத் தூதரைச் சிறைசெய்தனர். இதை யறிந்த பொதுமக்கள் சபை கிராஸ்பியைத் தன் முன் அழைத்து விசாரித்துக் சிறையில் தள்ளியது. வில்க்ஸ், பாராளுமன்ற உறுப்பினராயிருந்ததால் அவரை ஒன்றும் செய்யமுடியவில்லை. இதன்பின் பாராளுமன்றத்தில் பேசப்படுபவைகளைப் பத்திரிகை களில் வெளியிடும் உரிமை அநேகமாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆனால் சட்டப்படி இங்ஙனம் வெளியிடுவது குற்றமாகவே கருதப் பட்டது.

வில்க்ஸ் சம்பந்தப்பட்ட இவ்வழக்குகள் பொதுமக்கள் சபையின் பலஹீனத்தையே நன்கு வெளிக்காட்டுகின்றன. ஏழாண்டுகள் பதவியிலிருந்ததால் மக்களின் நம்பிக்கைக்குப்

'பாத்திரமாதப் பொதுமக்கள் சபை இருக்கவில்லை, என்பதையே அவைகள் எடுத்தியம்புகின்றன. பொதுமக்கள் சபைசீர்திருத்தி அமைக்கப்பட வேண்டுவதன் அவசியத்தையும் அவை மறைமுகமாகப் புலப்படுத்தின. பொதுவாரண்டுகள் சட்டவிரோதமானவை என அறிவிக்கப்பட்டதால் குடிமக்களின் உரிமைகள் அரசாங்க அதிகாரிகளின் தலையீடுகளினின்றும் காப்பாற்றப்பட்டன. பிரசுர உரிமையும் ஓரளவு இவ்வழக்குகளால் நிலைநாட்டப்பட்டது. பாராளுமன்றத்தின்அதிகாரத்துக்கும் தனித்தலைமைக்கும் இப்பிரசுர உரிமை ஓரளவு வரம்பு கட்டியது. மற்றும் அரசர் எவ்வளவு தூரம் அரசாங்க விவகாரங்களில் தலையிட்டார் என்பதற்கும் இவ்வழக்குகள் ஒரு பெருஞ்சான்றுயமைகின்றன. வில்க்ஸ், பொதுமக்கள் சபையினின்றும் வெளியேற்றப்படுவதற்கு அரசரே மூலகாரணமாகும். இங்ஙனம் ஒரு தனி மனிதரைப் பற்றிய பல வழக்குகள் பொதுமக்களின் உரிமைகளை வற்புறுத்துவனவாயமைந்தது இங்கிலாந்தின் வரலாற்றில் தற்செயலாக நடைபெற்ற வியத்தகு நிகழ்ச்சிகளுள் ஒன்றாகும்.

# 7. அமெரிக்கச் சுதந்திரப்போர்

**அமெரிக்கச் சுதந்திரப் போர் ஏற்படுவதற்கான காரணங்கள் :**

ஏழாண்டுப் போரின் விளைவு—பழைய குடியேற்ற நாட்டுக்கொள்கையின் குறைகள்—அரசியலமைப்பின் குறைபாடுகள்—பொருளாதாரக் குறைகள் —சமயத் துறையில் மனக் கசப்பு—பாதுகாப்புப் பிரச்சினை—அமெரிக்கர்களின் உரிமை வேட்கை—பிரிட்டிஷாரோடு மனவேறுபாடு சிறு கிளர்ச்சிகள்—புரட்சி நிறுவனங்கள்—சுதந்திரப் புதல்வர்கள் சங்கம் கடிதப் போக்குவரத்துக் கமிட்டிகள் - பாஸ்டன் காங்கிரஸ்.

**போராட்டத்துக்கு இட்டுச் சென்ற சூழ்நிலைகள் :**

பத்திர முத்திரைக் கட்டணம் Stamp duty (1764) - அறிவிப்புச் சட்டம் Declaratory Act (1766) - பாஸ்டன் படுகொலை Boston Massacre (1770) - பாஸ்டன் தேனீர் விருந்து Boston Teaparty (1773) - ஃபிலெடெல்ஃபியா காங்கிரஸ் Philadelphia Congress (1774).

**போர் நிகழ்ச்சிகள் :**

(1775-1783) — பங்க்கர் குன்றுப் போர் (1775)—கனடாப் படையெடுப்பு மான்ட்ரீல் - கியூ - பெக் - ஆலிவ் கிளை விண்ணப்பம் Olive Branch Petition (1775) - சுதந்திர அறிவிப்பு Declaration of Independence - (1776 - 77) போர் நிகழ்ச்சிகள் - ப்ரூகலின் ட்ரெண்ட்டன் — பிரின்ஸ்டன்—நியூஜெர்ஸி—பிராண்டினவன் — டிச்கோண்டிராகோ — சாரடோகா வெற்றி பிரெஞ்சு ஸ்பெயின் உதவி — போரின் முடிவு - யார்க் டவுன் சரணகதி — ஸவானு, ஜார்ஜியா, தென் கரோலினு, சார்லஸ்டன், காம்ப்டன் கில்ஃபோர்டு கோர்ட ஹவுஸ், கிங்ஸ் மௌண்டன், யார்க் டவுன்—வெர்ஸேல்ஸ் சமாதான உடன்படிக்கை (1783) - ஆங்கிலேயரின் தோல்விக்குக் காரணங்கள்.

மூன்றும் ஜார்ஜின் காலத்தில் நடைபெற்ற பல நிகழ்ச்சிகளுள் மிக முக்கியத்துவம் வாய்ந்தது அமெரிக்கச் சுதந்திரப் போராகும். ஜனநாயகத்தின் தனிப்பெரும் பிரதிநிதியாய் அடிப்படை உரிமைகளின் இருப்பிடமாய்த் தனி நபர் முயற்சியின் வெற்றிக்கு ஓர் ஈடில்லா எடுத்துக் காட்டாய் இன்று அமெரிக்கா விளங்குவதற்குக் காரணம், அது சுதந்திர நாடாய் விளங்குவதே யாகும். அச்சுதந்திரத்தை அமெரிக்க மக்கள் வாள் முனையிலே பெற்றனர். அமெரிக்க மக்களின் உள்ளங்களில் புகைந்து கொண்டிருந்த சுதந்திர நெருப்பானது மூன்றும் ஜார்ஜின் பிடிவாதத்

தாலும், ஆதிக்க மனப்பான்மையாலும் நன்கு கொழுந்து விட்டெரிய ஆரம்பித்தது; ஒரு போராக வடிவெடுத்தது. அப்போரில் பிரிட்டன் அடைந்த தோல்வியானது, அந்நாடு அதுகாறும் கடைப்பிடித்து வந்த 'பழைய குடியேற்ற நாட்டுக் கொள்கை'யின் (Old Colonial Policy) தோல்வியாகும். அப்போரில் அமெரிக்கா பெற்ற வெற்றியானது நியாயமான ஜனநாயகக் கொள்கையின் வெற்றியாகும். அவ்வெற்றியின் எதிரொலியையே நாம் பிரெஞ்சுப் புரட்சியிலும், 1830ஆம் ஆண்டிலும் 1848ஆம் ஆண்டிலும் ஐரோப்பாவில் நடைபெற்ற பல உரிமைக் கிளர்ச்சிகளிலும் கேட்கிறோம்.

## அமெரிக்கச் சுதந்திரப்போர் ஏற்படுவதற்கான காரணங்கள்

### ஏழாண்டுப் போரின் விளைவுகள்

ஏழாண்டுப்போரின் ஒரு முக்கியமான விளைவு பிரிட்டனுக்கும் அதன் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்கும் இருந்த உறவு முறையில் ஏற்பட்ட பெருத்த மாறுதல்களாகும். அப்போரின் விளைவாக, வடக்கேயும் மேற்கேயுமிருந்த பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளைப் பயமுறுத்தி வந்த பிரெஞ்சுக்காரர் விலகிவிட்டனர். தெற்கேயிருந்த ஸ்பானியர்களும் போய்விட்டனர். அதனால் பிரிட்டனின் உதவி அமெரிக்கருக்குத் தேவையில்லாது போயிற்று. மேலும், அப்போரின்போது அமெரிக்காவின் பல மாகாணத்தவரும் தோளோடுதோள் சேர்ந்து போரிட ஒரு வாய்ப்புக் கிட்டியது. அதனால் அவர்களிடையே ஓர் ஒற்றுமை மனப்பான்மை வளர்ந்தது. பல மாகாணங்களையும் ஒன்றாக இணைக்கும் எண்ணமும் அப்போது பலருக்கு உண்டாயிற்று. 1754-ஆம் ஆண்டில் ஏழு குடியேற்ற நாடுகளின் பிரதிநிதிகள் கலந்து நடத்திய ஆல்பனி காங்கிரஸின் தீர்மானம் அவற்றுள் முக்கியமானது. எல்லாக் குடியேற்ற நாடுகளுக்கும் பொதுவான ஒரு கூட்டரசு (Federation) அரசியல் அமைப்பை அத்தீர்மானம் சிபாரிசு செய்தது. ஆனால் அது நடைமுறையில் வரவில்லை. எனினும், அமெரிக்கா ஒரே நாடு என்ற ஒருமைக் கருத்து மக்களின் மனத்தில் வேரூன்ற அது பெரிதும் உதவி செய்தது. மேலும் ஏழாண்டுப் போரில் அமெரிக்கர் பலர் நல்ல இராணுவப் பயிற்சி பெற்றனர். அவர்களிடையே ஒரு தன்னம்பிக்கை வளர்ந்தது. சில போர்க்களங்களில் அவர்கள் பிரிட்டிஷ் துருப்புக்களைவிட அதிகத் திறமையுள்ளவர்கள் என்பதை அறிந்துகொண்டனர். எனவே பிரிட்டிஷாரை எதிர்த்து வெற்றி பெறலாம் என்ற நம்பிக்கை அமெரிக்கர்களிடையே ஏற்பட்டது.

ஏழாண்டுப் போரில் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு ஏராளமான செலவேற்பட்டது. அச்செலவின் ஒரு பகுதியை அமெரிக்கரும்

ஏற்க வேண்டுமென நினைத்துப் பிரிட்டிஷ் மந்திரிகளும் மன்னரும் அமெரிக்கர்மீது வரிகளைப் போட்டார்கள். அதுவே இறுதியில் அமெரிக்கருக்கும் ஆங்கிலேயருக்கும் போரை மூட்டிவிட்டது.

### பழைய குடியேற்ற நாட்டுக் கொள்கையின் குறைகள்

இங்ஙனம் ஏழாண்டுப் போரின் ஒரு விளைவாகவே அமெரிக்கச் சுதந்திரப் போரைக் கருதலாமெனினும், அதற்கு அடிப்படையான மூலாதாரக் காரணங்கள் இருந்தன என்பதை யாரும் மறக்க முடியாது. பிரிட்டன், குடியேற்றநாடுகளோடு கொண்டிருந்த அரசியல், பொருளாதாரத் தொடர்புகள், அவைகளிடையே மனக்கசப்பை வளர்த்தன. அக்காலத்தில் குடியேற்ற நாடுகள் தாய்நாட்டின் நன்மைக்காகத்தான் இருக்கின்றன என்று கருதப் பட்டது. எனவே பிரிட்டனுக்குச் சாதகமாகவே குடியேற்ற நாடு களின் வியாபாரம் இருக்க வேண்டுமென வற்புறுத்தப்பட்டது. புகையிலை, பருத்தி போன்ற பொருட்களை எல்லாம் பிரிட்டனைத் தவிர வேறு நாடுகளுக்கு அனுப்ப அமெரிக்கர்களுக்கு உரிமை இல்லை. இரும்பு, கம்பளி முதலிய கச்சாப் பொருள்களினின்றும் செய்பொருள்களைச் செய்து விற்பனை செய்யவும் அமெரிக்கருக்கு உரிமையில்லை. சான்றாக அமெரிக்காவிலிருந்து உரோமமானது பிரிட்டனுக்கு அனுப்பப்பட்டு, அங்கே அவைகள் தொப்பிகளாகச் செய்யப்பட்டு, மீண்டும் அவை அமெரிக்காவுக்கே கொண்டு வரப்பட்டு விற்கப்பட்டன. இங்ஙனம் குறிப்பிட்ட சில முக்கிய மான பொருள்களை வேற்று நாடுகளுக்கு அனுப்பவும் அமெரிக்கா வுக்கு உரிமை வழங்கப்பட்டது. பிரிட்டனுக்கு அனுப்பாமல் வேற்று நாடுகளுக்கு அனுப்பினால் குடியேற்ற நாடுகளுக்கு வரக் கூடிய இலாபம் மேற்சொன்ன முறையால் தடைப்பட்டது. மற்றும் 1651-ஆம் ஆண்டிலும், 1660-ஆம் ஆண்டிலும் ஏற்பட்ட நாவாய்ச் சட்டங்கள் (Navigation Acts) அமெரிக்கர்கள் தங்கள் வியாபாரச் சரக்குகளை ஆங்கிலக் கப்பல்களில் தவிர வேற்று நாட்டுக் கப்பல்களில் அனுப்புவதைத் தடை செய்தன. ஐரோப்பா விலிருந்து அமெரிக்காவுக்கு வரும் பண்டங்களும் இங்கிலாந்து மூலமாகவே வரவேண்டுமெனத் திட்டம் செய்யப்பட்டிருந்தது. இந்தக் கட்டுப்பாடுகளெல்லாம் இருந்தபோதிலும், ஸ்பெயின் பிரான்ஸ் போன்ற நாடுகளின் வியாபாரக்கொள்கைகளைநோக்கும் போது அவை அவ்வளவு கடுமையானவைகளாக அமெரிக்கருக்குத் தெரியவில்லை. மேலும் நாவாய்ச் சட்டங்கள் கடுமையாக அமுல் நடத்தப்படவில்லை. விக்குக் கட்சியினர் கள்ளக்கடத்தல் வியாபாரத்தைப் பார்த்தும்பாராததும்போல் விட்டுவிட்டனர் ஆனால் ஜார்ஜின் மந்திரியான கிரென்வில் (Grenville) என்பார்

கள்ள வியாபாரத்தை அறவே ஒழிக்க விரும்பினர். நாவாய்ச் சட்டங்களைக் கடுமையாக அமுல் நடத்த முனைந்தார். அதனால் அமெரிக்கர்களின் இலாபம் குறைந்தது. அவர்களுக்கு வேண்டிய பொருள்களும் சரிவரக் கிடைக்கப் பெறுமல் அவர்கள் வாடினர். எனவே, அமெரிக்கர்கள் வியாபாரச் சட்டங்களை மாற்ற வேண்டுமென விரும்பினர்.

### அரசியலமைப்பின் குறைபாடுகள்

வியாபாரச் சட்டங்களையேயன்றிப் பேரரசின் அமைப்பையே மாற்ற வேண்டுமென அமெரிக்கர்கள் நினைத்தனர். தாய்நாடும் குடியேற்ற நாடுகளும். கூட்டரசு அரசியல் அமைப்பில் கலந்து வாழ வேண்டுமென அவர்கள் விரும்பினர். ஆனால் ஆங்கிலப் பாராளுமன்றமே இறைமை வாய்ந்ததென்றும், குடியேற்ற நாடுகள் அதன் ஆதிக்கத்துக்குக் கட்டுப்பட்டனவென்றும் ஆங்கிலேயர் வாதாடினர். வியாபார உறவையும் இதர உறவுகளையும் பாராளுமன்றமே தீர்மானித்தது. பிரிட்டிஷ் மன்னருக்கும் குடியேற்ற நாடுகளின் நிறைய அதிகாரம் இருந்தது. குடியேற்ற நாடுகளில் நிறைய அதிகாரம் இருந்தது. குடியேற்ற நாடுகளின் சட்டங்களை மன்னர் நிராகரிக்கலாம். எட்டு மாகாணங்களின் கவர்னர்களை நியமிக்க அவர் அதிகாரம் பெற்றிருந்தார். மன்னரின் பெயரில் குடியேற்ற நாடுகளின் நிருவாகத்தை வியாபார விவசாயக் கமிஷனர்களின் போர்டு' என்னும் சபையானது கவனித்து வந்தது. தாய்நாட்டுக்கும், குடியேற்ற நாடுகளுக்குமிடையே நடைபெறும் வியாபாரத்தின் இலாப நஷ்டங்களையும், குடியேற்ற நாடுகளின் நிதிநிலைமையையும், நீதிபரிபாலன முறைகளையும் அச்சபை கண்காணித்து வந்தது. அமெரிக்க குடியேற்ற நாடுகள் பலவும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாக இருந்தன. எனினும் அவை ஒவ்வொரு கவர்னரால் ஆளப்பட்டன. கவர்னரின் அதிகாரத்தை ஒரு பொதுமக்கள் சபையானது கட்டுப்படுத்தி வந்தது. கவர்னர்களுக்கும், பொது மக்கள் சபைகளுக்கும் அடிக்கடி சச்சரவுகள் நிகழ்ந்தன. அரசின் பிரதிநிதியான கவர்னரா? அன்றிப் பொதுமக்கள் பிரதிநிதியான சபையா? எது தலைமை வாய்ந்தது என்பது பற்றி அவர்களிடை அடிக்கடி தகராறுகள் விளைந்தன. பொது மக்கள் தங்களது அதிகாரமே பெருக்கப்பட வேண்டுமெனவும், அடக்கு முறை ஆட்சிக்கு வித்தான ஆங்கில ஆட்சியும், அதன் பிரதிநிதியான கவர்னர்களின் ஆட்சியும் ஒழிய வேண்டுமெனவும் கூக்குரலிட்டனர். அமெரிக்க மாகாணங்களுக்குச் சட்டம் செய்ய ஆங்கிலபாராளுமன்றத்துக்கு அதிகாரமில்லை எனஅமெரிக்கர்கள் கூறினர். குடியேற்றநாட்டு வழக்குகள், இங்கிலாந்தின் பிரிவி

கவுன்ஸிலுக்கு இறுதியாக எடுத்துச் செல்லப்படுவதையும் அமெரிக்கர்கள் கண்டித்தனர்.

பொருளாதாரக் குறைகள்

அமெரிக்காவின் வட மாகாணங்கள் தொழில் வளர்ச்சியில் முன்னேற்றமடைந்திருந்ததால் நாவாய்ச்சட்டங்கள் அவற்றையே அதிகம் பாதித்தன. இங்கிலாந்துக்கு அனுப்பிப் பதிலாகச் செய்பொருள்களைப் பெறுவதற்கு அம்மாகாணங்களில் கச்சாப் பொருள்கள் அதிகமில்லை. எனவே அம்மாகாணத்தவர் இங்கிலாந்தினின்றும் பெறும் பொருள்களுக்கு ரொக்கப் பணம் தர வேண்டியிருந்தது. அப்பணத்தைச் சேகரிக்க அம்மாகாணத்தவர் மேற்கிந்தியத் தீவுகளிலிருந்து வெல்லப்பாகை வாங்கி, ரம் என்னும் போதைப் பொருளை உண்டாக்கி, அதைத் தென்னுப்பிரிக்காவுக்கு எடுத்துச் சென்று பண்டமாற்று முறையால் நீக்ரோக்களை வாங்கி, அவர்களை மேற்கிந்தியத் தீவுகளிலும், தென் மகாணங்களிலும் கொணர்ந்து விற்றுப் பணம் சேர்த்தனர். 1733-ஆம் ஆண்டு ஏற்பட்ட வெல்லப்பாகுச் சட்டம் (Molasses Act) மேற்கிந்தியத் தீவுகளில் பிரிட்டிஷாருக்குச் சொந்தமான தீவுகளோடு மாத்திரமே நியூ இங்கிலாந்து வியாபாரம் செய்ய முடிந்தது. இல்லையெனில் அஃது அபராதம் செலுத்த வேண்டியிருந்தது. 1764-ஆம் ஆண்டில் ஏற்பட்ட 'சர்க்கரைச் சட்டமும்' பழைய வெல்லப்பாகுச் சட்டம் போன்றதேயாகும். இச்சட்டப்படி காலனுக்கு ஆறு பென்ஸாக இருந்த அபாரத வீதம் மூன்று பென்ஸாகக் குறைக்கப்பட்டது. சட்டத்தை மீறுபவர்களின் கப்பல்கள் கைப்பற்றப்பட்டன. வழக்குகள் அமெரிக்காவில் எப்பாகத்திலும் விசாரிக்கப்படலாம் என ஏற்பட்டது. இதனுலெல்லாம் அமெரிக்கர்கள் பேரின்னலுற்றனர்.

1764-ஆம் ஆண்டில் ஐரோப்பா கண்டத்துக்கு அனுப்பப்படும் சரக்குகளுக்குப் போடப்படும் வரி $2\frac{1}{2}$ விழுக்காட்டிலிருந்து 5 விழுக்காடாக உயர்த்தப்பட்டது. இஃது அமெரிக்கரின் மனக்கசப்பை மேலும் அதிகரித்தது.

தென் மாகாணங்கள் புகையிலை, அவுரி, தூலங்கள். பதனிடாத தோல் முதலிய மூலப்பொருள்களை நேராக இங்கிலாந்துக்கு அனுப்பிச் செய்பொருள்களைப் பெற்றுக் கொண்டன. ஆனல் வியாபாரம் எல்லாம் பிரிட்டிஷ் வர்த்தக நிலையங்கள் அல்லது அவற்றின் ஏஜெண்டுகள் கைகளில் இருந்தன. எனவே, அவர்கள் அமெரிக்கக் கச்சாப் பொருள்களை மிக எளிய விலைக்கு வாங்கிப் பிரிட்டிஷ் செய்பொருள்களை மிக அதிக விலைக்கு விற்றனர்

இதனுல் பலர் ஆங்கில;வியாபார நிலையங்களுக்குக் கடனாளிகளா யினர். இக்கடன்களை அடைக்கச் சில மாகாணங்கள் திவாலாச் சட்டங்களை இயற்றின. சில மாகாணங்கள் நோட்டுகளை அச்சடித் தன. ஆங்கிலப் பாராளுமன்றம் அம்முறைகளையெல்லாம் ஒப்புக் கொள்ள மறுத்துவிட்டது. கடனை அடைக்க நோட்டுகள் செல்லா தென அது அறிவித்தது. எனவே கடன்பட்டார் அனைவரும் வருத்தமுற்றனர்.

மேற்கேயிருந்த மக்கள் நில வியாபாரிகள். பல நிலவிற்பனைக் கம்பெனிகள் அங்கு ஏற்பட்டன. ஏராளமானபேர் வந்து நிலம். வாங்குவர் என அக்கம்பெனிகள் எதிர்பார்த்திருந்த வேளையில் பிரிட்டிஷ் அரசாங்கமானது அப்பலாச்சியன் மலைகளின் சிகரங் களுக்கப்பால் யாரும் பரவக்கூடாது என ஒரு சட்டம் விதித்தது இச்சட்டத்தால், பொதுவாக நில ஆசை கொண்டவர்களும் நிலக் கம்பெனியாரும் கோபமுற்றனர்.

### சமயத் துறையில் மனக் கசப்பு

மற்றும், சமயத்துறையில் ஆங்கிலத் திருச்சபையின் கட்டுப் பாடுகளைப் பலர் வெறுத்தனர். அரசாங்க மதஸ்தாபனத்துக்காக வரிகள் கட்டுவதைக் குடியேற்ற நாட்டு மக்கள் பலர் எதிர்த்த னர். திருச்சபையைச் சேர்ந்த அதிகாரவர்க்கத்தைப் பலர் விரும்பவில்லை.

### பாதுகாப்புப் பிரச்சினை

அமெரிக்கக் குடியேற்ற நாடுகளைப் பாதுகாப்பது எப்படி என்ற பிரச்சினையிலும் இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் மனக்கசப்பு ஏற்பட்டது. பிரிட்டிஷ் அரசாங்கமானது குடியேற்ற நாடுகளைக் காக்க 10,000 பேர்கொண்ட ஒரு படையை அமெ ரிக்காவில் வைக்கவும் அதற்காக 360,000 பவுன் வரியாக அமெ ரிக்காவிடமிருந்து வாங்கவும் தீர்மானித்தது. இதன்படி 1765-ஆம் ஆண்டில்,முத்திரைக் காகிதச் சட்டமானது (Stamp Act) ஆங்கிலப் பாராளுமன்றத்தில் இயற்றப்பட்டது. அஃது ஒரு பெரிய வரியாக இல்லாவிடினும், அமெரிக்கப் பிரதிநிதிகள் இல்லாத பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்கு அமெரிக்கர்மீது வரி யிடும் உரிமை கிடையாது என அமெரிக்கர் வாதித்தனர். 'பிரதி நிதித்துவமில்லையேல் வரியுமில்லை' (No taxation without represen-tation) என அவர்கள் கூக்குரலிட்டனர்.

அமெரிக்கரின் உரிமை வேட்கை

இவ்விதம் அமெரிக்கர் சிறு விஷயங்களிலும் கண்டிப்பாக இருந்ததற்குக் காரணம் அவர்களுடைய மனப்பாங்குதான். அவர்களிற் பெரும்பாலோர் தாய் நாட்டிலிருந்து சமயத்துறையில் உரிமை வேண்டி அமெரிக்கா ஓடி வந்தார்கள். எனவே, அரசியல் துறையிலும் அவர்கள் அதிகாரத்தை எதிர்த்து உரிமை வேண்டி நின்றது விந்தையன்று. மேலும், அமெரிக்கர் பலரும் நல்ல சட்ட ஞானமுள்ளவர்கள். எனவே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் செயல்களைச் சட்டப்படி முறையற்றவை என அவர்கள் நிரூபித்தனர். மேலும், ஒன்றரை நூற்றுண்டுகளாக அமெரிக்க மக்கள் குடி சமத்துவம் என்னும் சூழ்நிலையில் வசித்துப் பழகிவிட்டார்கள். பொருளாதார பேதங்கள் அவர்களிடம் அதிகம் காணப்படவில்லை. ஒரு சில பணக்காரரும் ஜனநாயகக் கருத்துக்களையே ஆதரித்தனர். நல்ல கல்விமான்களும் நாட்டில் தோன்றினர். பெஞ்சமின் ஃபிராங்லின் (Benjamin Franklin) தாமஸ் ஜெஃபெர்ஸன் (Thomas Jefferson) போன்ற அறிஞர்கள் தங்களது எழுத்தாற்றலைப் பயன்படுத்தி மக்களின் உரிமை வேட்கையை வளர்த்தார்கள். குடியரசுக் கொள்கை, சுதந்திரம் இவற்றைப் பற்றிய கருத்துக்களை அவர்கள் நூல்கள் வாயிலாகவும், பத்திரிகைகள் மூலமாகவும், சொற்பொழிவுகள் வழியாகவும் பரப்பினுர்கள். பிரிட்டனிலும் விக்குக் கட்சியினர் அமெரிக்கரது விருப்பங்களை ஆதரித்தனர். ஜான் லாக் (John Locke) என்பவரது நூல்கள் அமெரிக்கருக்கு ஒரு தூண்டுகோலாக அமைந்ததென்பதில் ஐயமில்லை. அவரது 'அரசாங்கத்தைப் பற்றிய இரண்டு நூல்கள்' (The Two Treatises On Government) என்பதில் இரண்டாவது நூலில் 'அமெரிக்க சுதந்திர அறிவிப்பின் விதைகள் அடங்கியுள்ளன.

பிரிட்டிஷாரோடு மனவேறுபாடு

பிரிட்டிஷாருக்கும் அமெரிக்கருக்கும் மனவேறுபாடுகள் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே சென்றன. பிரிட்டிஷ் அரசாங்கம் நிலைப்படை ஒன்று அமெரிக்கருக்குத் தேவை என நினைத்தது. அமெரிக்கர் அதை அவசியமற்றது எனக் கருதினர். அமெரிக்கரின் பாதுகாப்புக்காக அவர்கள் மீது சிறிது வரி போடுவதால் தப்பில்லை எனப் பிரிட்டிஷ் அரசாங்கம் நினைத்தது. அமெரிக்கரின் அனுமதியின்றி பிரிட்டன் அவர்கள் மீது பத்திரமுத்திரை வரி போன்ற வரி போடுதல் சட்ட விரோதம் என அமெரிக்கர் நினைத்தனர். கள்ளக் கடத்தலைத் தடுக்கக் கப்பல்களைச் சோதனை போடுதல் நியாயமானதாகவே ஆங்கிலேயருக்குப்பட்டது. ஆனுல் ஆதாரமற்ற சந்தேகத்தைக்

கொண்டு பொது வாரண்டுகளைப் பிறப்பித்தலும், அதை கொண்டு யார் வீட்டிலும் கடையிலும் புகுந்து சோதிப்பதும் அமெரிக்கருக்கு அடியோடு பிடிக்கவில்லை. வியாபாரத்திலும் கைத்தொழிலிலும் பிரிட்டன் அளவுக்கு மீறித் தலையிடுவதாகவும் அமெரிக்கர் நினைத்தனர். மேலும், பாராளுமன்றமே பேரரசின் தலைமை வாய்ந்த நிறுவனம் என்றும், அவைகளுக்காகச் சட்டம் செய்யும் இறுதி இறைமை அப்பாராளுமன்றத்துக்கே உரியது என்றும் பிரிட்டிஷார் கருதினர். அமெரிக்கர்கள் சட்டப்படி தாங்கள் மன்னருக்கே கட்டுப்பட்டவர்கள் என்றும், மன்னர்களே குடியேற்ற நிறுவனங்களை ஏற்படுத்த அனுமதி அளித்தவர்களென்றும், அவரது தலைமையில் அமெரிக்க மாகாணச் சபைகளே அமெரிக்கரை ஆளவேண்டுமேயன்றி இலண்டனிலிருக்கும் பாராளுமன்றத்துக்கு அமெரிக்கர் மீது வரிச் சட்டம் விதிக்க ஒன்றும் உரிமையில்லை என்றும் அமெரிக்கர் வாதித்தனர். இந்த இருவித மனப்பான்மைகள் கொண்டவர்கள் பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் இரண்டு நாடுகளிலும் இருந்தனர்.

### சிறு கிளர்ச்சிகள்-புரட்சி நிறுவனங்கள்

இந்த மனவேறுபாடுகள் காரணமாகப் பிரிட்டிஷாருக்கு விரோதமாகக் கிளர்ச்சிகள் செய்ய ஒரு சில அறிஞர்கள் திட்டமிட்டனர். முதலில் பிரிட்டிஷ் சட்டங்களை எதிர்த்துப் பரவலாக ஆங்காங்கே சிறு சிறு கலகங்கள் ஏற்பட்டன. 1765-ஆம் ஆண்டு முத்திரைக் காகிதச் சட்டத்தை எதிர்த்து இப்படிப் பல குடியேற்ற நாடுகளில் எதிர்ப்புகள் கிளம்பின. முத்திரைகளைக் கொளுத்துதல், அதை விற்கும் அதிகாரிகளை விரட்டல், கவர்னர்களைக் கொல்ல முயற்சித்தல் போன்ற வன்முறைச் செயல்களில் கலகக்காரர்கள் ஈடுபட்டனர். ஆனால் கட்டுப்பாட்டை விரும்பியவர்கள் இவ்விதக் காரியங்களைக் கண்டித்தனர். அமைதியாகப் பாராளுமன்றத்தை எதிர்க்கச் ‘சுதந்திரப் புதல்வர்கள்’ போன்ற சங்கங்கள் தோன்றின.

அடுத்தாற்போல் பிரிட்டிஷ் பொருள்களைப் பகிஷ்கரிக்கும் இயக்கம் அமெரிக்காவில் வளர்ந்தது. 1767-ஆம் ஆண்டில் ஏற்பட்ட டவுன்ஷெண்டுச் சட்டம் (Townshend Act) தேயிலை, காகிதம், கண்ணாடி, ஓவியர்களின் வண்ணப் பொருள்கள் முதலியவைகள் மீது வரி விதித்தபோதே மேற்சொன்ன இயக்கம் அமெரிக்காவில் தோன்றியது. வரி விதிக்கப்பட்ட பொருள்களை இறக்குமதி செய்வதில்லை என்று வியாபாரிகள் தமக்குள் ஒப்பந்தம் செய்து கொண்டனர். இறக்குமதி அதனால் பாதியாகக் குறைந்து விட்டது. 1770-ஆம் ஆண்டு ராக்கிங்ஹாம் மந்திரி

சபையானது தேயிலை தவிர மற்றப் பொருள்களின் மேலிருந்த வரிகளை ரத்து செய்ததும் மேற்படி இயக்கம் நின்றது.

அடுத்தாற்போல் நாட்டில் புரட்சிக் கருத்துக்களைப் பரப்ப ஆங்காங்கே கடிதப்போக்குவரத்துக் கமிட்டிகள் (Committees of Correspondences) ஏற்படுத்தப்பட்டன. ஸாம்யூல் ஆடம்ஸ் என்பார் அவற்றின் தலைவராவார். இக்கமிட்டியின்மூலம் நகருக்கு நகர் செய்திகள் பரப்பப்பட்டன. 1772-ஆம் ஆண்டில் நீதிபதிகளுக்கும் கவர்னர்களைப் போலவே சம்பளம் கொடுக்கப் பிரிட்டிஷ் அரசாங்கம் தீர்மானித்ததை இக்கமிட்டிகள் ஒருமுகமாக எதிர்த்தன. நீதிபதிகள் அரசாங்கத்தின் கையாட்களாக மாறிவிடுவர் என அவைகள் பிரசாரம் செய்தன. கொஞ்சம் கொஞ்சமாக நாடனைத்துக்குமாக ஒரு சடையைக் கூட்டும் முயற்சி தோன்றியது. அதோடு ஒவ்வொரு மாகாணத்திலும் மாகாண காங்கிரஸ் என்ற தனிப்பட்ட புரட்சி சட்டசபைகள் தோன்றின. 1774-ஆம் ஆண்டில் பாஸ்டன் துறைமுகச் சட்டம் ஏற்பட்டபோது, 89 பேர் அடங்கிய காங்கிரஸ் ஒன்று பாஸ்டனில் கூடி, பிரிட்டிஷ் பொருள்களின் இறக்குமதியைத் தடுக்கும் தீர்மான மொன்றை நிறைவேற்றியது. கவர்னர் டன்பார் என்டவரால் கலைக்கப்பட்டபோதும் அது தனியே ஒரு கூடத்தில் கூடி மேற்படி தீர்மானத்தைச் செய்தது. இங்ஙனம் பிரிட்டனை எதிர்க்கும் முயற்சியில் பல மாகாணங்களும் ஒன்றிணைந்து வேலை செய்ய ஆரம்பித்தன.

## போராட்டத்துக்கு இட்டுச் சென்ற சூழ்நிலைகள்

### பத்திர முத்திரைக் கட்டணம் Stamp Duty (1764)

பிரிட்டிஷ் பிரதமர் பிட் என்பாரின் போர்ச்செலவுகளால் நாட்டுக்கடன் 140,000,000, பவுன்களாக உயர்ந்தது. எனவே 1764-ஆம் ஆண்டு கருவூலத் தலைவராயிருந்த கிரென்வில் என்பார் நாட்டுக்கடனைக் குறைப்பதற்காக அமெரிக்கர்மீது பத்திர முத்திரைக்கட்டணமொன்றை (Stamp Duty) விதித்தார் எல்லாப் பத்திரங்களுக்கும் முத்திரை வாங்கும்போது இவ்வரியை வசூலிப்பதால் 100,000 பவுன் ஆண்டொன்றுக்கு வருமானம் கிடைக்கும் என எதிர்பார்க்கப்பட்டது. வரி விதிக்கப்பட்ட உடனே அதற்கு அமெரிக்கா எங்கணும் பலத்த எதிர்ப்புக் கிளம்பியது. வருமானத்துக்காக வரி போடுவதையும், உள்நாட்டில் வரி போடுவதையும் சட்ட விரோதமானதென அமெரிக்கர் கருதினர். பாஸ்டன் நகரில் கலகங்கள் ஏற்பட்டன. முத்திரைகள் கொளுத்தப்பட்டன. இங்கிலாந்தின் பொருள்கள் இறக்குமதி

செய்யப்படுவது நிறுத்தப்பட்டது. வர்ஜீனியாவில் ஒரு சபைகூடிப் பிரிட்டிஷ் பாராளுமன்றம் அமெரிக்கரின் சம்மதமின்றி அவர்கள் மீது வரி விதித்ததைக் கண்டித்தது. முத்திரைக் காகிதச் சட்டத்தை உடனே ரத்து செய்யும்படி அச்சபை கோரியது. நியூயார்க் நகரில் கூடியகாங்கிரஸ் ஒன்றில் பதின்மூன்று குடியேற்ற நாடுகளின் ஒன்பது நாடுகளின் பிரதிநிதிகள் வந்து கலந்து கொண்டனர். வியாபாரத் துறையில் தவிர மற்றத் துறைகளில் சட்டம் செய்யப்பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்கு உரிமையில்லை என அக்காங்கிரஸ் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது.

### அறிவிப்புச் சட்டம் Declaratory Act (1766)

1766-ஆம் ஆண்டு ராக்கிங்ஹாம்பிரபு முத்திரைச்சட்டத்தை ரத்து செய்தார். அதோடு பிரிட்டிஷ் பாராளுமன்றமே இறைமை வாய்ந்ததென்றும் குடியேற்ற நாடுகள் மீது வரிவிதிக்க அதற்கு உரிமை உண்டென்றும் கூறுகிற அறிவிப்புச் சட்டமொன்றையும் (Declaratory Act) அவர் இயற்றினர். பாராளுமன்றத்தின் கண்ணியத்தைக் காக்கவே இச்சட்டம் அவரால் ஆக்கப்பெற்றது. ஆனல் அமெரிக்கர்களுக்கு அஃது அதிருப்தியையே விளைவித்தது.

### பாஸ்டன் படுகொலை (1770)

அடுத்தாற்போல் வந்த சாத்தாம் மந்திரிசபையில் கருவூலத் தலைவராயிருந்த டவுன்செண்டு பிரபு 1767-ஆம் ஆண்டு தேயிலை காகிதம், கண்ணுடி, ஓவியர்களின் வண்ணங்கள் ஆகியவைமீது வரி விதித்தார். மஸாச்சுசெட்ஸ் (Massachusettes) மாகாணச் சட்டசபை மேற்படி வரி முறையை ஒப்புக்கொள்ள மறுத்ததால் அது கலைக்கப்பட்டது. 1770-இல் நியூயார்க்கில் ‘கோல்டன் ஹீல்’ என்னுமிடத்தில் சண்டை நடைபெற இருந்தது. இராணுவ அதிகாரிகள் தலையிட்டு அதை நிறுத்தினர். பாஸ்டன் நகரில் ஏற்பட்ட கலகத்தில் பிரிட்டிஷ் சிப்பாய்களின் துப்பாக்கிப் பிரயோகத்தால் மூவர் இறந்தனர். இது ‘பாஸ்டன் படுகொலை’ (Boston Massacre) என அழைக்கப்பட்டு அமெரிக்கருக்குப் பிரிட்டிஷார்மேல் கோபத்தை வளர்த்தது. இக்கலகங்கள் காரணமாக அடுத்து வந்த நார்த் பிரபு மந்திரி சபையானது தேயிலையைத் தவிர மற்றப் பொருள்கள் மீதிருந்த வரிகளை நீக்கியது. பவுண்டு தேயிலைக்கு மூன்று பென்ஸ் வரியே விதிக்கப்பட்டது. அதனல் அவ்வரியானது ஆண்டொன்றுக்குப் பிரிட்டனுக்கு 300 பவுன்களே வருமானமளிக்கவல்லதாயிருந்தது. எனினும் அமெரிக்கர் மீது வரிபோடும் உரிமை பிரிட்டனுக்குள்ளது என்னும் உரிமையை

வற்புறுத்த வேண்டிப் பிரிட்டிஷ் அரசாங்கம் தேயிலை வரியை மட்டும் அப்படியேவைத்திருந்தது. இதனால் வெகுண்ட அமெரிக்கர் பிரிட்டனிலிருந்து வரும் தேயிலையை வாங்க மறுத்தனர்.

### 'பாஸ்டன் தேநீர் விருந்து' (1773)

இச்சமயத்தில் பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியானது இந்தியாவில் ஹைதர்அலியோடு போரிட்டதாலும் வங்காளத்தில் ஏற்பட்ட பஞ்சத்தாலும் பணமுடையால் துன்புற்றது. அதற்கு உதவி செய்யும் நோக்கத்துடன் பிரிட்டிஷ் பிரதமரான நார்த் பிரபு 1773-ஆம் ஆண்டு அக்கம்பெனி நேரே தன் தேயிலையை வரியின்றி அமெரிக்காவுக்கு அனுப்புவதற்கு அனுமதியளித்தார். அதனால் தேயிலையின் விலைகுறைந்து கம்பெனியில் தேங்கிக் கிடந்த தேயிலை விற்பனையாக வழி ஏற்படுமென நார்த் பிரபு நினைத்தார் ஆனால் அதை அமெரிக்கர் வேறுவிதமாகப் புரிந்து கொண்டனர். வேண்டுமென்றே பிரிட்டிஷார் ஏதோ சூழ்ச்சி செய்வதாக அமெரிக்கர் நினைத்தனர். ஒவ்வொரு துறைமுகத்திலும் கம்பெனியின் தேயிலைக்குப் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. நியூயார்க் நகருக்கு வந்த தேயிலைக் கப்பல் திருப்பி அனுப்பப்பட்டது. பாஸ்டனில் மக்களின் ஆவேசம் எல்லைகடந்துவிட்டது. 1773-ஆம் ஆண்டு டிசம்பர் 16-ஆம் தேதி இரவு, பாஸ்டன் துறைமுகத்தில் வந்திருந்த ஒரு கப்பலுக்குள் சிவப்பிந்தியர் போன்று வேடம் பூண்ட ஐம்பது அமெரிகர் புகுந்து 343 தேயிலைப் பெட்டிகளை உடைத்து எல்லாச் சரக்கையும் கடலில் எறிந்து விட்டனர். இந் நிகழ்ச்சி 'பாஸ்டன் தேநீர் விருந்து' (Boston Tea Party) எனப்படும்.

### ஃபிலடெல்ஃபியா காங்கிரஸ் (1774)

இந்நிகழ்ச்சியால் வெகுண்ட பிரிட்டிஷ் அரசாங்கம் 1774-ஆம் ஆண்டில் பாஸ்டன் முறைமுகச் சட்டம் (Boston Port Act) ஒன்றை ஏற்படுத்தி அதன்மூலம் அத்துறைமுகத்தை மூடிவிட்டது. அங்கிருந்த சுங்கவரி நிலையம் சேலக்துக்கு மாற்றப்பட்டது. அதேசமயம் மஸாச்சிசெட்ஸ் அரசாங்கச் சட்டம் என்ற ஒரு சட்டத்தால் அந்நகரின் சாசனமானது ரத்துசெய்யப்பட்டது. அதுவும் மன்னர் குடியேற்ற நாடாக (Crown Colony) மாற்றப்பட்டது. மஸாச்சுசெட்ஸுக்கு நேர்ந்தகதியே தமக்கும் நேருமென அஞ்சிய மற்ற மாகாணங்கள் ஃபிலடெல்ஃபியா காங்கிரஸ் Philadelphia) என்னும் கூட்டத்தைக் கூட்டின. அதில் ஜார்ஜியாவைத்தவிர மற்றமாகாணத்தவரின் பிரதிநிதிகள் யாவரும் கலந்து கொண்டனர். வருமானத்துக்காக வரிபோடும் அதிகாரம் ஆங்கிலப் பாராளுமன்றத்துக்கில்லை என அக்காங்கிரஸ் ஒரு தீர்மானம்

நிறைவேற்றியது. மஸாச்சுசெட்ஸ் தண்டனைச் சட்டங்களைக் கண்டித்தும், அமெரிக்கப் பொருள்களைப் பிரிட்டனுக்கு ஏற்றுமதி செய்வதையும், பிரிட்டிஷ் பொருள்களை அமெரிக்காவில் இறக்குமதி செய்வதையும் கண்டித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. பாதுகாப்புக்குழு அமைக்கப்பட்டது. அவசியமான போது ஒரு கணத்துள் ஒன்று கூட வேண்டி 'கணப்படை வீரர்' (Minute Men) குழாம் ஒன்றுக்கு ஆள் சேர்க்கப்பட்டது. எல்லாக் குடியேற்ற நாடுகளும், ஃபிலடெல்ஃபியா காங்கிரஸ் தீர்மானங்களை அமுல் நடத்தலாயின. தீர்மானங்களுக்கு விரோதமாக நடந்து கொண்டவர்கள் கருங்காலிகளாக மதிக்கப்பட்டு மிக இழிவாக நடத்தப்பட்டனர்.

## போர் நிகழ்ச்சிகள்

தனது சட்டங்களை அவமதித்த மஸாச்சுசெட்ஸ் ஓர் எதிரி நாடு எனப் பிரிட்டிஷ் பாராளுமன்றம் அறிவித்தது. அதை அடக்குவதில் பேரரசின் முழுப்பலமும் பயன்படுத்தப்படுமென அது மன்னருக்கு உறுதி கூறியது. போருக்கான ஆயத்தங்கள் எங்கும் நடைபெற்றன. பாஸ்டன் நகரின் சேனைத் தலைவர் கேஜ் (Gage) என்பார் கன்கார்டு (Concord) பட்டணத்திலிருந்த சட்டவிரோதமான தளவாடங்களைக் கைப்பற்ற 800 போர் வீரர் கொண்ட ஒரு படையை அனுப்பினார். இதைக் கவனித்து விட்ட அமெரிக்கர்கள், அமெரிக்கத் திருக்கோயில் கோபுரத்தின் மீது ஏறி, ஒரு விளக்குமூலம் சார்ல்ஸ் நதிக்கப்பாலிருந்த பால்ரெவியர் (Paul Revere) என்னும் வீரனை எச்சரித்தனர். அவ்வீரன் குதிரை மேலேறிக் கிராமம் கிராமமாய்ச் சென்று, குடியானவர்களை ஒன்று திரட்டினான். மறுநாள் காலை அவர்கள் ஒன்றுகூடித் துப்பாக்கிகளால் சுட்டார்கள். இவ்வொலியைக் கேட்ட ஸாம்ஆடம்ஸ் என்பார் 'இந்நாள் இனிய நன்னாள்' என்று கூறினார்.

### பங்கர் குன்றுப் போர்

அமெரிக்கப் படையினர் போதிய பயிற்சியற்றவர்கள். போர்க்கருவிகளும் அவர்களிடத்துப் போதிய அளவு இல்லை. இருப்பினும் அவர்கள் சில நாள்களுக்குள்ளாகவே பாஸ்டன் நகரை முற்றுகையிட்டு விட்டார்கள். 1775-ஆம் ஆண்டு அமெரிக்கக் கண்ட காங்கிரஸ் ஃபிலடெல்பியாவில் கூடியது. அது அமெரிக்காவுக்கு 'ஐக்கியக் குடியேற்ற நாடுகள்' என்ற பெயரையும், பாஸ்டனைச் சூழ்ந்திருந்த படைகளுக்கு 'அமெரிக்கக் கண்டப்

படை' என்ற பெயரையும் சூட்டியது. ஜார்ஜ்வாஷிங்டன் அதன் தளபதியாக்கப்பட்டார். 3500 அவமரிக்க வீரர்களடங்கிய படை ஒன்று ப்ரீட்குன்று, பங்கர் குன்று இரண்டிலும் வந்திறங்கியது. பிரிட்டிஷ் தளகர்த்தர் கேஜ், அப்படையை எதிர்த்துப் போர் புரிந்தார். பங்க்கர் குன்றுப் போரில் அமெரிக்கர் மெச்சத்தக்க வெற்றியைப் பெற்றனர் (1775 ஜூன் 17ஆம் தேதி). பிரிட்டிஷார் 105 பேரையும், அமெரிக்கர் 444 பேரையும் இழந்தனர். இவ்வெற்றியால் அமெரிக்கர் தன்னம்பிக்கை பெற்றனர். நல்ல பயிற்சி பெருத ஒரு படை, தக்க தளவாடங்களின்றியும் பிரிட்டிஷ் படையைத் தோற்கடிக்க முடியுமென்பதற்குப் பங்க்கர் குன்றுச் சண்டை ஒரு நல்ல உதாரணமாய்த் திகழ்ந்தது. பிரிட்டிஷ் படைத்தலைவர் கேஜ் நாடு திரும்பினுர். அவருக்குப் பின் ஹவ் (Howe) என்பார் பிரிட்டிஷ் படைகளுக்குத் தலைமை தாங்கினுர்.

### கனடாப் படையெடுப்பு

பங்க்கர் குன்றுகளில் பெற்ற வெற்றியினுல் நம்பிக்கை யடைந்த அமெரிக்கர்கள் கனடாமீது படையெடுத்தனர். மாண்ட்கோமரி (Montgomery) என்பவர் மாண்ட்ரீல் (Montreal) நகரைக் கைப்பற்றினுர். ஆனுல் அவர் 1775ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் கியூபெக் நகரில் இறந்தார். ஆனுல் கார்லிடென் (Carleton) என்பார் கனடியர்களின் உதவியைக்கொண்டு கியூபெக்கைக் கைப்பற்றினுர். இதன்பின் அமெரிக்கக் காங்கிரஸானது 'ஆலிவ் கிளை விண்ணப்பம்' அல்லது சமாதான விண்ணப்பம் (Olive Branch Petition) ஒன்றைத் தயாரித்து 1775ஆம் ஆண்டுப் பிரிட்டிஷ் மன்னருக்கு அனுப்பியது. அதில், அது போர் நிறுத்தத்தை விரும்பியது. ஜார்ஜ் அந்த விண்ணப்பத்தை மதியாது, புறக்கணித்து விட்டார். உண்மையில் அமெரிக்கர் சமாதானத்தை விரும்பவில்லை. வெளிப்பார்வைக்குப் பிரிட்டிஷாரே சண்டைக்குக் காரணமென உலக்குத் தெரிவிக்கவே அவர்கள் சமாதானத்தை விரும்புபவர்கள்போல் நடித்தனர்.

### சுதந்திர அறிவிப்பு

தெற்கே வர்ஜீனிய மக்கள் டன்மோர் பிரபு என்னும் கவர்னரை வெறுத்தனர். ஏனெனில் இவர் நார்ஃபோக் (Norfolk) என்பவரை எரித்தார்; அடிமைகளை விடுதலை செய்வதாகப் பயமுறுத்தினுர். அடிமைகளையே தங்கள் தோட்ட வேலைகளுக்கு நம்பியிருந்த தோட்ட முதலாளிகள், டன்மோரை ஒழிக்க எண்ணினர். கிளின்ட்டன் (Clinton) என்னும் பிரிட்டிஷ் தளகர்த்தர் சார்லஸ்டனைத் தாக்கித் தோல்வியுற்ருர். தெற்கத்தியர் யாவரும் பிரிட்டனுக் கெதிராக ஒன்று திரண்டனர். சில

உரிமைகளைப் பெறுவதற்காக வென்று போராட்டத்தை ஆரம்பித்த அமெரிக்கர், பிரிட்டிஷ் துருப்புக்களின் நாச வேலைகளாலும், மூன்றும் ஜார்ஜ் மன்னரின் . பிடிவாதத்தாலும் வெறுப்புற்றவர்களாக 1776ஆம் ஆண்டு ஜூலை மாதம் 4ஆம் தேதி 'சுதந்திர



அமெரிக்கச் சுதந்திப் போர் 1776

அறிவிப்பு' (Declaration of Independence) ஒன்றை வெளியிட்டனர். தாமஸ் பெயின் (Thomas Paine) என்பவரால் வெளியிடப்பட்ட 'பொது அறிவு' (Commonsense) என்ற நூலே அவ்வறிவிப்புக்கு மூலகாரணமாகும் அதில் அமெரிக்கா சுதந்திர நாடு என அறிவிக்கப்பட்டதோடு சுதந்திரத்தின் இலட்சியங்கள் சுருக்கமாகவும் ஆணித்தரமாகவும் குறிப்பிடப்பட்டன.

1776 — 1777-இல் போர் நிகழ்ச்சிகள் - சாரடோகா வெற்றி

1776 ஆம் ஆண்டில் ஆங்கிலத் தளகர்த்தர் ஹவ், வாஷிங்டனைப் ப்ருக்லின் (Brooklyn) என்னும் போர்க்களத்தில் தோற்கடித்தார். லாங் ஐலண்ட் பிரதேசம் அவர் கைவசமாயிற்று. எனினும் மூடு பனியில் மறைந்து வாஷிங்டன் தம் படையுடன் தப்பிவிட்டார். ஹவ், நியூயார்க் நகரத்திற்குச் சென்று அதைத் தம்முடைய முக்கியத் தளமாகக் கொண்டார். கடலிலிருந்து பிரிட்டிஷ் கப்பல்களின் உதவியைப் பெற அவருக்கு வசதி ஏற்பட்டது. ஹவ் நான்கு வாரங்களை நியூயார்க் நகரத்திலேயே வீணே கழித்துவிட்டார். அதற்குள் வாஷிங்டன், டிரென்ட்டன் (Trenton), பிரின்ஸ்டன் (Princeton) என்ற இடங்களில் வெற்றி பெற்று நியூஜெர்ஸியை மீட்டார்.

1777ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் தளகர்த்தர்கள் ஒரு புதுத் திட்டத்தை உருவாக்கினர். அதன்படி பர்காய்ன் (Burgoyne) என்னும் தளகர்த்தர் கனடாவிலிருந்து புறப்பட்டுத் தெற்கே வந்து, நியூயார்க்கிலிருந்து கிளிண்ட்டன் தலைமையில் வரும் படைகளோடு ஹட்ஸன் நதிக்கரையில் ஒன்று சேர்ந்து, நியூ இங்கிலாந்திய அமெரிக்கர்களை மற்றக் குடியேற்ற நாட்டு அமெரிக்கர்களினின்றும் பிரித்துவிடவேண்டும் என்பதே அத்திட்டம். அங்ஙனம் பிரித்த பின் ஹவ், ஃபிலெடெல் ஃபியாவைத் தாக்க எண்ணங்கொண்டார். இத்திட்டம் தோல்வியடைந்தது. ஹவ், தளகர்த்தர் வாஷிங்டனைப் பிராண்டிவைன் (Brandywinc) என்னுமிடத்தில் தோற்கடித்துப் ஃபிலெடெல் ஃபியாவைக் கைப் பற்றினர். ஆனால் அவர் தம் வெற்றியைத் தொடர்ந்து, மேலும் முன்னேறி பர்காய்ன் படைகளோடு சேராது, மாரிக் காலத்தில் வீண்காலம் கடத்தி வந்தார். பர்காய்ன் டிக்கோன்டிரோகா ( Ticonderoga ) வைப் பிடித்தார். ஆனால், மேல் உதவி வராத காரணத்தாலும், சிவப்பு இந்தியர்கள் படையை விட்டுப் போய் விட்டதாலும், அவர் 'சாரடோகா' ( Saratoga ) என்னுமிடத்தில் அக்டோபர் 1777இல் அமெரிக்கர்களிடம் சரணடைந்தார்.

பிரெஞ்சு, ஸ்பெயின் உதவி

சாரடோகா வெற்றியானது அமெரிக்கச் சுதந்திரப் போரில் ஒரு புதிய திருப்பத்தை உண்டாக்கியது. அதுவரை வாளாவிருந்த ஸ்பெயினும், பிரான்ஸும் அமெரிக்காவுக்கு உதவி செய்ய முன் வந்தன. எனவே, நார்த்பிரபுவும், சாதாம் எர்லும் சமாதானத்தை விரும்பியபோதுங்கூட அதற்கு வழியில்லாமல் போய்விட்டது.

பிரெஞ்சு அரசு ஏற்கெனவே லாஃபியத் (Lafayett) என்னும் தளகர்த்தரின் சேவைகளை அமெரிக்கருக்கு அளித்திருந்தது. இப் போது ரோச்சம்போ (Rochambau) என்னும் சிறந்த தளகர்த்த ரின் தலைமையில் 6000 போர் வீரர்களை அனுப்ப பிரான்ஸ் தயா ராயிற்று. ஹாலந்து, ரஷ்யா, டென்மார்க், ஸ்வீடன் ஆகிய நாடு கள், 'படையேந்திய நடுநிலைக் கூட்டுறவு' (Armed Neutrality) என்ற ஓர் ஒப்பந்தத்தைத் தம்முள் ஏற்படுத்திக்கொண்டு, தங் களது கப்பல்கள் அமெரிக்காவுக்கு உதவியாகத் தளவாடங்களைத் தாங்கிச் செல்கின்றனவா என்பதைச் சோதிக்கப் பிரிட்டனுக்கு உரிமை இல்லையென்று அறிவித்தனர். இதனால் வெகுண்ட ஆங்கிலேயர் ஹாலந்து மீது படையெடுத்தனர். ஸ்பெயின், ஜிப்ரால்டரை முற்றுகையிட்டது. பிரெஞ்சுக்காரர், மேற்கிந் தியத் தீவுகளைத் தாக்கினர். இந்தியாவில் அவர்கள் ஆங்கிலே யருக்கு விரோதமாக ஹைதருக்கு உதவி செய்தனர்.

போரின் முடிவு - யார்க்டவுன் சரணாகதி

பிரிட்டிஷ் படைகள் அமெரிக்காவின் வடபகுதியில் வெற்றி பெற இயலாமையால், தென்புறத்தில் அமெரிக்கரின் வலிமை யைச் சோதிக்க எண்ணினர். முதலில் மிகவும் பலஹீன நிலையி லிருந்த ஜார்ஜியாவை அவை பிடித்துக்கொண்டு, இராஜ விசுவாசிகளின் உதவியைக்கொண்டு மேலும் முன்னேறுவதெனப் பிரிட்டிஷார் திட்டமிட்டனர். 1778இல் அவர்கள் ஸவானா என்ற கடலோரப் பிரதேசத்தைக் கைப்பற்றினார்கள். 1779 இல் அவர்கள் ஜார்ஜியாவிலும் தென்கரோலினாவிலும் பல பகுதிகளைப் பிடித்தனர். சார்ல்ஸ் டவுன் என்ற முக்கிய துறைமுகப் பட்டினமும் அவர்கள் வசமாயிற்று. சாரடோகாவில் வெற்றி பெற்ற அமெரிக்கத் தளபதி கேட்ஸை கார்ன்வாலிஸ் என்னும் பிரிட்டிஷ் தளகர்த்தர் காம்ட்டன் போர்க்களத்தில் தோற்கடித்தார். அதன் பின் நதானியேல் கிரீன் என்பார் அமெ ரிக்கப்படைகளுக்குத் தளபதியானார். ஆனால் அவரும் 1871இல் கில்ஃபோட் கோர்ட் ஹவுஸில் (Gilford Court House) தோற்றார். அடுத்த ஒன்பது மாதங்களில் மேலும் பல இடங்களிலும் அவருக்குத் தோல்வியே கிட்டியது. ஆனால் பிரிட்டிஷ் படைகளை அங்குமிங்கும் அலையவைத்து அலுப்படையும்படி செய்வதில் அவர் வெற்றி பெற்றார். கடைசியில் அவர் சாரல்ஸ்டவுனையும் ஸவானா வையும் பிடித்தார். கிங்க்ஸ மௌன்டன் போரில் தேசத் தொண்டர் படையொன்று, ஆயிரம்பேர்கொண்ட மன்னரது ஆதரவாளர் படையைத் தோற்கடித்தது. இங்ஙனம் கிரீன், தென்னாட்டில் ஆங்கிலேயருக்கு விரோதமாகப் போரிட்டு அவர்களை அங்கிருந்தும் விரட்டினான்.

வடக்கே, கார்ன்வாலிஸ் என்னும் பிரிட்டிஷ் தளகர்த்தர் யார்க் டவுனில் முகாமிட்டுக்கொண்டு, அங்கே கோட்டை கொத்தளங்களை அமைத்தார். பிரிட்டிஷ் மேல்உதவியை எதிர் பார்த்து அவர் அங்குக் காத்திருந்தார். அச்சமயம் வாஷிங்டன் என்னும் அமெரிக்கத் தளபதி நியூயார்க் நகரில் 6000 பேர் கொண்ட படையைத் திரட்டினர். ரோட்தீவில் 5000 பிரெஞ்சுத் துருப்புகள் இருந்தனர். மேற்கிந்தியத் தீவுகளில் பிரெஞ்சுக் கப்பற்படைத் தலைவர் டெகிராஸே (De Grasse) என்பவர் அமெரிக்கருக்கு உதவி செய்பத் தயாராயிருப்பதாகச் செய்தி அனுப்பினர். இதைப் பயன்படுத்திக்கொண்டு வாஷிங்டன் 16000 பிரெஞ்சு-அமெரிக்கப் போர்வீரர்களடங்கிய ஒரு சேனையுடன் சென்று யார்க்டவுனை முற்றுகையிட்டார். கார்ன்வாலிஸ், யார்க்டவுனிலிருந்து தப்பியோட முடியாதபடி டெகிராஸேயின் கடற்படை தடுத்து நின்றது. வேறுவழியின்றி 1781-ஆம் ஆண்டு அக்டோபர் 19ஆம் தேதி கார்ன்வாலிஸ், வாஷிங்டனிடம் சரணடைந்தார்.

சார்லஸ்டவுனையும் அமெரிக்கர் பிடித்தனர். நியூயார்க்கைத் தவிர மற்ற இடங்கள் யாவும் அமெரிக்கர் வசம் வந்தன. இச் சமயத்தில் நார்த்பிரபு பதவியினின்றும் விலகினர். இதன்பின் இருக்குகள் சமாதானத்தை நாடினர். 1783ஆம் ஆண்டில் இரு நாடுகளுக்கும் வெர்ஸேல்ஸில் சமாதான உடன்பாடு ஏற்பட்டது

**வெர்ஸேல்ஸ் சமாதான உடன்படிக்கை (1783)**
**போரின் விளைவுகள்**

இதன்படி அமெரிக்கச் சுதந்திரத்தைப் பிரிட்டிஷார் ஒப்புக் கொண்டனர். ஸ்பெயினுக்கு மினர்க்காவும், பிளாரிடாவும் கிடைத்தன. பிரான்ஸுக்கு, டொபெகோ, செனீகல் செண்ட் லூசியா, இந்தியாவில் கைப்பற்றிய இடங்கள்யாவும் கிடைத்தன. அமெரிக்காவில் ஓர் கூட்டரசாட்சி ஏற்பட்டது. ஜனநாயகம் அங்கு வளர்ச்சியுற்றது. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் முதலிய பெருங்கொள்கைகள் உலகெல்லாம் பரவின. பிரான்ஸிலும் அயர்லாந்திலும் பிற்காலத்தில் ஏற்பட்ட புரட்சி அமெரிக்கப் புரட்சியின் எதிரொலியாகும். அமெரிக்காவிலிருந்த இராஜ விசுவாசிகள் அனைவரும் கனடாவுக்குச் சென்று அங்கு ஜனநாயகக் கிளர்ச்சி செய்து, பிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்தைக் குறைத்தனர். பிரிட்டனிலும் பல சீர்திருத்தங்கள் ஏற்படுவதற்கு இப்புரட்சி காரணமாயிருந்தது. பிரிட்டிஷ் குடியேற்றநாட்டுக் கொள்கைகளில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. குடியேற்றநாடுகளின் நன்மைக்காகப் பாடுபட்டாலொழிய

அவற்றின் ஒத்துழைப்பைப்பெற இயலாது என்று பிரிட்டிஷார் உணர்ந்தனர். ஆங்கிலத் தோல்விக்குக் காரணமாயிருந்த மூன்றும் ஜார்ஜ், மக்களின் நன்மதிப்பை இழந்தார்.

## ஆங்கிலேயரின் தோல்விக்குக் காரணங்கள்

ஆரம்பத்திலிருந்தே ஆங்கிலேயர்கள் அரைமனத்துடனேயே அமெரிக்கப் போரில் இறங்கினர். தங்கள் சக்தியைப் பற்றி மிகை யாக எண்ணிக்கொண்டு எதிரிகளின் சக்தியைக் குறைத்து எடை போட்ட குறை ஆங்கிலேயரைச் சாரும். நான்கு பட்டாளங்களை அனுப்பினால் அமெரிக்காவை வென்றுவிடலாம் என்று பிரிட்டிஷார் தப்புக் கணக்குப் போட்டனர். அமெரிக்காவுக்கும், இங்கிலாந்துக்கும் இடையில் 3000 மைல்களிருக்கின்றன வென் பதைப் பிரிட்டிஷார் மறந்துவிட்டனர். அவர்களால் சரிவர அமெரிக்காவுக்கு மேல் உதவி அனுப்பமுடியவில்லை. மேலும், பிரிட்டிஷ் படைகள் மிகப் பரந்ததொரு நாட்டைப் பிடிக்க வேண்டியிருந்தது. ஓரிடத்தில் வெற்றி பெற்றுத் திரும்பிய பிரிட்டிஷ் படைகளை, இன்னோரிடத்தில் அமெரிக்கர்கள் தோல்வி யடையச் செய்தனர். மற்றும் வாஷிங்டனைப் போன்ற ஒப்பற்ற தலைவர்கள் அமெரிக்கப் படைகளை வழிநடத்தினர். நாட்டுப் பற்றும், தெளிந்த அறிவும், கம்பீரமும், தைரியமும், பெருந் தன்மையும் நெருக்கடியான நேரத்திலும் மனச்சமநிலையை இழக்காத தன்மையும் கொண்ட வாஷிங்டன் பல தோல்விகளுக் குப்பின் வெற்றியெய்தினார். அப்படிப்பட்ட சிறந்த குணநலன்கள் பெற்ற தளகர்த்தர்கள் பிரிட்டிஷார் பக்கமில்லை. மேலும், பிரிட்டிஷ் தரப்பில் போரிட்ட வீரர்கள், ஏதோ, தம் சொந்தச் சகோததரர்களோடு போரிடுவதைப் போன்று நினைத்தனர். எனவே அவர்கள் வீரமாகப் போரிடவில்லை. இறுதியாக அமெரிக்கரிடம் கப்பற்படை இல்லாத குறையைப் பிரெஞ்சுக் காரரது உதவி நிவர்த்தி செய்தது. பிரான்ஸின் உதவியும் ஸ்பெயினின் உதவியும் அமெரிக்கரின் வெற்றிக்குப் பெரிதும் காரணமாகும்.

# 8. தொழிற்புரட்சியும் விவசாயப் புரட்சியும்

## தொழிற்புரட்சி

தொழிற் புரட்சியின் பொருள்

தொழிற் புரட்சிக்குமுன் இங்கிலாந்தின் நிலைமை—இல்லத் தொழில்முறை (Domestic System)

தொழிற்சாலைமுறை (Factory System): நூற்புத் தொழில் வளர்ச்சி —நூற்கும் ஜென்னி (Spinning Jenny)—நீர்ச்சட்டம் (Water Frame) —மியூல் (Mule)—நெய்யுந் தொழில் வளர்ச்சி—எறிநாடா (Flying Shuttle)—விசைத்தறி (Power Loom)—நீராவிச் சக்தி-ஜேம்ஸ்வாட்டின் இயந்திரம்—இரும்புத் தொழில் வளர்ச்சி—போக்கு வரவுச் சாதன வளர்ச்சி,

தொழிற்புரட்சியின் விளைவுகள்: செல்வ நிலை உயர்வு — ஜனத்தொகைப் பெருக்கம் — வேலையில்லாத் திண்டாட்டம் — பலதீமைகள் — அரசியல் விளைவுகள்.

## விவசாயப் புரட்சி

விவசாயப் புரட்சிக்குமுன் வேளாண்மைமுறை, வேலியில்லா வேளாண் முறை (Open Field System)

நில அடைப்பு முறை (Enclosure System)

நில அடைப்பு முறையின் விளைவுகள்: சமுதாயத்தில் மாற்றம்—மாற்றுப் பயிர் வேளாண்முறை (Rotation of Crops) — ஜெத்ரோ டல் என்பாரின் விதைக்கும் கருவி

கால்நடை அபிவிருத்தி

விவசாயப் புரட்சியின் விளைவுகள்—தானியச் சட்டங்கள்—கில்பர்ட் சட்டம்-ஸ்பீன்ஹாம்லாந்து திட்டம்

## தொழிற்புரட்சி (Industrial Revolution)

## தொழிற்புரட்சியின் பொருள்

பதினெட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும், பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியிலும், பிரிட்டிஷ் தொழில் முறைகளில் வியத்தகு மாற்றங்கள் பல நிகழ்ந்தன. மனிதனே எல்லாத் தொழில்களேயும் செய்வது என்பது மாறி, இயந்திரங்கள் அவற்றைச் செய்வது என்ற முறை ஏற்பட்டது. இயந்திரயுகம் இங்கிலாந்தில் ஏற்பட்டது. இங்ஙனம் தொழில் துறையில் ஏற்பட்ட மாபெரும் மாற்றங்களே 'தொழிற்புரட்சி' என வழங்கப்படுகிறது. இங்குப் புரட்சி என்பது பழையன கழிந்து புதியன புகுதல் என்ற கருத்திலேயே வழங்கப்படுகிறது. புதுமை பூக்குங்கால் பலாத்காரமோ, சண்டையோ எதுவும் ஏற்படவில்லே. மற்றும் அது திடீரென ஏற்பட்டதொரு மாற்றமுமன்று. மெள்ள மெள்ள நாட்டில் விளேந்த அமைதியான தொழில்முறை மாற்றங்களேயே 'தொழிற் புரட்சி' என்ற சொற்றெடர் குறிக்கும்.

## தொழிற்புரட்சிக்குமுன் இங்கிலாந்தின் நிலைமை—இல்லத் தொழில்முறை

பதினெட்டாம் நூற்றுண்டின் இடைப்பகுதிவரை இங்கிலாந்தானது விவசாயத்தையே தனது பெருந்தொழிலாகக் கொண்டிருந்தது. நெசவுத் தொழிலே விவசாயிகள் ஓர் உப தொழிலாகச் கொண்டிருந்தனர். அஃது ஒவ்வொரு வீட்டிலும் நடைபெற்றது. நகரங்களில் அக்காலத்தில் கைத்தொழில்கள் வளரவில்லே. பெரும் மூலதனம் போட்டுக் கைத்தொழிலில் ஈடுபட மக்கள் முன்வரவில்லே. ஏனெனில் வட்டி வாங்குவது பாவம் எனப் பாதிரிமார்கள் கூறிவந்தனர். நகரங்களில் இருந்த ஒரு சில கைத்தொழில்களும் கில்டுகள் என்னும் வாணிகச் சங்கங்களுக்குக் கட்டுப்பட்டிருந்தன. பிரான்ஸிலிருந்து இங்கிலாந்துக்கு ஓடிவந்த பிரெஞ்சு ஹியூக்னேக்கள், ஆங்காங்கே ஆங்கிலேயருக்குப் பட்டுத் துணி நெய்வதையும், லினன் துணி நெய்வதையும் கற்றுத் தந்தனர். இரும்புத் தொழில் ஓரளவு வளர்ச்சி பெற்றிருந்தது. ஆனல் இரும்பை உருக்க வெறும் மரக்கட்டைகளேயே மக்கள் நம்பியிருந்ததால் இரும்புத்தொழில் அதிகம் வளரவில்லே. 1760 ஆம் ஆண்டில் 'கார்ரன்' இரும்புத் தொழிற்சாலே (Carron Iron works) என்னும் தொழில் நிலேயமானது ஸ்டர்லிங் ஷயர் (Stirlingshire) என்னுமிடத்தில் ஏற்பட்டது. இரும்பை உருக்கக் கட்டைக்கரி பயன்படுத்தப்பட்டதால் பல காடுகள் அழிந்தன.

எனவே 18 ஆம் நூற்றாண்டில் கட்டைக் கரி பயன்படுத்துவதை அரசாங்கம் கட்டுப்படுத்தச் சில சட்டங்களை இயற்றியது. எனவே இரும்புத்தொழில் நசிய ஆரம்பித்தது. 1740 ஆம் ஆண்டில், ஆண்டொன்றுக்கு ஒரு சில ஆயிரம் டன் எடையுள்ள இரும்பே உற்பத்தியாக்கப்பட்டது. இந்நிலையில் இரும்பை உருக்க நிலக்கரியைச் சிலர் பயன்படுத்தினர். ஆனால் நிலக்கரியில் கந்தகம் கலந்திருந்ததால் அதனால் உற்பத்தி செய்யப்பெற்ற இரும்பு எளிதில் நொறுங்கிவிடும் தன்மையதாயிருந்தது. 1762 ஆம் ஆண்டில் ஜோசையா வெட்ஜ்வுட் (Josiah Wedgwood) என்பவர் அழகிய மட்பாண்டம் செய்யும் தொழிலை இட்ரூரியாவில் (Etruria) தொடங்கினர். கம்பளியாலான பொருட்களை (Woollengoods) உற்பத்திசெய்யும் தொழிலானது ஆங்காங்கேயிருந்த பண்ணை வீடுகளில் வளர்க்கப்பட்டன. ஒவ்வொரு உழவனும் ஒரு சிறு கம்பளித் தொழிற்சாலையைத் தன் வீட்டிலேயே வைத்திருந்தான். அவனால் நெய்யப்பட்ட பொருள்களை வாங்கிப்போக அவ்வப் போது சில நடுவர்கள் வருவர். கோவேறுகழுதைகளின்மேல் அவர்கள் துணிகளைப் போட்டுக் கொண்டுபோய் பெரிய வியாபாரி களிடம் விற்பர். வியாபாரிகள் அதை உள்நாட்டிலும் வெளி நாட்டிலும், விற்பனை செய்வர். இம்முறை 'இல்லத்தொழில் முறை' (Domestic System) என்று பெயர் பெற்றுள்ளது. இம்முறை யில் பெரும் மூலதனம் யாருக்கும் தேவைப்படவில்லை. நெச வுத்தறி (Loom) ஒன்றுதான் ஒருவன் வாங்க வேண்டிய பொறியாகும். இத்தறிகளால் நெய்யப்பட்ட துணிகள் மிகவும், சொற்பம். அவைகள் எளிதில் விநியோகிக்கப்பட்டன. வேலை யளிப்போருக்கும், வேலையாட்களுக்கும், (Employer and the Employee) நல்ல உறவுமுறை இருந்தது. வியாபாரம் சம நிலையில் எப்போதும் இருந்தது. ஆனால் தொழில் வளர்ச்சிக்கு இம்முறையில் இடமில்லை. நெய்யப்பட்ட பொருள்களின் விலைகள் நடுவர்களால் தீர்மானிக்கப்பட்டன. அந்நடுவர்கள், உழவர்களை ஏமாற்றுவது சகஜமாயிருந்தது. உழவர்களும் அந்நடுவர்களை ஏமாற்றினர். நடுவர்களிடம் பெற்ற கம்பளி பூராவையும் பலர் நெய்வதில்லை. குறிப்பிட்ட காலத்தில் பலர் நெய்து கொடுப்ப தில்லை. தொழிலாளிகளைக் கட்டாயப்படுத்த வழியின்றி அவர்கள் தவித்தனர்.

## தொழிற்சாலை முறை

### நூற்புத் தொழில் வளர்ச்சி

மேற்சொன்ன 'இல்லத்தொழில் முறை' 18 ஆம் நூற் றூண்டின் பிற்பகுதியில் ஏற்பட்ட பல புதுமைப் படைப்புகளால்

(Inventions) 'தொழிற்சாலை முறையாக' (Factory System) விரிவுற்றது. குடியேற்ற நாட்டுப் பெருக்கத்தால் ஆங்கிலேயரின் வியாபாரம் முன்னேறியது. பிறநாடுகளிலெல்லாம் பிரிட்டிஷ் துணிமணிகளுக்கு நல்ல கிராக்கி இருந்தது. எனவே உற்பத்தியைப் பெருக்கும்படி வியாபாரிகள் தொழிலாளிகளை முடுக்கினர். நெசவாளிகள் வேகமாகத் துணிகளை செய்து தள்ளினர். ஆனால் அவர்களுக்குப் போதிய நூல் கிடைக்கவில்லை. ஆறுபேர் நூற்ற நூலை ஒரு நெசவாளி எளிதில் நெய்துவிட்டான். நூல்கள் பெரும்பாலும் பெண்களாலேயே நூற்கப்பட்டன. பெரும்பாலும் மணமாகாத பெண்டிரே நூற்புத் தொழிலிலீடுபட்டிருந்ததால் 'நூற்போர்' என்ற பொருள்படும் 'ஸ்பின்ஸ்டர்' என்ற சொல் லானது இன்றைக்கும் ஆங்கிலமொழியில் மணமாகாத முதிய மங்கையைக் குறிக்கிறது. எனவே நூற்புத் தொழிலில் ஒரு புரட்சி தேவைப்பட்டது. அப்புரட்சியை, ஜேம்ஸ் ஹார்க்ரீவ்ஸ் (James Hargreaves) என்ற நெசவாளி 1764 ஆம் ஆண்டில் தோற்றுவித்தார். அவர் 'நூற்கும் ஜென்னி' (Spinning Jenny) என்ற ஒரு நூற்பு இயந்திரத்தைப் புதிதாகச் செய்தார். அவ்வியந்திரம் பதினொரு நூற்கதிர்களை (Spindles) ஒரே சமயத்தில் சுழற்றியது. அதனால் உற்பத்தி செய்யப்பட்ட நூல் மெல்லியதாக இருந்தது. ஆனால் அவை உறுதியுடையனவாக இல்லை. அக்காரணத்தால், அதைக் குறுக்குவாட்டில் நெய்யப்படும் ஊடுஇழையாகவே (Woof) பயன்படுத்த முடிந்தது. நீட்டவாக்கில் தறிக்குப் போடும் பாவுநூலாக (Warp) அதைப் பயன்படுத்த முடியவில்லை. முதலில் இந்த ஜென்னியானது பருத்திநூல் நூற்புக்கே பயன்படுத்தப்பட்டது. நாளடைவில், அதாவது 1767 ஆம் ஆண்டளவில் அது கம்பளநூல் நூற்பதற்கும் பயன்படுத்தப்பட்டது. ஜென்னியைக் கைகளாலேயே இயக்க முடிந்ததாலும், சிறு வீடுகளில் அவற்றை வைத்துக் கொள்ள முடிந்ததாலும், பழைய 'இல்லத் தொழில் முறை' மாறுமல் அப்படியே இருந்தது. ஆனால், நூல் உற்பத்தி மட்டும் பெருகியது.

1769-இல் ரிச்சர்டு ஆர்க்ரைட் (Richard Arkwright) என்பார் 'நீரின் ஆற்றலால் இயக்கக்கூடிய ஓர் நூற்பு இயந்திரத்தைப் புதிதாக ஆக்கினர். அதில் இரண்டிரண்டாக இயங்கும் பல உருளைகள் இருந்தன. அவ்வுருளைகளினூடே நூல் செலுத்தப்பட்டது. ஒவ்வொரு ஜதை உருளையும் அதற்குப் பின்னுலிருந்த உருளைகளைவிடக் கொஞ்சம் மெதுவாகச் சுற்றும்படி அப்பொறி அமைக்கப்பட்டிருந்தது. இப்பொறியைக் கையால் இயக்குதல் முடியாததாலும், வீடுகளில் அமைக்க இயலாததாலும் அதற்கெனத் தனித்தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டன. நீர்ச்சட்டம் (Water

Frame) என்ற இப்பொறியானது மொறமொறப்பானதும், உறுதியும் கொண்ட நூலை உற்பத்தி செய்ததால் அதைப் பாவு நூலாகப் பயன்படுத்த முடிந்தது. 1771 ஆம் ஆண்டில் ஆர்க்ரெட் என்பார் தம் நண்பர் ஸ்டிரட் (Strutt) என்பாருடன் கூடி டெர்பிஷயரின் கண்ணிருந்த கிராம்போர்டு (Cramford) என்னு மிடத்தில் ஒரு தொழிற்சாலையை ஏற்படுத்தினர். அங்கே மேஜோடு களுக்கான நூல் நூற்கப்பட்டது. அந்நூலை மேஜோடுகளாக ஆக்கியளித்தவர் ஸ்டிரட் என்பவராவார். 1776 ஆம் ஆண்டில் சாமுவேல் கிராம்ப்டன் (Samuel Crompton) என்பார் மியூல் (Mule) என்னும் நூற்பு இயந்திரத்தைப் படைத்தார். அதில் ஜென்னி, நீர்ச்சட்டம் என்ற இரு பொறிகளிலும் காணப்பட்ட நுட்பங்கள் இணைக்கப்பட்டன. எனவே நூல்கள் மென்மையாகவும் அதே சமயம் உறுதியாகவும் நூற்கப்பட ஏதுவாயிற்று. மெல்லிய மஸ்லின்கள் இங்கிலாந்தில் நெய்யப்பட்டன. முன்பெல்லாம் அவ்வித மஸ்லின்களுக்கு ஆங்கிலேயர் இந்தியரின் கைகளையே எதிர்பார்த்திருந்தனர். 18 ஆம் நூற்றாண்டுக்குப் பின் இங்கிலாந்து மஸ்லின் துணிகளை வேற்று நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்ய ஆரம்பித்தது. நூற்றுக்கணக்கான நூற்கதிர்களை ஒரே சமயத்தில் இயக்கக்கூடிய பெரிய இராக்கத மியூல்கள் வெகு விரைவிலேயே ஏற்பட்டன. ஜென்னியும் புழக்கத்தில் இருந்து கொண்டுதானிருந் தது. ஜென்னியால் நூற்கப்பட்ட நூல் ஊடுஇழையாகவும், மியூலால் நூற்கப்பட்ட நூல் பாவுநூலாகவும் பயன்படுத்தப் பட்டன.

### நெய்யுந் தொழில் வளர்ச்சி

நூல் கண்டுகள் ஏராளமாய் உற்பத்தி செய்ய வழி கண்ட ஆங்கிலேயர், அதன்பின் அவற்றைப் பயன்படுத்தக் கூடிய பெரிய நெய்யும் பொறிகளை ஆக்குவதில் முனைந்தனர். 1733 ஆம் ஆண்டிலேயே ஜான் கே (John Kay) என்பார் எறிநாடா (Flying Shuttle) என்னும் நெய்யும் இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். ஆனால் அப்போது போதிய நூற்கண்டு உற்பத்தி செய்யும் சாதனங்களில்லாத காரணத்தால் அது ஒன்றும் பயனுடைய தாக இல்லை. 1785 ஆம் ஆண்டில் விசைத்தறி (Power-loom) என்னும் நெய்யும் இயந்திரத்தைக் கார்ட்ரைட் (Cartwright) என்பார் படைத்தார். இப்பொறியின்மூலம் தறியானது கையினால் இயக்கப்படுவதற்குப் பதிலாக விசையின்மூலம் உந்தப்பட்டது. ஆரம்பத்தில் தாறுமாறாக இருந்த இவ்வியந்திரமானது நாளடை வில் செம்மையாக்கப்பட்டது. துணிகளைச் சலவை செய்யவும், சாயங்கட்டவும், பல பொறிகள் படைக்கப்பட்டு, நெசவுத் தொழில் மேன்மேலும் இங்கிலாந்தில் வளரலாயிற்று. நெய்தல்

தொழிலில் முதலில் பருத்திதான் அதிகமாகப் பயன்படுத்தப் பட்டது. ஏனெனில் மேற்கிந்தியத் தீவுகளிலிருந்தும், அமெரிக்கா விலிருந்தும் பருத்திதான் ஏராளமாகக் கிடைத்தது. ஆனல் ஆட்டுரோமம் அவ்வளவு அதிகமாகக்கிடைக்கவில்லை. 19 ஆம் நூற்றுண்டில் ஆஸ்திரேலியாவிலிருந்து ஆட்டுரோமம் ஏராளமாய்க் கிடைத்தபின்பே கம்பள நெசவுத் தொழில் இங்கிலாந்தில் வளரலாயிற்று.

**நீராவிச்சக்தி**

பொறிகளை இயக்குவதற்கு ஆரம்பத்தில் நீர் விசை (Water-Power) மட்டுமே பயன்படுத்தப்பட்டது. எனவே நீரோடைகளுக் கருகில் கிராமப்புறங்களில்தான் முதலில் தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பட்டன. நீர்விசை எப்போதும் ஒரே மாதிரியாகக் கிடைப்பது அரிதாயிருந்தது. சிலசமயம் அஃது அளவுக்கு மீறிக் கிடைத்தது. இந்த இக்கட்டுக்களை எல்லாம் நீக்க நீராவிச் சக்தி பிற்காலத்தில் பயன்படுத்தப்பட்டது. ஆன் இராணியார்காலத்தில் நியூகோமன் (Newcomen) என்பார் சுரங்கங்களிலிருந்து தண்ணீரை வெளிப்படுத்த ஒரு நீராவி இயந்திரத்தைப் பயன்படுத்தினர். ஆனல், அது மிகவும் எளிமையானதாக இருந்தது. 1782 ஆம் ஆண்டில் ஜேம்ஸ்வாட் (James Watt) என்பார் ஒரு நீராவி இயந்திரத்தை உண்டாக்கினர். நியூகோமன் பொறியைப்போல் இவரது இயந்திரம் அதிக எரிபொருளை (Fuel) உட்கொள்ள வில்லை. சிக்கனமுடையதாகவும் திறமை மிக்கதாயும் அது விளங்கிற்று. எனவே தண்ணீரைச் சுரங்கங்களிலிருந்து வெளி யேற்றவும், பொறிகளை இயக்கவும், வாட்டின் நீராவி இயந்திரம் பெரிதும் பயன்படுத்தப்பட்டது. இப்போது நகரப் புறங்களில் தொழிற்சாலைகள் ஏற்பட வசதி ஏற்பட்டது. முக்கியமாக நிலக்கரி அதிகம் கிடைக்கும் நகரங்களிலெல்லாம் தொழிற்சாலைகள் பல ஏற்பட்டன. லங்காஷையர், யார்க்ஷையர் போன்ற தொழிற் பட்டணங்கள் தோன்றலாயின. கிராமத்தொழிற்சாலைகள் பலவும் மூடப்பட்டன.

**இரும்புத் தொழில் வளர்ச்சி**

மேற்சொல்லப்பட்ட பல்வேறு பொறிகளும் இரும்பால் செய்யப்பட்டனவாதலால், இரும்புத்தொழில் வளர்ச்சியடைய வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது. இரும்பை உருக்கக் கட்டைக்கரி பயன்படுத்துவதை அரசாங்கம் தடுத்தது. நிலக்கரியைப் பயன்படுத்தியபோது அதில் கந்தகம் கலந்திருந்த

தால் நல்லபயன் ஏற்படவில்லை. 1730 ஆம் ஆண்டில் ஆப்ரஹாம் டார்பி (Abraham Darby) என்பார், சுட்ட நிலக்கரியைக் (Coke) கொண்டு இரும்பை உருக்கினால் அவ்விரும்பு நிலைகெடாது நன்ரு யிருக்கும் என்ற உண்மையைக் கண்டார், பல்லாண்டுகள்வரை அவர் தாம்கண்ட உண்மையை இரகசியமாகவே வைத்திருந் தார். கடைசியில் அது யாவர்க்கும் தெரிய வந்தது. அதன்பின் இரும்புத்தொழிலில் ஒரு பெரிய புரட்சி ஏற்பட்டது. நிலக்கரியும் இரும்பும் சேர்ந்தாற்போல் கிடைக்கும் இடங்களான வேல்ஸ், வடஇங்கிலாந்து போன்ற பிராந்தியங்களில் இரும்புத்தொழில் சிறப்புற்று ஓங்கலாயிற்று.

இரும்பையும், நிலக்கரியையும் சுரங்கங்களிலிருந்து தோண்டி யெடுப்பதில் பல இடர்ப்பாடுகள் இருந்தன. ஆழமான சுரங்கங் களில் ஊறிக்கொண்டேயிருந்த நீரை வெளியேற்றுவது ஒரு பெரிய சாதனையாயிருந்தது. நீராவி இயந்திரங்களால் அப்பிரச்சினை ஒரு வாறு தீர்ந்தது. சுரங்கங்களில் ஆவிகளின் செறிவால் சிலசமயம் வெடிவிபத்து ஏற்படுவதுண்டு. இவ்வபாயத்தைத் துடைக்க 1815 ஆம் ஆண்டில் சர் ஹம்ப்ரி டேவி (Sir Humphry Davy) என்பார் 'அபாயத்தவிர் விளக்கு' (Safety Lamp) ஒன்றை உருவாக்கினர். அதைக்கொண்டு சுரங்கத்தில் அபாயமான இடங்களை முன்னதாகவே கண்டுபிடித்துத் தொழிலாளிகள் தப் பினர். சுரங்கித்திலிருந்து உலோகத் தாதுப்பொருளை வெளிக் கொணரப் பெண்டிரும், பிள்ளைகளும் பெரிதும் பயன்படுத்தப் பட்டனர். கயிறு கொண்டு தாதுப்பொருள் நிறைந்த கலன்களை வெளியிலிழுப்பதால் பணவிரயம் அதிகமாவதைப் தடுக்க 1839 ஆம் ஆண்டில் கம்பிக் கயிறு அதற்காகப் பயன்படுத்தப்பட்டது. நிலக்கரியானது இரும்பை உருக்கவும், நீராவி இயந்திரங்களில் நீராவியை உண்டாக்கவும் பயன்பட்டது. நிலக்கரித் தாரிலிருந்து பல சாயப்பொருள்களும் செய்யப்பட்டன. அதனல் சாயத் தொழிலும் நன்கு வளர்ச்சியுற்றது.

**போக்குவரவுச் சாதன வளர்ச்சி**

தொழிற் புரட்சியைத் துரிதப்படுத்தவும் ஊக்குவிக்கவும் போக்குவரவுச் சாதனங்களின் வளர்ச்சி பெரிதும் தேவைப்பட்டது, அத்தேவையையும் ஆங்கில அறிஞர்கள் பூர்த்தி செய்யத் தவற வில்லை. 18 ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் இங்கிலாந்தின் பாதைகள் மிகக் கேவலமான நிலையிலிருந்தன. பாதைகள் உச்சி யில் மிக உயர்ந்தும் ஓரங்களில் தாழ்ந்தும் இருந்ததால் கோச்சு வண்டிகள் பாதையின் நடுவிலேயே செல்லவேண்டியிருந்தன. ஒரே தடத்தில் வண்டிகள் பல்லாண்டுகளாக ஓடியதால், வண்டித்

தடங்கள் குழிவிழுந்து கிடந்தன. மாரிக்காலத்தில் அக்குழிகளில் சேறும் சகதியும் நிறைந்து கிடந்ததால் போக்குவரவு மிக அசௌகரியமாயிருந்து. கோச்சுவண்டிகளில் போவதைவிடப் பிரயாணிகள் குதிரைகள்மீது செல்வத்தையே நல்லதெனக் கருதினர். வியாபாரச் சாமான்கள்கூடக் கூட்டங்கூட்டமாகச் சென்ற குதிரைகள்மூலமும் அனுப்பப்படலாயின. பாதைகளைச் செப்பனிடுவதை அரசாங்கம் தனது பொறுப்பாகக் கருதவில்லை. இரண்டாம் சார்லஸ் காலத்தில் தான் அரசாங்கம் பாதைகளின் நலத்தில் சிறிது கவனம் செலுத்தியது. அப்போதுங்கூடத் தல அரசுகளே பாதைகளைக் கவனிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி செய்யப்பட்டன. தல அரசாங்கங்கள் டர்ன்பைக் பொறுப்பாட்சிக் குழுக்களை (Turnpike Trusts)அமைத்துப் பாதைகளைச் செப்பனிடும் பணியை அவற்றின்பால் ஒப்படைத்தன. அக்குழுக்கள் ஆங்காங்கே பாதைகளில் சுங்க நிலையங்களை ஏற்படுத்திப் பாதைகளைப் பயன்படுத்துவோரிடம் கட்டணம் வசூலித்தன. கட்டணங்கள் சில சமயம் மிக அதிகமாயிருந்தன. மேலும் பெருவழிகளை அவைகள் செப்பனிட்டனவேயன்றி நாட்டின் மூலைமுடுக்குகளை இணைத்த சிறுவழிகளைக் கவனிக்கவில்லை.

19 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இங்கிலையில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. டெல்போர்டு (Telford) என்னும் செல்வரும், ரென்னி (Rennie) என்பாரும் ஸ்காட்லாந்தில் நூற்றுக் கணக்கான மைல்களுக்குப் பாதையமைத்துத் தந்தனர். 1200 பாலங்கள் அவர்களால் கட்டப்பட்டன. 1815 ஆம் ஆண்டில் மெக்காடெம் (Macadam) என்ற அறிஞர் சிறுசிறு ஜல்லிகளைப் பயன்படுத்திப் பாதைகளைக் கெட்டிப்படுத்தும் முறையைக் கண்டு பிடித்தார். பாதைகளின் முகப்புகள் மிக உயரமாயிருப்பதை அவர் குறைத்தார். அதனல் வண்டிகள் பாதைகளின் பல பாகங்களிலும் செல்ல முடிந்தது. பாதைகளின் நடுப்பாகம் மட்டும் தேய்ந்து குழிவிழுந்து போவது இம்முறையால் தடுக்கப்பட்டது.

பாதைகள் நன்கு அமைக்கப்பட்டதோடு அவற்றின்மீது ஊர்ந்து சென்ற ஊர்திகளின் நிலையும் 19 ஆம் நூற்றாண்டில் பெரிதும் முன்னேற்றமடைந்தது. 1800 ஆம் ஆண்டளவில், ரயில் தண்டவாளங்களின்மீது ஓடுகின்ற டிராம் வண்டிகள் இங்கிலாந்தில் பயன்படுத்தப்பட்டன. டிராம் வண்டியைப் படைத்தவர் அவுட்ராம் என்னும் அறிஞராவார். 1825 ஆம் ஆண்டளவில் நீராவியால் இயக்கப்பட்ட ரயில் வண்டிகள் பழக்கத்துக்கு வந்தன. ஸ்டீவன்ஸென் என்பார் அவ்வாண்டில் ஸ்டாக்டன் டார்லிங்டன் ரயில்பாதையைத் தோற்றுவித்தார். நிலக்கரியும், இரும்பும்

வெகு துரிதமாக இடம்விட்டுஇடம் எடுத்துச் செல்லப்படுவதற்கும், வியாபாரப் பண்டங்களை நாடெங்கும் கொண்டு செல்லவும் ரயில் வண்டிகள் பெரிதும் பயன்பட்டன. தொழில்கள் வாயு வேகத்தில் வளரலாயின.

ரயில் வண்டிகள் 19 ஆம் நூற்றாண்டிலேயே இங்கிலாந்துக்குள் வந்தன. 18 ஆம் நூற்றாண்டில் துரிதமான போக்குவரவுச் சாதனங்களாகத் திகழ்ந்தவை கால்வாய்களேயாகும். கால்வாய்களின் உபயோகத்தை யாவர்க்கும் முதன்முதலில் இங்கிலாந்தில் வெளிப்படுத்தியவர் பிரிட்ஜ்வாட்டர் கோமகனவர் (Duke of Bridgewater). அவர் வொர்ஸ்லியில் (Worsley) இருந்த தமது நிலக்கரிச் சுரங்கங்களினின்றும் நிலக்கரியை மான்ச்செஸ்டர் நகருக்குக் கொண்டுவரவேண்டி ஒரு துரிதமான சாதனத்தை வகுத்துத் தரும்படி தமது பொறியியல் வல்லுநரான ஜேம்ஸ் பிரிண்ட்லி (James Brindley) யைக் கேட்டுக்கொண்டார். அதற்கேற்ப அந்நிபுணர் 1759 ஆம் ஆண்டில் பிரிட்ஜ்வாட்டர் கால்வாயை வெட்டினர். இதனல் நிலக்கரியைக் கொண்டுவருவதில் பெரிதும் சிக்கனம் ஏற்பட்டது. நிலக்கரியின் விலை குறைந்தது. பிரிட்ஜ்வாட்டர் கோமகன் அதனல் பெருத்த இலாபமடைந்தார். அதைக்கண்ட பலரும் கால்வாய்களை ஆங்காங்கே வெட்டினர். நாடு முழுவதும் கால்வாய்களால் இணைக்கப்பட்டன. இதனல் தொழில்வளம் பெருகியது. கச்சாப் பொருள்களைத் தொழிற்சாலை நகர்களுக்கு எடுத்துச் செல்லவும், பொறிசெய்பொருள்களைத் துறைமுகங்களுக்கும், நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் எடுத்துச் செல்லவும் இக்கால்வாய்கள் பெரிதும் உதவியாயிருந்தன.

## தொழிற்புரட்சியின் விளைவுகள்

**செல்வநிலை உயர்வு**

இங்ஙனம் பல புதிய பொறிகள் படைக்கப்பட்டமையானும், போக்குவரவுச் சாதனங்களாலும் இங்கிலாந்தில் பல தொழில்களும் விறுவிறு என வளர்ந்தன. இவ்வளர்ச்சியால் ஆங்கிலேயரின் சமுதாய, அரசியல், பொருளாதார வாழ்க்கையில் பெருத்த மாறுதல்கள் தோன்றின. நாட்டின் செல்வநிலை பெரிதும் உயர்ந்தது. இங்கிலாந்தில் உற்பத்தியான பொருள்களுக்கு அமெரிக்காவிலும், இந்தியாவிலும் பெருத்த கிராக்கி ஏற்பட்டதால் இங்கிலாந்தின் ஏற்றுமதி வியாபாரம் பெருகியது. 1700 ஆம் ஆண்டிலிருந்து 1850 ஆம் ஆண்டுக்குள் இங்கிலாந்தின் ஏற்றுமதி ஒன்றுக்குப் பத்து மடங்காகப் பெருகியது. இங்கிலாந்தின் கப்பற்

புடையின் உதவிகொண்டு அதன் வியாபாரக் கப்பல்கள் உலகின் மூலைமுடுக்குகளுக்கெல்லாம் பண்டங்களை எடுத்துச் சென்று விற்பனை செய்ய முடிந்தது. பிரிட்டனில் வந்து குவிந்த செல்வத்தை கொண்டே ஆங்கிலேயர், பிரெஞ்சுப் புரட்சிப் போர்களிலும், நெப்போலியப் போர்களிலும் ஈடுபட்டு வெற்றிகரமாக வெளிவர முடிந்தது. மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கெல்லாம் கடன் கொடுத்து அவற்றை நெப்போலியனது அடக்குமுறை ஆட்சியினின்றும் காப்பாற்ற இங்கிலாந்தால் முடிந்ததென்றால் அதற்குத் தொழிற்புரட்சியே பெருமளவுக்குக் காரணமாகும். விவசாய நாடாயிருந்த இங்கிலாந்து தொழிற்புரட்சிக்குப்பின் பொறிவழித் தொழில் மயமான நாடாக மாறியது.

**ஜனத்தொகைப் பெருக்கம்.**

தொழிற்புரட்சியின் விளைவாக நாட்டின் ஜனத்தொகை பெருகிற்று. வாழ்க்கை வசதிகள் அதிகரித்த காரணத்தால் இங்கிலாந்தில் இறப்புக் குறைந்து பிறப்பு அதிகமாயிற்று. 1750ஆம் ஆண்டு பிறப்பிறப்புக்கணக்குப்படி ஆறு மிலியனாயிருந்த இங்கிலாந்தின் மக்கட்தொகை 1851 ஆம் ஆண்டு பன்னிரண்டு மிலியனாகஉயர்ந்தது. ஜனத்தொகை செறிவிலும் தொழிற்புரட்சி ஒரு மாற்றத்தை உண்டுபண்ணியது. அதுகாறும் பிரிட்டனின் தெற்குப்பாகமும் கிழக்குப்பாகமும்தான் நெருக்கமான ஜனத்தொகையுடைய பிரதேசங்களாயிருந்தன. ஆனால் தொழில்வளர்ச்சிக்கான இரும்பும் நிலக்கரியும் மிகுதியும் கிடைக்கப்பெற்ற வடபகுதியும் .மேற்குப்பகுதியும் ஜனத்தொகை மிகுந்த இடங்களாக மாறின. மற்றும் அதுவரை நாட்டுப்புறங்களில் மிகுதியாய் வசித்து வந்த மக்கள் தொழிற்புரட்சிக்குப் பின் நகரங்களில் மிகுதியும் குடியேறி வதியலாயினர்.

**வேலையில்லாத் திண்டாட்டம்.**

தொழிற் புரட்சியால் பொருள்களின் தரம் உயர்ந்தது. அவை ஒரே மாதிரியாகவும், கச்சிதமாகவும் ஆக்கப்பட்டன. அவற்றின் விலையும் மலிந்தது ; நுகர்வோர் பெரிதும் நலமுற்றனர். ஆனால் பல பேர் செய்யும் வேலையை ஓர் இயந்திரம் செய்தால் நாட்டில் ஆரம்பத்தில் வேலையில்லாத் திண்டாட்டம் உண்டாயிற்று. வேலையிழந்த பலர் இயந்திரச் சாலைகளைத் தாக்கினர். 1810 ஆம் ஆண்டிலிருந்து 1820 ஆம் ஆண்டுக்குள் லட்டைட் கலவரங்கள் (Luddite Riots) என்ற பெயரில் பல கலகங்கள் தோன்றின. ஆனால் நாளடைவில் எல்லாருக்கும் வேலை கிடைத்தது. பொருள்கள் மலிவாதனால், தேவை பெருகிற்று. அத்தேவையைப் பூர்த்தி செய்யத் தொழில்கள் பல வகையிலும் பெருக்கமடைந்தன. அவற்றுக்கு ஏராளமான வேலை

யாட்கள் தேவையாயிருந்தனர். இயந்திரங்களை உற்பத்தி செய்வதிலும் பலபேர் ஈடுபட்டனர். இங்ஙனம் வேலையில்லாத் திண்டாட்டம் நாளடைவில் ஒழிந்தது.

### பல தீமைகள்

அக்காலத்தில் அரசாங்கமானது ஆடம்ஸ் என்பாரின் 'நாடுகளின் செல்வம்' (Wealth of Nations) என்ற நூலில் விவரிக்கப்பட்டிருந்த தலையிடாக் கொள்கையை (Laissez Faire Theory) எல்லாத்துறைகளிலும் கடைபிடித்து வந்தது. அதன் காரணமாய்ப் பல தீயபலன்கள் விளைந்தன. எலிஸபெத் இராணி காலத்திய தொழிற்பயிற்சிச் சட்டங்கள் நடைமுறையில் கைவிடப்பட்டன. சிறுவர்களும், பெண்டிரும் ஏராளமாகச் சுரங்கங்களிலும், ஆலைகளிலும், வேலைக்கமர்த்தப்பட்டனர். அவர்கள் அங்கே நாளொன்றுக்குச் சில சமயங்களில் பதினுன்கு மணிநேரம் வேலை வாங்கப்பட்டனர். அதிக வேலை, குறைந்த ஊதியம் என்ற குறைபாடு தொழிற்சாலைகள் எங்கணும் காணப்பட்டது. தொழிலாளர்கள், சுகாதார வசதியில்லாத இருட்டு அறைகளில் வேலை செய்ய நேர்ந்ததால் அவர்களின் உடல்நலம் சீர்கெட்டது. நாளடைவில் தொழிலாளிகளும், முதலாளிகளும் பகையாளிகளாக மாறினர். சோஷலிஸம் அல்லது பொது உடமைக் கொள்கையானது இங்கிலாந்தில் தோன்ற ஆரம்பித்ததே தொழிற்புரட்சியினுல்தான் எனக் கருதலாம்.

### அரசியல் விளைவுகள்

தொழிற்புரட்சி அரசியல் துறையையும் பெரிதும் பாதித்தது. இங்கிலாந்தில் வெகுகாலமாகவே நிலவுடைமையுள்ளவர்களே வாக்குரிமைப் பெற்றிருந்தனர், தொழிற்புரட்சியால் பல பழைய பரோக்களிலிருந்த மக்கள் அவைகளைவிட்டு நீங்கி, நகரங்களில் வந்து குடியேறினர். இங்ஙனம் பல தொழிற்சாலைப் பட்டணங்கள் தோன்றின. ஆளில்லா ஊர்களுக்குப் பிரதிநிதித்துவமிருக்க ஆள் நெருக்கமிக்க தொழிற்பட்டணங்களுக்குப் பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவம்இல்லை. எனவே தேர்தல் தொகுதிகளும், வாக்குரிமையும் சீர்திருத்தப்பட வேண்டுமென்ற கிளர்ச்சி 19 ஆம் நூற்றுண்டில் தோன்றலாயிற்று. அக்கிளர்ச்சியை நிலக்கிழார்கள் எவ்வளவோ எதிர்த்தும் கடைசியில் தொழிலாளிகளே வெற்றி பெற்றனர்.

# விவசாயப்புரட்சி
# Agrarian Revolution

## விவசாயப் புரட்சிக்கு முன் வேளாண்மை முறை

பதினெட்டாம் நூற்றுண்டில் இங்கிலாந்தின் விவசாயத் துறையில் ஏற்பட்ட மாபெரும் மாறுதல்களும், அதன் விளைவாக ஏற்பட்ட விவசாய முன்னேற்றமும் சேர்ந்து விவசாயப் புரட்சி என்னும் பெயர் பெறுகின்றன. பதினெட்டாம் நூற்றுண்டின் இடைப் பகுதிவரை ஆங்கிலேய விவசாயம் மிகப் பிற்போக்கான நிலையிலேயே இருந்தது. வேலியில்லா வேளாண்மைமுறை (Openfield System) என்ற பண்டைய முறையிலேயே விவசாயம் பெரும்பாலும் நடைபெற்றுவந்தது. அதன்படி ஒவ்வொரு கிராமத்திலுமிருந்த விவசாய நிலங்கள் மூன்று பெருவயல் வெளிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு பெருவயல் வெளியும் ஓர் ஏக்கர் அல்லது அரை ஏக்கர் அளவுள்ள சிறுவயல்களாகப் பிரிக்கப்பட்டன. கிராமத்திலிருந்த நிலக்கிழார்களுக்கு இம்மூன்று பெருவயல்களிலும் சிறுசிறு வயல்கள் பல சொந்தமாயிருந்தன. ஒவ்வோர் ஆண்டிலும் மூன்று பெருவயல்களுள் இரண்டு விவசாயம் செய்யப்படும்போது ஒன்று தரிசாகக் கிடக்கும். விவசாயம் செய்வதால் இழந்துபோன சத்தை அந்நிலம் தரிசாகக் கிடக்கும்போது மீண்டும் பெற்றுக்கொள்ளும். விவசாயம் செய்யப்படும்முறை இங்கிலாந்தில் மத்திய காலத்திலிருந்து ஒரே மாதிரியாகவே இருந்தது. ஒரு சில பழக்கங்களே எங்கும் கையாளப்பட்டன. எப்போது விதை விதைப்பது, எப்போது அறுப்பது, எப்போது நிலத்தை உழுவது என்பதெல்லாம் வழிவழியாக வந்த மரபுப்படியே நடைபெற்றன. ஒவ்வொரு கிராமத்திலும், ஆடுமாடுகளை மேய்ப்பதற்காக ஒரு பொதுப்புல்வெளியும், விறகு வெட்டிக்கொள்வதற்காக ஒரு காடும் இருக்கும்.

ஒவ்வொரு கிராமச் சமுதாயமும் தனித்தனியே தன்னிறைவு (Self Sufficiency) பெற்றுத் திகழ்ந்தது. அதற்கு வேண்டிய கருவிகள், வீட்டுச் சாமான்கள் முதலியன அந்தந்தக் கிராமத்திலேயே செய்யப்பட்டன. கிராமவாசிகள் அநேகமாகத் தங்களுக்குச் சொந்தமான குடிசைகளிலேயே வாழ்ந்தனர். சிலர் ஒரு சிறு தொகையை வாடகையாகச் செலுத்தினர். பல குடியானவர்கள் நிலங்களைத் தமக்கே சொந்தமாக உடைய சுதந்திரமானியதாரர்களாயிருந்தனர் (Free Holders). வேறு சிலர் நிலமானிய முறைப்படி பிரபுக்களிடமிருந்து நிலங்களைப் பெற்று உழுதுவந்த பத்திர

மானியதாரர்கள் (Copy Holders). இவர்கள் நிலமானிய முறை ஒழிந்தும்கூடப் பழைய பிரபுக்களுக்கு அத்தகையதோர் சிறு தொகையை வாடகையாகச் (Rent) செலுத்தி வந்தனர். இன்னும் பலர் குத்தகைக்கு நிலங்களை உழுத குத்தகைச் சாகுபடியாளர்கள் (Lease Holders). இவர்கள் யாவரும் தங்களுக்கு வேண்டிய துணியைத் தாங்களே நெய்து கொண்டார்கள். விவசாயத்தை மட்டும் அவர்கள் நம்பி வாழவில்லை. நெசவுத் தொழிலால் அவர்கள் ஓரளவு வருமானம் பெற்றுவந்தனர். எனவே வேலையில்லாத் திண்டாட்டம் உழவர்களிடையே ஏற்பட வழியில்லாமல் இருந்தது.

வேலியில்லாவேளாண்மை முறையில் பல குறைபாடுகள் இருந்தன. ஒவ்வோர் ஆண்டிலும் கிராமத்திலிருந்த மூன்றில் ஒரு பகுதி நிலங்கள் தரிசாகக் கிடக்க நேரிட்டதால், வேளாண்மையின் அளவு பெரிதும் குறைந்தது. ஒவ்வொரு குடியானவனுக்கும் சொந்தமான நிலங்கள் பல்வேறிடங்களில் சிதறிக் கிடந்ததால் அவன் வெகுதூரம் நடந்துசென்று அவற்றைப் பயிரிட வேண்டியிருந்தது. அதனுல் காலம் விரயமானதோடு, உழவர்களின் உழைப்பும் வீணுயிற்று. எல்லோரும் குறிப்பிட்ட பண்டைய மரபுப்படியே சாகுபடி செய்யவேண்டியிருந்ததால், புதிய சோதனைகளைச் செய்ய யாரும் முன்வரவில்லை. அப்படியே முன்வந்தாலும் அதைக் கடைப்பிடிக்கக் கிராமத்தாரின் அனுமதி கிடைப்பது அரிதாயிருந்தது. கிழங்குவகைப் பயிர்களும், செயற்கைப் புல்லும் வளர்ப்பது வழக்கமில்லையாதலால் கால்நடைகள் தீனியின்றி வாடின. நிலங்களுக்கு எருவிடும் வழக்கமும் அவற்றைத் துப்புரவு செய்யும் பழக்கமும் குடியானவர்களிடம் காணப்படவில்லை. நீர்ப்பாசன வசதிகள் மிகவும் குறைவாகவே இருந்தன. வயல்களைச் சுற்றியும் வேலியில்லாத காரணத்தால் அறுவடைக்குப் பின் ஆடு மாடுகள் தாராளமாய் வயல்களுக்குள் நுழைந்து சேதம் விளைத்தன. இங்ஙனம் பல இடர்ப்பாடுகளில் சிக்கி நசிந்துக்கொண்டிருந்த விவசாயத் தொழிலில் பதினெட்டாம் நூற்றுண்டில்தான் ஒரு சில மாற்றங்கள் நிகழ்ந்தன.

நாளாக ஆக மக்கட் தொகையின் எண்ணிக்கையும் பெருகவே உணவுப் பொருள்களின் தேவையும் அதிகப்பட்டது. உணவுப் பொருள்களின் விலையும் அதனுல், உயர்ந்தது. அதற்கேற்ப அதிக உற்பத்தி செய்து அதிக இலாபமடைய ஒவ்வொரு குடியானவனும் விரும்பினுன். மேலும், நகர்ப்புறங்களில் கைத்தொழில் வளர்ச்சியால் குடியானவர்கள் நெசவுத் தொழிலால் இலாபமடைய வழியில்லாமல் போய்விட்டது. நெசவுத் தொழிலில் வந்த வரும்படியையும் சேர்த்து அவர்கள் நிலங்களிலேயே சம்பாதிக்க விரும்பினர்.

## நில அடைப்பு முறை

விளைச்சலைப் பெருக்கி உணவுப் பற்றுக்குறையைத் தீர்க்க வேண்டுமானால், ஒவ்வொருவருக்கும் சொந்தமான நிலங்கள் பல இடங்களில் சிதறிக் கிடக்காமல் ஒரே இடத்தில் குவிந்திருக்க வேண்டுமென்பதை அறிஞர்கள் உணர்ந்தனர். ஒருவனுடைய நிலங்கள் ஒரே இடத்தில் இருந்தால் அவன் அதை வேலியிட்டு நல்ல முறையில் வேளாண்மை செய்ய முடியும். ஆனால், அதை எப்படிச் செய்வது? கிராம மக்களே தங்களுக்குள் தாமாகவே ஓர் ஏற்பாடு செய்துகொண்டு அதன்படி நிலங்களைப் பிரித்துக்கொள்ளலாம். நார்த் பிரபு அவ்வித வாய்ப்பினைப் பல கிராமங்களுக்குத் தந்தும் அவைகள் தாமே தம் நிலப் பிரச்சினையைத் தீர்த்துக்கொள்ள முன்வரவில்லை. எனவே பாராளுமன்றம் அதில் தலையிடவேண்டியிருந்தது. மூன்றும் ஜார்ஜ் காலத்தவரான ஆர்தர் யங் (Arthur Young) என்னும் விவசாயக்குழுச் செயலாளர் (Secretary of Agricultural Board) 1767-இல் நாட்டைச் சுற்றிப் பார்த்துவிட்டு நிலங்கள் வேலி அடைக்கப்பட்டாலொழிய விவசாயம் வளராது என்பதை உணர்ந்தார். அவரது முயற்சியால் பல இடங்களில் நிலங்கள் வேலியிடப்பட்டன. 1760 ஆம் ஆண்டு முதல் 1800 ஆம் ஆண்டுக்குள் 1500 நில அடைப்புச் சட்டங்கள் (Enclosure Act) பாராளுமன்றத்தில் நிறைவேறின. அதன்மூலம் ஏறக்குறைய மூன்று மிலியன் ஏக்கர்கள் வேலியிடப்பட்டன. வேலியில்லா வேளாண்மை மாய்ந்தது. எங்குப் பார்த்தாலும் முட்புதர் வேலிகள் (Hedges) நாட்டுப்புறங்களில் காணப்பட்டன.

## நில அடைப்பு முறையின் விளைவுகள்

**சமுதாயத்தில் மாற்றம்**

நில அடைப்புச் சட்டங்களை செயற்படுத்த ஆணையாளர்கள் (Commissioners) ஒவ்வொரு கிராமத்துக்கும் அனுப்பப்பட்டனர். அவர்கள் ஒவ்வொரு குடியானவனுக்கும் பல்வேறிடங்களில் சொந்தமாக இருந்த நில அளவுக்கு இணையாக ஒரே இடத்தில் நிலங்களைத் தந்து அதை வேலியிட்டு அடைத்துக்கொள்ளும்படி செய்தனர். அவர்கள் சட்டப்படி குடியானவர்களுக்குச் சொந்தமாயிருந்த நிலங்களையே மேற்சொன்னபடி பிரித்தனர். சட்டப்படிக்கின்றி தொன்றுதொட்டு வரும் மரபையொட்டிக் குடியானவர்கள் அனுபவித்துவந்த மேய்ச்சல் நிலத்திலும், காடுகளிலும் அவர்களுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. அவைகள் கிராமப் பிரபுக்களுக்கே சொந்தமாகிவிட்டன. எனவே குடியானவர்களுக்கு வேலியடைப்பு

முறையால் நஷ்டமேயொழிய இலாபமேற்படவில்லை. பல குடியானவர்களுக்குத் தங்கள் நிலங்களுக்கு வேலி கட்டிக்கொள்வதற்கும் போதிய பணவசதியில்லை. பெருத்த அளவில் விவசாயம் செய்யவும், அவர்களுக்கு மூலதனம் இல்லை. கால்நடைகளை மேய்ப்பதற்குப் புல்வெளியில்லாமல் அவர்கள் தவித்தனர். இந்நிலையில் குடியானவர்கள் பலர் தங்கள் நிலங்களை விற்றுவிட முன்வந்தார்கள். அக்காலத்தில் பாராளுமன்றத்தில் உறுப்பினராவதற்குத் தகுதியுள்ளவர்கள் நிலச்சொந்தக்காரரேயாவர். ஒரு கவுண்டியின் பிரதிநிதியாவதற்கு ஆண்டொன்றுக்கு 600 பவுன் வருமானமளிக்கக் கூடிய நிலத்துக்கும், பரோவின் பிரதிநிதியாவதற்கு ஆண்டொன்றுக்கு 300 பவுன் வருமானமுள்ள நிலத்துக்கும், கவுண்டி மாஜிஸ்திரேட்டாயிருப்பதற்கு 100 பவுன் வருமானமுள்ள நிலத்துக்கும் ஒருவர் சொந்தமுள்ளவராயிருக்கவேண்டும். அக்காலத்தில் சமுதாயத்தில் ஏற்றம்பெற விரும்புபவர்கள் நிலங்களைப் பெற வேண்டியது இன்றியமையாததாயிருந்தது. எனவே வாணிகத்தால் வளம்பெற்ற பல புதுப் பணக்காரர்கள் சமூகத்தில் தங்கள் நிலையை உயர்த்திக்கொள்ளவேண்டி மேற்சொன்ன நிலைமையைப் பயன்படுத்திக்கொண்டு நிலங்களை ஏராளமாக வாங்கிப் போட ஆரம்பித்தனர். நாட்டின் முதுகெலும்பெனத் திகழ்ந்த யோமென்கள் என்ற சிறுநிலக்கிழார்கள் (Yeomen) கூட்டம் கிராமப் புறங்களில் குறைந்தது. அவர்கள் தங்கள் நிலங்களை விற்றுவிட்டு நகர்ப்புறங்களுக்குச் சென்றுவிட்டாரகள். அங்கே அவர்கள் சிலகாலம், கையில் நிலம் விற்ற பணமிருக்கும்வரை, உல்லாசமாக வாழ்ந்தபின் சாதாரணத் தொளிலாளிகளாக மாறினர். வேறுசில விழிப்புள்ள யோமென்கள் நிலம்விற்ற பணத்தைக்கொண்டு சிறு தொழிற்சாலைகளை நிறுவிப் பணம் திரட்டினர். வேறு சிலர் தங்களது பரம்பரைத் தொழிலை விட்டுவர மனமின்றி நிலத்தில் கூலி வேலைசெய்து வயிறு வளர்த்தனர். அதிலேயே நல்ல முயற்சியுள்ளவர்கள், 200-300 ஏக்கர்களைக் குத்தகைக்கு எடுத்துச் சாகுபடி செய்து பணம் திரட்டினுர்கள். அவர்களுக்குக் குத்தகைச் சாகுபடியாளர் (Tenant Farmers) எனப் பெயர். இங்ஙனம் நாட்டுப்புறங்களில் ஸ்கொயர்கள் என்னும் பெருநிலக்கிழார், குத்தகைச் சாகுபடியாளர், கூலியாட்கள் என்ற மூன்று வகுப்பினர் தோன்றினர்.

**மாற்றுப்பயிர் வேளாண்முறை**

நில அடைப்பு முறையால் மேற்கூறியபடி உடனடியாகச் சில தீமைகள் விளைந்தாலும் நாளடைவில் அது நன்மைகளைப் பயந்தது, ஒரே இடத்தில் பெரும் பண்ணைகளிருந்ததால் விவசாயத்தில் பல சோதனைகளை நிகழ்த்த வாய்ப்பு ஏற்பட்டது. அச்சோதனைகளால் புதிய வேளாண்முறைகள் கண்டுபிடிக்கப்பட்டன. நிலங்களைத்

தரிசாகப் போட்டு வைக்கும் பழக்கம் கைவிடப்பட்டது. அதற்குப்பதிலாக மாற்றுப்பயிர்வேளாண்முறை (Rotation of Crops) வழக்கத்துக்கு வந்தது. வால்போலின் மைத்துனரான டவுன் செண்ட் பிரபுவே அம்முறையை முதன் முதலாகக் கையாண்டார். அவர் அரசியலிலிருந்து ஓய்வு பெற்றபின் 1730ஆம் ஆண்டு முதல் விவசாயத்தில் தமது கவனத்தை எல்லாம் செலுத்தினர். கிழங்குப் பயிர்களை நிலத்தில் விளைப்பதன்மூலம் மண்ணின் வளம் அதிகமாகிறது என்னும் உண்மையை அவர் கண்டுபிடித்தார். எனவே நிலத்தைத் தரிசாகப் போடுவதற்குப் பதிலாக அதில் கிழங்குப் பயிர்களைச் சாகுபடி செய்ய ஆரம்பித்தார். முதல் ஆண்டில் மணப்புல்லையும் (Clover), மூன்ருவது ஆண்டில் பார்லியையும், நான்காம் ஆண்டில் கிழங்குப் பயிரையும் ஒரு நிலத்தில் விளைப்பதால் அதன் சத்துக் குறைவதில்லை என்பதை அவர் மெய்ப்பித்துக் காட்டினர். இம்முறையால் கால்நடைகளுக்கு வேண்டிய தீவனம் ஏராளமாய்க் கிடைத்தது. மாரிக்காலத்தில் உணவின்றிப் பல கால்நடைகள் மாண்டு போவது இம்முறையால் தடுக்கப்பட்டது. டர்னிப் என்ற கிழங்கு வகையைப் பயிரிடுவதால் நிலத்தின் செழுமை காக்கப்படுகிறது என்று மெய்ப்பித்ததால் டவுன் செண்ட் பிரபுவுக்கு ‘டர்னிப் டவுன்செண்ட் (Turnip Townshend) என்ற பெயர் ஏற்பட்டது.

ஜெத்ரோ டல் என்பாரின் விதைக்கும் கருவி

மாற்றுப்பயிர் முறையோடு வேறு பல நூதன முறைகளும் விவசாயத்துள் புகுத்தப்பட்டன. ஜெத்ரோ டல் (Jethro Tull) என்பார் ஒருபுதிய விதைவிதைக்கும் இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். அந்த இயந்திரமானது நிலத்தில் துவாரம் செய்து, ஒவ்வொரு துவாரத்திலும் ஒரு விதையை ஊன்றிப் பின் அதன்மீது மண்ணைத் தூவிற்று. விதைகள் சேதமின்றி ஒழுங்காக விதைக்கப்பட்டன. அதற்குமுன் குடியானவன் ஒரு தட்டில் விதைகளை எடுத்துக்கொண்டுபோய் நாற்புறமும் கண்டபடி வீசுவான். அதனுல் பல விதைகள் நாசமாகிவிடும். ஒரு சிலவே முளைக்கும் டல் என்பாரின் கருவி விவசாயத்தில் சிக்கனத்தை வளர்த்தது.

## கால்நடை அபிவிருத்தி

கால்நடை அபிவிருத்தியிலும் பலர் கவனம் செலுத்தினர். மாற்றுப்பயிர் வேளாண்முறையால் கால்நடைகளுக்கு நல்ல தீவனம் கிடைத்தது. ராபர்ட் பேக்வெல் (Robert Bakewell) என்னும் லீசெஸ்டர் உழவர் விஞ்ஞான முறையில் ஆடுகளை வளர்க்கும்

முறையைக் கையாண்டு, அவற்றின் எடையை மிகவும் பெருக்கினர். டர்ஹாம் நகரக் காலிங் சகோதரர்கள் மேற்படி முறையை மாடுகள் வளர்ப்பில் கையாண்டு நல்ல பலனைப் பெற்றனர். பரிசு பெற்ற ஓர் எருதின் எடை 1710இல் 370 பவுண்டாக இருந்தது. 1795இல் 800 பவுண்டாக அதிகரித்தது. இங்ஙனம் நிலங்களில் எருவிடுதல், புதிய விவசாய முறைகளைக் கையாளல் போன்ற முறைகளால் விவசாயம் வளர்ந்தது. அரசர்களும் இது போன்ற முறைகளுக்கு ஆதரவளித்தனர். மூன்றாம் ஜார்ஜ் தமது விண்ட்சார் அரண்மனைக்கருகிலேயே ஒரு மாதிரிப் பண்ணையை உண்டாக்கினர், அவருக்கு 'வேளாண் ஜார்ஜ்' (Farmer George) என்ற சிறப்புப் பெயரும் ஒன்றுண்டு. ஆர்தர்யங் என்பாரும் பிரான்ஸில் பிரயாணம் செய்து அதனால் பெற்ற அனுபவத்தைத் தம் நாட்டில் பயன்படுத்தினர். தாமஸ் கோக் என்ற லீஸெஸ்டர் பிரபு ஒரு சிறந்த வேளாண் பிரபு ஆவர். அவர் கரம்பாகக் கிடந்த தமது மூதாதையர் சொத்தான ஹோல்க்காம் தோட்டத்தைப் பண்படுத்தி, நல்ல எருவிட்டுக் கோதுமை விளையும் நன்னிலமாக மாற்றினர். விவசாய சம்பந்தமான புதிய யோசனைகளைக் கேட்பதும், புதிய முறைகளைக் கையாள்வதுமே அவரது தொழிலாயிருந்தது. அரை மிலியன் ஸ்டர்லிங்கை அவர் தம் நிலங்களில் செலவழித்தார். அதற்குப் பன்மடங்கு மேலான பலனையும் அவர் அந்நிலங்களிலிருந்து பெற்றார்.

## விவசாயப் புரட்சியின் விளைவுகள்

விவசாயப் புரட்சியால் பலனடைந்தவர்கள் பெரும் நிலச்சுவான்தார்களேயாவர். ஆனால் சிறு நிலக்கிழார்களின் நிலை வரவரக் கேவலமாயிற்று. நாம் ஏற்கனவே பார்த்தபடி பலர் பட்டணங்களுக்குச் சென்று விட்டனர். வேறு சிலர் நில அடிமைகளாய் வாழ்ந்தனர். அவர்கள் மிருகத்திலும் கேடான வாழ்க்கையை நடத்தினர். நிலச்சொந்தக்காரருக்கும், நிலமில்லாக் கூலியாளுக்கும் மலைக்கும் மடுவுக்குமுள்ள வேறுபாடு ஏற்பட்டது. பழைய நிலமானியமுறை ஒழிந்தது. சுதந்திர மானியதாரர்கள், பத்திரமானியதாரர்கள், உழவர்கள் என்கிற வகுப்புகள் மாறி நிலப்பிரபு, குத்தகைச் சாகுபடியாளர், கூலியாள் என்ற வகுப்புகள் தோன்றின.

நெப்போலிய யுத்தங்களால் மக்களின் தொல்லைகள் அதிகரித்தன. தானியங்களின் விலைவாசிகள் ஏறின. தானியங்களின் விலைவாசிகளைக் கட்டுப்படுத்தத் தானியச் சட்டங்கள் (Corn laws) பாராளுமன்றத்தால் ஏற்படுத்தப்பட்டன. 1815ஆம் ஆண்டில் அப்படி ஏற்பட்ட ஒரு சட்டமானது வெளி

நாட்டுத் தானியம் இங்கிலாந்தில் இறக்குமதியாவதைத் தடுத்தது. இங்கிலாந்தின் சாகுபடியாளர்கள் வெளிநாட்டுப் போட்டியினின்றும் காக்கப்பட்டனர். அதனால் நிலப்பிரபுக்கள் நல்ல இலாபமடைந்தனரேனும், சாதாரண மக்கள் பெரும் அவதிக்குள்ளானார்கள். விலை அதிகமாயிருந்ததால் வெறும் ரொட்டியைக்கூடச் சாதாரண மக்கள் ஒரு போகப் பொருளாகக் (Luxury) கருதினர்.

நாளுக்கு நாள் இரவலர் தொல்லை நாட்டில் அதிகரித்தது. எலிஸபெத் இராணியாரின் இரவலர் சட்டப்படி ஒவ்வொரு பாரிஷும் அதனதன் வறியோருக்கு வகைசெய்யவேண்டும் என்பதாகி விட்டதால், பிற பாரிஷுகளிலிருந்து யாரும் புதிய பிச்சைக்காரர்கள் வந்து, ஒரு பாரிஷுக்குள் புகுவதைத் தடுக்கச் சட்டங்கள் ஏற்பட்டன. ஒவ்வொருவனும் எந்த இடத்தைச் சார்ந்தவன் என்பதை நிருணயிக்கக் குடியிருப்பு நிருணயச் சட்டங்கள்(Acts of Settlement) ஏற்பட்டன. வேலையில்லாதாரின் கூட்டம் அதிகரித்ததால் அவர்களுக்கு உதவித் தொகை அளிக்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்துக்கு ஏற்பட்டது. 1782ல் ஏற்பட்ட கில்பர்ட் சட்டம் (Gilbert Act) ஆங்காங்கேயுள்ள அமைதிகாண் நீதிபதிகளின் சிபாரிசுப்படி வேலையற்றோர்க்கு வாழ்க்கைப்படி (Allowance) அளிக்க வகை செய்தது. 1795ஆம் ஆண்டில் அமைதிகாண் நீதிபதிகள் பலர் ஸ்பீன்ஹாம்லாண்டு (Speenhamland) என்னுமிடத்திற்கூடி வறியோருக்கு அவர்களது குடும்பப் பெருக்கத்துக்கேற்ப வாழ்க்கைப்படி வழங்க வேண்டுமெனத் தீர்மானம் செய்தனர். இம்முறையை ஸ்பீன் ஹாம்லாண்டுச் சட்டத்தால் பாராளுமன்றம் நாடனைத்துக்கும் கையாண்டது. இதனால் பிச்சைக்காரரின் எண்ணிக்கையும், சோம்பேறிகளின் கூட்டமும், பெருகியதேயன்றிப் பிச்சைக்காரர் தொல்லைக்கு ஒரு மாற்று ஏற்படவில்லை என்பது கருதற்பாற்று.

# 9. பிரெஞ்சுப் புரட்சியும் இங்கிலாந்தும்

**புரட்சிக்காரணங்கள்:**

அரசியல். சமூக, பொருளாதார சூழல்கள் — பதினாறாம் லூயியின் பலஹீன ஆட்சி — எஸ்டேட்ஸ் ஜெனரலின் கூட்டம்.

**புரட்சியின் போக்கு:**

பாஸட்டில் சிறை முற்றுகை, 'ரொட்டி ஊர்வலம்' 1789—தேசிய சபையின் சேவை National Assembly (1791)—மனிதனின் உரிமைகளறிவிப்புப பத்திரம் Declaration of the Rights of Man (1791)—சட்டசபையின் கூட்டம் Legislative Assembly (1791-92)—பில்னிட்ஸ் அறிக்கை—அயல் நாட்டார் தலையீடு—தேசிய கன்வென்ஷன் சபை (1792-1795) செப்டம்பர் படுகொலை September Masssacre [1792]—வால்மிப் போர்க்களம [1792] —பயங்கர ஆட்சி Reign of Terror(1793-94)பொதுக்காவற்குழு Committee of Public Safety-

**பிரெஞ்சுப் புரட்சி இங்கிலாந்தைப் பாதித்த விதம்.**

கருத்துப் புரட்சி—புத்துணர்ச்சிக் கவிதைகள் Romantic Poems:—ஃபாக்ஸ், பர்க், டாம்பெயின்—அரசியல் விளைவு—பொருளாதார விளைவு.

**பிரெஞ்சுப் புரட்சி போர்கள்:**

இங்கிலாந்து பிரஞ்சுப் புரட்சிப் போர்களில் கலந்து கொள்ளக் காரணங்கள் —முதல் கூட்டுறவு (1796-1795) First Coalition — டூலோங் துறைமுகப் போர்(1793) புகழ் பெற்ற முதல் ஜூன் போர் (1794) - காம்போஃபார்மியோ சமாதானம்(1797)—வின்செண்ட் முனைப்போர்(1797)—காம்பர்டவுன் வெற்றி (1797) — பிரமிட்டுகள் போர் நைல் நதி வெற்றி (1798) இரண்டாவது கூட்டுறவு (1798—1800] மாரெங்கோ போர் [1800]—லூனவில் உடன்பாடு[1801] —மால்டா வெற்றி [1800] நேப்பில்ஸ்—படை தரித்த நடுநிலைமைக் கூட்டுறவு Armed Neutrality [1801]—கோப்பன் ஹேஹன் சண்டை [1801] — ஆமியாங் சமாதானம் 1802.

மன்னர்களின் கொடுங்கோன்மையை எதிர்த்துக் குடிமக்கள் நடத்திய புரட்சிகளுள் பிரெஞ்சுப் புரட்சியானது தலைசிறந்து விளங்குகிறது. ஏனெனில் அப்புரட்சிதான் ஐரோப்பாவில் முதன் முதலாக மக்களின் அடிப்படை உரிமைகளுக்காகவும், ஜனநாயகக் கொள்கைகளுக்காகவும் பாடுபட்டது. 'சுதந்திரம்' சமத்துவம், சகோதரத்துவம்' என்ற முப்பெருங் கொள்கைகளே அப்புரட்சியின் மூச்சாகத் திகழ்ந்தன. அக்கொள்கையில்

முழுமையாக வெற்றி பெறப் புரட்சியானது உதவாவிட்டாலும், அவை மக்கள் கருத்தில் நன்கு வேரூன்ற அது பெரிதும் உதவிற்று. நாளடைவில் அவை நல்ல ஜனநாயக மரங்களாய் ஐரோப்பாவெங்கும் செழித்துத் தழைத்தோங்கின. அப்புரட்சியிலிருந்து ஐரோப்பாவில் வல்லரசுக் காலம் மாய்ந்து வரையறைக்குட்பட்ட கோனாட்சியின் சகாப்தம் தொடங்குகிறது.

## புரட்சிக்குக் காரணங்கள்

### அரசியல், சமூக, பொருளாதார ஊழல்கள்

பிரான்ஸில் புரட்சி தோன்றுவதற்குக் காரணமாயிருந்தவை அங்கு அரசியல், சமூக, பொருளாதாரத் துறைகளில் புரையோடிக்கிடந்த, ஊழல்களேயாகும். பிரெஞ்சு மன்னர்கள் கட்டற்ற வல்லரசிற்கு ஓர் உதாரணமாய்த் திகழ்ந்தார்கள். பாராளுமன்றத்தின் ஆட்சி இங்கிலாந்தில் வளர்ந்து கொண்டிருந்த காலத்தில் பிரான்ஸில் கொடுங்கோலாட்சி தலைவிரித்தாடியது. பிரெஞ்சுப் பாராளுமன்றமான எஸ்டேட்ஸ் ஜெனரல் (Estates General) என்னும் சபையானது 1614ஆம் ஆண்டிலிருந்து கூட்டப்படவே இல்லை. மன்னர் அச்சபையின் அனுமதியின்றியே சட்டங்களைச் செய்தார்; தமக்குப் பிரியமானவர்களுக்கே எல்லா அரசியல் பதவிகளையும் வழங்கினார். (லெட்டர்ஸ் டெகேட்ச்சட்). (Letters de Catchet) என்னும் ஆணைப்பத்திரங்களின் மூலம் அரசர்கள் யாரையும் காரணமின்றிச் சிறைசெய்து நெடுங்காலம் துன்புறுத்தலாம். பிரபுக்களும் அப்பத்திரங்கள் மூலம் தங்களுக்குப் பிடிக்காதவர்களை சிறைசெய்து வந்தனர். பேச்சுரிமை, எழுத்துரிமை போன்ற உரிமைகள் மக்களுக்கில்லை. மத ஊழல்களைத் தாக்கி எழுதிய வால்ட்டேர் (Voltaire) என்னும் அறிஞர் தலைமறைவாகவே வாழ்ந்துவர நேர்ந்தது. இங்ஙனம் அரசியல் துறையில் மக்கள் சுதந்திரம் சிறிதுமின்றி வாடினர். சமூகத்துறையில் ஏற்றத்தாழ்வுகள் மல்கிக் கிடந்தன. பிரபுக்களுக்கும், சாதாரண மக்களுக்கும், மலைக்கும் மடுவுக்குமுள்ள வேறுபாடு இருந்தது. மதப்பிரபுக்களும் லௌகிகப் பிரபுக்களும் செல்வத்திலும் சுகபோக வாழ்க்கைகளிலும் மூழ்கிக் கிடந்தனர். ஆனால், சாதாரணக் குடியானவர்களோ, வறுமையாலும் நோயாலும் வாடிக்கிடந்தனர். குடியானவர்கள் திருச்சபைக்கு டைத் (Tithe) என்ற வரியையும், பிரபுக்களுக்குப் பலவித நிலமானியக் கட்டணங்களையும், அரசருக்கு உடைமை வரி, உப்பு வரி போன்ற வரிகளையும் செலுத்த வேண்டியிருந்தது. பிரபுக்களது நிலங்

களில் அவர்கள் சில காலத்துக்குக் கூலியின்றி உழைக்க வேண்டி யிருந்தது. இத்தனை அல்லல்களுள் சிக்கித் தவித்த குடியானவர் களுக்கு எவ்வித அரசியலுரிமைகளுமில்லை. அரசியல் சலுகை களும், உத்தியோகங்களும், பிரபுக்களின் தனியுரிமைகளாய் விளங்கின. அவர்களுக்குப் பணி செய்து கிடப்பதொன்றே பாமர மக்களின் கடமையாயிருந்தது. சமயத் துறையிலும் ஊழல்கள் மலிந்திருந்தன. சமயப் பிரபுக்கள், லௌகிகப் பிரபுக்களைப் போலவே நிலச்சுவான்தார்களாய், சுகபோக வாழ்க்கையில் மூழ்கிக்கிடந்தனர். பக்தி, தூய்மை, ஒழுக்கம் இவை அவர்களி டம் மருந்துக்கும் காணப்படவில்லை. சாதாரணக் குருமார்கள் குடியானவர்களைப் போன்றே வறியர்களாய் உரிமையற்று வாழ்ந்தனர். இவ்வூழல்களை எல்லாம் மக்களுக்கு எடுத்துக் காட் டியவர்கள். ரூஸோ, வால்ட்டேர். போன்ற அறிஞர்களாவர். அவர்கள் புரட்சிக் கருத்துக்களை மக்களது உள்ளங்களில் தூவி னர். வால்ட்டேர் மதத்துறையில் காணப்பட்ட ஊழல்களைத் தம் எழுத்து வன்மையால் கடுமையாகச் சாடினர். ரூஸோ, மக் களின் உரிமைகளை மதிக்காத மன்னர்களைப் பதவியிலிருந்து நீக்கி விடல் நியாயமேயென்றும், மக்களாட்சியே மாட்சிமை பொருந்தியதென்றும், 'தமது சமுதாய ஒப்பந்தம்' (Social Contract) என்ற நூலில் கூறினர். நாட்டின் பொருளாதரச் சீர் கேடுகளைக் கலைக்களஞ்சிய எழுத்தாளர்கள் (Encyclopaedists) எடுத்து விளம்பினர். இக்கருத்துக்களால் உந்தப்பட்ட பிரான் ஸின் நடுநிலை வகுப்பாரும் ஒரு சில பிரபுக்களுமே புரட்சியின் தலைவர்களாய் விளங்கினர்.

### பதினாறும் லூயியின் பலஹீன ஆட்சி

பிரான்ஸில் புரட்சி ஏற்பட்டபோது அங்கு ஆட்சிபுரிந்தவர் பதினாறும் லூயி என்னும் அரசராவார். அமெரிக்கச் சுதந்திரப் போரில் அவர் காலத்தில் பல பிரெஞ்சு வீரர்கள் கலந்து கொண்டனர். அதனால் நாட்டின் பொருளாதார நிலை சிரழிந் தது. அதே சமயத்தில் அமெரிக்கப் புரட்சிக் கருத்துக்களைக் கொண்ட வீரர்கள் பிரான்ஸுக்கு வந்து, அமெரிக்கரைப்போல் பிரெஞ்சுக்காரரும் சுதந்திரம் பெற வேண்டும் என்ற எண் ணத்தை மக்களிடையே வளர்த்தனர். இந்தச் சூழ்நிலையில் மன் னரும் பொறுப்பற்ற முறையில் நடந்து வந்தார். அவரது மனைவி யான மரியா அந்துவானெத் (Maria Antoinette) என்பவர் மட் டுக்கு மீறிய ஆடம்பரங்களீடுபட்டு நாட்டின் பணத்தை விரயம் செய்தார். மன்னர் நிபுனர்கள் பலரை மந்திரிகளாய் நியமித்து நாட்டின் செல்வநிலையைச் சீர்திருத்த முயன்றார். அம்மந்திரி கள், உயர் வகுப்பார்மீது வரிபோட வேண்டுமெனக் கூறியதால்

யாவரும் பதவியினின்றும் நீக்கப்பட்டனர். பொருள் தட்டுப்பாடு உச்ச நிலையை 1789ஆம் ஆண்டளவில் அடைந்து விட்டது. வேறு வழியின்றி லூயி, மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய எஸ்டேட்ஸ் ஜெனரல் என்ற சபையை 1789ஆம் ஆண்டு மே மாதத்தில் கூட்டினர்.

எஸ்டேட்ஸ் ஜெனரலின் கூட்டம் 1789

எஸ்டேட்ஸ் ஜெனரல் கூட்டம் வெர்ஸேல்ஸில் கூடியது. அதில் அப்போது பிரபுக்கள், மதகுருமார்கள், சாதாரண மக்கள் ஆகியோருக்குத் தனித்தனியே ஒவ்வொரு சபை இருந்தது. மூன்று சபைகளும் தனித்தனியே கூடித்தான் சட்டங்களைச் செய்வது வழக்கம். ஒவ்வொரு சபைக்கும் ஒவ்வொரு வாக்குதான் உண்டு. தனிப்பட்ட உறுப்பினர்களுக்கு வாக்குரிமை இல்லை. எனவே, செல்வந்தர்களின் பிரதிநிதிகளாயிருந்த பிரபுக்கள் சபையும், குருமார்கள் சபையும், சேர்ந்து கொண்டால் எளிதில் பொது மக்கள் சபையைத் தோற்கடித்துவிட முடியும். 'ஏழை பேச்சு அம்பலம் ஏறாது' என்ற பழமொழி அன்றைய பிரான்ஸுக்கே பொருத்தமாயிருந்தது. இம்முறையை மாற்றப் பொதுமக்கள் சபையினர் விரும்பினர். மற்ற இருசபைகளோடு அவர்களும் சேர்ந்து உட்கார வேண்டுமெனவும், சட்டங்கள் பெரும்பான்மையான தனிப்பட்ட உறுப்பினரின் வாக்குகளால் இயற்றப்பட வேண்டுமெனவும் அவர்கள் அரசரிடம் வற்புறுத்தினர். அரசர் முதலில் அவர்களது விருப்பத்தை மறுத்துவிட்டார்; ஆனால் கடைசியில் ஒப்புக்கொண்டார். தேசிய சபை (National Assembly) என்ற பெயரில் முச்சபைகளும் ஒன்று சேர்ந்து பணிபுரியத் தொடங்கின.

## புரட்சியின் போக்கு

பாஸ்டீல் சிறை முற்றுகை (1789)

இச்சமயத்தில் மரியா அந்துவானெத் என்ற இராணியின் தூண்டுதலாலும், மற்றும் பல கெட்ட நபர்களின் ஆலோசனைகளாலும் உந்தப்பட்டு அரசர், ஸ்விஸ் படைகளைப் பாரிஸ் நகருக்கருகில் கொணர்ந்து நிறுத்தி வைத்தார். முன்னெச்சரிக்கையாகச் செய்யப்பட்ட இக்காரியத்தைப் பாரிஸ் மக்கள் தவறாகப் புரிந்து கொண்டனர். தங்களையும் எஸ்டேட்ஸ் ஜெனரல் உறுப்பினரையும் பலாத்காரத்தால் அடக்கிக் கொடுங்கோன்மை புரியவே அரசர் படை திரட்டுகிறார் என்ற வதந்தியைச் சில சுயநலமிகள் கிளப்பிவிட்டனர். பாரிஸில் அப்போது, சுற்றியுள்ள

கிராமத்திலிருந்து வேலைதேடிவந்து, வேலையின்றித் தெருத் தெருவாய் அலைந்து கொண்டிருந்த போக்கிரிகள் ஏராளமாக இருந்தனர். எஸ்டேட்ஸ் ஜெனரல் கூடுவதால் தங்களுக்கெல் லாம் ஏதாவது விமோசனம் ஏற்படும் என அடக்கப் படை திரட்டுகிறார் எனக்கேள்விப்பட்டவுடன் அவர்கள்கொதித்தெழுந் தனர். 1788ஆம் ஆண்டு ஜூலை 14ஆம் தேதி பாரிஸில் புரட்சி தோன்றியது. நகரமே அல்லோலகல்லோலப்பட்டது. ஆவேசம் படைத்த ஒரு மக்கள் கூட்டம் பாஸ்ட்டீல் சிறைக்கூடத்தை முற்றுகை செய்து அதைக் காப்பாற்றியது. அரசரது கொடுங் கோன்மைக்குச் சின்னமாக அச்சிறை விளங்கியது. காரணமின் றிச் சிறையிடப்பட்ட அரசியல் கைதிகளே அச்சிறையிலிருந்த னர். கூட்டமானது சிறைக்கதவுகளை உடைத்து உள்ளிருந்த ஆறு கைதிகளை விடுதலை செய்தது. மேலும், பல சிறை அதிகாரிகள் கொல்லப்பட்டனர். சிறைச்சாலை தரைமட்டமாக்கப்பட்டது. அச்சிறை அழிந்ததை அரசரது கொடுங்கோன்மையே அழிந்து விட்டதுபோல் மக்கள் எண்ணினர். அதே ஆண்டில் ஒரு மகளிர் கூட்டமானது வெர்ஸேல்ஸுக்குச் சென்று, அரசரையும் அவரது குடும்பத்தாரையும் பலவந்தமாகப் பாரிஸுக்கு அழைத்து வந் தது. 'அரசரிருக்குமிடத்தில் ரொட்டியுமிருக்கும்' என்பது அவர்கள் நம்பிக்கையாக இருந்தது. எனவே இந்நிகழ்ச்சி 'ரொட்டி ஊர்வலம்' (Bread March) என அழைக்கப்படுகிறது.

### தேசிய சபையின் சேவை (National Assembly) (1791)

இங்ஙனம் எதிர்பாராதவிதமாகப் பாரிஸில் புரட்சி தோன் றிய பின்னும் தேசியச் சபையானது தனது கடமையைச் செய்து வந்தது. பிரான்ஸுக்கு வேண்டிய ஓர் அரசியலமைப்பைத் தயாரிக்க அது முற்பட்டது. தேசிய சபை, அரசியல் நிருணய சபையாக (Constituent Assembly) மாறியது. இச்சபையானது 'மனிதனின் உரிமைகளறிவிப்புப் பத்திரம்' (Declaration of the Rights of Man) என்ற ஓர் அரிய அறிக்கையைத் தயாரித்தது (1791). அதில் மனிதனின் ஜீவாதார உரிமைகள் யாவும் தொகுத்து வரையப்பட்டிருந்தன. பல தலைமுறைகளுக்கு ஐரோப்பிய மக்களின் வழி காட்டியாய் அது விளங்கியது. இறைமையானது மக்களிடத்தே உள்ளது என்றும், சட்டம் என்பது மக்களின் விருப்பத்தின் வெளிப்பாடே என்றும், சட்டத் தின் முன் எல்லோரும் சமம் என்றும், பல உண்மைகளை அவ்வறி விப்புக்கூறியது. மேலும் இச்சபையானது நிலமானியமுறைக் கட்டணங்களையும், பிறப்புக்களின் சிறப்புரிமைகளையும் ஒழித்தது; திருச்சபையின் சொத்துக்களை எல்லாம் பறிமுதல் செய்தது.

வரம்புக்குட்பட்ட முடியாட்சியை ஏற்படுத்தியது. பிரான்ஸில் இன்றுவரை நின்று நிலவும் தல ஆட்சி முறையை அது நிறுவியது மத ஸ்தாபனத்தைப் போப்பாண்டவரின் பிடியினின்றும்விலக்கிச் சட்டசபையின் கட்டுப்பாட்டுக்குட்படுத்தியது. லூயி ஒரு பக்தி யுள்ள கத்தோலிக்கர். தமது அதிகாரத்தை விட்டுக்கொடுக்கவும் மதத்தை லௌகிகர்கள் கையில் ஒப்படைக்கவும் அவர் விரும்ப வில்லை. எனவே, அவர் **1791** ஆம் ஆண்டில் பாரிஸிலிருந்து தப்பித்து ஓட முயன்றார். ஆனால் வழியில் பிடிபட்டு மீண்டும் பாரிஸுக்கே கொண்டு வரப்பட்டார். மக்களுக்கு மன்னர் மீதிருந்த நம்பிக்கை போய்விட்டது.மன்னரும் வெளிநாடுகளோடு இரகசியத் தொடர் கொண்டிருந்தார். மக்களின் பிடியினின்றும் என்று விடுபடலாமென அவர் எதிர்பார்த்துக் காத்திருந்தார்.

## சட்டசபையின் கூட்டம்

## Legislative Assembly Session (1791 - 1792)

அரசியல் நிருணயசபை அமைத்த அரசியலமைப்புப்படி **1791** ஆம் ஆண்டு சட்ட சபையானது (Legislative Assembly) கூடியது. ஓரங்க சட்ட சபை முறையும் (Unicameral Legislature வரம்புக்குட்பட்ட முடியாட்சியும் நாட்டில் செயல்பட்டன. எனினும், பிரான்ஸைவிட்டு வெளியேறிய பிரபுக்கள் (Emigres) சும்மாயிருக்கவில்லை. அவர்கள் ஆஸ்திரியாவையும், பிரஷ்யாவை யும் தூண்டிப் பிரெஞ்சுப் புரட்சி அரசு மீது படையெடுக்கும்படி கேட்டுக்கொண்டனர். அதற்கேற்ப அவ்விரண்டு நாடுகளும் சேர்ந்து பில்ட்னிஸ்(Pillnitz)எனுமிடத்திலிருந்து ஓர் அறிக்கையை வெளியிட்டன (**1791**). பிரெஞ்சு மன்னருக்கு ஏதாவது தீங்கு நேர்ந்தால், அதற்குக் காரணமானவர்கள்மீது சுடுமையான முறையில் பழிவாங்கப்படும்' என அவ்வறிக்கை கூறியது. இதை யறிந்த பிரெஞ்சு மக்கள் மன்னர்மீது ஐயம் கொண்டனர் அவரது தூண்டுதலாலேயே அவ்வறிக்கை வெளியிட்டிருக்கப்பட வேண்டுமென அவர்கள் நினைத்தனர். எப்பாடுபட்டும் புரட்சி அரசை நிலைநாட்ட வேண்டுமென அவர்கள் தீர்மானித்தனர்.

## அயல்நாட்டார் தலையீடு -தேசிய கன்வென்ஷன் சபை (1792 - 1795)

பிரான்ஸ் தனது எதிரிநாடுகள் மீது **1792** ஆம் ஆண்டுஏப்ரல் **20** ஆம் தேதி போரைத் தொடங்கியது. ப்ரன்ஸ்விக் கோமகன் (Duke of Brunswick) தலைமையில் ஆஸ்திரியப் பிரஷ்யப் படை ஒன்று பிரான்ஸை நோக்கி முன்னேறியது இதற்கெல்லாம் காரணம் மன்னரே என நினைத்த அமிதவாதிகளான ஜேகோபின் கள் (Jacobins) **1792**ஆம் ஆண்டு ஆகஸ்டு பத்தாம் தேதி ஒரு புரட்சியைப் பாரிஸில் உண்டாக்கினர். மன்னரது அரண்மனை

தாக்கப்பட்டுக் கைப்பற்றப்பட்டது. லூயி கலகக்காரரிடம் சரணடைந்தார். முடியரசு ஒழிக்கப்பட்டு பிரான்ஸ் ஒரு குடியரசு என அறிவிக்கப்பட்டது. புதிய சபையொன்று 'தேசீய கன்வென்ஷன்' (National Convention) என்ற பெயரில் அரசியலமைப்பைத் தயாரிப்பதற்காகக் கூட்டப்பட்டது. பாரிஸ் நகராட்சி மன்றத்தையும் கலகக்காரர்கள் கைப்பற்றினர். மாரெட்டாண்டன் தலைமையில் அப்பாரிஸ் கம்யூனே (Parls Commune) பிரெஞ்சுப் போரையும் நடத்தியது. பிரெஞ்சுக் குடியரசுப் போர் வீரர்கள், தேசீய கீதத்தையும், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற சொற்களையும், உச்சரித்துக் கொண்டே பல போர் முனைகளிலும் முன்னேறினர். பிரான்ஸில் குடியரசுக்கு விரோதிகள் எனச் சந்தேகிக்கப்பட்டவர்கள் கொலை செய்யப்பட்டனர்.'செப்டம்பர் படுகொலை' (September Massacre) என்ற இச்சம்பவம் மற்ற ஐரோப்பிய நாடுகளைத் திடுக்கிட வைத்தது. இச்சமயத்தில் பிரெஞ்சுப் புரட்சியானது ப்ரன்ஸ்விக்கின் படைகளை வால்மி (Valmy) என்னுமிடத்தில் தோற்கடித்தது (1792). இதன்பின் உற்சாகமடைந்த பிரெஞ்சு வீரர்கள் பல வெற்றிகளை எய்தினர். தேசீயக் கன்வென்ஷன் சபை 1792ஆம் ஆண்டு செப்டம்பர் 21ஆம் தேதி கூடியது. பிரான்ஸ் ஒரு குடியரசு என்பதை அது முறையாக அறிவித்தது.

### பயங்கர ஆட்சி Reign of Terror (1792-94)

வால்மி வெற்றியின் பின் பிரெஞ்சுத் தேசீயக் கன்வென்ஷன் சபை கோனுட்சியைக் கவிழ்க்க விரும்பும் எல்லா நாடுகளுக்கும் பிரான்ஸ் உதவி செய்யக் காத்திருக்கிறதென அறிவித்தது. அதோடு பதினாறும் லூயியையும் தேசத் துரோகக் குற்றம் சாட்டி அது சிரச்சேதம் செய்தது. அதன்பின் பிரான்ஸில் 'பயங்கர ஆட்சி'யானது (Reign of Terror) ஏற்பட்டது. "பொதுக் காவற் குழு' (Committee of Public Safety) என்ற குழுவானது இராஜ விசுவாசமுள்ளவர்களென ஐயப்பட்டோரை எல்லாம் புரட்சி நீதிமன்றம் (Revolutionary Tribunal) என்ற தனி நீதி மன்றத்தில் மேம்போக்காக விசாரித்து 'கில்லோடின்'(Guillotine) என்ற கொலைக் கருவியால் கொன்று தீர்த்தது. மாராட் (Marat), டாண்டன், (Danton), ராபிஸ்பியர் (Robespierre) போன்ற கருணையற்றவர்கள் இவ்வாட்சியில் பங்கு கொண்டனர் பின்னர் அவர்களுக்குள்ளேயே பூசலேற்பட்டு ஒருவர் பின் ஒருவராய்க் கில்லோடினுக்கு இரையாயினர். 1795ஆம் ஆண்டில் இப்பயங்கர ஆட்சி முடிவுற்றது. ஐந்து பேர்களடங்கிய 'டைரக்டரி' (Directory) என்ற சபை அதிகாரத்தைக் கைப்பற்றியது. பயங்கர ஆட்சிக்குக் காரணமாயிருந்த குழுவும் நீதிமன்றமும் கலைக்கப்பட்டன.

அதன்பின் ஐந்து ஆண்டுகளுக்கு 'டைரக்டரி' யானது ஈரங்க சட்டசபையுடன் (Bicameral Legislature) பிரான்ஸை ஆண்டது (1795-99). அதன்பின் 'கான்சுலேட்' (Consulate) என்ற மூவர் அடங்கிய சபைக்கு அதிகாரம் மாறியது (1799-1804). அம்மூவரில் தலைமைக் கான்சலாக விளங்கியவர் நெப்போலியன் என்பார். அவர் நாளடைவில் பிரான்ஸின் பேரசரானார். குடியரசு ஒழிந்து மீண்டும் பிரான்ஸில் முடியரசு ஏற்பட்டது (1804-1814).

## பிரஞ்சுப் புரட்சி இங்கிலாந்தைப் பாதித்த விதம்

### கருத்துப் புரட்சி

பிரெஞ்சுப் புரட்சியின் ஆரம்ப காலத்தில் பிரிட்டிஷ் மக்கள் அதைப் போற்றினர். தங்கள் நாட்டிலிருப்பது போல் ஐரோப்பாவிலும் ஒரு பாராளுமன்ற அரசாங்கம் ஏற்படுவதற்கான ஒரு முயற்சி நடைபெறுகிறது என்ற எண்ணத்தால் அவர்களது உள்ளங்கள் துள்ளின. வோர்ட்ஸ்வொர்த் (Wordsworth), கோல்ரிட்ஜ் (Coleridge), பரன் (Byron), ஷெல்லி (Shelly), கீட்ஸ் (Keats) போன்ற ஆங்கிலப் புலவர்கள் புரட்சியால் உந்தப்பட்டுப் பல வீரக்கவிகளை இயற்றினர். சுதந்திரம், நாட்டுப்பற்று, வீரம், போன்ற உயர்ந்த பண்புகள் அவர்களது கவிகளில் வடித்தெடுக்கப்பட்டுள்ளன. கீட்ஸ், ஷெல்லி, போன்றவர்களின் கவிகளில் வீரத்தோடு காதலும் ஒளிவிட்டுத் துலங்குகிறது. இங்ஙனம் பிரெஞ்சுப் புரட்சியானது இங்கிலாந்தில் 'புத்துணர்ச்சிக் கவிதைகள் (Romantic Poems) பல தோன்றுவதற்கு வகை செய்தது. பைரன், ஷெல்லி போன்றவர்கள் தங்கள் கவிதைகளில் மட்டுமின்றி வாழ்க்கையிலும் சுதந்திர ஆர்வத்தைக் காட்டினர். பைரன், கிரேக்கரின் சுதந்திரத்துக்காகப் போரிட்டுப் போர்க்களத்திலேயே உயிர்துறந்தார். ஃபாக்ஸ் (Fox) என்னும் அரசியலறிஞர் பிரெஞ்சுப் புரட்சியை ஆதரித்தார். அவரும் சார்லஸ் கிரே (Charles Grey) என்னும் இளைஞனும் சேர்ந்து, 'மக்களின் நண்பர்கள்' (Friends of the People) என்ற கட்சியை இங்கிலாந்தில் துவக்கினர். ஜனநாயகக் கொள்கைகளை இங்கிலாந்தில் வளர்ப்பதற்காகவே அக்கட்சி ஆரம்பிக்கப்பட்டது. இங்கிலாந்தில் தாராளக் கொள்கைகளின் வளர்ச்சிக்கு அவர்கள் பெரிதும் காரணமாவர்.

இங்ஙனம் பிரெஞ்சுப் புரட்சியை ஆதரித்த கூட்டம் ஒருபுறமிருக்க அதை அறவே கண்டிக்கும் கூட்டம் ஒன்று இங்கிலாந்தில் மற்றொருபுறம் கிளம்பியது. ஆரம்பத்தில் பிரெஞ்சுப் புரட்சியை ஆதரித்தவர் கூட, அங்கு நடைபெற்ற கொலைகளையும் அத்துமீறிய

செயல்களையும் கண்டு அதைப் பின்னர் கண்டிக்க முற்பட்டனர் பர்க் (Burke) என்னும் அரசியலறிஞர் பிரெஞ்சுப் புரட்சியைக் கண்டித்துப் 'பிரெஞ்சுப் புரட்சியைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனைகள் (Reflections of the French Revolution) என்ற நூலை வெளியிட்டார். அதில் அவர் புரட்சி மிகவும் அபாயமானதெனவும் அது கடைசியில் இராணுவ ஆட்சியில்தான் போய்முடியுமென்றும், தீர்க்க தரிசனம் சொன்னார். அவரது தீர்க்கதரிசனம் பலித்தது புரட்சிக்குப் பின்னர் நெப்போலியனின் வல்லரசே ஏற்பட்டது. என்னினும், 'பர்க்' பிரெஞ்சுப் புரட்சியின் உடனடியான விளைவுகளைப் பற்றியே மிகைப்படுத்திக் கூறுகிறார். நாளடைவில் அதனால் ஏற்பட்ட உரிமை வேட்கை, ஜனநாயகக் கொள்கைகளின் வளர்ச்சி போன்றவைகளை அவர் உணரக்கூடவில்லை. புரட்சியின் மீதுள்ள பயத்தால் 'பர்க்' இங்கிலாந்தில் அப்போது இருந்த ஆட்சிமுறையே பூரணவளர்ச்சி பெற்றதெனவும், அதை மாற்றுவது பாவம் எனவும் கூறினார். ஆனால் பிற்காலத்தில் பல சீர்திருத்தங்கள் ஏற்பட்டதால் தான் பிரிட்டிஷ் அரசியலமைப்பு நீடித்து நிற்கிறது என்பது நாம் யாவரும் அறிந்ததொன்றாகும். பர்க் என்பார் பணக்காரர்களின் கட்சியான விக்குக் கட்சியைச் சேர்ந்தவர். புரட்சியால் தங்களது சொத்துக்கு ஆபத்து வந்து விடுமென எல்லாச் செல்வந்தரும் பயந்தனர். சொத்துச் சுதந்திரத்தைப் பறிக்க முற்பட்ட பிரெஞ்சுப் புரட்சியை அவர்கள் வெறுத்ததில் ஆச்சரியமில்லை. பர்க் என்பாருக்குப் பதில் கூறுவதுபோல் 'மனிதனின் உரிமைகள்' (Rights of Man) என்ற நூலை டாம் பெய்ன் (Tom Paine) என்ற அறிஞர் எழுதினார் அவர் அமெரிக்கா, பிரெஞ்சுப் புரட்சிகளை ஆதரித்தார். அரசுகள் மக்களுடைய நன்மைக்கே ஏற்பட்டவை என்றும், அவற்றைப் பிரியம் போல் மாற்றிக்கொள்ள அவர்களுக்கு உரிமை உண்டென்றும், அவர் அந்நூலில் வாதித்தார். அவருடைய நூல் ஐரோப்பிய நாடுகளில் ஆயிரக் கணக்கில் விலையாயின. இங்கிலாந்திலும் அவரது நூலுக்கு நல்ல வரவேற்பு இருந்தது ஆனல், அவர் அந்நூலில் இரண்டாம் பாகத்தை வெளியிட்டபோது, அவரது செல்வாக்கு இங்கிலாந்தில் குறைந்தது. ஏனெனில் அதில் அவர் முடியரசைப் பழித்துக் குடியரசை உயர்த்திப் பேசியிருந்தார். மன்னர்களை நேசிக்கும் மனப்பான்மை கொண்ட பிரிட்டிஷ் மக்கள் அக்கருத்தை வெறுத்ததில் ஆச்சரியமில்லை.

அரசியல் விளைவு

இங்ஙனம் கருத்து வேறுபாடுகள் இங்கிலாந்தில் ஒருபுறம் வளர அரசியல் துறையில் பல விளைவுகள் பிரெஞ்சுப் புரட்சியால்

ஏற்பட்டன. பிரெஞ்சுப்புரட்சி ஐரோப்பாவில் ஏற்பட்டதாலும் பிரெஞ்சு மன்னர் சிரச்சேதம் செய்யப்பட்டதாலும் இங்கிலாந்தில் ஒரு பீதி ஏற்றப்பட்டது. அதே போன்ற பயங்கர நிகழ்ச்சிகள் இங்கிலாந்திலும் நடைபெருவண்ணம் தடுக்க, பிரதம மந்திரி பிட் பல நடவடிக்கைகளை எடுத்தார். 'ஜேகோபின்கள்' என்று சந்தேகிக்கப்பட்டவர்களெல்லாம் சிறையிடப்பட்டனர். பிரதிநிதித்துவ அரசாங்கத்தைப் பற்றிப் பேசியவர்கள்கூடச் சிறையில் தள்ளப்பட்டனர். இவ்விதம் ஜனநாயகக் கொள்கைகளைப் பற்றிப் பேசியதற்காக மியூர் (Muir), பால்பர் (Palmer) என்ற இருவர் ஆயுள்தண்டனை விதிக்கப்பட்டு ஆஸ்திரேலியாவுக்கு அனுப்பப்பட்டனர். தொழிலாளிகள் சங்கமொன்றை நிறுவியதற்காக தாமஸ்ஹார்ர்டி என்பார் இராஜத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டார். குற்றம் ருஜுவாகாதலால் அவர் விடுதலை செய்யப்பட்டார். காரணமின்றிக் கைது செய்வதைத் தடுக்கும் ஹேபியாஸ் கார்ப்பஸ் சட்டமானது 1794 ஆம் ஆண்டில் நிறுத்தி வைக்கப்பட்டது. இங்ஙனம் பிரெஞ்சுப் புரட்சியின் விளைவால் இங்கிலாந்தின் அடிப்படை உரிமைகள் சில செயல்படாமல் தடைப்பட்டன.

பொருளாதார விளைவு

பிரெஞ்சுப்புரட்சி காரணமாக இங்கிலாந்தில் பணவீக்கம் (Inflation) ஏற்பட்டது. அதனுல் பண்டங்களின் விலைவாசிகள் ஏறின. இங்கிலாந்தின் விவசாயத்தைக் காக்கத் தானியச் சட்டங்கள் கொண்டுவரப்பட்டன. இச் சமயத்தில் நாட்டில் விளைச்சல் குறைந்து பஞ்சங்கள் ஏற்பட்டன. ஏழ்மையும் வேலையில்லாத் திண்டாட்டமும் எங்கும் தாண்டவமாடின. போர்ச் செலவை ஈடுகட்டப் பல வரிகள் போடப்பட்டன. இங்கிலாந்தின் தொழிலாளிகள் எங்கும் புரட்சியிலிறங்கி விடுவார்களோ வெனப் பயந்த பிரிட்டிஷ் அரசு 1799 - 1800-இல் 'கூட்டம்கூடும் சட்டங்களை' (Combination Laws) ஏற்படுத்தித் தொழிலாளிகளின் உரிமைகளைப் பறித்தது. கூலி உயர்வுக்காகப் பாடுபட வேண்டித் தொழிலாளிகள் சங்கங்களை நிறுவக்கூடாது என அச் சட்டங்கள் கூறின. இரவலர் தொல்லைகளை நீக்க ஸ்பீன் ஹாம்லாந்துத் திட்டம் 1795-இல் கொண்டு வரப்பட்டது. அதன்படி தொழிலாளிகளுக்கு அவர்களது சொந்தக் கூலியாகத் தினமொன்றுக்கு மூன்று ஷில்லிங்கும், மற்றக் குடும்ப உறுப்பினர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு ஷில்லிங் ஆறு பென்ஸ் வீதம் தினப்படியும் தரப்பட வேண்டுமெனத் திட்டம் செய்யப்பட்டது. இங்ஙனம் முதலாளி கொடுக்கத் தவறியதை அரசு, தொழிலாளிகட்குத் தர முன் வந்தது. இதனுல் முதலாளிகள் வேண்டுமென்றே கூலிகளைக் குறைத்துக் கொடுக்கத் தலைப்பட்டனர். சோம்பேறிகள்

கூட்டமும் பெருகியது. வேலை செய்தாலும் செய்யாவிட்டாலும் கூலி கொடுக்க அரசாங்கம் இருக்கிறதெனப் பலர் நினைத்தனர். இப்படிப் பல தீமைகளேற்பட்டாலும், அப்போதைக்கு அத் திட்டம் நல்ல பயனளித்தது.

அரசியல் துறையில், பிரெஞ்சுப் புரட்சியால் ஆரம்பத்தில் சில அடக்குமுறைச் சட்டங்கள் ஏற்பட்டாலும், நாளடைவில் பல நல்லபலன்கள் விளைந்தன. ஆரம்பத்தில் சீர்திருத்தங்களை வெறுக்கும் டோரிக் கட்சி, இங்கிலாந்தில் செல்வாக்குப் பெற்றது. அவர்கள் ஆட்சியில் பாராளுமன்றம், பொருளாதாரத்துறை இவைகளின் முன்னேற்றம் சிறிது தடைப்பட்டது. எனினும் ராபர்ட் பீல், கானிங் போன்ற அறிஞர்கள் காலநிலையை ஒட்டிச் சில சீர்திருத்தங்கள் செய்யாமல் இல்லை. 19 ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் ஏற்பட்ட கலகத்திற்கும் பிரெஞ்சுப் புரட்சியே காரணமெனலாம்.

## பிரெஞ்சுப் புரட்சிப் போர்கள்

பிரெஞ்சுப் புரட்சியின் ஆரம்பக் காலத்தில் பிரிட்டன் அதில் சிறிதும் அக்கரை காட்டவில்லை. அப்போது அதன் பிரதம மந்திரியாயிருந்த பிட் என்பார் நாட்டின் செல்வ நிலையை உயர்த்தப் பல திட்டங்களைத் தீட்டிக்கொண்டிருந்தார். அந் நோக்கத்தோடு இராணுவத்தையும் கடற்படையையும் குறைக்க முற்பட்டார். 1792 ஆம் ஆண்டில் அவர் பாராளுமன்றத்தில் அடுத்த பதினைந்து ஆண்டுகளுக்குப் போர் ஒன்றிலும் பிரிட்டன் சிக்கிக் கொள்ளாது என்று உறுதி கூறினர். ஆனல், அடுத்த ஆண்டே அவரது கூற்று பொய்த்துவிட்டது.

### இங்கிலாந்து, பிரெஞ்சுப் புரட்சிப் போர்களில் கலந்து கொண்டதற்குக் காரணங்கள்

பல, காரணங்களால் பிரிட்டன், பிரெஞ்சுப் போர்களில் கலந்துகொள்ள நேர்ந்தது. 1792 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் பல பிரெஞ்சுப் பிரபுக்கள் ஈவிரக்க மின்றிக் கோரமாகக் கொலை செய்யப்பட்டதை அறிந்த ஆங்கிலேயர் திடுக்கிட்டுத் திகிலடைந்தனர்; புரட்சியை வளரவிடுவது ஆபத்து என்று அவர்கள் உணர்ந்தனர். அதே ஆண்டு நவம்பர் மாதத்தில் பிரெஞ்சுப்புரட்சிப் படையானது ஆஸ்திரிய நெதர்லாந்து (பெல்ஜியம்)மீது படையெடுத்து அதைச் சூறையாடியது. அதே மாதத்தில், கோனாட்சியை நீக்கிக் குடியாட்சியை நிறுவ முயலும் எந்த நாட்டுக்கும் உதவி செய்யத் தயாராயிருப்பதாகப் பிரெஞ்சு அரசு அறிவித்தது. முடியாட்சி நிலவிய பிரிட்டனுக்கு அது

ஒரு சவாலாகத் தோன்றியது. பிரான்ஸில் குடியரசு ஏற்பட்டது. குடியரசுப் படைகள் ஆஸ்திரியாவைப் படையெடுத்தன. ஸ்கெலட் நதியானது வியாபாரத் துறையில் யாவருக்கும் பொதுவானதெனப் பிரெஞ்சு அரசு அறிவித்தது. இது பிரிட்டன் ஹாலந்தோடு செய்துகொண்டிருந்த வியாபார ஒப்பந்தங்களுக்கு விரோதமாயிருந்தது. அவ்வுடன்படிக்கையில் ஸ்கெலட் நதியின் மீது (River Scheldt) டச்சுக்காரருக்கே உரிமை உண்டென்பதை ஆங்கிலேயர் ஒப்புக்கொண்டிருந்தனர். எனவே டச்சுக்காரருக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டிய கட்டாயம் பிரிட்டனுக்கு ஏற்பட்டது. மேலும் ஆண்ட்வெர்ப்நகர், பிரான்ஸுக்குச் சொந்தமாகிவிட்டால், பின்னர் இலண்டனுக்கு எச் சமயத்திலும் பிரான்ஸால் ஆபத்து நேரக்கூடும் என்பதைப் பிரிட்டிஷார் உணர்ந்தனர். இந்நிலையில் 1793 ஆம் ஆண்டு பதினாறாம் லூயியைப் பிரெஞ்சுப் புரட்சிக்காரர் கொன்று விட்டதைக் கேட்ட ஆங்கிலேயருக்குப் பிரான்ஸின்மீது மேலும் கோபம் அதிகரித்தது. அரசர் வெளியே போனபோது அவரது வண்டியைச் சூழ்ந்து கொண்டு இலண்டன் மக்கள் பிரான்ஸின்மீது போர் தொடுக்க வேண்டுமெனக் கூக்குரலிட்டனர். இச் சமயத்தில் பிரெஞ்சுக் கன்வென்ஷன் சபையானது பிரிட்டன் மீதும் ஹாலந்து மீதும் 1793 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் தேதியன்று போர் தொடுத்துள்ளதாக அறிக்கை விடுத்தது. எனவே பிரிட்டன் போரிலிறங்குவதைத் தவிர வேறு வழியில்லாமற் போய்விட்டது. மூன்றாம் ஜார்ஜ், பிரெஞ்சு அரசின் செய்கையை வரவேற்றார். புரட்சி அரசை ஒழித்துக் கட்ட ஒரு வாய்ப்பேற்பட்டதாக அவர் நினைத்து மகிழ்ந்தார். இங்ஙனம் தொடங்கிய போர் அடுத்த 22-ஆண்டுகளுக்கு நடுவில் சிறிது விட்டு விட்டு நடைபெற்று வந்தது. பிட் என்பார் இப்போரைக் கூடியவரை நல்ல முறையில் நிருவகித்தார். பிரிட்டனின் கடற்படை அதற்கு நல்ல துணையாயிருந்தது.

முதல் கூட்டுறவு First Coaliton (1793 - 1795)

ஐரோப்பிய நாடுகளைக் கூட்டுச் சேர்த்து பிரான்ஸை எதிர்க்கும் முறையை பிட் பின்பற்றினர். அவரது முயற்சியால் முதல் கூட்டுறவு 1793 ஆம் ஆண்டு ஏற்பட்டது. அதில் பிரிட்டன், ஆஸ்திரியா, பிரஷ்யா, ஹாலந்து, ஸ்பெயின், சார்டீனியா, ஆகிய நாடுகள் ஒன்றுசேர்ந்தன. யார்க் கோமகனது தலைமையில் ஒரு சிறு ஆங்கிலப் படையானது நெதர்லாந்துக்குச் சென்றது. அங்கே ஆஸ்திரியா, பிரஷ்யா நாடுகளின் சேனைகளோடு சேர்ந்து ஆங்கிலேயர் போரிட்டனர். ஆனால் நற்பயன் ஒன்றும் ஏற்படவில்லை ஹாலந்தையும் பெல்ஜியத்தையும பிரெஞ்சுக்காரர் கைப்பற்றிக்

கொண்டனர். எனவே, ஹாலந்து முதல் கூட்டுறவினின்றும் பிரிந்தது.

பிரெஞ்சு இராஜ விசுவாசிகளுக்கு உதவி செய்ய ஓர் ஆங்கில கப்பற் படையானது குவிபெரான்குடாவுக்கு அனுப்பப்பட்டது. ஆனால், அது பெரிதும் காலந்தாழ்ந்து அங்குச் சென்றதால் அதனால் ஒன்றும் பயன் ஏற்படவில்லை. அதற்குப்பின் ஹூட் (Hood) என்னும் கப்பல் தளகர்த்தர், டூலோன் (Toulon) நகரத்து மக்கள் அழைப்புக்கிணங்கி ஒரு கப்பற்படையுடன் அங்குச் சென்றார். ஆனால் அது செல்வதற்குள் புரட்சிப் படைகள் அந் நகரத்தைக் கைப்பற்றி விட்டன (1793). நெப்போலியன் என்ற வெடிப்படை வீரர் ஆங்கிலக் கப்பற்படைமீது குண்டுமாரிப் பொழிந்து அதை டூலோங் துறைமுகத்தினின்றும் துரத்திவிட்டார். இங்ஙனம் பல முனைகளிலும் பிரிட்டனுக்குத் தோல்விகளே ஏற்பட்டன. அட்லாண்டிக் கடலில் மட்டும் ஹவ் (Howe) என்னும் ஆங்கிலக் கடல் தளகர்த்தர், பிரெஞ்சு உணவுக் கப்பல்களுக்குக் காவலாக வந்த ஒரு கப்பற் படையைத் தோற்கடித்து ஆறு கப்பல்களைக் கைப்பற்றினார். 1794 ஆம் ஆண்டு ஜூன் மாதம் முதல் தேதியன்று இப்போர் நடைபெற்றது. அந் நன்னாளைப் 'புகழ் பெற்ற முதல் ஜூன்' (Glorious First of June) என ஆங்கிலேயர் போற்றினர். இவ்வெற்றியில் பிரெஞ்சுக்காரர்களது உணவுக் கப்பல்கள் சேதமின்றித் தப்பித்து விட்டன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

1797 ஆம் ஆண்டுக்குள் கூட்டுறவு நாடுகள் ஒவ்வொன்றாகப் பிரிட்டனைவிட்டுப் பிரிந்தன. ஹாலந்து, படேவியன் குடியரசாக மாறிப் பிரெஞ்சுக்காரரோடு சேர்ந்து கொண்டது 1795 ஆம் ஆண்டில் பிரஷ்யாவும் ஸ்பெயினும் பிரான்ஸோடு சமாதானம் செய்து கொண்டன. 1796 ஆம் ஆண்டில் நெப்போலியன் என்ற பிரெஞ்சுத் தளபதி இதாலியில் பல சீரிய வெற்றிகளைப் பெற்று சார்டீனியாவைக் கூட்டுறவினின்றும் பிரித்துவிட்டார், பின்னர், அவர் ஆஸ்திரியர்களைப் பல போர்களில் வென்றார். 1797 ஆம் ஆண்டில் காம்போஃபார்மியோ (Campo Formio) என்னுமிடத்தில் ஆஸ்திரியா, பிரான்ஸுடன் சமாதானம் செய்துகொண்டது.

இங்ஙனம் 1797 ஆம் ஆண்டில் பிரிட்டன், நட்புநாடுகள் உதவியேதுமின்றித் தனித்து நின்றது. பிரெஞ்சுக்காரர், மேற்கு ஐரோப்பாவைக் கைப்பற்றினர். சொல்லமுடியாத உற்சாகத்துடன் பிரெஞ்சுப் புரட்சி வீரர்கள் போரிட்டனர். 'ரொட்டியும் இரும்புமிருந்தால் நாம் சைனாவுக்குள்ளும் புகுவோம்' என்று அவ் வீரர்கள் மார்தட்டினர். பிரிட்டனுடைய நிலை மிகவும் பரிதாபமாயிருந்தது. அதற்கு எதிராக பிரான்ஸ், ஸ்பெயின், ஹாலந்து

நாடுகள் ஒன்று சேர்ந்துகொண்டு போரிட்டன. பிரிட்டனுடைய கடலாதிக்கத்தை அம் மூவரும் சேர்ந்து அழித்து விடுவாரோ என்ற பீதி ஆங்கிலேயருக்கு ஏற்பட்டது. பிட் பணமுடையால் வாடினார். வியாபாரம் மந்தமடைந்தது. பாங்குகள் பல மூடப்பட்டன. அயர்லாந்திலும், இந்தியாவிலும் குழப்பங்கள் தோன்றின. இந்த இருள் நிறைந்த ஆண்டில் ஒரே ஒரு ஒளி மட்டும் 1797 ஆம் ஆண்டில் பிப்ரவரி மாதத்தில் ஏற்பட்டது. அப்போது பிரிட்டிஷ் கடல் தளகர்த்தரான ஜெர்விஸ் தமது உதவித் தளபதியான நெல்சனின் உதவிகொண்டு 1797-இல் ஸ்பெயினின் கப்பற்படையை வின்செண்ட்முனைக்கருகில் தோற்கடித்தார். ஆனால், இவ்வெற்றிக்கு மாறாக இரண்டு பெரும் குழப்பங்கள் பிரிட்டிஷ் கடற்படையில் தோன்றின. ஏனெனில் கடற்படை மாலுமிகள் மிகவும் கொடூரமான தண்டனைகளுக்கும், கட்டுப்பாடுகளுக்கும் உட்படுத்தப்பட்டனர். அதே சமயம் அவர்களுக்குப் போதிய ஊதியமும், உணவும், உடையும் வழங்கப்படவில்லை. கானெல் கப்பற்படை மாலுமிகள் ஸ்பிட்ஹெட் (Spithead) என்னுமிடத்தில் கிளர்ச்சியிலிறங்கினர். கப்பற்படை அதிகாரிகளுக்கு அவர்கள் தங்களது குறைகளெல்லாம் குறிப்பிடப்பட்ட ஒரு மனுவை அனுப்பினர். அதிகாரிகள் அவர்களது குறைகளை நீக்குவதாக ஒப்புக்கொண்டபின் கலகம் நின்றது. அக் கலகம் ஒய்ந்தவுடன், வடகடல் கப்பற்படையில் இன்னொரு பெரிய குழப்பமேற்பட்டது. அவர்கள் தேம்ஸ் நதியின் முகத்துவாரத்தை அடைத்துக்கொண்டு இலண்டனுக்குள் எப்பொருளும் செல்லாவண்ணம் தடுத்தனர். இச்சமயம் அரசு உறுதியான கொள்கையைக் கடைப்பிடித்தது. அவர்களது வேண்டுகோள் மறுக்கப்பட்டன. கலகக்காரர்கள் தூக்கிலிடப்பட்டனர். குழப்பம் சிறிது சிறிதாய் ஓய்ந்தது. கலகக்கார மாலுமிகள் திரும்டவும் சென்று தங்களது தலைவரான டன்க்கன் (Duncan) என்பாரிடம் சரணடைந்தார்கள். டன்க்கன் அப்போது டச்சுக் கடற்கரையைக் காவல் புரிந்து வந்தார். டச்சுக் கப்பற்படை ஹாலந்து துறைமுகங்களிலிருந்து 1797 ஆம் ஆண்டு வெளிப்புறப்பட்டது. அதை எதிர்த்து டன்க்கன் என்பார் காம்பெர்டௌன் (Camperdown) என்னுமிடத்தில் ஓர் அரிய வெற்றிப்பெற்றார். கொஞ்ச நாள்களுக்கு முன், கலகம் விளைத்த மாலுமிகள் தங்களது தேசபக்தியை இப் போரில் வெளிப்படுத்தினர். எனவே அவர்கள் அரசினால் மன்னிக்கப்பட்டனர். இப்போரினால் டச்சுக் கடற்படையின் வன்மை பெருமளவுக்குக் குறைந்தது.

கடற்சண்டைகளில் மட்டும் இக்காலத்தில் பிரிட்டனுக்குப் பல வெற்றிகள் கிடைத்தன. தன் கடற்படை வன்மையைக் கொண்டு பிரிட்டன், பிரான்ஸுக்கும் அதனைச்சார்ந்த நாடுகளுக்

கும் சொந்தமான குடியேற்ற நாடுகளைப் கைப்பற்றிக் கொண்டது. நன்னம்பிக்கை முனையையும் (1795), டெமெரரா (Demerara) என்ற தென்னமெரிக்கா நாட்டையும் (1796) ஸ்பெயினுக்குச் சொந்தமான டிரினிடாடையும் (1797) பிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமான சென்ட் லூசியா போன்ற தீவுகளையும் ஆங்கிலேயர் கைப்பற்றினர். ஹாய்தி (Haiti) என்னும் மேற்கிந்தியத் தீவில் நீக்ரோக்கள் ஒரு பெருங்கலகம் விளைத்தனர். அதை அடக்கப் பிரிட்டிஷார் பெரும் பாடுபட்டனர். பொருளும் ஆட்களும் சேதமானதுதான் மிச்சம். ஏனெனில் ஹாய்தி ஒரு நீக்ரோ குடியரசாகவே கடைசியில் ஒப்புக்கொள்ளப்பட்டது.

1798 ஆம் ஆண்டில் பிரெஞ்சுக்காரர், ரோம் நகரைக் கைப்பற்றினர். போப்பாண்டவர் அந் நகரைவிட்டு வெளியேறினார். ரோம் குடியரசை நெப்போலியன் அங்கு நிறுவினார். வட இதாலி முழுவதிலும் பிரெஞ்சுக்காரர் காலூன்றிக் கொண்டனர். ஸ்பெயினும், பிரான்ஸோடு சேர்ந்து கொண்டதால் மத்திய தரைக்கடல் பிரதேசத்தில் பிரிட்டனின் எதிரிகள் கை வலுத்தது. பிரெஞ்சு அரசாங்கம் பிரிட்டனை நேரில் தாக்குவது முடியாதெனக் கண்டு கொண்டது. ஏனெனில் பிரிட்டனிடம் மிகப் பலம் வாய்ந்த கடற்படை இருந்தது. கடலில் இங்கிலாந்து திமிங்கலத்தைப் போன்று விளங்க, பிரான்ஸ் நிலத்தில் யானையைப் போன்று திகழ்ந்தது. எனவே பிரெஞ்சுக்காரர் தம் வலிமை பெற்ற நிலப் படையைக்கொண்டு துருக்கியப் பேரரசைக் கைப்பற்றி, அதன்பின் இந்தியாவையும் கைப்பற்ற எண்ணினர். நெப்போலியன் இத் திட்டத்தை நிறைவேற்ற முன்வந்தார். ஒரு நிலப்படையுடனும் கப்பற்படையுடனும் அவர் டூலோங் (Toulon) துறைமுகத்தினின்றும் எகிப்தை நோக்கிப் புறப்பட்டார். அவரை எதிர் நோக்கி ஒரு பிரிட்டிஷ் கப்பற்படை நெல்சன் தலைமையில் காத்திருந்தது. ஆனால், அதனை ஏமாற்றிவிட்டு நெப்போலியன் எகிப்திற்குச் சென்று விட்டார். பிரமிட்டுகள் போரில் (Battle of Pyramids) அவர் எகிப்தியப் படைகளைத் தோற்கடித்தார் (1789). இதற்குள் நெப்போலியன் எகிப்திலிருக்கும் செய்தி நெல்சனின் காதுகளுக்கு எட்டியது. அவர் உடனே ஒரு கப்பற்படையுடன் விரைந்து நைல் நதிக்குள் நுழைந்தார். நெப்போலியன், எகிப்தியர்களோடு போரிட்டுக் கொண்டிருக்கையில், அபுகிர் விரிகுடாவில் (Aboukir Bay) நங்கூரம் பாய்ச்சியிருந்த அவரது கப்பற்படையை நெல்சன் தாக்கி அழித்துவிட்டார். 1798 ஆம் ஆண்டு நெல்சன் பெற்ற இந் நைல்நதி வெற்றியானது நெப்போலியனின் திட்டத்தில் மண்ணைப்போட்டு விட்டது. மேலும் அவ்வெற்றியால் இங்கிலாந்தின் புகழ் ஓங்கியது. அதன்மீது நம்பிக்கை

யின்றி இருந்த ஆஸ்திரியா, ருஷ்யா, துருக்கி போன்ற நாடுகள் இப்போது தைரியமாக அதோடு கூட்டுசேர முன்வந்தன. நெப் போலியன், பாலஸ்தீனம் வழியாகத் துருக்கிப் பேரரசைத் தாக்க முயன்றார். ஆனால் ஆகர் (Acre) என்னுமிடத்தில் அவரது படை களைத் துருக்கியர் தடுத்து நிறுத்திவிட்டனர் (1799). துருக்கி யருக்கு இப்போரில் ஆங்கிலக்கடல் தளபதியான ஸர் ஸிட்னி ஸ்மித் பேருதவி செய்தார். நெப்போலியன் மனமொடிந்து எகிப் துக்கு வந்தார். அங்கிருந்து அவர் ஒரு சில நண்பர்களுடன் பிரான்ஸுக்கு ஓடிவிட்டார் 1799. அவரது படைகள் எகிப்தில் மேய்ப்பானில்லா ஆடுகளெனச் சிதறின.

### இரண்டாவது கூட்டுறவு (1798 - 1800)

1798 ஆம் ஆண்டில் பிரிட்டன், ஆஸ்திரியா, ருஷ்யா, துருக்கி ஆகிய நாடுகள் ஒன்று சேர்ந்து தம்முள் ஒரு கூட்டுறவு ஏற்படுத் திக் கொண்டன. நெப்போலியன் இல்லாதபோது கூட்டுறவுப் படைகள் ஐரோப்பாவில் பல வெற்றிகளைப்பெற்றன. 1799-இல் நெப்போலியன் 'டைரக்டரி' அரசாங்கத்தைக் கவிழ்த்து 'கான் சல்' ஆட்சியைப் பிரான்ஸில் ஏற்படுத்தினார். தாமே அதில் முதல் கான்சலாக இருந்துகொண்டு எல்லா அதிகாரங்களையும் செலுத்தினார். பிரான்ஸுக்கு வெற்றியை வாங்கி தருவதாக அவர் உறுதி கூறி உற்சாகம் நிறைந்த ஒரு படையைத் திரட் டினார். அதன் உதவிகொண்டு அவர் ஆஸ்திரியப் படைகளை மாரெங்கோ (Marengo) என்னுமிடத்தில் தோற்கடித்தார் (1800). எனவே, ஆஸ்திரியா கூட்டுறவினின்றும் விலக வேண்டிய தாயிற்று. 1801 ஆம் ஆண்டில் லூனிவில் (Luneville) என்னு மிடத்தில் ஆஸ்திரியா, பிரான்ஸோடு உடன்பாடு செய்து கொண்டது. ருஷ்ய அரசரும் நட்பரசர்களுடன் மனம் வேறு பட்டுக் கூட்டுறவினின்றும் விலகிக் கொண்டார். மீண்டும் பிரிட்டன் தனியே நின்றது.

மத்திய தரைக்கடற் பிரதேசத்தில் பிரிட்டன் சில முக்கிய வெற்றிகளைப்பெற்றது. 1800 ஆம் ஆண்டில் மால்டா தீவு, பிரிட் டன் வசமாகியது. எகிப்தில் நெப்போலியனால் கைவிடப்பட்ட பிரெஞ்சுப் படையை ஸர் ரால்ப் ஆபெர்கிரோம்பி (Sir Ralph Abercrombie) என்னும் பிரிட்டிஷ் தளகர்த்தர் தோற்கடித்தார். நேப்பில்ஸிலும், ஆங்கிலக் கப்பற்படையானது புரட்சிக்கார ருக்கு எதிராக நான்காம் பெர்டினண்டுக்குப் (Ferdinand - IV) பெரும் உதவி செய்தது. பிரான்ஸுக்கும், ஸ்பெயினுக்கும், ஹாலந்துக்கும் சொந்தமான குடியேற்ற நாடுகளையும் பிரிட்டிஷ் கப்பற்படை கைப்பற்றியது. இவ்வெற்றிகளால் பிரிட்டனும்

பிரான்ஸும் ஏறக்குறைய சமநிலை பெற்றன. ஆனால் இரண்டாம் கூட்டுறவு கலைந்துவிட்டது. பிரெஞ்சுப் படைகள் மீண்டும் வட இத்தாலியைக் கைப்பற்றின.

### படை தரித்த நடுநிலைக் கூட்டுறவு Armed Neutrality (*1801*)

ருஷ்யாவின் அரசரான முதலாம் பால் என்பார் அமெரிக்கச் சுதந்திரப் போர்க்காலத்து, ஏற்படுத்தப்பட்ட படைதரித்த நடு நிலைக் கூட்டுறவை மீண்டும் உயிர்ப்பித்தார். ருஷ்யா, ஸ்வீடன்' டென்மார்க், பிரஷ்யா என்ற நாடுகள் அக்கூட்டுறவில் சேர்ந்து கொண்டு, நடுநிலைமை நாடுகளான தங்கள் நாட்டுக் கப்பல்களைப் பிரிட்டன் சோதிக்கக் கூடாதென்று கூறின. பிரிட்டிஷ் அரசாங்கமானது ஸர் ஹைட் பார்க்கர் (Sir Hyde Parker) என்ற கடல் தளகர்த்தரைப் பால்டிக் கடலுக்கு அனுப்பியது. நெல்சன் உபதளபதியாக அப்படையில் பணியாற்றினார். டென்மார்க்கின் கப்பற்படையும் பிரிட்டிஷ் கப்பற்படையும் கோப்பன் ஹேகன் (Copenhagen) என்னுமிடத்தில் மோதின (*1801*). போர் நடுவில் பார்க்கர் மனமுடைந்து போரை நிறுத்தும்படி நெல்சனுக்குச் சைகை காட்டினார். நெல்சனுக்கு ஒரு கண் குருடாதலால் அக் கண்ணில் தொலைநோக்கிக் கண்ணாடியை வைத்துப் பார்த்து விட்டு அச்சைகை தமக்குத் தெரியவில்லை என வேண்டுமென்றே கூறிக்கொண்டு அவர் போரைத் தொடர்ந்து நடத்தினார். நான்கு மணிநேரக் கடும்குண்டுவீச்சுக்குப் பின், டேனியர்கள் பணிந்தனர். ருஷ்ய அரசர் முதலாம் பால் இச்சமயத்தில் கொலையுண்டார் (*1801*). அவருக்குப்பின் பட்டத்துக்கு வந்த முதலாம் அலெக்ஸாந்தர் பிரிட்டனுடன் சமாதானம் செய்து கொண்டார். படை தரித்த நடுநிலைக் கூட்டுறவு குலைந்தது.

### ஆமியன்ஸ் சமாதானம் Peace of Amiens (1802)

பிரிட்டனில் பிரதம மந்திரியாயிருந்து பிரெஞ்சுப் போர்களை நடத்தி வந்த பிட், *1801* ஆம் ஆண்டில் மூன்றாம் ஜார்ஜோடு சச்சரவிட்டுக் கொண்டு தம் பதவியை ராஜிநாமாச் செய்தார். அவருக்குப் பின் ஆடிங்டன் (Addington) என்பார் பிரதம மந்திரியாக்கப்பட்டார். அவர் மிகவும் பலஹீனமானவர். பிரான்ஸோடு சமாதானம் செய்து கொள்ள அவர் பெரிதும் விரும்பினார். சில மாதப் பேச்சுவார்த்தைகளுக்குப் பின், *1802* ஆம் ஆண்டில் ஆமியன்ஸ் என்னுமிடத்தில் இரு நாடுகளுக்கும் சமாதானம் ஏற்பட்டது. இலங்கை, டிரினிடாட் என்ற இரு தீவுகளை மட்டும் வைத்துக்கொண்டு, மீதியிருந்த எல்லாப் பிரெஞ்சுப் பிரதேசங்களையும் ஆங்கிலேயர் பிரான்ஸுக்கே திருப்பிக் கொடுத்தனர். பெல்ஜியத்தின் ஒரு பகுதியையும் பிரான்ஸ் பெற்றது. நன்னம்

பிக்கை முனையானது டச்சுக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப் பட்டது. மால்டா தீவானது அதனை நெடுங்காலமாய் ஆண்டு வந்த தூயஜான் நைட்டுகளுக்கே Knights of St. John) தரப் பட்டது. பிரெஞ்சுக்காரர்கள் போப்பாண்டவரது நாடுகளி லிருந்தும், ஆங்கிலேயர் எகிப்திலிருந்தும் தம் படைகளைத் திருப்பி அழைத்துக் கொள்ள ஒப்புக்கொண்டனர். எகிப்து, துருக்கியப் பேரரசுக்கே மீண்டது. 'பிரெஞ்சு மன்னர்' என்ற பட்டத்தைப் பிரிட்டிஷ் மன்னர்கள் கைவிட்டனர்.

இச் சமாதானம் பிரெஞ்சுப் புரட்சிக்காரருக்கு ஒரு பெரு வெற்றியாகும். 'அறிவுசான்ற வல்லரசர்களின் காலம் (Age of the enlightened despots) ஐரோப்பாவில் மலையேறி விட்டது என்பதற்குப் போதிய ஆட்பலமும், பொருள் வசதியுமில்லாத பிரெஞ்சுப் புரட்சிக் கூட்டத்தினர், பெரிய வல்லரசுகள் சேர்ந்து அமைத்த இரு பெருங் கூட்டுறவுகளை முறியடித்த தொன்றே ஒரு பெருஞ்சான்றாகும். குடியரசுக், கொள்கைகளால் கிளர்த் தெழுந்த உற்சாகத்தின் முன் பழைய வல்லரசுக் கொள்கை யானது கீரிமுன் பாம்பு என்பதைப் பிரெஞ்சுப் புரட்சிப்போர்கள் நன்கு நிலைநாட்டிவிட்டன!

பிட்டும் பிரெஞ்சுப் புரட்சிப் போர்களும்

இளைய பிட் ஒரு நல்ல அமைதிக்கால அமைச்சர். போரை வெறுப்பவர் எனினும் பெரிய பிரெஞ்சுப் புரட்சிப் போரை நடத்தும் பெரும் பொறுப்பு அவர் தலையில் விழுந்தது. எனவே அரை மனத்துடனேயே அவர் அப்போரிலீடுபட்டார். போரை அவர் நடத்தியவிதம் அவ்வளவு புகழ்ச்சிக்குரியதாயில்லை.

தமது தந்தையைப் போன்று இளைய பிட் ஒரு பெரிய பேரமைச்சரல்லர்..சாத்தாம்பிரபுவின் போர் நிருவாகத் திறமை யும், தகுந்த தளகர்த்தர்களைத் தேர்ந்தெடுத்துத் தக்க இடங் களில் நியமிக்கும் தனியாற்றலும் அவர்பால் சிறிதும் காணப் படவில்லை. மூத்தபிட் கையாண்ட, எதிரிகளின் கப்பற்படை களை அவற்றின் துறைமுகங்களிலேயே அடைத்து வைக்கும் உபாயத்தை அவர் கடைபிடிக்கவில்லை. இதே தவற்றினால்தான் அமெரிக்க சுதந்திரப் போரில் ஆங்கிலேயருக்குத் தோல்வி கிட்டி யது. ஏழாண்டுப் போரில் மூத்தபிட் வெற்றிபெற்றதற்குக் காரணம் மேற்சொன்ன முறையைக் கையாண்டதால்தானாகும். ஆனால், இளையபிட், பிரெஞ்சு நாட்டின் துறைமுகங்களைச் சரிவரக் காவல் செய்யத் தவறிவிட்டார். அவற்றுள் வியாபாரக் கப்பல் கள் செல்வது தடுக்கட்படவில்லை. போர்க் கப்பல்கள் அவற்றி னின்றும் வெளிப்போந்து ஆங்கிலக் கப்பல்களைக் கைப்பற்றின. இங்ஙனம் மூவாயிரத்துக்கும் மேற்பட்ட ஆங்கில வியாபாரக்

கப்பல்களைப் பிரெஞ்சுக்காரர் கைப்பற்றினர். 'புகழ்பெற்ற முதல்ஜூன்' போரில் பிரெஞ்சுக்காரர் கப்பற்படையை ஆங்கிலேயர் தோற்கடித்தனரெனினும், அக்கப்பற் படையின் காவலில் வந்த உணவுக் கப்பல்கள் தப்பியோடி விட்டன.

உலகின் பல பாதங்களிலும் நடைபெறும் போரில், ஆங்கங்கே நடக்க வேண்டிய நிகழ்ச்சிகளைத் திட்டமிடல், இத்திட்டத்தைச் சரியான நபர்களிடம் ஒப்படைத்தல், அங்ஙனம் ஒப்படைக்கப் பட்டவர்களுக்கு ஊக்கமும்உற்சாகமும்ஊட்டல் என்ற பண்புகள் மூத்த பிட்டிடம் காணப்பட்டதுபோல் இளையபிட்டிடம் காணப் படவில்லை. நோய்கள் மலிந்த மேற்கிந்தியத் தீவுகளுக்குச் சில திறமைமிக்கப் படைப் பகுதிகளை அனுப்பி அவற்றை அவர் நோய்க்குப் பலியாக்கினர். ஹாலந்துக்கு அனுப்பப்பட்ட படைக்குத் திறமையற்ற யார்க் கோமகனை அனுப்பித்தோல்வி யைத்தேடிக்கொண்டார். ஐரோப்பிய நேசநாடுகளுக்கு அவர் அனுப்பிய உதவிப் பணம் சரிவரச்செலவழிக்கப்படுகிறதா என்பதைப் பற்றி அவர் அக்கறைக் கொள்ளவில்லை. சான்றாகப் பிரஷியாவுக்கு அவர் அனுப்பிய பணம் போலந்தைப் பங்கு போட்டுக் கொள்ள உதவியதேயன்றி பிரெஞ்சுக்காரரோடு போரிடப் பயன்படவில்லை. இங்கிலாந்திலிருந்து ஐரோப்பா வுக்கு அனுப்பப்பட்ட படைகளில் நல்ல வீரர்களில்லை. படை யெடுப்புகள் நன்கு திட்டமிடப்படவில்லை. அவை திறமையுடன் நடத்தப்படவில்லை. எனவே ஆள்சேதமும், பொருள்சேதமும் பெருமளவுக்கு ஏற்பட்டனவேயன்றி எதிர்பார்த்த பலன்கள் விளையவில்லை.

போர்ச்செலவைச் சமாளிக்கப் பிட் கடைபிடித்த முறைகள் அவ்வளவு திருப்திகரமாக இல்லை. பிரெஞ்சுப் புரட்சிப் போர்கள் அதிகநாள் நீடிக்காதெனவே அவர் முதலில் எண்ணினர். எனவே அவர் ஏற்கனவே போட்ட பொருளாதாரத் திட்டங்களைக் கைவிடவில்லை. நாட்டுக் கடனை அடைக்க அவர் ஒரு கடன் கழிவு நிதியை (Sinking Fund) ஏற்படுத்தினர். செலவைக் காட்டிலும் வருமானம் அதிகமாயிருக்கும்போது அம்முறை நாட்டின் நலனுக்கு உகந்துதான். ஆனல் வருமானத்தைவிடப் பன்மடங்கு அதிகமாகச் செலவாகின்ற போக்குள்ள காலத்தில் அது பயனற்ற தொன்று என்பதில்ஐயமில்லை. இதை உணராமல்பிட். அக்கடன் கழிவு நிதியைத் தம் திட்டப்படி வளர்த்துக்கொண்டே வந்தார். புதிய வழிகளில் பணம் திரட்டத் தெரியாமல் கடன்களை நிறைய வாங்கித் தள்ளினர். அவற்றின் வட்டி வீதமோ, அபரிமிதமா யிருந்தது. அதனல் நாட்டில் நாளடைவில் பல குழப்பங்கள் விளைந்தன. கடைசியாக அவர் ஒரு புதிய வருமானவரியை

மக்கள்மீது திணித்தார். ஆண்டு ஒன்றுக்கு அறுபது பவுன் களுக்கு மேல் வருமானமுள்ளவர்கள் மீது படிப்படியாக ஒரு படித்தர வரியை அவர் (Graduated Tax) போட்டார். ஆரம்பப் படிகளில் வரி மிகவும் குறைவாயிருந்தது. ஒரு பவுனுக்கு இரண்டு பென்ஸுகளே அப்போது வரி வசூலிக்கப்பட்டது. ஆனால், மேல்படிகளில் வரி மிகவும் கடுமையாக இருந்தது. 200 பவுன் வருமானமுள்ளவர்கள் பவுனுக்கு இரண்டு ஷில்லிங்குகளை வரியாகச் செலுத்த வேண்டியிருந்தது. போர்க்கால வரியாகவே இவ் வருமானவரி கருதப்பட்டது. அமைதி ஏற்றபட்டவுடன் அது நீக்கப்பட்டுவிடும் என்ற நம்பிக்கையில் மக்கள் அவ் வரிப் பளுவைச் சகித்துக் கொண்டனர். சற்று முன்னதாகவே பிட் இவ்வரியைப் போட்டிருந்தால் எளிதில் போர்செலவைச் சமாளித் திருக்கலாமே எனத் தோன்றலாம், ஆனால் பிட்டைப் போலவே ஆங்கில மக்களும், பிரெஞ்சுப் புரட்சியானது சீக்கிரமே பிசுபிசுத்துவிடுமென நினைத்தனராதலால், ஆரம்பத்தில் பிட் அதே வரியைப் போட்டிருந்தால் அதற்குப் பலத்த எதிர்ப் பேற்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

இளைய பிட் போர்களை நடத்துவதில் பல தவறுகளைச் செய்தார் என்பதென்னவோ உண்மைதான், கடற்படை நன்கு பயன்படுத்தபடவில்லை. பணம் பாழாக்கப்பட்டது. ஆங்கில மக்களின் உரிமைகள் பறிபோயின. ஆரம்பத்தில் சீர்திருத்த வாதியாகத் திகழ்ந்த பிட் நாளாகஆக சீர்திருத்த விரோதியாக மாறி, அடக்கு முறையாட்சியைக் கைக்கொண்டார். இத்தனை குறைகளிருந்தும் பிட் உண்மையில் போற்றத் தக்கவரேயாவார் வேறெவரும் கண்டிராத, பெரியதோர் போரைச் சமாளிக்கும் பொறுப்பு பிட்டுக்கு ஏற்பட்டது. அவருடைய தந்தைக்குக்கூட அப்படிப்பட்ட பெரும் பொறுப்பு ஏற்படவில்லை. எனவே ஓரளவு வெற்றியுடனாவது அவர் பிரெஞ்சுப் புரட்சிப் போர்களைச் சமாளித்தாரே என்பது போற்றற்குரியதாகும். 'கட்டின வீட்டுக்கு வக்கணை சொல்வது' எளிது. ஆனால், ஒரு சிறு கட்டடத்தையேனும் கட்டி முடித்தல் அரிது. அதேபோன்று பிட் செய்த பிழைகளை மிகைப்படுத்திக் கூறுவது எளிது. ஆனால், அவர் காலத்திய சூழ்நிலையில் அவரைவிடச் செம்மையாக நிலைமையை வேறெவரும் சமாளித்திருக்க முடியுமா என்பது சந்தேகப்படக்கூடியதேயாகும். மிகவும் இக்கட்டான சமயத்தில் பிரிட்டனைக் காத்த பெருமை பிட்டுக்குரியதாகும். 'புயலில் சிக்கிய ஆங்கில நாடெனும் மரக்கலத்தை வெற்றி கரமாக அப்புயலினின்றும் காப்பாற்றிய வீரர்' என அவரை ஆங்கில மக்கள் புகழ்வது பெரிதும் பொருத்தமுடையதேயாகும்.

# 10. நெப்போலியப் போர்கள் (1805-1815)

## பிரிட்டிஷ் பிரெஞ்சுப் பூசல்கள் மீண்டும் தோன்றல் (1804-1805)

## பிட் மீண்டும் பிரதமராதல் (1804)

### மூன்ரும் கூட்டுறவு Third Coalition (1805)

நெப்போலியன் முதல் பிரிட்டிஷ் படையெடுப்புத் திட்டம் (1804) — நெப்போலியன் கடற்படையெடுப்புத் திட்டம் (1805) — நெப்போலியன் வெற்றி தோல்விகள் - ஊல்ம் (1805). ட்ரெபல்கார் (1805) - ஆஸ்டாலிட்ஸ் (1805) - ஜயேனு (1806) - பிரீட்லாந்து (1807) - டில்சிட் உடன்பாடு (1807).

### நெப்போலியனின் கண்டத்திட்டம் Continental System

பெர்லின் கட்டளைகள் Berlin Decrees (1806-1807)—கவுன்ஸில் சட்டளைகள் Orders in Council (1806 - 1807) — கண்டத்திட்டத்தின் விளைவுகள்.

### தீபகற்பப் போர் Peninsular War (1808 - 1814) —

ஸ்பெயின் அரசியலில் நெப்போலியனது தலையீடு — தீபகற்பப் போர் ஆரம்பம் - சர் ஆர்தர் வெல்லெஸ்லி விமீரோப் போர்க்களம் (1808) — சர் ஜான்மூர் — கருன்னுப் போர்க்களம் (1809) — மீண்டும் வெல்லெஸ்லி — அவரது வெற்றிகள் — டலவெராப் போர் (1809) - டாரஸ்வெட்ராஸ் மண் அரண்வட்டங்கள் Lines of Torres Vedras - சியூடாட் ராட்ரிகோ, படஜாஸ் சண்டைகள் (1812) - சாலமன்க்கா போர் — (1812) மாட்ரிட் (1812) — விக்டோரியா (1813) - சான்சபாஸ்டியன் ஆர்த்தெஸ், டூலோஸ் வெற்றிகள் (1814).

### நெப்போலியன் வீழ்ச்சி :

ருஷ்யப் படையெடுப்பு (1812) — நான்காம் கூட்டுறவு Fourth Coalition [1813] - தேசிய விடுதலைப் போராட்டம் War of National Liberation [1813-1814] லட்ஸன்; பௌட்ஸன் போர்க்களங்கள் - ட்ரெஸ்டன் [1813] லீப்ஸ்விக்-பன்னுட்டு மக்கட் போர்கள் Battle of the Nations [1813] நூறு நாள்கள் Hundred Days [1815]—வாட்டர்லூச் சண்டை [1815]-நெப்போலியனது தோல்விக்குக் காரணங்கள்.

## வியன்னு ஏற்பாடு Vienna settlement (1815)

## நெப்போலியப் போர்கள்

மூன்ரும் ஜார்ஜ் காலத்தில் இங்கிலாந்துக்குச் சோதனைக்கு மேல் சோதனை ஏற்பட்டது. முதலில் அமெரிக்கச் சுதந்திரப் போரால் ஆங்கில மக்கள் அலைக்கழிக்கப்பட்டனர். அதனுல் நாட்டின் செல்வ நிலை நலிந்ததோடு அதன் புகழுக்கும் ஓரளவு இழுக்கு ஏற்பட்டது. அதைத்தொடர்ந்து இங்கிலாந்து, பிரெஞ்சு புரட்சிப் போர் என்னும் புயலில் சிக்கித் தடுமாறியது. ஆமியாங் சமாதானத்தால் அது ஓய்ந்ததுபோல் காணப்பட்டது. ஆனுல் கூடிய விரைவிலேயே இங்கிலாந்து, நெப்போலியப் போர்கள் எனும் சூருவளியில் சிக்கிக்கொண்டது. முடிவில் அதிலிருந்தும் ஆங்கிலேயர் தப்பிவிட்டனர். ஐரோப்பாவையே பம்பரம்போல் ஆட்டிவைத்த மாவீரன் நெப்போலியனையே கதிகலங்க வைத்து, அவரது மண்ணுசையில் மண்ணைப் போட்ட பெருமை இங்கிலாந்துக்குரியதாகும்.

## பிரிட்டிஷ்-பிரெஞ்சுப் பூசல்கள் மீண்டும் தோன்றல் (1804 - 1805)

ஆமியாங் சமாதானத்தால் நிரந்தர அமைதி ஏற்படுமென்பதற்கு ஓர் அறிகுறியும் தோன்றவில்லை. அவ்வுடன்படிக்கையின் நிபந்தனைகளைப் பிரிட்டனும், பிரான்ஸும் இரண்டுமே மதித்து நடக்கவில்லை. பிரிட்டன், மால்டா தீவினின்றும் வெளியேறவில்லை. வெளியேறினுல் நெப்போலியன் எங்கு அதைப் பிடித்துக்கொள்வாரோ எனப் பிரிட்டிஷ் அரசாங்கம் அஞ்சியது. பிரெஞ்சுத் துருப்புகள் உடன்படிக்கைக்கு விரோதமாக டச்சுப் பிரதேசத்தைக் கைப்பற்றின. பிரிட்டனின் வியாபாரத்தை நசுக்க டச்சுத் துறைமுகங்களை நெப்போலியன் பயன்படுத்தக் கூடுமென ஆங்கிலேயர் அஞ்சினர். நெப்போலியனும் தாம் ஆமியாங்கில் ஒப்புக்கொண்டபடி, ஆங்கிலேயரோடு வியாபார ஒப்பந்தங்களைச் செய்யாமல் காலந்தாழ்த்திக்கொண்டே சென்ருர் அவரது செய்கைகள் ஆங்கிலேயரின் ஐயத்தை மேலும் உறுதிப்படுத்தின. ஆங்கிலப் பத்திரிகைகளில் நெப்போலியனைப் பற்றிய கேலிச் சித்திரங்கள் வந்த வண்ணமிருந்தன. அவைகளைக்கண்ணுற்ற நெப்போலியன் சினங்கொண்டு ஆங்கிலேயர் மீது வஞ்சந் தீர்க்க எண்ணங் கொண்டார்.

## பிட் மீண்டும் பிரதமராதல் (1804)

1802-ஆம் ஆண்டு நெப்போலியன் தம் ஆயுள் பூராவுக்கும் கான்கல் ஆக்கப்பட்டார். 1804 ஆம் ஆண்டில் அவர் பிரான்ஸின்

பேரரசர் என முடிசூட்டிக்கொண்டார். அவர் எந்த நேரத்திலும் இங்கிலாந்தின்மேல் படையெடுக்கக்கூடுமென்பதை ஆங்கிலேயர் உணர்ந்தனர். நெப்போலியனும் தாம் ஐரோப்பாவில் தனித் தலைமை பெறவேண்டுமானால் முதலில் பிரிட்டிஷாரை ஒழிக்க வேண்டும் எனநினைத்து அதற்கான ஆயத்தங்களைச் செய்யலானார். அவர் தமது எண்ணத்தை ஈடேற்றுமுன் பிரிட்டன் முந்திக் கொள்ள நினைத்து 1803-ஆம் ஆண்டு மே மாதம் பிரான்ஸ்மீது போர் தொடுத்தது. இப்போரானது பிரிட்டனின் தற்காப்புப் போரே எனலாம். நெதர்லாந்து, வட இத்தாலி, முதலிய ஐரோப்பிய நாடுகளுக்குக்கேற்பட்ட கதி எங்குத் தனக்கும் நேர்ந்து விடுமோ என்ற ஐயப்பாடே பிரிட்டனின் இப்போருக்கு முக்கிய காரணமாகும். போர் ஆரம்பக் காலத்தில் ஆடிங்டன் என்பவரே பிரதம அமைச்சராயிருந்தார். ஆனால் நெப்போலியனை மடக்க வேண்டுமானால் அவரைவிடப் பன்மடங்கு திறமை வாய்ந்த பிட் மீண்டும் பதவியேற்க வேண்டுமென பலரும் நினைத்தனர். ஜார்ஜும் நெருக்கடியை உணர்ந்து தலைமை அமைச்சராக வந்து பணியாற்றும்படி பிட்டுக்கு ஓர்அழைப்பு விடுத்தார். ஐரிஷ் கத்தோலிக்கருக்கு விடுதலையளித்தல் என்ற தமது கொள்கையை ஜார்ஜ ஒப்புக் கொள்ளாததாலேயே பிட் தம் பதவியைத் துறந்தார் இப்போது அவர் தமது கொள்கைக்குப் பணியும்படி அரசரை வற்புறுத்தியிருக்கலாம் ஆனால் பிட் அவ்விதம் செய்யவில்லை. ஏனெனில் தாம் மன்னரது விருப்பத்துக்கு விரோதமாய் ஏதாவது சொன்னால், அது அவரது ஆவேசத்தைக் கிளறி எங்கு அவருக்கு ஏற்கனவே இருந்த சித்தப்பிரமை மீண்டும் திரும்பி விடுமோ என அவர் பயந்தார். தம் மதிப்பைவிட நாட்டின் நலனே பெரிதெனக் கருதிய பிட், அரசரது அழைப்பை ஏற்றார். (1804). ஃபாக்ஸ் என்ற அறிஞரைத் தம் மந்திரிசபையில் சேர்த்துக்கொள்ளப பிட் விரும்பினார். ஆனால், ஜார்ஜ் அதை விரும்பாததால், பழைய ஆடிங்டன் மந்திரி சபை உறுப்பினர்களின் உதவி கொண்டே பிட் தமது பணியைச் செய்யலானார்.

## மூன்றும் கூட்டுறவு

நெப்போலியனுக்கெதிராக பிட் தமது பழைய வழக்கப்படி ஒரு கூட்டுறவை ஏற்படுத்தினர். அதில் ஆஸ்திரியாவும் ருஷ்யாவும் சேர்ந்தன. பிரஷ்யா, நெப்போலியன் படை எடுப்புக்குப் பயந்து அதில் சேர மறுத்துவிட்டது. இக்கூட்டமைப்பின் முதல் திட்டமாவது, ஆஸ்திரியாவும் ருஷ்யாவும் சேர்ந்து பிரான்ஸின் நட்பு நாடான பவேரியாவைத் தாக்க வேண்டுமென்பதாகும். அப்படை எடுப்புக்காகும் செலவுக்குப்

பணம் தர இங்கிலாந்து ஒப்புக்கொண்டது. இதையெல்லாம் நெப்போலியன் அறிய வந்ததும், ஓயாது ஐரோப்பாவில் கூட்டுச் சேர்க்கும் முயற்சிலீடுபட்டுக் கொண்டிருந்த பிரிட்டனுக்கு ஒரு நல்ல பாடங் கற்பிக்க வேண்டுமெனத் தீர்மானித்தார்.

## நெப்போலியனின் முதல் பிரிட்டிஷ் படையெடுப்புத் திட்டம் (1804)

பிரிட்டன்மேல் படை எடுக்கவென்றே நெப்போலியன் ஒரு தனிப்பட்ட படையைத் திரட்டிப் பூலோன் (Boulogne) நகருக்கருகில் வைத்திருந்தார் *(1804)*. 'இங்கிலாந்தின் மாண்புறு படை' (The Grand Army of England) என அழைக்கப்பட்ட அப்படையில் நன்கு பழக்கப்பட்ட **1,50,000** படை வீரர்கள் இருந்தனர். அவர்களுக்கெதிரே காணப்பட்ட ஆங்கில வெண்குன்றுகளை இன்னும் சில நாள்களில் எப்படித் தாக்கிப் பிடிப்பது என்பதை அவர்கள் ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தனர். குறுக்கே ஆங்கிலக் கால்வாய் இல்லாதிருந்தால் அவர்கள் வெகு எளிதில் இங்கிலாந்தைக் கைப்பற்றியிருப்பர். ஆனால், அந்த முப்பது மைல் அகலமுள்ள கடற்கால்வாய்தான் ஆங்கிலச் சுதந்திரத்தை அவ்வப்போது காத்துக்கொள்ள உதவி செய்துள்ளது. அந்நீர்ப்பரப்பைக் காணும்போதெல்லாம் நெப்போலியனுக்கு எரிச்சல் எரிச்சலாய் வந்தது. அதைக்கடந்து இங்கிலாந்துக்குள் நுழைவது எப்படி என்பதைப் பற்றி அவர் பல நாள்கள் தம் மூளையைக் குழப்பிக்கொண்டார் கடைசியில் ஆயிரக்கணக்கான தட்டைப் படகுகளைக் கொண்டு வீரர்களை அக் கரைக்குக் கடத்துவது என்று அவர் தீர்மானித்தார். ஆனால், அப்படிக் கடத்தவும் பல அலையேற்றங்களுக்காக (Tides) காத்திருக்கவேண்டுமென்பது அவருக்கு அனுபவத்தில் தெரிய வந்தது. அதற்குள் பிரிட்டிஷ் கப்பற்படை விழித்துக் கொள்ளும் என்பதையும் நெப்போலியன் உணர்ந்தார். பிரிட்டிஷ் கப்பல்கள் ஆங்கிலக் கால்வாயில் காவல் சுற்றிக் கொண்டேயிருந்தன. அவர்களை ஏமாற்றி விட்டுப் படைகளை இங்கிலாந்துக்கு அனுப்புவதென்பது எளிதாயில்லை; எனவே, நெப்போலியன் தமது முதல் படை எடுப்புத் திட்டத்தைக் கைவிட்டார்.

## நெப்போலியன் கடற்படையெடுப்புத்திட்டம் (1805)

அடுத்து அவர் ஆங்கிலக் கால்வாயில் சுற்றிக் கொண்டிருந்த பிரிட்டிஷ் கப்பற்படையைத் தோற்கடித்து அங்கு பிரான்ஸின் ஆதிக்கத்தை நிலைநாட்ட விரும்பினார். வலிமை வாய்ந்த பிரிட்டிஷ் கப்பற்படையைத் தோற்கடிக்கவேண்டுமானால் தனிப்பட்ட பிரெஞ்சுக் கடற்படையால்மட்டும் முடியாதெனக் கண்டு கொண்ட நெப்போலியன், ஸ்பெயின் கப்பற்படையோடு சேர்ந்து கொள்ள விரும்பினார். ஆனால்,இவ்விரு படைகளும் சேரமுடியாத்

படி பிரிட்டிஷ் கப்பல் படையானது காவல் புரிந்து கொண்டிருந்தது. மூடுபனி ஏதாவது ஏற்பட்டால் அதன் மறைவில் தமது கப்பற் படையை ஸ்பெயினுக்குச் செலுத்திவிடலாமென நெப்போலியன் நினைத்தார். ஆனால், வழக்கத்துக்கு மாறாகப் பல மாதங்கள்வரை வானம் வெளிர்வாங்கியேயிருந்தது. மூடுபனியே ஏற்படவில்லை. எனினும் நெப்போலியனது மூளையில் பிரிட்டிஷ் கப்பற் படையைத் தோற்கடிக்க ஒரு திட்டம் உதித்தது. அதன் படி டூலோங் நகரிலிருந்த பிரெஞ்சுக் கப்பற்படையை அதன் தலைவரான வில்லநூவ் (Villane) எப்படியேனும் ஆங்கிலேயருடைய கண்களுக்குப் படாமல் வெளிக்கிளப்பிக்கொண்டு சென்று காடிஸ் (Cadiz) துறைமுகத்திலிருந்த ஸ்பானியக் கப்பற் படையோடு ஒன்றுசேர்த்துவிட வேண்டும். அதன்பின் அக் கூட்டுக் கப்பற்படையானது மேற்கிந்தியத் தீவுகளைக் கைப்பற்றச் செல்வது போல் போக்குக்காட்டிப் பாசாங்கு செய்ய வேண்டும். அப்போது பிரிட்டிஷ் கப்பற்படை அவர்களைப் பின்தொடர்ந்து அமெரிக்காவுக்குப் போகும். அச்சமயத்தில் வேகமாக அப் படைகள் திரும்பிவந்து ப்ரெஸ்ட் (Brest) துறைமுகத்திலிருந்த கப்பற்படையுடன் சேர்ந்துகொண்டு ஆங்கிலக் கால்வாயில் எஞ்சியிருக்கும் ஆங்கிலக் கப்பற்படையை அழித்துவிட்டு, பூலோனிலிருந்த படையைத் தக்க பாதுகாப்புடன் இங்கிலாந்துக்குள் அனுப்பிவிட வேண்டும். பிரிட்டிஷ் கடற்படை மேற்கிந்தியத் தீவுகளிலிருந்து திரும்பி வருவதற்குள் பூலோன் படைவீரர்கள் இலண்டனைக் கைப்பற்றிவிட வேண்டும். இதுவே நெப்போலியனின் திட்டம். இத் திட்டப்படியே வில்லநூவ், ஆங்கிலக் கப்பற்படையை ஏமாற்றிவிட்டுக் காடிஸ் துறைமுகம் சென்று ஸ்பானியக் கப்பற் படையையும் கூட்டிக்கொண்டு மார்ட்டினிக் (Mortinique) என்ற மேற்கிந்தியத் தீவை நோக்கிப் புறப்பட்டார். இதையறிய வந்த பிரிட்டிஷ் கடற்படைத் தளகர்த்தர் நெல்சன், அவர்களைப் பின்தொடர்ந்தார். மார்ட்டினிக் தீவை அவர் அடைந்தபோது அங்கு ஒரு கடற்படையும் காணப்படவில்லை. 'பாம்பின் கால் பாம்பறியும்' என்றபடி எதிரிகளின் தந்திரம் என்னவென்பது பளிச்சென்று நெல்சனுக்குப் புரிந்துவிட்டது. உடனே அவர் ஆங்கிலக் கால்வாயிலிருந்த பிரிட்டிஷ் கப்பற் படைக்கு, வேகமாகச் செல்லும் ஒரு கப்பல் மூலம் செய்தி அனுப்பி எச்சரித்தார். வில்லநூவ், ஆங்கிலக் கால்வாயை அடைவதற்குள் செய்தி ஆங்கிலேயருக்கு எட்டிவிட்டது. எனவே, பிரிட்டிஷ் கடற்படை அதிகாரி பார்ஹாம் பிரபு, கால்டர் (Colder) என்பவரை அனுப்பிப் பிரெஞ்சுக் கடற்படையை வழி மறிக்கும்படி உத்தரவிட்டார். ஃபினிஸ்டெரி (Cape Finisterre) முனைக்கருகில் இரு படைகளும் மோதிக்கொண்டன (1805). வில்ல

நூவ் இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. எனவே அவர் தட்டுத் தடுமாறி மெல்ல, காடிஸ் துறைமுகத்தை அடைவதற்குள் அவருக்குப் போதும் போதுமென்றாகிவிட்டது. காடிஸ் துறைமுகத்தில் ஒரு பிரெஞ்சுப்படை இங்ஙனம் முடங்கிக்கிடக்க, ப்ரெஸ்ட் துறைமுகத்திலிருந்த பிரெஞ்சுப் படை வெளிவர இயலாமல் கார்ன்வாலிஸ் என்பார் அங்கு முற்றுகை இட்டிருந்தார்.

விரைவிலேயே நெல்சன், ஆங்கிலக் கால்வாய்க்குத் திரும்பி விட்டார். ஆனால் அவரது உடலும் உள்ளமும் களைத்துப் போயிருந்தன. எனவே, வில்லநூவ் படைகளைக் காடிஸ் துறைமுகத்திலேயே அடைத்து வைக்கும்படி காலிங்வுட் (Colling Wood) பிரபுவுக்கு உத்தரவிட்டுவிட்டு அவர் இங்கிலாந்து திரும்பினார். நெப்போலியனது திட்டம் நிறைவேறவில்லை. அவருக்கு வில்லநூவ் மீது கோபம் கோபமாய் வந்தது. கோழை என்றும், உதவாக்கரை ஆசாமி என்றும் அவர் அத் தளகர்த்தரைப் பழித்தார்.

நெப்போலியனின் வெற்றி தோல்விகள்

கடலில் வெற்றிபெறத் தவறியதால் மனமொடிந்த நெப்போலியன் பூலோன் நகரிலிருந்த படையைக் கலைத்தார். அதன் பின் அவ் வீரர்களை அவர் ஜெர்மன் போர்முனைக்கு அனுப்பிவிட்டார். ஆறே வாரங்களில் அப் பெரும்படையானது பவேரியாவுக்குள் நுழைந்து ஊலம் (Ulm) என்னுமிடத்தில் ஆஸ்திரியப் படைகளைத்தோற்கடித்தது(1805 அக்டோபர் மாதம்).கூட்டுறவு நாடுகளின் போர்த்திட்டம் ஆரம்பிக்குமுன்பே, அதில் சேர்ந்திருந்த ஒரு பெருநாடு தோற்கடிக்கப்பட்டுவிட்டது. சின்னாள்களில் இதற்கு ஈடான இன்னொரு நிகழ்ச்சி நடைபெற்றது. நெப்போலியனது பழிச்சொல்லுக்கு ஆளான வில்லநூவ் மானம் பொறுக்க மாட்டாதவராய், வாழ்வது அல்லது வீழ்வது என்ற உறுதியுடன் தம் கடற்படையைக் காடிஸ் துறைமுகத்தினின்றும் கிளப்பிக் கொணர்ந்தார். நெல்சன் என்னும் ஆங்கிலக் கடல்தளகர்த்தர் அப் படைக் கப்பல்களை ட்ரெஃபல்கார் (Trafalgar) முனைக்கருகில் சந்தித்துப் போரிட்டார் (1805). மிக உக்கிரமான போர் நடைபெற்றது. சைகைகள் மூலம் 'இங்கிலாந்து, தனது குடிமகன் ஒவ்வொருவனும் தனது கடமையைச் செய்ய வேண்டுமென எதிர்பார்க்கிறது'[1] என்ற வாசகத்தை நெல்சன் யாவருக்கும் தெரியச் செய்தார். ஓர் ஆவேசத்துடனும் நாட்டுப்பற்றுடனும் ஆங்கிலேயர் போரிட்டு வெற்றிபெற்றனர். இப் போரில் நெல்சன் உயிர்துறந்தார். புகழ்பெற்ற ட்ரெஃபல்கார் வெற்றிக்குக் காரணமாயிருந்த அவர் பூத உடல் நீங்கிப் புகழுடம்பு எய்தினாரெனக் கருதுதலே பொருத்தமுடைத்தாகும். ட்ரெஃபல்கார் தோல்வியைக் கேட்டு

[1] 'England Expects everyman to do his duty'


அட்லாண்டிக் பெருங்கடல்
வட கடல்
கேம்பர்டவுன்
பால்டிக் கடல்
மாஸ்கோ
கோப்பன்ஹேகன்
லீப்ஸிக்
பெர்லின்
வாடர்லூ
ஆஸ்டர்லிட்ஸ்
பூலோன்
ஆமியாங்
ஜீனா
வியன்னா
கருன்னா
டௌலோஸ்
மாரெங்கோ
ஹோஹென்லின்டன்
கருங்கடல்
டாரஸ்வெட்ராஸ்
கார்ஸிகா
மினூர்க்கா தீவு
சார்டீனியா
செண்ட் வின்ஸெண்ட்
ட்ரெபெல்கார்
மத்திய தரைக் கடல்
ஆப்பிரிக்கா
மால்டா தீவு
ஆகர்
அலெக்ஸாந்திரியா
நெப்போலியப் போர்கள்
(1805 - 1815)

நெப்போலியன் மனம் புழுங்கினர். இங்கிலாந்தின்மேல் படை எடுக்கும் எண்ணத்தை அவர் அறவே கைவிட்டார். அவர் தம் முழுக் கவனத்தையும் மற்றைய இரு கூட்டுறவு நாடுகளின்மீது செலுத்தினர். ஆஸ்திரியா, ருஷ்யா என்ற இருநாடுகளின் கூட்டுப் படையை அவர் ஆஸ்டர்லிட்ஸ் (Austerlitz) என்னுமிடத்தில் படுதோல்வி அடையச் செய்தார் (1805). ஆஸ்திரிய அரசர், நெப்போலியனிடம் சரணடைந்தார். ருஷ்ய சாரும் (Czar) தமது படைகளைப் போலந்து நாட்டுக்குக் கொண்டுபோய்விட்டார். மூன்றும் கூட்டுறவு இங்ஙனம் கலைந்தது. பிட் என்பார் ஆஸ்டர்லிட்ஸ் தோல்வியைக் கேட்டதும் பெரிதும் துணுக்குற்றார். நோயால் நலிந்திருந்த அவர் அச் சோகச் செய்தி கேட்டுத் தாங்கொணுத் துயரத்திலாழ்ந்தார். அதே ஏக்கத்தில் பிட் மீளா நோய்வாய்ப்பட்டு இறந்தார் (1806). அவர் முகத்தில் அந்த ஆஸ்டர்லிட்ஸ் ஏக்கம் இறுதிவரை மாறவேயில்லை. அச் செய்தி கேட்டபோது பிட் ஓர் ஐரோப்பியப் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாராம். அப்போது அவர், 'அந்தப் படத்தைச் சுருட்டி வையுங்கள். இன்னும் பத்து ஆண்டுகளுக்கு அது தேவைப்படாது' எனப் புகன்றாராம். அவர் உண்மையில் ஓர் அரசியல் தீர்க்கதரிசி என்பதையே அவரது அந்தச் சொற்கள் மெய்ப்பித்தன. ஏனெனில், அடுத்த பத்தாண்டுகளுக்கு ஐரோப்பா நாடுகள் அனைத்தும் நெப்போலியனுக்கு அடிபணிந்தே கிடந்தன.

பிட் இறந்தவுடன் இங்கிலாந்தில் ஒரு கூட்டுமந்திரிசபை கூடியது. அதில் ஃபாக்ஸ் என்பார் வெளிநாட்டு அமைச்சராகப் (Foreign Secretary) பணியாற்றினர். இம் மந்திரிசபையில் பல்வேறு கொள்கையாளரும் கலந்து கொண்டதால் அதற்கு 'எல்லாத் திறனும் கொண்ட மந்திரிசபை'(Ministry of all talents) என்ற பெயர் ஏற்பட்டது. இம் மந்திரி சபையின் காலத்தில்தான் அடிமை வியாபார ஒழிப்புச் சட்டம் இங்கிலாந்தில் கொண்டு வரப்பட்டது (1807).

நெப்போலியனது அதிகாரம் ஐரோப்பாவில் நாளுக்குநாள் பெருகிக்கொண்டே சென்றது. நேப்பிள்ஸிலிருந்த அரசரான ஃபெர்டினண்டைத் துரத்திட்விட்டு, நெப்போலியன் தமது சகோதரரான ஜோஸப் போனபார்ட் (Joseph Bonaparte) என்பவரை அங்கு அரசராக்கினர். அவரது இன்னொரு சகோதரரான லூயியை அவர் ஹாலந்தின் மன்னராக்கினர். ஜெர்மனியிலிருந்த முந்நூற்றுக்குமதிகமான சிறு இராஜ்யங்களை ஒழித்துவிட்டு முப்பத்தொன்பது பெரும் இராஜ்யங்களாகப் பிரித்து அவற்றை ஒரு தளர்ந்த இணைக்கூட்டாக (Confederation) அமைத்தார். புனித ரோமப் பேரரசை (Holy Roman Empire) அவர் 1806-ல்

ஒழித்தார். ஜெர்மன் அரசர், 'ஆஸ்திரியப் பேரரசர்' என்று தம்மை அழைத்துக் கொள்ளலாமென்றும், 'புனித ரோமப் பேரரசர்' என்ற பட்டத்தைக் கைவிடவேண்டுமெனவும் கட்டாயப் படுத்தினர். பிரஷ்யாமீதும் அவர் 1806 ஆம் ஆண்டில் படையெடுத்தார். ஜீயேனு (Jena) என்னுமிடத்தில் பிரஷ்யப் படைகளை அவர் நிர்மூலமாக்கினர். ஐரோப்பாவிலேயே மிக வன்மை வாய்ந்த படை எனக் கருதப்பட்ட பிரஷ்யப்படையும் நெப்போலியன் முன் பணிந்தது. 1807-ல் ருஷ்யப் படைகளையும் அவர் பிரீட்லாந்து (Friedland) என்னுமிடத்தில் தோற்கடித்தார். டில்சிட் (Dilsit) என்னுமிடத்தில் நெப்போலியனோடு ருஷ்ய அரசர் ஒரு சமாதான உடன்படிக்கையைச் செய்து கொண்டார். நெப்போலியனின் புகழ் உச்சநிலையை அடைந்தது.

## நெப்போலியனின் கண்டத் திட்டம் (Continental system)

### பெர்லின் கட்டளைகள்

பெர்லின் நகருக்குள் நுழைந்தவுடன் நெப்போலியன் 'பெர்லின் கட்டளைகள்' (Berlin Decrees) என்ற சில ஆணைகளைப் பிறப்பித்தார் (1806 - 1807). அக் கட்டளைகளின் தொகுதிதான் 'கண்டத்திட்டம்' என்பது. அவற்றின்படி எந்த ஐரோப்பிய நாடும் பிரிட்டனோடு வியாபாரம் செய்யக்கூடாது. பிரிட்டிஷ் வியாபாரக் கப்பல்கள் ஐரோப்பியத் துறைமுகங்களுள் நுழையக்கூடாது. பிரிட்டிஷ் துறைமுகங்களுக்குச் சென்றபின் ஐரோப்பாவுக்கு வருகின்ற நடுநிலைமை நாடுகளின் கப்பல்கள் பிரெஞ்சுக்காரர்களால் பறிமுதல் செய்யப்படும். பிரிட்டிஷ் வியாபாரப் பொருள்கள் எங்குக் காணப்படினும் அங்கு அது அழிக்கப்பட வேண்டும்.

### கவுன்ஸில் கட்டளைகள்

நெப்போலியனது பெர்லின் கட்டளைக்கு எதிராக பிரிட்டிஷ் அரசாங்கமானது 'கவுன்ஸில் கட்டளைகள்' (Orders in Council) என்ற ஆணைகளைப் பிறப்பித்தது (1806-1807). அதன்படி வியாபாரக் கப்பல்கள் எதுவும் பிரெஞ்சுத் துறைமுகங்களுக்குப் போகக்கூடாது. நடுநிலைமை நாட்டுக் கப்பல்கள் ஐரோப்பாக் கண்டத்துக்கு நேரே போகாமல் பிரிட்டிஷ் துறைமுகங்களுக்கு வந்த பின்னரே போக வேண்டும்.

இங்ஙனம் பிரிட்டனும் பிரான்ஸும் ஒன்றை ஒன்று முற்றுகையிட்டிருப்பதாக அறிவித்துக்கொண்டன. எனினும், முற்றுகை அறிவிப்பை நடைமுறையில் கொண்டு செலுத்தக்கூடிய நிலையில் இருந்தது பிரிட்டன் மட்டுமே. ஏனெனில், அதனிடம்தான் வலிமை பெற்ற கடற்படை இருந்தது. நெப்போலியன், தமது

வெறும் இராணுவ பலத்தைக் கொண்டு எல்லா ஐரோப்பிய நாடுகளையும் தம் கொள்கைக்குப் பணிய வைத்துவிடலாமென மனப்பால் குடித்தார். ஆனால், அதுதான் முடியாமற் போயிற்று. 'அந்தக் கடைக்காரப் பிரிட்டிஷ் சமுதாயத்தைப் பட்டினி போட்டே கொல்கிறேன் பார்'[1] என்று அவர் சவால் விடுத்தார். ஆனால் அந்தச் சவால் வெற்றி பெறவில்லை.

கண்டத் திட்டத்தின் விளைவுகள்

பரஸ்பர முற்றுகைப் போரினால் பிரிட்டன், பிரான்ஸ் இரண்டுக்குமே பல இடர்ப்பாடுகள் விளைந்தன. பிரிட்டனுடைய பொருள்கள் விற்பனையின்றிக் கிடங்குகளிலேயே முடங்கிக் கிடந்தன. பிரிட்டிஷ் அறுவடைகள் சரியில்லாததால் அங்கு உணவுப் பஞ்சம் ஏற்பட்டது. வெளியிலிருந்தும் உணவு வருவதற்கில்லை. எனவே, உணவுப் பொருள்களின் விலை ஏறிக்கொண்டே சென்றது. கைத்தொழிற் புரட்சி அப்போது இங்கிலாந்தில் ஆரம்பித்திருந்தது. அபரிமிதமாக உற்பத்தி செய்யப்பட்ட பொறிசெய்பொருள்களுக்கு (Manufactured articles) சந்தை இல்லாமல் இங்கிலாந்திலேயே தேங்கிக் கிடந்தன. கூலிகள் குறைந்தன. பலர் வேலை இழந்தனர். பட்டினியால் வாடிய மக்கள் இயந்திரங்களே தங்கள் துன்பங்களுக்கெல்லாம் காரணமென நினைத்துத் தொழிற்சாலைக்குள் புகுந்து பொறிகளை எல்லாம் நொறுக்கினார்கள். 'லட்டைட் கலவரங்கள்' (Luddite Riots) என்ற இக் கிளர்ச்சிகளுக்குக் காரணம் வயிற்றுக்குப் போதிய உணவின்மையேயாகும். பிரெஞ்சு மக்களும், பிரிட்டனிலிருந்து அங்குச்சென்ற காப்பி, சர்க்கரை, புகையிலை முதலிய பொருள்கள் கிடைக்காமல் வாடினர். தொப்பிகள், கோட்டுகள், செருப்புகள் முதலியவற்றுக்கும் பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயரையே நம்பி இருந்தனர். கள்ளக் கடத்தல் வியாபாரம் நாளுக்குநாள் அதிகமாகியது. நெப்போலியனே, ஒரு சில பேர்க்கு பிரிட்டிஷ் சாமான்களை இறக்குமதி செய்துகொள்ள அனுமதிச் சீட்டுத் தரவேண்டிய நிலைமை ஏற்பட்டது. பொதுவாக, நெப்போலியனது இக் கொள்கை ஐரோப்பியர் மனத்தில் ஒரு வெறுப்பை உண்டு பண்ணிவிட்டது. நடுநிலைமைக் கப்பல்கள் நிலைமை மிகவும் பரிதாபமாயிருந்தது. யாருடைய கட்டுப்பாடுகளுக்குட்படுவதென்பதே பலருக்குப் புரியவில்லை. இருசாராருக்கும் கீழ்ப்படியக் கூடாத நிலையில் நின்று அவர்கள் தவித்தனர். பிரிட்டன் தனது கடற்படை உதவிகொண்டு கப்பல்களைச் சோதிக்க முயன்றது பலருக்குப் பிடிக்கவில்லை.

[1] 'I will starve the Nation of Shopkeepers to death'

கண்டத் திட்டவிதிகளை நடைமுறையில் கொண்டு செலுத்துவதில் பல இடர்ப்பாடுகள் இருந்தன. எனவே, நெப்போலியனது ஆணைகளை மீறிச் சில நாடுகள் பிரிட்டனோடு வியாபாரம் செய்ய ஆரம்பித்தன. முக்கியமாகப் போர்ச்சுகல் தேசத்தார் பிரிட்டனுடன் வியாபாரமின்றேல் பிழைக்க முடியாதென உணர்ந்து நெப்போலியனின் ஆணைகளை மீறினர். எனவே, அவர்களை அடக்கப் பிரெஞ்சுப் படையொன்று அங்கே அனுப்பப்பட்டது. ருஷ்ய அரசர் கண்டத் திட்டத்தை வெளிப்படையாகக் கிண்டல் செய்ய ஆரம்பித்தார். ருஷ்யாவைக் கண்டத்திட்டத்துக்குப் பணிய வைக்க வேண்டி அவர் அதன்மீது போர்தொடுத்தார். ருஷ்யப் படையெடுப்பு, ஸ்பானியப் படையெடுப்பு இவ்விரண்டுமே கடைசியில் நெப்போலியனின் வீழ்ச்சிக்குக் காரணமாயமைந்தன.

## தீபகற்பப் போர் (Peninsular War, 1808-1814)

**ஸ்பெயின் அரசியலில் நெப்போலியனது தலையீடு**

கண்டத் திட்டத்துக்குக் கட்டுப்படாத போர்ச்சுகலைத் தாக்க வென்று நெப்போலியன், மார்ஷல் ஜ்யூனோ (Marshall Juno) என்பவரை ஒரு படையுடன் அனுப்பினார். அப்படையானது ஸ்பெயினைக் கடந்தே செல்ல வேண்டும். அப்போது ஸ்பெயின் மன்னராயிருந்த நான்காம் சார்லஸ் பலஹீனமானவர். எனவே, அவரது அனுமதியின்றியே ஜ்யூனோவின் படைகள் ஸ்பெயினுள் நுழைந்து போர்ச்சுகலுக்குச் சென்றன. இதைக் கண்ட ஸ்பானிய மக்கள் நெப்போலியனை வெறுத்தனர். ஸ்பெயினின் தன்மானத்தைக் காக்கத் தக்கதொரு பலமுள்ள அரசன் தேவையென்பதை அவர்கள் உணர்ந்தனர். ஸ்பெயின் அரசனுக்கு எதிராகப் பல கலகங்கள் கிளம்பின. சார்லஸின் மகன் கலகக்காரரோடு சேர்ந்துகொண்டு தன் தகப்பனரை எதிர்க்க ஆரம்பித்தான். தந்தை தனயன் இருவரும் தனித்தனியே நெப்போலியனை அணுகித் தங்களது வழக்கைத் தீர்க்குமாறு வேண்டிக் கொண்டனர். போர்பன்குல ஆட்சியை ஸ்பெயினில் வேரறுக்க வேண்டுமெனப் பல நாளாகவே எண்ணி வந்த நெப்போலியன் அதுவே தக்க தருணமெனக் கருதி, அவ்விருவரையுமே பட்டத்துக்குரியவர்களல்லரென்று விலக்கிவிட்டுத் தமது சகோதரரான ஜோஸப்பை ஸ்பெயின்மன்னராகமுடிசூட்டி விட்டார். இந்த நிகழ்ச்சியானது தேசபக்தி நிரம்பிய ஸ்பானியர்களுக்கு ஆத்திரத்தை மூட்டியது. ஸ்பெயின் மற்ற ஐரோப்பிய நாடுகளைப் போலல்லாது ஒரு தேசிய நாடாகத் திகழ்ந்தது. தேசிய உணர்வு ஸ்பானியர்பால் வீறுபெற்று விளங்கியது. தங்களுக்குப் பிரியமில்லாத ஓர் அரசனைத் தங்கள்மீது திணித்த நெப்போலியனை அவர்கள் வெறுத்தனர். ஜோஸப்புக்கெதிராகக் கலகங்களும்

கொரில்லாச் சண்டைகளும் ஸ்பெயின் எங்கும் தோன்றலாயின. உரிமை உணர்வும், விடுதலை வேட்கையும் கொண்ட ஸ்பானியரை அடக்கியாளுதல் எளிதல்ல என்பதை நெப்போலியன் சீக்கிரமே உணர்ந்துகொண்டார். இதுகாறும் நெப்போலியனை எதிர்த்தவர்கள் மக்களின்ஆதரவை இழந்த மதிகெட்ட அரசர்களும், ஊழல்கள் நிறைந்த அரசாங்கங்களுமேயாகும். அவர்களை வெல்லுதல் நெப்

அட்லாண்டிக் பெருங்கடல்
பிஸ்கே வளைகுடா
கருன்னு
விட்டோரியா
பிரன்னீஸ் மலை
டௌலோஸ்
சாலமன்கா
டாரஸ்வெட்ராஸ்
சியுடாட்ராட்ரிகோ
லிஸ்பன்
மாட்ரிட்
டாலவீரா
கார்ஸிகா
பேடஜாஸ்
செண்ட் வின்ஸெண்ட்
மேஜர்க்கா
மைனர்க்கா
காடிஸ்
சார்டீனியா
ட்ரெபெல்கார்
ஜிப்ரால்டர்
ஆப்பிரிக்கா

தீபகற்பப் போர்

போலியனுக்கு எளிதாயிருந்தது. ஆனால், அவர் ஸ்பெயினில் விழித்தெழுந்த ஒரு தேசிய சமுதாயத்துடன் போராட வேண்டியிருப்பதைக் கண்டார். தேசிய எதிர்ப்பு என்பது நெப்போலியனுக்கு ஒரு புதிய அனுபவமாயிருந்தது. ஜோஸப்பை ஸ்பெயின் அரசராக நிலைப்பெறச் செய்யுமுன் ஒவ்வொரு நகரத்திலும் துருப்புகளை

நிறுத்த வேண்டிய அவசியம் அவருக்கு ஏற்பட்டது. ஸ்பெயின், மலைப் பிரதேசமாதலாலும் ஸ்பானியத் துருப்புகள் கொரில்லாப் போர் முறையைக் கையாண்டதாலும் அவர்களைப் பூரணமாக வெல்வது என்பது பிரெஞ்சுக்காரருக்கு முடியாத காரியமாயிருந்தது. உண்மையில் ஸ்பெயினுனது நெப்போலியனது புகழுடம்பில் புரையோடியதொரு புண்ணுகவே(Ulcer)மாறியது. ருஷ்யா, ஆஸ்திரியா போன்ற மற்றைய இடங்களில் கவனம் செலுத்த வேண்டி ஏற்பட்டதால் நெப்போலியன் ஸ்பெயின் போரைத் தம் தளகர்த்தர்களிடம் ஒப்படைத்தார். அவர்கள் மலைப்பாங்கான பிரதேசத்தில் போரிட்டுப் பழக்கமில்லாதவர்களாதலால் அதிகமாக ஒன்றும் முன்னேற முடியவில்லை. புற்றீசல்போல் இடத்துக்கிடம் சிறு கலகங்கள் கிளம்பியவண்ணமிருந்தன. அக் கலகக்காரருக்குக் கடல்வழியாக பிரிட்டனிடமிருந்து உதவிகள் வந்தவண்ணமிருந்தன.

### தீபகற்பப்போர் ஆரம்பம்-சர் ஆர்தர் வெல்லெஸ்லி

30,000 படைவீரர்கள் அடங்கிய ஒரு சேனையுடன் சர் ஆர்தர் வெல்லெஸ்லி என்னும் ஆங்கிலத் தளகர்த்தர் போர்ச்சுகலுக்கு வந்து சேர்ந்தார். அவர் இந்தியாவில் ஏற்கெனவே நல்ல போர்ப் பயிற்சி பெற்றிருந்தார். அவர் ஜ்யூனே என்ற பிரெஞ்சுத் தளபதியை விமீரோ (Vimerio) என்னுமிடத்தில் தோற்கடித்தார் (1808). அவ் வெற்றியைத் தொடர்ந்து ஜ்யூனேவைப் பணிய வைக்குமுன் வெல்லெஸ்லி தம் தலைமைப் பதவியினின்றும் நீக்கப்பட்டார்.

### சர் ஜான் மூர்

சர் ஜான் மூர் (Sir John Moore) என்பாரை பிரிட்டிஷ் அரசாங்கம் முக்கியத் தளபதியாக்கியது. அவர் பிரெஞ்சுக்காரரோடு சிண்ட்ரா ஒப்பந்தத்தைச் செய்துகொண்டார் (1808). அதன்படி பிரெஞ்சுக்காரர் கப்பல் மூலமாகப் போர்ச்சுகலைவிட்டு வெளியேறிவிடுவதற்கு அனுமதிக்கப்பட்டனர்,

அடுத்து நெப்போலியன் தாமே நேரில் 250,000 படை வீரர்களுடன் ஸ்பெயினுக்குள் நுழைந்தார். அவர் நேரே சென்று போர்ச்சுகலின் தலைநகரான லிஸ்பனை எங்குக் கைப்பற்றிவிடுவாரோ என்ற பயத்தால் ஆங்கிலத் தளபதி போர்ச்சுகலினின்றும் வெளிப்போந்து ஸ்பெயினுள் புகுந்து, பிரெஞ்சுப் படையை எதிர்த்தார். அவரது இச் செய்கையால் லிஸ்பன் நகர் காப்பாற்றப்பட்டது. ஆனால், மாட்ரிட் நகரம் நெப்போலியன் வசமாயிற்று. இதற்குள் நெப்போலியன் வேறு ஐரோப்பியப்

போர்முனைகளுக்குச் செல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. எனவே, ஸ்பெயினில் போரை நடத்தும் பொறுப்பை மார்ஷல் சூல்ட் (Marshal Soult) என்பாரிடம் ஒப்படைத்துவிட்டு அவர் ஸ்பெயினைவிட்டு நீங்கினார். அதற்கப்புறம் அவர் மீண்டும் ஸ்பெயினுக்கு வரமுடியாமலே போய்விட்டது. சூல்ட் தமது பெரும் படையுடன் மூரின் படைகளை வட ஸ்பெயினுக்குத் துரத்திச் சென்றார். கருன்னா (Corunna) என்னுமிடத்தில் இரு படைகளுக்கும் கைகலப்பு ஏற்பட்டது. தமது பின்னணிப்படைகளைக் கொண்டு மூர், பிரெஞ்சுப் படைகளைச் சமாளித்தார் (1809 ஆம் ஆண்டு ஜனவரி மாதம்). மற்றப் படைப்பகுதிகள் கப்பலில் ஏறித் தப்பித்துவிட்டன. மூர் இப்போரில் இறந்துபட்டார்.

## மீண்டும் வெல்லெஸ்லி-அவரது வெற்றிகள்

மூருக்குப் பின் வெல்லெஸ்லி மீண்டும் முக்கியத் தளபதியாக்கப்பட்டார். அவர் டாகஸ் நதிப் பள்ளத்தாக்கின் வழியாக ஸ்பெயினுள் நுழைந்தார். 1809 ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் அவர் மார்ஷல் விக்டர் என்ற பிரெஞ்சுத் தளகர்த்தரை டலெவெரா (Talevera) எனுமிடத்தில் தோற்கடித்தார். அதன்பின் தமது நாட்டோடு போக்குவரத்துத் தொடர்புகள் துண்டிக்கப்பட்டு விடுமென்ற பயத்தால் அவர் லிஸ்பனுக்கே மீண்டும் திரும்பினார். அவருக்கு வைகவுன்ட் வெல்லிங்டன் (Viscount Wellingdon) என்னும் பட்டம் வழங்கப்பட்டது. பிரிட்டிஷ் படைகளைக் கடலுக்குள் துரத்திவிடுவதென்ற உறுதியுடன் மார்ஷல் மஸேனா (Marshal Messenia) என்னும் பிரெஞ்சுத் தளகர்த்தர் போர்ச்சுகலுக்கு ஒரு படையுடன் வந்தார். ஆனால், வெல்லிங்டன் மிகத் திறமையுடன் டெர்ரெஸ் வெட்ராஸ் (Lines of Terres Vedras) என்ற மண்ணாலாகிய அரண் வட்டங்களை லிஸ்பனுக்கருகில் மூன்று வரிசைகளில் எழுப்பி வைத்திருந்தார். அவ்வரண்கள் மிகத் திண்மை பொருந்தியனவா யிருந்ததால் மார்ஷல் மஸேனா அவற்றை ஊடுருவிச் சென்று லிஸ்பனை நெருங்க முடியவில்லை. மேலும் வெல்லிங்டன் லிஸ்பனைச் சுற்றியிருந்த செழிப்பான பகுதிகளையெல்லாம் அழித்துவிட்டார். அதனால் மஸேனாவின் படைகள் உணவின்றித் தவித்தன. ஆனால், வெல்லிங்டனுக்குக் கடல் வழியாக உணவுப் பொருள்களும் தளவாடங்களும் வந்த வண்ணமிருந்தன. எனவே மஸேனா, பெருஞ்சேதத்துடன் போர்ச்சுகலைவிட்டு 1811 ஆம் ஆண்டில் வெளியேறினார். மீண்டும் பிரெஞ்சுக்காரர் அந் நாட்டினுள் அடியெடுத்து வைக்க முடியாமலேயே போய்விட்டது.

பிரெஞ்சு அரசாங்கம் பிரன்னீஸ் மலைகளின் வழியாகவே ஸ்பெயினிலிருந்த தனது படைகளோடு தொடர்புகொள்ள முடிந்

தது. லிஸ்பனுக்கும் பிரன்னீஸ் மலைகளுக்குமிடையே 500 மைல்கள் இருந்தன. எனவே, ஸ்பெயின் போரை நெப்போலியன் நன்கு திட்டமிட்டு நடத்த முடியவில்லை. மேலும், ஸ்பெயினில் போர் நடந்து கொண்டிருக்கும்போதே நெப்போலியன் ஆஸ்திரியாவோடும் (1809), ருஷ்யாவோடும் (1812) போரிட நேர்ந்தது. எனவே, அவர் ஸ்பெயினிலிருந்த பிரெஞ்சுப் படைகளுக்கு மேலுதவி அனுப்ப முடியாமல் போய்விட்டது. இந் நிலையில் வெல்லிங்டனுக்குக் கடல் வழியாக உதவி தாராளமாகக் கிடைத்திடச் செய்ய பிரிட்டனின் கடற்படை வன்மை நன்கு பயன்பட்டது.

நெப்போலியன், ருஷ்யாமீது படை எடுத்துச் சென்றகாலை (1812) அதுவே தக்க தருணமென நினைத்து, வெல்லெஸ்லி, லிஸ்பனைவிட்டு ஸ்பெயினுக்குள் நுழைந்தார். போர்ச்சுகலிலிருந்து ஸ்பெயினுக்குச் செல்லும் இருபெரும் பாதைகளின் மீதிருந்த கியூட்டாட் ரோட்ரிகோ (Cuidad Rodrigo), படஜாஸ் (Badajoz) என்ற இரு பட்டணங்களை அவர் முதலில் கைப்பற்றினர் (1812). இவ் வெற்றிகளின் காரணமாக வெல்லிங்டனுக்கு எர்ல் பட்டம் கிடைத்தது. அதன் பின் அவர் மேலும் முன்னேறிச் சாலமன்க்கா (Salmanca) எனுமிடத்தில் மற்றொரு பெரு வெற்றியை அடைந்தார் (1812). அங்கு இருந்த பிரெஞ்சுக்காரரின் தளவாடக் கிடங்கு பிரிட்டிஷார் வசமாயிற்று. அங்கிருந்து வெல்லிங்டன், மாட்ரிட் நகரை அடைந்தார். ஜோசப் போனபார்ட் அங்கிருந்து ஓடிவிட்டார். இத்தனை வெற்றிகள் பெற்றும் வெல்லெஸ்லி மீண்டும் குளிர்காலத்தில் போர்ச்சுகலுக்கே திரும்பினர். அவருக்கு மார்க்விஸ் பட்டம் ஆங்கில அரசாங்கத்தாரால் வழக்கப்பட்டது.

1813ஆம் ஆண்டில் வெல்லிங்டன் போர்ச்சுகலினின்றும் புறப்பட்டுப் பிரெஞ்சுப் படைகளைத் துரத்திக்கொண்டே நாற்பது நாள்களில் பிரென்னீஸ் மலையை அடைந்தார். மன்னர் ஜோசப், விட்டோரியா (Vittoria) என்னுமிடத்தில் படுதோல்வி அடைந்தார் (1813). தமது வெடிப் படையையும் மற்றைப் பண்டங்களையும் அவர் போர்க்களத்தில் இழந்தார். பிரெஞ்சுப் படைகள் பிரென்னீஸ் மலைகளுக்கு அப்பால் துரத்தியடிக்கப்பட்டன. வெற்றிகரமாக வெல்லிங்டன் பிரான்ஸின் தென் பகுதிக்குள் நுழைந்தார். இதை யறிந்து மகிழ்ச்சியுற்ற பிரிட்டிஷ் அரசாங்கம் வெல்லிங்டனுக்கு 'ஃபீல்ட் மார்ஷல்' (Field Marshal) என்னும் பட்டத்தை வழங்கியது. 1814ஆம் ஆண்டில் சான் சபாஸ்டியன் (San Sabastian), ஆர்த்தெஸ் (Orthez), டூலோஸ் (Toulouse) முதலிய இடங்கள் பிரிட்டிஷார் வசமாயின. அதற்குள் ருஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியாவின் படைகளும் பிரான்ஸுக்குள் நுழைந்தன.

## நெப்போலியனின் வீழ்ச்சி

தீபகற்பப் போர் நடைபெற்று வருகையில் பிரிட்டிஷ் அரசாங்கம், பிரான்ஸை எதிர்த்த நாடுகளுக்கு உதவி செய்வதில் கண்ணுங்கருத்துமாயிருந்தது. 1809ஆம் ஆண்டில் ஆஸ்திரியா நெப்போலியன்மீது போர் தொடுத்தது. ஆஸ்திரியாவுக்கு உதவிசெய்வான் வேண்டியும் அதே சமயம் பிரெஞ்சுக்காரரின் கவனத்தை ஆஸ்திரியாவினின்றும் திருப்பவும் பிரிட்டிஷ் அரசாங்கம் வால்ச்சரன் தீவுக்கு (Walcheren Island) ஒரு படையை அனுப்பியது. அத் தீவிலிருந்து கொண்டு ஆண்ட்வெர்ப் நகரைத் தாக்க வேண்டுமென்பது அதன் திட்டம். ஆனால், படையெடுப்பு படுதோல்வியில் முடிந்தது. கானிங் பிரபுவும், காஸில்ரே பிரபுவும் வால்ச்சரன் படை எடுப்புப் பற்றித் தம்முள் சச்சரவிட ஆரம்பித்தனர். கடைசியில் இருவருமே ராஜிநாமா செய்தனர். ஸ்பென்ஸர் பெர்ஸிவல் (Spencer Perceval) என்பார் தலைமையில் பின்னர் அமைச்சரவை கூடியது (1809-12). மூன்று ஆண்டுகள் கழித்துப் பெர்ஸிவல் ஒரு பைத்தியக்காரனால் கொலையுண்டார்.

### ருஷ்யப் படையெடுப்பு (1812)

நெப்போலியனின் பேரரசில் சிறிது சிறிதாக விரிசல்கள் ஏற்பட்டன. அவருடைய கண்டத் திட்டத்தால் மனக்கசப்புற்ற பல நாடுகள் மறைமுகமாகவும், வெளிப்படையாகவும் தங்களது எதிர்ப்பைக் காண்பித்தன. ஹாலந்தில் அரசராயிருந்த நெப்போலியனின் சகோதரரான லூயியே கண்டத் திட்டத்தை செயற்படுத்த மறுத்துவிட்டார். அதனால் அவர் 1810ஆம் ஆண்டில் அரச பதவியினின்றும் நீக்கப்பட்டார். ஹாலந்து பிரான்ஸோடு சேர்க்கப்பட்டது. எல்ப் நதிக்கரையிலிருந்து ஜெர்மன் கடற்கரையையும் நெப்போலியன், பிரான்ஸோடு சேர்த்தார். கூடிய விரைவில் ருஷ்ய அரசரும் கண்டத்திட்டத்தை செயற்படுத்த மறுத்தார். அதனால் வெகுண்ட நெப்போலியன் 600,000 வீரர்களடங்கிய பெரும்படையுடன் ருஷ்யா மீது படையெடுத்தார். ருஷ்யர்கள் பின்வாங்கிக்கொண்டே சென்றார்கள். இறுதியில் படோரினா (Badorina) எனுமிடத்தில் ருஷ்யப் படைகளை நெப்போலியன் தோற்கடித்தார். மாஸ்கோவினுள்ளும் பிரெஞ்சுப் படைகள் புகுந்தன. ஆனால், ருஷ்யர்கள் நகருக்குத் தீ வைத்துவிட்டுப் பின்வாங்கிவிட்டனர். எனவே கட்டடங்கள் எல்லாம் கருகிப்போயின. ருஷ்ய அரசாங்கம் அங்கு இல்லை. சமாதானப் பேச்சு வார்த்தைகள் தொடங்கப் பெற்றன. ஒரு மாதங் கழித்து அப் பேச்சுவார்த்தைகள் முறிந்தன. அதற்குள் ருஷ்யாவில் மாரிக்காலம் தொடங்கிவிட்டது. எனவே, நெப்

போலியன் பின்வாங்கினர். திரும்பி வரும் வழியில் காஸக்குகள் என்ற முரட்டு ஜாதியார் பின்னுலிருந்து பிரெஞ்சுப் படைகளைத் தாக்கித் துன்புறுத்தினர். கடுமையான குளிர் தாங்காமல் பல வீரர்கள் கும்பல் கும்பலாக மடிந்தனர். நெப்போலியனது இப் பிரயாணம் வரலாற்றில் மிகவும் சோகம் நிறைந்த கட்டங்களுள் ஒன்ருகும். கடைசியாக, நெப்போலியன் தம் நாடு திரும்பினுர். ருஷ்யாவுக்குப் புறப்பட்டபோது இருந்த படையில் பத்தில் ஒரு பங்கினரே உயிருடன் திரும்பினர்.

### நான்காம் கூட்டுறவு (Fourth Coalition, *1813*)

நெப்போலியனின் ருஷ்யத் தோல்வியானது, அவரது மற்ற எதிரிகளுக்குத் தெம்பை ஊட்டியது. 1813ஆம் ஆண்டில் ருஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா, கிரேட் பிரிட்டன் இவைகளடங்கிய நான் காம் கூட்டுறவு (Fourth Coalition) தோற்றுவிக்கப்பட்டது. இக் கூட்டுறவுக்குக் காரணமாயிருந்தவர் இங்கிலாந்தில் அப்போது வெளிநாட்டு அமைச்சராக (Foreign Secretary) இருந்த காஸில்ரே (Castlereagh) பிரபு ஆவார். லிவர்பூல் பிரபு (Lord Liverpool) என்பார் 1812ஆம் ஆண்டிலிருந்து இங்கிலாந்தின் பிரதமரா யிருந்தார்.

### தேசிய விடுதலைப் போராட்டம் *(1813-1814)*

நான்காம் கூட்டுறவில் சேர்ந்த ஜெர்மனியானது நெப்போலி யனேடு நடத்திய போராட்டத்தை ஒருதேசிய விடுதலைப் போராட் டமாகக் கருதியது. ஜெர்மன் இராஜ்யங்கள் பலவும் நெப்போலி யனின் தலைமையை உதறித் தள்ளிவிட்டு விடுதலைப் போரில் குதித் தன. நெப்போலியன் புதியதொரு படையை விரைவில் அமைத் தார். பயிற்சியற்ற வைவீன்கள் பலர் அதில் சேர்க்கப்பட்டனர். ஆனல் 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்கிறபடி நெப்போலி யன் அவ்விளைஞர் படையைக் கொண்டே கூட்டுறவு நாடுகளின் சேனைகளை லட்ஸன் (Lutzen), பௌட்ஸன் (Boutzen), ட்ரெஸ் டென் (Dresdon) முதலிய இடங்களில் தோற்கடித்தார் (1813). ஆனல் லீப்ஸ்விக் (Leipzig) எனுமிடத்தில் நடைபெற்ற பன்னுட்டு மக்கட் போர்க்களத்தில் (Battle of the Nations) நெப்போலியன் முற்றிலும் முறியடிக்கப்பட்டார் (1813). ரைன் நதியைப் பிரான்ஸின் எல்லையாக ஒப்புக்கொண்டு போரை நிறுத்தும்படி கூட்டுறவு நாடுகள் நெப்போலியனை வேண்டிக்கொண்டன. ஆனல் அவர் பிடிவாதமாக, சமாதானத்தை மறுத்துவிட்டார். 1814 ஆம் ஆண்டில் வெல்லிங்டன் பிரபு தென்பிரான்ஸில் புகுந்து டுலோஸைக் (Toulouse) கைப்பற்றினர். ஆஸ்திரிய, பிரஷ்ய

ரஷ்யப் படைகள் பிரான்ஸுக்குள் புகுந்தன. நெப்போலியன், பாரிஸை நோக்கிப் பின்வாங்கினர். ஆனல், எதிரிகளின் படைகள் அவரை மேன்மேலும் நெருக்க ஆரம்பிக்கவே அவர் முடி துறந்தார். அவர், எல்பா (Elba) என்னும் மத்தியதரைக்கடல் தீவில் சிறைவைக்க அனுப்பப்பட்டார் (1814).

வெற்றிபெற்ற நாடுகள் தோல்வியுற்ற பிரான்ஸை மிகவும் கௌரவமாக நடத்தின. நெப்போலியன் மீதே எல்லாப் பழியும் சுமத்தப்பட்டன. ஐரோப்பாவில் ஒரு நிரந்தர அரசியல் ஏற்பாட்டை நிறுவ வியன்னவில் பல ஐரோப்பிய நாடுகளும் ஒன்று கூடின. போர்க்காலத்தில் கைப்பற்றப்பட்ட பிரதேசங்களைத் தம்முள் பிரித்துக் கொள்வதில் ஐரோப்பிய நாடுகள் கருத்து வேறுபாடு காட்டின. அதன் காரணமாக மீண்டும் ஐரோப்பாவில் போர் ஏற்படுமோ என்று பலரும் பயப்பட வேண்டிய நிலை ஏற்பட்டது.

### நூறு நாள்கள் (Hundred Days—1815)-வாட்டர்லூ சண்டை (1815)

இச்சமயத்தில் நெப்போலியன் எப்படியோ சிறையினின்றும் தப்பிப் பிரான்ஸுக்கு வந்துவிட்டார். அவரைக் கைப்பற்றும்படி 18ஆம் லூயி ஒரு படையை அனுப்பினர். ஆனல், அப்படையோவெனின் நெப்போலியனேடு சேர்ந்துகொண்டது. 18ஆம் லூயி பாரிஸைவிட்டு ஓடிவிட்டார். நெப்போலியன் மீண்டும் பிரான்ஸின் பேரரசரானர். நூறு நாள்களுக்கு அவர் மீண்டும் வல்லரசு செலுத்தினர். மீண்டும் ஐரோப்பிய நாடுகள் நெப்போலியனுக்கு எதிராகக் கூட்டுச் சேர்ந்தன. ருஷ்ய, ஆஸ்திரியப்படைகள் பிரான்ஸ்மீது கிழக்கிலிருந்து படையெடுப்பதெனவும், பிரிட்டிஷ் படைகள் வடக்கிலுள்ள பெல்ஜியம் வழியாகப் பிரான்ஸின் மீது படையெடுப்பதெனவும் தீர்மானிக்கப்பட்டது. இத் திட்டத்தை அறிந்த நெப்போலியன், எதிரிகள் ஒருவரோடொருவர் சேருமுன், அவர்களைத் தனித்தனியே தோற்கடிக்கத் திட்டமிட்டார். அவரது சேனையில் இப்போது திறமைமிக்க வீரர்கள் பலர் இருந்தனர். சமாதானத்தின்போது சிறையினின்றும் விடுவிடுக்கப்பட்ட பிரெஞ்சு யுத்தக்கைதிகள் யாவரும் அவரது தலைமையின்கீழ்ப் போர் புரிய மனமுவந்து முன்வந்தனர். ஒரு பெரும் படையுடன் அவர் புறப்பட்டுச் சென்று முதலில் பிரஷ்யப் படைகளை லிக்னி (Ligny) என்னுமிடத்தில் மடக்கினர். ப்ளூஷர் (Blucher) என்ற பிரஷ்யத் தளகர்த்தர் தோற்கடிக்கப்பட்டார். அவரது படைகள் பெல்ஜியத்திலிருந்து வெல்லிங்டன் படையோடு சேராமல் தடுக்கக் கிரௌச்சி (Grouchy) என்ற தளகர்த்தரை விட்டுவிட்டு, அவர் பெல்ஜியத்தை நோக்கிப்

புறப்பட்டார். அங்குள்ள வர்ட்டர்லூ (Waterloo) என்னுமிடத்தில் வெல்லிங்டனும் நெப்போலியனும் முதன்முதலாக நேருக்கு நேர் சந்தித்தனர். ஆரம்பத்தில் நெப்போலியனது படைகள் வெற்றி பெற்றன. பிரிட்டிஷ் இடதுசாரிப் படை தோற்கடிக்கப்பட்டது. எனினும் மற்றைய பகுதிகள் உறுதியாய் மலையென நின்றன. மாலையில் ப்ளூஷர், கிரௌச்சியை ஏமாற்றிவிட்டு ஓடோடியும் வந்து வெல்லிங்டனோடு சேர்ந்தார். இருவரது படைகளும் ஒருமுகமாக நெப்போலியப் படைகளைத் தாக்கின. போரிட்டுக் களைத்திருந்த நெப்போலியனது படைகள் எளிதில் முறியடிக்கப்பட்டன (1815 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 18 ஆம் தேதி). நெப்போலியன் இத் தோல்விக்கு ஒரு மாதத்துக்குப் பின் கேப்டன் மெயிட்லண்டு (Captain Maitland) என்னும் பிரிட்டிஷ் கப்பற்படை அதிகாரியிடம் சரணடைந்தார். பிரிட்டனுக்கு அவர் கொண்டு போகப்பட்டார். ஆனால், பிரிட்டன் மண்ணை மிதிக்க அவர் அனுமதிக்கப்படவில்லை. கப்பலிலிருந்தே நெப்போலியன் தமது எதிரி நாட்டைப் பார்த்தார். பின்னர், அவர் சென்ட் ஹெலினா என்ற தென் அட்லான்டிக் தீவு ஒன்றில் சிறை வைக்கப்பட்டார். 1821 ஆம் ஆண்டில் அவர் அங்கேயே இறந்தார்.

### நெப்போலியானது தோல்விக்குக் காரணங்கள்

இங்ஙனம் மாவீரன் நெப்போலியனின் ஆசைகள் யாவும் நிராசையாய் முடிந்தன. அவரது ஆரம்பக் காலத்தில் உண்மையில் அவர் ஒரு மேதையாகவே இருந்தார். போர்களை நன்கு திட்டமிட்டு நடத்துவதில் அவர் ஈடிணை அற்றவராக இருந்தார். 'ஒரு போரில், நான் புறத்தே வெற்றி பெறுமுன்பே அகத்தில் அவ் வெற்றியைப் பெற்றுவிடுவது வழக்கம்' என்று அவர் கூறுவதுண்டு. இந்தத் திறமை நாளுக்கு நாள் அவருக்குக் குறைந்துவிட்டது. அதிகாரபோதையால் அவர் மூளை கிறுகிறுத்தது. இராணுவ பலத்தைக் கொண்டு எதையும் சாதிக்கலாமென அவர் நினைத்துவிட்டார். கண்டத் திட்டம் போன்ற நடைமுறைக்கொவ்வாத திட்டத்தை அவர் வாள்முனையில் செயற்படுத்த நினைத்தது விந்தைதான். தாம் ஓர் அப்பட்டமான வல்லரசர் என்பதை அவர் பலவகையிலும் காட்டிக் கொண்டார். அதனால் அவர் மக்களின் நன்மதிப்பை இழந்தார். ஒரு சில மன்னர்களை வெற்றிகொளல் எளிது. ஆனால், ஒரு தேசியச் சமுதாயமே சீறித் திரண்டெழுந்தால் அதை அடக்குமுறையால் ஒடுக்குவது முடியாது என்பதை அவர் உணரவில்லை. அவரது எதேச்சாதிகாரம் என்னும் கப்பலானது தேசியம் என்னும் பாறைமேல் மோதிச் சிதறுண்டது.

எல்லாவற்றுக்கும் மேலாக பிரிட்டனின் கடற்படையே நெப்போலியனின் திட்டங்கள் தோல்வியுறுவதற்குக் முக்கியக் காரணம். அவரது இங்கிலாந்துப் படையெடுப்புத் திட்டம் கைவிடப்பட்டதும், பிரிட்டிஷ் கடற்படையின் வலிமையால்தான். மற்றும் பிரான்ஸின் துறைமுகங்களை முற்றுகை செய்யவும், அதன் வியாபாரத்தை நசுக்கவும், கண்டத் திட்டத்தைக் குலைக்கவும், பிரெஞ்சுக் குடியேற்ற நாடுகளைக் கைப்பற்றவும் பிரிட்டிஷ் கடற்படையே பெரிதும் உதவிற்று.

## வியன்னு ஏற்பாடு (Vienna Settlement - 1815)

நெப்போலியனின் வீழ்ச்சிக்குப் பின் ஐரோப்பிய நாடுகள் வியன்னுவில் கூடித் தமக்குள் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டன. பிரிட்டிஷாரின் பிரதிநிதியாகக் காஸில்ரே பிரபு வியன்னு காங்கிரஸில் கலந்துகொண்டார். ருஷ்யாவின் சார்பில் அதன் அரசர் அலெக்ஸாந்தரும், பிரஷ்யாவின் சார்பில் அதன் அரசரும், ஆஸ்திரியாவின் சார்பில் மெட்டர்னிக் (Metternich) என்ற அரசியல் நிபுணரும், பிரான்ஸின் சார்பில் டாலிராண்ட் (Talleyrand) என்னும் அரசியல் மேதையும் அக் காங்கிரஸில் கலந்து கொண்டனர். பிரஷ்யாவானது தோல்வியுற்ற பிரான்ஸின்மீது வஞ்சந் தீர்த்துக்கொள்ள விரும்பியது. அதைத் தடுத்துப் பிரான்ஸ் கௌரவமாகவும் பெருந்தன்மையுடனும் நடத்தப்படவேண்டுமெனக் காஸில்ரே பிரபு வாதாடினுர். பல சமயங்களில் பேச்சுவார்த்தைகள் முறிகிற அளவுக்குப் பூசல் முற்றிவிடும்போதெல்லாம் அப் பூசல்களைத் தீர்த்துவைத்தவர் காஸில்ரே பிரபுதாம்.

வியன்னு உடன்பாட்டில் ஐரோப்பாவின் பெருநாடுகளெல்லாம் நல்ல இலாபமடைந்தன. பிரான்ஸின் எல்லையானது 1791 ஆம் ஆண்டு இருந்தது போன்றே வரையறுக்கப்பட்டது. போர்ச் செலவுக்குப் பிரான்ஸ் நஷ்டஈடு கொடுக்க வேண்டுமெனவும் வற்புறுத்தப்பட்டது. பிரான்ஸின் குடியேற்ற நாடுகள் அனைத்தும் அதற்கே திருப்பிக் கொடுக்கப்பட்டுவிட்டன.

பிரான்ஸைத் தவிர மற்ற நாடுகள் அவ்வளவு கண்ணியமாக நடத்தப்படவில்லை. போலந்து நாட்டை விடுவிக்கக் காங்கிரஸ் ஒரு முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. அண்டையிலிருந்த நாடுகள் போலந்தைப் பங்கு போட்டுக் கொள்ள காங்கிரஸ் அனுமதித்தது. இத்தாலியிலிருந்த சிறு இராஜ்யங்களை மீண்டும் உயிர்ப்பித்தது. அதனுல் இத்தாலிய ஐக்கியம் குலைந்தது. பழைய முடியரசுகள் யாவும் கூடிய வரை மீண்டும் உயிர்பெற்றன. பிரான்ஸ், ஸ்பெயின், நேப்பில்ஸ் ஆகிய நாடுகளில் பழைய போர்பன் குலத்தவர்களின் ஆட்சி ஏற்பட்டது. நாடுகள் பலவும்

பேரரசர்களின் விருப்பப்படி பிரித்துக் கொடுக்கப்பட்டனவே யன்றி அந்நாடுகளில் வசிக்கும் மக்களது விருப்பதிற்கேற்பவோ தேசியத்தின் அடிப்படையிலோ பிரிக்கப்படவில்லை. சான்ருக இதாலியின் வடபாகத்திலிருந்து லம்பார்டிப் பிரதேசமும், வெனீசும், ஆஸ்திரியாவுக்குத் தரப்பட்டன. ஜெனேவா (Genoa) சார்டீனியாவுக்குத்தரப்பட்டது. வெவ்வேறு மொழி பேசி, வெவ்வேறு மதங்களைப் பின் பற்றும் மக்கள் வசித்த ஹாலந்தும், பெல்ஜியமும் ஒன்ருக இணைக்கப்பட்டன. அதே போன்று வெவ்வேறு மொழிபேசும் மக்களடங்கிய நார்வேயும் ஸ்வீடனும் ஒன்றுபடுத்தப்பட்டன.

பிரிட்டனுக்கு இக்காங்கிரசால் பல இடங்கள் கிடைத்தன. ஸெண்ட் லூஸியா (St. Lucia), டொபேகோ (Tobago), டிரினிடாட் (Trinidad), பிரிட்டிஷ் ஹாண்டுராஸ் (British Honduras) என்ற மேற்கிந்தியத்தீவுகளையும் மால்டா என்ற மத்திய தரைக் கடல் தீவையும், மௌரீஸியஸ் (Mauritius) என்ற இந்துமாக் கடல் தீவையும், பிரிட்டன் வைத்துக் கொண்டது. ஹாலந்து, தான் இழந்த ஜாவா, சுமித்ரா தீவுகளை மீண்டும் பெற்றது. வடகடலிலிருந்த டேனியருக்குச் சொந்தமான ஹெலிகோலாந்தும் (Heligoland) மத்திய தரைக்கடலிலிருந்த ஐயோனியத் தீவுகளும், டச்சுக்காரருக்குச் சொந்தமாயிருந்த பிரிட்டிஷ் கயாஞவும், நன்னம்பிக்கை முனைக் குடியேற்ற நாடும், இலங்கையும், சிங்கப்பூரும், மலாக்காவும் பிரிட்டிஷாருக்கே சொந்தமாயின. இவை யாவும் நல்ல கப்பற்படைத்தளங்கள். வியாபாரக் கேந்திரங்களாகவும் அவை விளங்கின. ஹெனேவர் நாட்டின்மீது பிரிட்டனுக்கிருந்த உரிமை திருப்பித் தரப்பட்டது.

ஜெர்மனியில் 39 இராஜ்யங்களடங்கிய ஓர் இணைக்கூட்டரசு ஏற்படுத்தப்பட்டது. பிரஷ்யாவுக்கு ஸாக்ஸனியின் பெரும்பகுதியும், ரைன் மாகாணமும், வெஸ்ட் பேலியாவும் (West Phalia), ஸ்வீடிஷ் போமெரோனியாவும் கொடுக்கப்பட்டன. ருஷ்யாவுக்குப் போலந்தின் பெரும்பகுதியும் பின்லாந்தும் தரப்பட்டன. ஸ்விட்சர்லாந்து ஒரு தனிப்பட்ட குடியரசு நாடாக அமைக்கப்பட்டது. இங்ஙனம் தேசியத்துக்கு விரோதமாகத் தான் தோன்றித்தனமாய் ஏற்படுத்தப்பட்ட பல இராஜ்யங்கள் நாளடைவில் பிரிந்தும் கூடியும், தேசியத்தின் அடிப்படையில் வேறு பல நாடுகளாக வடிவெடுத்தன. எனவே 1815 ஆம் ஆண்டு வியன்ன காங்கிரஸின் ஏற்பாட்டை அவ்வளவு திருப்திபானதென்று நாம் கருதுவதற்கிடமில்லை.

# 11. இளைய பிட்டின் அமைதிக்காலச் சேவைகள்

இளைய பிட்டின் வாழ்க்கைக் குறிப்பு

இளைய பிட்டின் குணாதிசயங்கள்

**இளைய பிட்டின் அரசியல் கொள்கை:**

டோரிக் கொள்கை—காபினெட் ஆட்சி முறை வளர்ச்சி—தற்கால ஆட்சி இயல் வளர்ச்சி (Modern Administration)—பாராளுமன்றத்தின் வளர்ச்சி.

**பொருளாதாரக் கொள்கை:**

தடையிலா வாணிகக்கொள்கை (Free Trade Policy)—கடன் கழிவு நிதி (Sinking Fund)—வியாபார வளர்ச்சி.

**வெளிநாட்டுக் கொள்கை:** பிரான்ஸுடன் நட்புறவு—முக்கூட்டுறவு (Triple Alliance) போலந்துப் பங்கீடு (Partition of Poland) பிரெஞ்சுப்போர்கள்-அயர்லாந்துப் பிரச்சினை-பிட்டும் பேரரசும் (Empire)

**மதிப்பீடு:**

**(Estimate)**

## இளையபிட்டின் வாழ்க்கைக் குறிப்பு

இளையபிட் என்பார், புகழ்பெற்ற மூத்தபிட்டின் இரண்டாவது மைந்தராவர். அவர் 1759 ஆம் ஆண்டில் பிறந்தார். மிக இளவயதிலேயே அறிவும் திருவும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவராக அவர் தந்தைக்கேற்ற தனயனாக விளங்கினார். அரசியல் வாழ்வுக்கென்றே அவரது தகப்பனார் அவரைச் சிறுவயதிலிருந்தே ஆயுத்தப்படுத்தி வந்தார். கல்வி கேள்விகளில் தமது மகன் சிறந்து விளங்க வேண்டுமென்னும் ஆசையால், அவர் பள்ளிப் படிப்போடு, கிரேக்க, லத்தீன் மொழிப் படிப்பையும் பிட்டுக்கு ஊட்டினார். அதனால் பிட் இளவயதிலேயே முதிர்ந்த அறிவு எய்தியிருந்தார். 1780ஆம் ஆண்டில் அவர் பாராளுமன்றத்தின் உறுப்பினராகத் தேர்ந்தெடுப்பட்டார். தமது வாக்குவன்மையாலும்

வாதத்திறமையாலும் அவர் பாராளுமன்றத்தின் பாராட்டு தலைப்பெற்றார். நார்த்பிரபுவின் மந்திரி சபையின் ஒவ்வொரு செயலையும் கண்டிப்பதையே பிட் தமது தொழிலாகக் கொண்டிருந்தார். நார்த் பிரபுவின் வீழ்ச்சிக்குப் பிட்டும் ஒரு காரணமாவார். அவருக்குப்பின் வந்த ராக்கிங் ஹாமின் மந்திரி சபையில் அவருக்கு ஒரு சிறு பதவி கொடுக்கப்பட்ட போது அவர் அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார் காபினெட் மந்திரி பதவியைத் தவிர வேறு எந்தப் பதவியையும் ஏற்றுக்கொள்ளத் தாம் தயாராயில்லை என அவர் தீர்மானமாகக் கூறி விட்டார். மேலும் அவர் ஒரு முற்போக்குவாதி. பிற்போக்குவாதிகளான ராக்கிங்ஹாம், பர்க் போன்றவர்களால் வெறுக்கப்பட்ட பாராளுமன்றச் சீர்திருத்தம் போன்ற கொள்கைகளில் அவருக்கு ஆழ்ந்த நம்பிக்கை இருந்தது. அப்படிப்பட்ட பிற்போக்குவாதிகளோடு ஒத்துப்போக முடியாதென்ற எண்ணமும் அவர் பதவி மறுப்புக்கோர் காரணமாகும். 1782 ஆம் ஆண்டு கூடிய ஷெல்போர்ன் மந்திரி சபையில் (Shelbourne Ministry) (அவர் கருவூலத் தலைவராக (Chancellor of Exchequer)நியமிக்கப்பட்டார். இதன் பின் ஃபாக்ஸும் (Fox) நார்த் பிரபுவும் கூட்டுச் சேர்ந்து ஷெல் போர்னைத் தோற்கடித்து அதிகாரத்தைக் கைப்பற்றினர். பிட் இம் மந்திரி சபையை வன்மையாகக் கண்டித்தார். மூன்றும் ஜார்ஜும் அம் மந்திரி சபையை விரும்பினாரில்லை. அதைத் கலைத்துவிடுவதற்கான ஒரு தருணத்தை அவர் எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தார். ஃபாக்ஸின் இந்திய மசோதா (Fox's India Bill பொதுமக்கள் சபையில் நிறைவேறியும் பிரபுக்கள் சபையில் நிறைவேறாததால் அதையே ஒரு சாக்காகக் கொண்டு ஜார்ஜ் அம்மந்திரி சபையைக் கலைத்துவிட்டார். அதன்பின் அவர் இளையபிட்டை அழைத்துப் பதவி ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டிக் கொண்டார். 1783 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பிட் பிரதமமந்திரியானார். அப்பதவியில் அவர் அடுத்த பதினேழு ஆண்டுகளுக்குத் தொடர்ந்து பணியாற்றினார். 1784 ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் பிட்டின் ஆதரவாளர்கள் பெரும்பான்மையான இங்கிலாப் பொதுமக்கள் சபையில் பெற்றனர். எனவே பிட் நம்பிக்கையோடு பல சீர்திருத்தங்களை நாட்டில் புகுத்த முயற்சித்தார். அவரது பதவிக் காலத்தில் முதல் பத்தாண்டுகள் அமைதி நிறைந்தவை. அதற்குப்பிறகு அவர் ஐரோப்பியப் போர்களில ஈடுபட வேண்டிய கட்டாயமேற்பட்டது.

1801ஆம் ஆண்டில் அவர் ஐரிஷ் கத்தோலிக்கர்களுக்கு விடுதலைவழங்கும் சட்டம் ஒன்றைக் கொணர முயற்சித்தார். அதை

மூன்றும் ஜார்ஜ் எதிர்த்ததால் அவர் தம் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார். அவருக்குப் பின் ஆடிங்டன் என்ற பலஹீனர் பிரதமரானார். நெப்போலியப் போர்கள் மூண்டபோது ஜார்ஜ், பிட்டை மீண்டும் பதவியேற்குமாறு அழைத்தார். பிட் 1804 ஆம் ஆண்டில் மறுபடியும் பிரதமமந்திரியானார். நெப்போலியப் போர்களை நிருவகித்ததில் ஏற்பட்ட சிரமத்தால் அவர் 1806 ஆம் ஆண்டிலேயே அகால மரணமடைந்து விட்டார்.

## இளைய பிட்டின் குணாதிசயங்கள்

தம் தந்தையைப் போன்ற இளைய பிட்டும் நேர்மையும், ஒழுக்கமும் தன்னம்பிக்கையும், நாட்டுப்பற்றும் ஒருங்கே கொண்டவர் தனிவாழ்க்கையில் தூயர்; பணத்தைத் துரும்பென மதிப்பவர்; இடுக்கண் வருங்கால் மனம் தளராது மக்களை ஊக்குவிப்பதில் வல்லவர். அதிகார மோகம் அவருக்கு மிகுதியும் உண்டு அதே சமயத்தில் மக்களின் நன்மைக்காகப் பாடுப்படவேண்டுமென்ற தாராள சிந்தையும் அவர்பால் காணப்பட்டது. நாட்டில் பல சீர்த்திருத்தங்களைச் செய்ய விரும்பினாரெனினும் அவைகளுக்குச் சிறிது எதிர்ப்பு ஏற்படினும் அவர் அதைப் பொறுக்கமாட்டார். வால்போலைப் போன்று மக்களின் கூக்குரலுக்குப் பயந்து நல்ல சீர்த்திருத்தங்களானாலும் அவர் அவற்றைக் கைவிட்டுவிடுபவர். பிட்டுக்கு அரசரிடத்தில் நல்ல செல்வாக்கு இருந்தது. அரசர், அவரைப் பூரணமாக நம்பினார். மேலும் அவர் அடிக்கடி நோய்வாய்ப்பட்டமையால் நாட்டின் நிருவாக அதிகாரம் அனைத்தும் பிட்டின் கைகளில் குவிந்தன. எனினும் அவர் தம் அதிகாரத்தைத் தீய வழிகளில் பயன்படுத்தவில்லை. பொதுமக்கள் சபையின் உறுப்பினராக இருந்து கொண்டு அவர் அச்சபையின் நன்மதிப்பைப் பெற்றார். ஃபாக்ஸ், பரக் என்பவர்கள்பால் விளங்கிய சொற்பெருக்கு அவரிடம் காணப்படாவிடினும். சொல்வனவற்றைத் தெளிவாகக் கேட்போர் உள்ளத்தில் தைக்குமாறு சொல்வதில் அவர் வல்லவர். ஆரம்பக் காலத்தில் அவரது பாராளுமன்றப் பேச்சுகளில் உணர்ச்சி பெருக்கெடுத்தோடுவதைக் காணலாம். பாராளுமன்ற விவாதங்களில் பிட்டுக்கு இணையாவார் அவரேயன்றி வேறொருவருமில்லை. பிரெஞ்சுப் புரட்சியின்போது, அவருக்கு இருந்த செல்வாக்கு மேலும் வளர்ந்தது. கொள்கையில் அவர் விக்குக் கட்சியினரெனினும், நடைமுறையில் அவர் டோரிக் கட்சியினரின் தலைவராக இருந்து அவர்தம் கொள்கைகளையே கடைப்பிடித்து வந்தார். அக் காலத்தே அனைவரிடத்தும் காணப்பட்ட குடிப்பழக்கம் அவரிடத்தில் சற்று அதிகமாகவே இருந்தது. அதைத் தவிர வேறு தீய பழக்கங்கள் அவரிடமில்லை

## இளையபிட்டின் அரசியல் கொள்கை

### டோரிக் கொள்கை

பிரெஞ்சுப் புரட்சிக் காலத்தில் பிட் புதிய டோரிக் கட்சியைத் துவக்கினார். புரட்சியையும் கிளர்ச்சியையும் அவர் எதிர்த்து அமைதியான ஆட்சிமுறையை ஆதரித்தார். எனினும் அவர் பூரண டோரிக் கட்சியினராய் என்றும் இருந்ததில்லை. சில சமயங்களில் அவர் விக்குகளைக் காட்டிலும் முற்போக்கு வாதியாகக் காட்சியளித்தார். விக்குகளை அவர் தம் மந்திரி சபையில் தாராளமாகச் சேர்த்துக்கொண்டார். முன்னைய மந்திரி சபையிலிருந்த கேம்டன் (Camden), கிராப்டன் (Grafton) போன்றவர்களும் பழுத்த விக்குக் கட்சியினரான கார்ன்வாலிஸும் அவர் மந்திரிசபையில் இடம் பெற்றனர். மிதவாதிகளும் தீவிரவாதிகளும், ஒருங்கே அவரது கட்சியில் காணப்பட்டனர்.

### காபினெட் ஆட்சி முறை வளர்ச்சி

தற்கால மந்திரிசபையின் தந்தையெனப் பிட்டை அழைக்கலாம். காபினெட் ஆட்சி முறை அவர் காலத்தில் நன்கு உறுதியுற்றது. அவர் அக் காபினெட்டின் பிரதம மந்திரியாகத் திகழ்ந்தார். இலஞ்ச ஊழல்கள் அவர் காலத்தில் ஓய்ந்தன. அவருக்கு முன் பிரதமராயிருந்த ஆடிங்டன் என்பார் ஆண்டொன்றுக்கு 3000 வரும்படி வரக்கூடிய ஒருபதவியைப் பிட்டின் மகனுக்கு வழங்கினார். அதைக்கூடப் பெற்றுக்கொள்ளப் பிட் மறுத்து விட்டார். காபினெட்டில் அவரது தலைமையைக் கட்சிவேறுபாடின்றி யாவரும் ஒப்புக் கொண்டனர். அவருடைய சகோதரர் சாத்தாம் என்பவர் கடற்படை இலாகாவுக்குத் தலைவராக நியமிக்கப்பட்டார். டன்டாஸ் (Dundas) என்ற அவரது நண்பர் உள்நாட்டு மந்திரியாகவும், க்ரென்வில் (Grenvill) என்ற அவரது ஒன்றுவிட்ட சகோதரர் வெளிநாட்டு இலாகாவுக்குத் தலைவராகவும், ஜென்க்கின்ஸன் (Jenkinson) என்ற அரசரது நண்பர், புதிதாக ஏற்பட்ட வியாபாரக் குழுவின் (Board of Trade) தலைவராகவும் நியமிக்கப்பட்டனர். அவர்கள் யாவரும் பிட்டின்மீது மாருத விசுவாசம் கொண்டிருந்தனர். அரசர் அடிக்கடி சித்தப் பிரமையினால் துன்புற்றதால் அவரது நண்பர் குழாம் பிட்டை ஆதரிக்க முன்வந்தது. இங்ஙனம் பாராளுமன்றத்தின் பெரும்பான்மையோருடைய ஆதரவை அவர் பெற்றார். ஏறக்குறைய தற்காலப் பிரதமரைப் போன்ற அதிகாரத்துடன் பிட் ஆட்சி புரிந்தார்.

### தற்கால ஆட்சி இயல் வளர்ச்சி (Modern Administration)

தற்கால ஆட்சி இயலும் பிட்டின் காலத்தில்தான் உருவாயிற்றெனலாம். அவரால் பதவியுயர்வு அளிக்கப்பெற்ற கானிங்பிரபு,

ஹஸ்கிஸ்ஸன் (Huskisson), ஜென்கின்ஸன் போன்ருர் நல்ல ஆட்சிமுறையை நாட்டில் நிறுவியதோடு தங்கள் அனுபவத்தைப் பீல் (Peel), கிளாட்ஸ்டன், (Gladstone) போன்ற அரசியல் மேதைகளுக்கு ஊட்டிவிட்டுச் சென்றனர். பல துறைகளையும் பரிசோதித்துப் பார்க்கவென்று தனிப்பட்ட விசாரணை ஆணையாளர் குழுக்கள் (Commissioners of Enquiry) பல நியமிக்கப்பட்டன. அலுவலர்களுக்குக் கட்டணம் (Fees) அளிக்கப்பட்டு வந்ததற்கு மாருகச் சம்பளங்கள் தரப்பட்டன. விக்குக் கட்சியில் பல உத்தியோகங்களையும் தமக்குள்ளேயே பங்கு போட்டுக் கொள்வதையும் அவர் தடுத்தார். விவசாயக் குழு (Board of Agriculture) போன்ற குழுக்கள் மூலம் நிருவாகத்தை நடத்தும் முறை அவர் காலத்தில் ஏற்பட்டது. மற்றும் ஆண்டுதோறும் வரவு செலவுத் திட்டங்களை (Budget) வகுத்து அதற்கேற்ப ஆட்சி நடத்தும் வழக்கமும் அவர் காலத்தில் நிலை பெற்றது. ஒன்றன்பின் ஒன்ருகப் பதினெட்டு வரவு செலவுத் திட்டங்களைக் கொணர்ந்து அவர் பொருளாதார நிருவாகத்திலேயே ஒரு புரட்சியைத் தோற்றுவித்தார்.

### பாராளுமன்றத்தின் வளர்ச்சி

'பொதுமக்கட் பெருமகன்' (Great Commoner) என்று புகழ் பெற்ற தம் தந்தையைப் போலவே இளையபிட்டும் பொதுமக்கட் சபையின் ஆதரவாளராய் விளங்கினுர். அவரது மந்திரி சபையில் அவர் ஒருவரே பொதுமக்கட் சபையில் அங்கம் வகித்தவர். அச்சபையில் அவருக்கு நல்ல செல்வாக்கு இருந்தது. வால்போல் காலத்தில் காணப்பட்டதுபோல் பதவிப்பித்தர்களும், அரசாங்கத்திடம் பணஉதவி பெற்ற ஆமாஞ்சாமிகளும் பிட் காலத்திய பாராளுமன்றத்தில் இடம் பெறவில்லை. பர்க் என்பாரால் கொண்டுவரப்பட்ட பதவிச் சட்டத்தால் அப்படிப்பட்டவர்கள் பாராளுமன்றத்தினின்றும் அகன்றனர். பொதுமக்கள் சபையில் முன்பெல்லாம் இருந்தது போன்ற சுயநலக் கும்பல்களும் கோஷ்டிகளும் மறைந்தன. அவைகளுக்குப் பதிலாக விக்குகள், டோரிகள் என்ற இரு தெளிவான கட்சிகள் தோன்றின. புதிய டோரிக் கட்சியின் தலைவராகப் பிட் விளங்கினுர். எனினும், அவர் டோரிக் கட்சியினர் விரும்பாத பல முற்போக்குச்சீர்திருத்தங்களை இங்கிலாந்தில் கொண்டுவர முயற்சித்தார்.

பாராளுமன்றத்தைச் சீர்திருத்த அவர் பெரிதும் விரும்பினுர். 1785 ஆம் ஆண்டில் அவர் அதற்காக ஒரு மசோதாவைக் கொணர்ந்தார். நசித்துப் போன 36 பரோக்களின் வாக்குரிமைகளை ரத்துச் செய்துவிட வேண்டுமென்றும், அவைகளினின்றும்

தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்குப் பதிலாகப் புதிதாய்த் தோன்றிய பெரும் பட்டணங்களிலிருந்து 72 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமெனவும் அம்மசோதா கூறியது. அவ்விதம் வாக்குரிமை இழந்த பரோக்களைத் தம்கைக்குள் வைத்திருந்த பெரும்பிரபுக்களுக்கு நஷ்டஈடு வழங்கப்படலா மெனவும் அதற்காகவேண்டி ஒரு மிலியன் பவுன் ஒதுக்கப்படலா மெனவும் அது கூறிற்று. ஆனால் இம் மசோதாவை பர்க் போன்ற அறிஞர்கள் எதிர்த்தார்கள். எனவே பிட் அதைக் கைவிட்டார்.

பாராளுமன்றத்தின் அதிகாரம் ஒரு சிறிதும் குறைக்கப்பட லாகாதென்பதில் பிட் எவ்வளவு அக்கறை கொண்டிருந்தார் என்பதை விளக்க ஒரு சிறு நிகழ்ச்சி 1788 ஆம் ஆண்டில் நடை பெற்றது. அவ்வாண்டில் அரசர் திடீரெனச் சித்தப் பிரமைச்கு இலக்கானார். அச்சமயத்தில் அவருக்குப் பிரதிநிதியாக யார் பாதுகாப்பாளராயிருப்பதென்னும் கேள்வி எழுந்தது. வேல்ஸ் இளவரசே பாதுகாப்பாளராய் (Regent) வரவேண்டுமென்பதில் யாருக்கும் ஐயமில்லை. ஆனால் அவர் எங்ஙனம் நியமிக்கப்பட வேண்டுமென்பதில் கருத்துவேறுபாடு பாராளுமன்றத்தின ரிடையே காணப்பட்டது. மன்னர், பிரபுக்கள் சபையார், பொது மக்கள் சபையார் இம்மூவரும் சேர்ந்த பாராளுமன்றமொன்றே பாதுகாப்பாளரை நியமிக்கத் தகுதியுடையதெனவும், மன்ன ரொழிந்த சட்டசபைகள் தனித்தோ ஒன்று சேர்ந்தோ, அப்பணி யைச் செய்ய அருகதையற்றதெனவும் பிட் வாதித்தார். ஆனால் ஃபாக்ஸ், ஷெரிடின், பர்க் போன்ற விக்குக் கட்சினர் பாதுகாப் பாளர் பதவியை யாருடைய அனுமதியுமின்றி வேல்ஸ் இளவரசர் பெறலாமென்றும், அது அவருடைய பிறப்புரிமை என்றும் விசித் திரமாக வாதாடினார். ஏனெனில் வேல்ஸ் இளவரசர் பதவிக்கு வந்தால் அவர் உடனே பிட்டை வீட்டுக்கனுப்பிவிட்டு ஃபாக் ஸைப் பிரதமராக்குவாரென்பது அவர்களுக்குத் தெரியும். பாராளுமன்றத்தின் சட்டப்படிப் பாதுகாப்பாளர் நியமிக்கப்பட வேண்டுமானால் மன்னரது கையொப்பம் அதற்கு வேண்டுமென வும், மன்னர் சித்தம் கலங்கிய நிலையிலிருந்ததால் அது முடியாத காரியம் என்பதையும் அன்னார் அறிவர். எனவே சுயநலங்காரண மாக, அரசியலில் முற்போக்குக் கொள்கையினர் எனப் பெய ரெடுத்த விக்குக் கட்சினர் மன்னரின் தெய்வீக உரிமைக் கொள் கையை ஆதரித்துப் பாராளுமறத்தின் அடிப்படை அதிகாரத் துக்கே கேடு சூழ எண்ணியபோது பிற்போக்கு டோரிக் கட்சி யினரின் தலைவரான பிட் அதைக்காக்க முன்வந்தது குறிபிடத் தக்கதாகும். இந்த இக்கட்டான சூழ்நிலையில் ஒருவரின் உதவியு மின்றிப் பிரச்சினை தானாகவே தீர்ந்துவிட்டது. எப்படியெனில் அரசர் அதற்குள் சித்தத் தெளிவு பெற்று விட்டார்.

பிட் எவ்வளவு முற்போக்குக் கொள்கையினர் என்பது மற்றொரு நிகழ்ச்சி ஒன்றாலும் தெற்றென விளங்குகிறது. எழுத்து அவதூறுகள் (libel) பற்றிய மசோதாவொன்றை ஃபாக்ஸ் பாராளுமன்றத்தில் கொணர்ந்தார். எது அவதூறு வழக்கு என்பதைத் தீர்மானிக்கும் உரிமை நீதிபதிக்கே என்ற வழக்கத்துக்குப் பதிலாக, ஜூரிகளுக்கே அந்த உரிமை உண்டென்பதை அம் மசோதா விளம்பிற்று. குற்றவாளிகளுக்கு நலனைச் செய்த இம் மசோதாவுக்குப் பலத்த எதிர்ப்பு கிளம்பியது. எனினும் பிட் தம் செல்வாக்கைப் பயன்படுத்தி அம் மசோதா சட்டமாவதற்கு உதவி புரிந்தார். எதிரியோடு சேர்ந்தேனும் நாட்டுக்கு நன்மை செய்யவேண்டும் என்ற சான்றாண்மைக்கு பிட் ஒரு சான்றாகத் திகழ்ந்தார்.

இங்ஙனம் முற்போக்குக் கொள்கைகளை ஆதரித்து வந்த பிட் சூழ்நிலை காரணமாக நாளடைவில் சீர்த்திருத்த எதிர்ப்புவாதியாகமாறினார். பிரெஞ்சுப் புரட்சியின் விளைவாக ஏற்பட்ட பீதி காரணமாக அவர் பல அடக்குமுறைச் சட்டங்களை ஏற்படுத்தினார். ஹேபியாஸ்கார்ப்பஸ் சட்டங்கூடச் சிலகாலம் நிறுத்தி வைக்கப்பட்டது. தொழிலாளர்கள் கழகங்கள் நிறுவும் உரிமை, கூட்டங்கள் கூட்டுமுரிமை முதலியன தடைசெய்யப்பட்டன. கருத்துரிமை, பேச்சுரிமை, எழுத்துரிமை முதலியன மக்களுக்கு மறுக்கப்படட்டன பொதுமக்களிடையே கிளர்ச்சியை விளைவிக்கும் எந்தச் சீர்திருத்தத்தையும் அவர் வெறுத்தார் அடிமை வியாபாரத்தை ஒழிக்க அவர் ஒரு சட்டம் கொணர நினைத்தபோது அதற்குச் சுயநலமிகளின் எதிர்ப்பு அதிகமாக ஏற்பட்டதால் அவர் அதைக் கைவிட்டார். பாராளுமன்றச் சீர்திருத்தத்தைச் கைவிட்டதற்கும் மேற்சொன்ன அவரது மனப்பான்மையே காரணமாகும்.

## பொருளாதாரக் கொள்கை

### தடையிலா வாணிகக் கொள்கை (Free Trade)

நாட்டின் பொருளாதாரத்தை நிருவகிப்பதில் பிட் அளவிறந்த ஆற்றலை வெளிப்படுத்தினார். அவர் பதவியேற்ற போது நாட்டுக் கடனானது (£ 250,000,000) ஆக உயர்ந்திருந்தது. இங்கிலாந்து எப்போதுமே கண்டிராத அவ்வளவு பெரிய கடன்தொகையைக் கண்டு பிட் அஞ்சவில்லை. நாட்டின் பொருள்வளத்தைப் பெருக்க அவர் துணிவோடு புதிய கொள்கைகளைக் கடைப்பிடித்தார். பொதுவாக அவரது காலத்தில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த மெர்க்கண்டலிஸம் (Mercantilism) என்ற கொள்கையை அவர் கண்டித்தார். நாட்டின் வியாபாரத்தை

வளர்க்கக் கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டுமென்ற பழைய கொள்கையில் அவர் நம்பிக்கையிழந்தார். ஆடம்ஸமித் என்ற கிளாஸ்கோ பல்கலைக் கழகப் பேராசிரியர் எழுதிய 'நாடுகளின் செல்வம்' (Wealth of Nations) என்ற நூலில் காணப்பட்டத் தடையிலா வாணிகக் கொள்கையை (Free Trade Policy) அவர் ஆதரித்தார். சுங்கவரி விதித்தல், உதவிப் பணமளித்தல் (Duties and Bounties) முதலிய முறைகளால் அரசாங்கம் தலையிடாது, தாராளமாய் விடப்படும் வியாபாரமே நாட்டின் செல்வத்தைப் பெருக்கும் என அவர் எடுத்துக் கூறினார். இக்கொள்கையின்படி இங்கிலாந்துக்கும் அயர்லாந்துக்குமிடையே தாராள வியாபாரம் நடைபெற அவர் ஒரு திட்டம் வகுத்தார். ஆனால் அதற்குப் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டதால் அவர் அதைக் கைவிட்டார். வியாபாரத்தைக் கட்டுப்படுத்திய ஏராளமான சுங்கவரிகளை எல்லாம் ஒழித்துவிட அவர் விரும்பினாரெனினும், மக்கள் அதை எதிர்ப்பார் என்பதை அறிந்து அவர் அங்ஙனம் செய்யவில்லை. எனினும் மறைமுகமான வரிகள் (Indirect Taxes) பலவற்றை அவர் குறைத்தார். கிடங்குகளிலிருந்து பொருள்கள் வெளிவரும்போது மட்டும் வரிவிதிக்கும் முறையைக் கையாண்டு அவர் கள்ள வியாபாரத்தை ஒழித்தார். சாராயம், புகையிலை போன்ற பல பொருள்களுக்கு அவர் கலால்வரி (Exeise duty) விதித்தார். சுங்க வரிகளை வசூலிக்கும் முறைகளையும் அவர் எளிமையாக்கினார். வருமானத்தைப் பெருக்க அவா சில நேர்முக வரிகளைப் (Direct taxes) போட்டார். ஒருவரது வீட்டில் காணப்பட்ட வேலையாட்கள் குதிரைகள், ஜன்னல்கள் இவைகளுக்கேற்ப வரிப்பணம் தீர்மானிக்கப்பட்டது ஆறுக்குக் குறைந்த ஜன்னல்களையுடைய வீடுகளின் மீது வரி விதிக்கப்படவில்லை. எனவே பலர் ஜன்னல்களை எல்லாம் அடைக்க முற்பட்டனர். அது வீடுகளில் காற்றோட்டத்தைத் தடை செய்து மக்களின் ஆரோக்கியத்துக்குக் கேடு சூழ்வதாயிருந்தது. எனினும் இம்முறையால் ஒருவருடைய செல்வத்தின் தராதரத்துக் கேற்ப அரசாங்கம் வரிவிதிக்க வகை ஏற்பட்டது.

**கடன் கழிவு நிதி (Sinking Fund)**

நாட்டு கடனைத் தீர்க்கப் பிட் ஒரு கடன்கழிவு நிதியை ஏற்படுத்தினார். அதன்படி ஆண்டு ஒன்றுக்கு ஒரு மிலியன் பவுன்கள், கடனை அடைப்பதற்கென ஒதுக்கப்பட்டது. ஆணையாளர்கள் (Commissioners) கைகளில் அத்தொகை இருப்புநிதியாக (Stock) அளிக்கப்பட்டது. அவர்கள் இருப்புநிதிக்கும் வட்டியை வாங்கி அதையும் மொத்தத் தொகையோடு சேர்த்தனர். இம்முறையால் 28 ஆண்டுகளில் கடன் முழுவதும் அடைப்பட்டு விடலாமெனப் பிட் எதிர்பார்த்தார். ஆனால், பிரெஞ்சுப் போர்கள் நடுவில் வந்து

விட்டதால் பிட்டின் திட்டம் நிறைவேறவில்லை. கடன்களைக் குறைப்பதற்குப் பதிலாக மேலும் கடன் வாங்கும் ஒரு நிலைமை அவருக்கு ஏற்பட்டுவிட்டது. எனினும் பிட்டின்பால் காணப் பட்ட கடனை அடைக்க வேண்டுமென்ற நல்லெண்ணம் பாராட் டுக்குரியது. அவரது கொள்கையால் அரசாங்கத்தின் நாணயம் (Gredit) உயர்ந்தது. 1813 ஆம் ஆண்டுக்குள் 238 மில்லியன் பவுன்கள் நாட்டுக் கடனிலிருந்து கழிக்கப்பட்டன.

வியாபார வளர்ச்சி

இங்கிலாந்தின் வியாபாரத்தைப் பெருக்க அவர் பிரான் ஸோடு ஒரு வியாபார உடன்படிக்கையை 1786ஆம் ஆண்டில் செய்து கொண்டார். பல காலமாய் இங்கிலாந்தின் எதிரியாக இருந்த பிரான்ஸோடு வியாபாரத் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதைப் பலர், மானங்கெட்ட செயல் என வருணித்தனர். ஒரு நாட்டோடு இன்னொரு நாடு நிரந்தரமாகப் பகை செலுத்து வது மடமையாகுமென பிட் அத்தகையோர்க்கு மறுமொழி புகன்றார். அவ்வுடன்பாட்டின்படி பிரெஞ்சுச் சாராயம், பிராந்தி, ஆலிவ் எண்ணெய் முதலிய பொருள்கள்மீது விதிக்கப்பட்ட சுங்க வரி குறைக்கப்பட்டது. அதேபோன்று பிரான்சில் இறக்குமதி யான பிரிட்டிஷ் இரும்புச் சாமான்கள், பருத்திப் பொருள்கள் இவைகள் மீது சுங்க வரிகள் குறைக்கப்பட்டன. இவ்வுடன்படிக் கையால் எதிர்பார்க்கப்பட்ட நல்லவிளைவுகள் பிரெஞ்சுப் போர்களால் தடைபட்டன. 1794ஆம் ஆண்டில் அவர் அமெரிக் காவோடு ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டார். அமெரிக்கச் சுதந்திரத்துக்கு முன் அதற்கு வழங்கப்பட்ட வியாபார உரிமை கள் மீண்டும் தரப்பட்டன. ஆனால் மேற்கிந்தியத் தீவுகளிலிருந் தும், கனடாவிலிருந்தும் அமெரிக்கக் கப்பல்கள் வியாபாரப் பொருள்களை ஏற்றிச் செல்வதை அவ்வுடன்படிக்கை தடுத்தது. மற்றவகையில் இருநாடுகளுக்கும் வியாபாரத்தில் நட்புறவு ஏற்பட்டது. 1791 ஆம் ஆண்டில் அவர் ஒரு தானியச் சட்டத் தைக் (Corn Law) கொணர்ந்தார். தானியங்களின் விலை ஒரு குவார்ட்டருக்கு 50 ஷில்லிங்குக்கும் குறைந்தால், அவற்றின் இறக்குமதி நிறுத்தப்பட வேண்டுமென அச்சட்டம் கூறியது. பூர்வீகச் சொத்து வரி (Legacy duty) ஒன்றையும் பிட் மக்கள்மீது திணித்தார். நாட்டுப்புறப் பிரபுக்களின் கூச்சலுக்கேற்ப நிலச் சொத்துக்கு அச்சட்டம் செல்லுபடியாகாது என்று ஏற்பட்டது.

## வெளிநாட்டுக் கொள்கை

பிரான்ஸுடன் நட்புறவு

வால்போலைப் போன்று பிட்டும் அமைதியை விரும்புபவர். அதனாற்றான் அவர் பிரான்ஸுடன் ஒரு வியாபார உடன்படிக்கை

யைச் செய்து கொண்டார். இந்நட்புடன்பாட்டால் ஒரு நன்மை விளைந்தது. அமெரிக்காவிலிருந்த ஸ்பானியர்கள் பசிபிக்மாக் கடலோரமாகக் கலிபோர்னியாவில் குடியேற ஆரம்பித்தனர். 1789 ஆம் ஆண்டில் அவர்கள் வான்கூவர் (Voncouver) துறைமுகத்தில் நூட்கா சவுண்ட் (Nootka Sound) என்னுமிடத்தில் புகுந்து, அங்கிருந்த ஆங்கிலக் குடியேறிகளை அப்புறப்படுத்திவிட்டனர். அவ்விடத்தில் முதன்முதலில் குடியேறியவர்கள் ஆங்கிலேயராதலால், அவர்களுக்கே அது உரிமையானதென்று பிட் உறுதியாகக் கூறினர். அவரை பிரான்ஸ் ஆதரித்து, ஸ்பெயினுக்கு உதவி செய்வதை நிறுத்திக்கொண்டது. இதைக் கண்ட ஸ்பானியர்கள் அவ்விடத்தை ஆங்கிலேயருக்கே விட்டுக்கொடுத்தனர். அதிலிருந்துதான் பிரிட்டிஷ் கொலம்பியா உருவாகியது.

### முக்கூட்டுறவு (Triple Alliance)

பிரஷ்யாவுக்கும், இங்கிலாந்துக்கும் நெடுநாளாகவே பகைமை இருந்து வந்தது. ஏழாண்டுப் போரில் இங்கிலாந்து பிரஷ்யாவை நட்டாற்றில் கைவிட்டுவிட்டதே இரு நாடுகளுக்கிடையே மனக்கசப்பு வளர்ந்ததற்கு காரணமாகும். அதனுற்றுன் அமெரிக்கச் சுதந்திரப் போர்க்காலத்தில் ஏற்பட்ட படைதரித்த நடுநிலைக் கூட்டுறவில் பிரஷ்யாவும் சேர்ந்தது. பிட் அமைச்சரானவுடன் அவர் பிரஷ்யாவோடு நட்பை வளர்த்தார். ருஷ்யாவின் ஆதிக்கத்தை ஒழிக்க, பிரிட்டன், பிரஷ்யா, ஹாலந்து என்ற நாடுகளிடையே ஒரு முக்கூட்டுறவு (Triple Alliance) ஏற்பட்டது. ருஷ்யாவானது அப்போது இரண்டாம் காத்தரைன் (Catherine II) என்ற இராணியால் ஆளப்பட்டு வந்தது. அவ்விராணிக்கு நாடு பிடிக்கும் ஆசை அதிகம். ஸ்வீடனில் அவர் தமது ஆதிக்கத்தை நிலைநாட்ட முயற்சித்த போது முக்கூட்டுறவு நாடுகள் அதைத் தடுத்துவிட்டன. அடுத்தபடி ருஷ்யப்படைகள் துருக்கின்யின் மீது போர்தொடுத்து ஆக்ஸாகோவ்(Oczakov)என்னுமிடத்தைக் கைப்பற்றிக் கொண்டன. ருஷ்யாவின் பலம் வளர்வதைப்பற்றி அச்சம்கொண்ட ஐரோப்பிய அரசியல் வல்லுநர் பிட் ஒருவர்தாம். அவர் காத்தரைன் அரசிக்கு ஓர் இறுதி எச்சரிக்கையை (Ultimatum) விடுத்துவிட்டுக் கருங்கடலுக்கு அனுப்ப ஒரு கடற்படையைத் திரட்டினர். ஆனல், பாராளுமன்றம் அவரது படையெடுப்புக்கு ஆதர்வுதர மறுத்துவிட்டதால் பிட் வாளாவிருக்க நேர்ந்தது. பிட்டின் எச்சரிக்கையை காதரையன் பொருட்படுத்தவில்லை. பிரிட்டனின் கவுரவம் இதனல் சிறிது பாதிக்கப்பட்டது. எனினும் ஐரோப்பாவைப் பொறுத்தமட்டில் அமைதியை நிலைநாட்ட முக்கூட்டுறவு பெரிதும் பயன்பட்டது.

போலந்துப் பங்கீடு (Partition of Poland)

போலந்து என்னும் அப்பாவி நாடானது வலிமையுள்ள ஐரோப்பிய அரசுகளால் கபளீகரம் செய்யப்பட்ட சோக சம்பவம் பிட்டின் காலத்தில் நிகழ்ந்தது. பிட் அமைச்சராவதற்கு முன் அதாவது 1772 இல் போலந்தின் முதல் பங்கீடு உடன்படிக்கையானது (Firs Partition Treaty) ருஷ்யா, ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகிய நாடுகளிடையே ஏற்பட்டது. அதன்படி போலந்தின் சில பகுதிகளை அவ்வல்லரசுகள் எடுத்துக் கொண்டன. பிட் அமைச்சரான பின் 1793, 1795ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற இரண்டாவது மூன்றாவது பங்கீட்டு உடன்படிக்கைகளால் போலந்து நாட்டை அனைத்துமாக மேற்சொன்ன வல்லரசுகள் தம்முள் பங்கிட்டுக் கொண்டன. இந்த வடிகட்டிய அக்கிரமச் செயலைப் பிட் விரும்பவில்லையென்றாலும், அதைத் தடுக்க முடியாத நிலையில் அவர் அப்போது இருந்தார். பிரெஞ்சுப் புரட்சிப் போர்கள் அவரது கவனத்தை யெல்லாம் ஈர்க்க ஆரம்பித்து விட்டன.

பிரெஞ்சுப் போர்கள்

பிரான்ஸோடு அவர் வேண்டாவெறுப்பாகவே போரிட்டார் பிரெஞ்சுக்காரரின் ஆற்றலை அவர் மிகக்குறைத்து மதிப்பிட்டு விட்டார். மற்றும் தகுந்த தலைவர்களைப் பொறுக்கி எடுக்கும் ஆற்றலும் படைகளுக்கு உற்சாகமூட்டும் திறனும், அவைகளுக்குப் போதிய உதவிகளை அவ்வப்போது அனுப்பும் சுறுசுறுப்பும் இல்லாததால் அவரது படைகள் பிரான்ஸில் தோல்வியுற்றன. எனினும், மிக நெருக்கடியான சமயத்தில் பிரிட்டனைக் காப்பாற்றிய பெருமை அவருக்குரியது.

அயர்லாந் பிரச்சினை

அயர்லாந்தியச் சிக்கலைத் தீர்க்க அவர் 1801 ஆம் ஆண்டு ஐக்கியச் சட்டத்தை கொணர்ந்தார். இரு நாடுகளும் ஐக்கியமடைந்துவிடவேண்டுமென்றும், அயர்லாந்திலிருந்த ரோமன் கத்தோலிக்கர்கள் மீது விதிக்கப்பட்டிருந்த தடைகள் யாவும் நீக்கப்பெற வேண்டுமெனவும் அச்சட்டம் கூறியது. மூன்றும் ஜார்ஜ், கத்தோலிக்கர்களுக்கு விடுதலையளிப்பது, இங்கிலாந்தின் மத ஏற்பாட்டைக் காப்பதற்காகத் தாம் எடுத்துக்கொண்ட பதவிப் பிரமாணத்துக்கே விரோதமாகுமெனக் கூறி அவ் ஐக்கியச் சட்டம் செயல்முறை வராமற் செய்தார். இதனால் மனமுடைந்த பிட் தம் பதவியை ராஜிநாமாச் செய்தார்.

பிட்டும் பேரரசும்

குடியேற்ற நாடுகளில் அமைதியும் ஒழுங்கும் நிலவ வேண்டுமென்பதே பிட்டின் பேரவாவாகும். கனடாவில் ஆங்கிலேயரும்

பிரெஞ்சுக்காரர்களும் போரிடுவதைத் தடுக்க அவர் 1791 ஆம் ஆண்டில் கனடாச் சட்டத்தைக் கொண்டு (Canada Act) வந்தார் அதன்பின் கனடா இருபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. ஒன்றில் பிரெஞ்சுக்காரரும் இன்னொன்றில் ஆங்கிலேயரும் பெரும்பான்மை யினராயிருந்தனர். அவர்கள் தம்முள் சச்சரவிடாமல் தனித்தனிக் கவர்னர்களால், தனித்தனிச் சட்டசபைகளைக் கொண்டு தம்மைத் தாம் ஆண்டுகொள்ள மேற்படிச் சட்டம் வழி செய்தது. அதே போன்று இந்தியாவில் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சியால் விளைந்த குழப்பத்தை ஒழுங்குபடுத்த அவர் 1784 ஆம் ஆண்டில் பிட் இந்தியச் சட்டத்தைப் (Pitt's India Act)பாராளுமன்றத்தில் நிறைவேற்றினர். அதன்மூலம் கம்பெனியின் ஆட்சிமுறையானது பாராளுமன்றத்தின் நேர்கண்காணிப்பிற்குள் கொண்டுவரப்பட்டது. கம்பெனியின் ஆட்சிப்பொறுப்பைக் கண்காணிக்க இலண்டனில் மேற்பார்வைக் குழு (Board of Control) ஒன்று ஏற்படுத்தப் பட்டது. இதன்பின் கம்பெனியானது வியாபாரத் துறையில் மட்டுமே சுயேச்சையாக இயங்க முடிந்தது. அரசாங்க அலுவல் களைப் பொறுத்தவரை கம்பெனியானது மேற்பார்வைக் குழுவின் ஆணைகளுக்கேற்பவே இயங்க வேண்டியதாயிற்று.மற்றும்பிட்டின் காலத்தில், நாடுகடத்தப்பட்ட குற்றவாளிகள் ஆஸ்திரேலியா வுக்கு அனுப்பப் பட்டனர். 1788 இல் அக்குற்றவாளிகள், சிட்னி துறைமுகத்தில் இறங்கி அங்கு ஒரு குடியேற்ற நாட்டை ஏற் படுத்தினர். இங்ஙனம் ஆஸ்திரேலியக் குடியேற்ற நாட்டுக்குத் தன்னை யறியாமலேயே பிட் வித்திட்டவரானர்.

## மதிப்பீடு

இளைய பிட்டின் அமைதிக்காலச் சேவைகள் உண்மை யிலேயே பெரிதும் பாராட்டப்படுதற்குரியனவாகும். அவர் பிரதமராகப் பதவியேற்றபோது அவரது வயது இருபத்து நான்கு. மிக இள வயதில் அவர் பெரும் பொறுப்பை ஏற்ருர். மூன்ரும் ஜார்ஜ் அவரைப் பதவியில் அமர்த்தியபோது, பள்ளிப் பையன் ஒருவன் கைகளில் நாட்டின் ஆட்சிப் பொறுப்பு ஒப்ப டைக்கப்படுவதாகப் பலர் எள்ளி நகையாடினர். ஆனல் சின் ஞளிலேயே பிட் தம்மை ஏளனம் செய்தவர்கள் வியப்பில் மூழ் கும் வண்ணம் பல காரியங்களையும் திறம்படச் செய்யலானர். அவரது கண்ணியத்தையும், கம்பீரமான நடத்தையையும் கண்ட அரசரும், பாராளுமன்றத்தாரும் அவரிடம் பெட்டிப் பாம்பு போல் அடங்கினர். அவரது அதிகார தோரணையை யும் ஆழ்ந்த அறிவையும் கண்ட அவரது சகாக்களும் அவருக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து நடந்து கொண்டனர். இங்ஙனம் இங்கி

லாந்தின் பிரதம மந்திரிப் பதவியின் பெருமைக்குப் பிட் வித்திட்டுக் சென்ருர். மற்றும் அவர் பொருளாதாரத் துறையில் அரும் பெருங் காரியங்களைச் சாதித்தார். நாட்டின் செல்வ நிலையை அவர் பல்வகையானும் முயன்று ஓர் ஒழுங்குபடுத்தினர். இந்தியாவிலும் கனடாவிலும் அரசாங்கங்களைச் சீர்படுத்தி அமைத்த பெருமையும் அவருக்கே உரியது. பிரெஞ்சுப் புரட்சிப் போர்களில் கலந்து கொண்டு, அவர் பெரும் வெற்றிகளைப் பெருவிட்டாலும் நாட்டின் மானத்தைக் காத்தார்.

இங்ஙனம் அவர் செய்த அரும்பெருங் காரியங்களைவிட அவர் செய்ய விரும்பிய காரியங்கள் அவரது புகழைப் பன்மடங்கு ஓங்கச்செய்கின்றன, அவ்விருப்பங்கள் அவரது உயர்ந்த குறிக்கோள்களை வெளிப்படுத்துகின்றன. 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்ற வள்ளுவர் வாய்மொழிக்கிணங்க அவர் உயர்ந்த பல இலட்சியங்களை நிறைவேற்ற முயன்ருர். ஆனுல் குடிமக்களின் எதிர்ப்பு காரணமாக அவர் அவற்றை கைவிடநேர்ந்தது. அவர் வெறும் இலட்சியவாதிமட்டுமல்லர். நடைமுறையில் எதை நிறைவேற்ற முடியும், எதை நிறைவேற்ற முடியாது என்பதையும் அறிந்த செயல்வீரர். சான்ருக அவர் நாட்டு மக்கள் முன்னிலையில் தடையிலா வியாபாரத்தின் தனிச்சிறப்பினையும், அடிமை வியாபார ஒழிப்பின் அவசியத்தையும் கத்தோலிக்கர்களுக்கு விடுதலை அளிக்க வேண்டியதன் கட்டாயத்தையும், பாராளுமன்றச் சீர்திருத்தத்தின் இன்றியமையாமையையும், எடுத்து விளம்பினர் ஆனுல் அவைகளை ஏற்றுக்கொள்ளுமளவுக்கு மக்களின் உள்ளம் பண்படவில்லை என அவர் அறிந்ததும் அவற்றை வற்புறுத்தாது விடுத்தார். அவர் இறந்து வெகு நாள்களுக்குப் பின்னர் அவர் விரும்பின அனைத்தும் நிறைவறியதைக்கொண்டு அவர் அரசியலில் எவ்வளவு தூரம் தொலைநோக்க முடையவராயிருந்தாரென்பதை நாம் நன்கு அறிந்து கொள்ளலாம்.

முழுமதியிலும் களங்கமிருப்பதே போன்று, பெரியோர்களிடத்திலும் ஒரு சில குறைபாடுகள் காணப்படுவது இயல்பே. அதற்கேற்பப் பிட்டிடத்திலும் ஒரு சில குறைகள் இருந்தன. அவர் தம்மைச் சுற்றிலும் ஒரு பெரிய மாற்றம், தொழில் துறையிலும், சமூகத் துறையிலும் ஏற்பட்டு வருவதை உணரவில்லை. தொழிற் புரட்சியின் தீய விளைவுகளை உன்னிப் பார்த்து அவர் அவற்றுக்குப் பரிகாரஞ் செய்யவில்லை. சமூகச் சீர்திருத்தங்கள் பல செய்யப்பட வேண்டியிருந்தும், அவர் அவற்றைப் புறக்கணித்தார். அடிமை ஒழிப்பு, பாராளுமன்றச் சீர்திருத்தம் போன்ற மிக முக்கியமான காரியங்களையும் அவர்

ஒத்திப்போட்டு விட்டார். மக்களின் நன்மையைக் கருதி நல்ல பல சீர்திருத்தங்களைப் பலவந்தமாகப் புகுத்தி வெற்றியுடன் அவற்றை அமுல் நடத்தக் கூடிய அரசியல் ஆண்மை அவர்பால் இல்லாதிருந்தது அவரது ஒரு பெருங் குறையாகும். பிரெஞ்சுப் புரட்சியின் முக்கியத்துவத்தை அவர் ஒருக்காலும் சரிவரப் புரிந்து கொள்ளவில்லை. எனினும் அவர் பிரெஞ்சுப் புரட்சிப் போரில் இங்கிலாந்தைச் சிக்கவைக்க வேண்டிய ஒரு கட்டாயச் சூழ்நிலை உண்டாயிற்று. அதன் முடிவைப் பார்க்கு முன்பே அவர் இறந்து போனார்.

இத்தனை குறைகளிருந்தும் பிட் உண்மையில் பெரிய மனிதர் என்றே கருதத்தக்கவர். அவருடைய உயரிய இலட்சியங்கள் என்னும் கதிரவன் முன் அவரது மற்றச் சிறு குற்றங்களெல்லாம் விண் மீன்கள் போன்று மங்கி மறைந்து விடுகின்றன.

# 12. பதினெட்டாம் நூற்றுண்டில் அயர்லாந்து

அயர்லாந்துக் கத்தோலிக்கரின் அவலநிலை — தண்டனைச் சட்டத் தொகுதி (Penal Code).

ஏனையோரின் அரசியல் குறைபாடுகள்

பொருளாதார முட்டுப்பாடுகள்

அயர்லாந்தியரின் எதிர்ப்பு:

கிராட்டன் எனும் கிளர்ச்சித் தலைவர்ன் உல்ஃப்டோன் எனும் கிளர்ச்சித் தலைவர்—1798 ஆம் ஆண்டுக் கலகப்—வினிகர் குன்றுப்போர் (1798)

ஐக்கியச் சட்டம் 1800

## அயர்லாந்துக் கத்தோலிக்கரின் அவலநிலை-- தண்டனைச் சட்டத் தொகுதி(Penal Code)

அயர்லாந்தும் இங்கிலாந்தும் ஆதியிலிருந்தே எலியும் பூனையும் போல் தம்முள் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. ஆங்கிலேயர் அயர்லாந்தியரை, ஏதோ ஓர் அநாகரிகமான குடியேற்ற நாட்டில் வாழ்ந்த பழங்குடிமக்கள் போலவே கருதி, அதற்கேற்ற உரிமைகளை வழங்கினர். ஆங்கிலேயரின் பிடியினின்றும் விடுபட அயர்லாந்தியர் பல முயற்சிகளைச் செய்தும் பயனில்லாதொழிந்தது. 1689ஆம் ஆண்டில் அவர்கள் இரண்டாம் ஜேம்ஸோடு சேர்ந்துகொண்டு ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடித் தோற்றனர். அதன்பின் அவர்களது நிலை இன்னும் கேவலமாயிற்று. பிராடெஸ்டண்டுகளின் ஆதிக்கம் அங்கு நன்கு வேரூன்றி விட்டது. கத்தோலிக்கர்கள் பலவகையிலும் துன்புறுத்

தப்பட்டு அடக்கப்பட்டனர். தண்டனைச் சட்டத் தொகுதி (Penal Code) என்னும் விலங்கு, ஐரிஷ் கத்தோலிக்கரின் கைகளுக் கிடப்பட்டு அவர்கள் அரசியல், பொருளாதாரம், சமயத் துறை களில் பலவித இன்னல்களுக்காளாயினர்.

தண்டனைச் சட்டத் தொகுதியின்படி அயர்லாந்தியக் கத் தோலிக்கர்களுக்கு அரசியல் உரிமைகள் பலவும் மறுக்கப்பட்டன. ஐரிஷ் பாராளுமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் வாக் குரிமையோ, அப் பாராளுமன்றத்தின் உறுப்பினராதற்குரிய உரிமையோ அவர்களுக்கு இல்லை. அவர்கள் மத்திய அரசாங்கத் திலும் நகராட்சி நிறுவனங்களிலும் உத்தியோகம் பெறத் தகுதி அற்றவர்களாக்கப்பட்டனர்.

சமூகத்துறைகளில் கத்தோலிகர் அனுபவித்த தொல்லை களுக்கோர் அளவில்லை. ரோமன் கத்தோலிகர், பிராடெஸ் டண்டுகளோடு கலப்பு மணம் செய்து கொள்ளக்கூடாது. அப்படி ஏதாகிலும் ஒரு கலப்புத் திருமணத்தை ஒரு பாதிரியானவர் செய்து வைத்ததால் அப்பாதிரி தூக்கிலிடப்பட்டார். கத்தோலிக் கர் தமது மக்களை வெளிநாடுகளுக்குக் கல்வி கற்பதற்காக அனுப் பக்கூடாது. அயர்லாந்திலும் அவர்கள் பிராடெஸ்டண்டு ஆசிரி யர்களிடத்திலேயே பயில வேண்டும. அவ்வாசிரியர்கள் ஐரிஷ் பிராடெஸ்டண்டு திருச்சபையினின்றும் அனுமதிச் சீட்டு (License) பெற்றவர்களாயிருக்க வேண்டும். கத்தோலிக்கர் எவரும் வக்கீல் தொழிலில் ஈடுபடக்கூடாது. சேனையில் பெரும் பதவிகளை வகிக்க வும் அவர்கள் அருகதை அற்றவர். அவர்கள் உடைவாளணி வதோ, ஒரு கனவானுக்குரிய அடையாள வில்லைகளை (Badge) அணிவதோ தகாது. ஐந்து பவுனுக்குமேல் விலை மதிப்புள்ள குதிரைகளை எந்தக் கத்தோலிக்கனும் வைத்துக் கொள்ளக் கூடாது.

ரோமன் கத்தோலிக்கர்களுக்கு நிலம் வாங்கும் உரிமை இல்லை. தண்டனைச் சட்டபடி நீண்ட நாள்களுக்கு ஒரே நிலத்தை அவர்கள் குத்தகைக்கு உழுவதையும் அச்சட்டம் தடுத் தது. ஏற்கெனவே பெரிய பூமான்களாய் இருந்த கத்தோலிக்கர் களின் நிலங்கள், அவர்கள் இறப்புக்குப்பின் அவர்களது மக்கள் அனைவரிடையேயும் சமமாகப் பிரித்துக் கொள்ளப்பட வேண்டு மென்றும் அது வற்புறுத்தியது. இம்முறையால் வழிவழியாகப் பெரும் நிலப் பிரபுக்களாய்க் கத்தோலிக்கர் வாழ வழியில்லாமல் போய்விட்டது. தந்தை இறந்த பின் அவரது மூத்த மகனே அவரது சொத்துக்கு உரிமையுடையவன் என்ற கொள்கையை பிராடெஸ்டண்டுக்களுக்கே அது அனுமதித்தது. ஐரிஷ் நிலங் களில் பெரும்பகுதி ஆங்கிலேய பிராடெஸ்டண்டுகளுக்கே

சொந்தமாயிருந்தன. அந்நிலப் பிரபுக்கள் இங்கிலாந்திலேயே வாழ்ந்து வந்தனர். ஐரிஷ் குடியானவர்களே அவர்களது நிலங் களை உழுதனர். அவர்கள் மீது ஏராளமான வரிகள் போடப் பட்டன. வறுமையாலும், பிணியாலும் உழவர்கள் வாடினர். நிலைமை தாளாது பல உழவர்கள் வேற்று நாடுகளுக்குங் சென்று விட்டனர்.

தண்டனைச் சட்டங்களால் இங்ஙனம் நாற்புறமும் நெருக் குண்ட பல கத்தோலிக்கர்கள் பிரான்ஸுக்கு ஓடிப்போய் அங் குள்ள சேனையில் சேர்ந்து கொண்டனர். பிரெஞ்சு அரசர் 'ஐரிஷ் பிரிகேட்' (Irish Brigade) என்ற ஒரு தனிப்படைப் பகுதி யைத் தம் சேனையில் வைத்திருந்தார். ஆங்கிலேயர்கள், ஐரோப் பாவில் வந்து போரிட்ட போதெல்லாம் ஐரிஷ் படைகள் அவர் களுக்கு எதிராகப் பயன்படுத்தப்பட்டன.

## ஏனையோரின் அரசியல் குறைபாடுகள்

கத்தோலிகரேயன்றி ஏனைய ஐரிஷ் மக்களும் பலவித இன்னல் களுக்கு ஆளாயினர். அயர்லாந்தின் வடபகுதியான அல்ஸ்டர் மாகாணத்தில் வாழ்ந்த பிரெஸ்பிடீரியர்கள் சோதனைச் சட்டத் தின் காரணமாக அரசாங்கப்பதவிகளில் இடம் மறுக்கப்பட்டனர் அயர்லாந்தின் அரசாங்கம் பிரிட்டனுக்குப் பலவகையிலும் கட்டுப் பட்டுக் கிடந்தது. ஐரிஷ் பாராளுமன்றம் ஒன்றுவிட்ட ஆண்டு களில் மட்டுமே கூட்டப்பட்டது. எனினும் அவைகளுக்குச் சிறிதும் அதிகாரமில்லை. 1494ஆம் ஆண்டில் ஏற்பட்ட பாய் னிங்ஸ் சட்டப்படி (Poyning's law) பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சம்மதமின்றி எச் சட்டத்தையும் இயற்ற ஐரிஷ் பாரளுமன்றத் துக்கு உரிமை மறுக்கப்பட்டது. முதலாம் ஜார்ஜ் காலத்து ஏற்பட்ட அறிவிப்புச் சட்டப்படி (Declaratory Act) ஆங்கிலப் பாராளுமன்றமே அயர்லாந்துக்கும் சேர்த்து சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெற்றது. எனவே ஐரிஷ் சட்டங்கள் யாவும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குள் வந்தன. ஐரிஷ் பாராளுமன்றத்தில் ஊழல்கள் தலைவிரித்தாடின. அப்பாராளு மன்றம் ஐரிஷ் மக்களின் உண்மைப் பிரதிநிதியாக இல்லை. ஐரிஷ் பிரபுக்கள் சபையில் பிஷப்புகளே மிகவும் செல்வாக்குடன் விளங் கினர். ஐரிஷ் பொதுமக்கள் சபையில் மூன்றில் இரண்டு பகுதி யினர் நசித்துப்போன பரோக்களின் பிரதிநிதிகளாயிருந்தனர். அப் பரோக்களெல்லாம் ஆங்கிலேய நிலச்சுவான்தார்களின் கையில் இருந்தன. எனவே, அவ்வாங்கில நிலப் பிரபுக்களின் கையாட் கள் சட்டசபையில் பெரும்பான்மையினராய் இருந்தனர். ஐரிஷ் பாராளுமன்றத்துக்குக் கால வரையறையேதும் குறிப்பிட

வில்லை. பல ஆண்டுகளுக்கு ஒரே பாராளுமன்றம் நீடிப்பது அங்கு வழக்கமாகி விட்டது. 1727 ஆம் ஆண்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றமானது அடுத்த 33 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து பணியாற்றியது. இத்தீமையைப் போக்க மூன்ரும் ஜார்ஜ் காலத்தில் எட்டாண்டுச் சட்டம் (Octennial Act) கொணரப் பட்டது. அதன்படி பாராளுமன்றத்தின் பதவிக்காலம் எட்டாண்டுகள் என வரையறுக்கப்பட்டது.

ஐரிஷ் அரசானது ஒரு சில பிரிவிகவுன்ஸிலர்களின் கைகளில் இருந்தது. பிரிவிகவுன்ஸிலின் தலைவராக லெப்டனென்ட் பிரபு ஒருவரை ஆங்கில அரசாங்கம் நியமித்தது. பிரிவிகவுன்ஸிலர்களும் ஆங்கில அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்டு அன்னுருக்கே கட்டுப்பட்டு நடந்தனர். லெப்டனென்ட்பிரபு பெரும்பான்மையான நாள்களைப் பிரிட்டனிலேயே கழித்தார். சட்டசபை கூடும்போது மட்டும் அவர் ஒரோவழி அயர்லாந்துக்கு வந்து போவது வழக்கம். அவரில்லாத வேளையில் அயர்லாந்தை நீதிபதிப் பிரபுக்கள் (Lords-Justice) ஆண்டனர். அரசாங்கத்தின் அலுவலகங்கள் டப்ளின் (Dublin) நகரக் கோட்டையில் அமைந்திருந்தன. அதை ஐரிஷ் மக்கள் அந்நிய ஏகாதிபத்தியத்தின் சின்னமாக மதித்தனர். திருச்சபையிலும், அரசாங்கத்திலும் பதவிகள் எல்லாம் ஆட்சியாளர்களின் நண்பர்களுக்கே வழங்கப்பட்டன. எங்குப் பார்த்தாலும் ஊழல் மண்டிக்கிடந்தது.

பொருளாதார முட்டுப்பாடுகள்

பொருளாதாரத் துறையில் இங்கிலாந்து மெர்க்கண்டலிஸக் கொள்கையைக் கடைப்பிடித்தது. இங்கிலாந்தின் வியாபாரத்தைக் காக்கவேண்டி ஐரிஷ் வியாபார முன்னேற்றம் பலியிடப்பட்டது. அயர்லாந்தில் புல் வெளிகள் அதிகம். எனவே ஆடுமாடு வளர்க்கும் தொழில் அங்கு நன்கு வளர்ந்தது. ஆனுல் அவ்வாடு மாடுகளினின்றும் கிடைக்கப்பெற்ற பொருள்களை இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்ய அயர்லாந்தியர்க்கு உரிமை மறுக்கப்பட்டது. ஏனெனில் ஆங்கில விவசாயிகள் அதனுல் பெரிதும் பாதிக்கப்படலாம் எனப் பிரிட்டிஷ் அரசாங்கம் அஞ்சியது. ஐரிஷ் உரோமமானது ஐரோப்பாவுக்கோ மற்றக் குடியேற்ற நாடுகளுக்கோ அனுப்பப்படுவது தடுக்கப்பட்டது. அப்படி அனுப்பினுல் பிரிட்டனுக்குப் போட்டியாகக் கம்பளத் தொழில் வேற்று நாடுகளில் வளர்ந்துவிடக் கூடுமென ஆங்கிலேயர் பயந்தனர். லினன் துணி நெய்யுந்தொழிலை ஐரிஷ் மக்கள் வளர்க்க அனுமதிக்கப்பட்டனர். ஏனெனில் இங்கிலாந்தில் அத்தகைய தொழிலெதுவும் 17 ஆம் நூற்றுண்டில் ஏற்படவில்லை. ஆனுல் 1708 ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்தில் லினன்தொழில் ஏற்பட்டவுடன்

ஐரிஷ் லினன் தொழிலானது கட்டுப்படுத்தப்பட்டது. ஐரிஷ் விவசாயிகள் அதிகப்படியான குத்தகையாலும், வறுமையாலும் வாடினர். இங்கிலாந்தில் வேலையற்ற விவசாயிகள் நகர்ப்புறங்களுக்குச் சென்று தொழிற்சாலைகளில் வேலை பெற்றனர். ஆனால் வேலையில்லாத ஐரிஷ் ஏழைகள் போக்கிடமின்றி நிலங்களிலேயே உழைத்து மாண்டனர்.

## அயர்லாந்தியரின் எதிர்ப்பு

இங்ஙனம் பல நூற்றாண்டுகளாக அமுக்கி வைக்கப்பட்ட அயர்லாந்தியர் மூன்றாம் ஜார்ஜ் காலத்தில் சிறிதே விழிப்புற்றனர். ஹென்றி ஃபிலட் (Henry Flood) என்ற பிராடெஸ்டண்டு, தலைவர் தேசபக்தக் கட்சி என்று ஒரு கட்சியை அயர்லாந்தில் தோற்றுவித்தார். அயர்லாந்தியருக்கு மேலும் பல அரசியலுரிமைகள் வேண்டுமென அக் கட்சி கிளர்ச்சி செய்தது. மூன்றாம் ஜார்ஜூம் அவர்களது வேண்டுகோள்களுக்குச் சிறிதே செவி சாய்த்தார். 1768இல் ஏற்பட்ட எட்டாண்டுச் சட்டத்தால் பாராளுமன்றத்தின் ஆயுட்காலம் எட்டாண்டுக்ளாகக் குறைக்கப்பட்டது. பண மசோதாக்களை மட்டும் பிரிட்டஷாரின் தலையீடின்றி ஐரிஷ் பாராளுமன்றம் தானே நிறைவேற்றிக் கொள்ளவும் அனுமதிக்கப்பட்டது.

### கிராட்டன் என்னும் கிளர்ச்சித் தலைவர்

அமெரிக்கர்கள், பிரிட்டிஷாரை எதிர்த்து வெற்றிபெற்றதை கண்ட ஐரிஷ் மக்கள் தாங்களும் ஏன் அவ்விதம் செய்யக்கூடாதென எண்ணினர். ஹென்றி கிராட்டன் (Henry Gratton) என்ற மிதவாதப் பிராடெஸ்டண்டின் தலைமையில் அயர்லாந்தியர் ஒன்று திரண்டு தங்கள் உரிமைகளுக்காகப் பாடுபட முன்வந்தனர். கிராட்டன் என்பார் ஓர் உண்மையான தேசபக்தர். பிராடெஸ்டண்டுகளுக்கு மட்டுமன்றிக் கத்தோலிக்கர்களுக்கும் உரிமைகளை வாங்கித் தர அவர் பாடுபட்டார். கத்தோலிகர்மீது விதிக்கப்பட்டிருந்த தண்டனைச் சட்டங்களை ரத்து செய்யும்படி அவர் கோரினார். அவர் சொற்பொழிவாற்றுவதில் நிபுணர், மூத்த பிட்டுக்கு இணையான பெருங்குணங்கள் பொருந்தியவர். அவருடைய கிளர்ச்சியினால், நார்த்பிரபு கத்தோலிக்க நிலப்பிரபுக்கள் மீது விதிக்கப்பட்டிருந்த பல நிபந்தனைகளை ரத்து செய்தார்.

வியாபாரத் தடைகளையும் அவர் சிறிதே தளர்த்தினார். மற்ற ஐரோப்பிய நாடுகளோடும் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளோடும்

அயர்லாந்து வியாபாரம் செய்ய அனுமதிக்கப்பட்டது. ஆனால் இங்கிலாந்தோடு வியாபாரம் செய்வதில் இருந்த தடைகள் மட்டும் அப்படியேயிருந்தன. 1779இல் ஐரிஷ் இணங்காதார்களுக்கும் அரசியல் உத்தியோகங்கள் வழங்கப்படலாம் என்ற ஒரு சட்டம் இயற்றப்பட்டது.

அமெரிக்கச் சுதந்திரப் போர் மிகநெருக்கடியான கட்டத்தை அடைந்தபோது அயர்லாந்திலிருந்த பிரிட்டிஷ் படைகள் யாவும் அமெரிக்காவுக்குக் கொண்டு போகப்பட்டன. அப்போது பிரான்ஸும் பிரிட்டனுக்கு விரோதமாகப் போரிட்டு வந்ததால் எங்கு அவர்கள் அயர்லாந்தைக் கைப்பற்றி விடுவார்களோ என்ற பயத்தால் பிரிட்டிஷ் பிரதமரான நார்த் பிரபு ஒரு தொண்டர் படை (Volunteer Corps) அயர்லாந்தில் திரட்டப்படுவதற்கு அனுமதியளித்தார். சட்டப்படிக் கத்தோலிக்கர்கள் ஆயுதந்தாங்கக் கூடாதாகையால், பிராடெஸ்டண்டுகளே அத்தொண்டர் படையில் இடம் பெற்றனர். இங்ஙனம் 80,000 பிராடெஸ்டண்டுகள் அச்சேனையில் சேர்ந்தனர். அத் தொண்டர் படைக்குக் கிராட்டன் தளபதியானார். அவர் அதன் உதவியைக்கொண்டு அயர்லாந்தியரின் உரிமைகளுக்குப் பாடுபடலானார். வியாபாரத் துறையில் அயர்லாந்தின்மீது விதிக்கப்பட்டிருந்த கட்டுபாடுகளையெல்லாம் நீக்கும்படி கிராட்டன் முதலில் கிளர்ச்சி செய்தார். நார்த் பிரபு அதற்கு இணங்கிவிட்டார். அடுத்து, கிராட்டன், ஐரிஷ் பாராளுமன்றத்தின் சுதந்திரத்துக்காகப் போராடினார். 1782இல் அவரது தூண்டுதலால் பிரிட்டிஷ் கட்டுப் பாட்டினின்றும் தான் விடுதலை பெற்றுவிட்டதாக ஐரிஷ் பாராளுமன்றம் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. இதைக்கண்ட பிரிட்டிஷ் அரசாங்கம் வேறு வழியின்றிப் பாய்னிங்ஸ் சட்டத்தையும் முதலாம் ஜார்ஜ் சூலத்திய அறிவிப்புச் சட்டத்தையும் ரத்து செய்தது. அதன் மூலம் பாராளுமன்றம் யாதொரு கட்டுபாடுமின்றித் தானே சட்டம் செய்யும் உரிமை பெற்றது. சட்டம் செய்யும் உரிமையைப் பெற்றும் அயர்லாந்தியர் திருப்தி அடையவில்லை, ஏனெனில் சட்டசபை உறுப்பினர்கள் யாவரும் ஆங்கில நிலச்சுவான்தார்களின் கைப்பாவைகளாயிருந்தனர், ஐரிஷ் பிரிவுகவுன்சில் உறுப்பினர்களும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கையாட்களாயிருந்தனர். ஐரிஷ் பாராளுமன்றத்தில் கத்தோலிக்கர்களுக்கு இடமே இல்லை. இப் புன்மைகளை எல்லாம் நீக்க கிராட்டன் விழைந்தார். 1785இல் பிட் எனும் பேரமைச்சர் தடையிலா வாணிகத்தை அயர்லாந்துக்கும் இங்கிலாந்துக்குமிடையே ஏற்படுத்த முயன்று தோல்வியுற்றார்.

உல்ஃப்டோன் எனும் கிளர்ச்சித் தலைவர்

பிரெஞ்சுப் புரட்சியானது மக்களின் கிளர்ச்சிக்கு ஊக்க மளித்தது. பூரண குடியாட்சியை நிறுவக் கங்கணங் கட்டிக் கொண்ட பல அயர் மக்கள் 'ஒன்றுபட்ட அயர்லாந்திய சங்கம்' (Society of United Irishmen) என்று ஒரு சங்கத்தைத் தோற்று வித்தனர். அதன் தலைவராக விளங்கியவர் உல்ஃப்டோன் (Wolftone) என்பார், அவர் வகுப்பு, மத வேறுபாடின்றி அனை வரும் சேர்ந்து பாராளுமன்றச் சீர்திருத்தத்துக்காகவும், கத்தோலிக விடுதலைக்காகவும் பாடுபடவேண்டுமெனக் கூறினர். இறுதியில் அயர்லாந்து இங்கிலாந்தின் ஆதிக்கத்தினின்றும் பூரணமாக விடுதலைப் பெற வேண்டுமெனவும் அவர் கோரினர். அவருக்கு நாட்டின் பல பாகங்களிலும் நல்ல ஆதரவு கிடைத் தது. பிட் எனும் பேரமைச்சர் அயர்லாந்தியரின் சுதந்திர தாகத்தைத் தணிக்க எண்ணி 1793 ஆம் ஆண்டு கத்தோலிகர் களுக்குத் தேர்தலில் வாக்குரிமையளிக்கும் சட்டமொன்றை ஐரிஷ் பாராளுமன்றத்தில் நிறைவேறச் செய்தார். இதனுல் ஐரிஷ் கத்தோலித்கர் திருப்தியடைந்து விடவில்லை பாராளுமன் றத்தில் அமரும் உரிமையும் தங்களுக்கு வேண்டுமென அவர்கள் கூக்குரலிட்டனர். 1794 இல் ஃபிட்ஸ் வில்லியம் (Fitz William) என்ற கத்தோலிக்கரைப் பிட் அயர்லாந்தின் லெப்டனெண்ட் பிரபுவாக்கினர். ஐரிஷ் கத்தோலிக்கர் தங்கள் குறைகளை யெல்லாம் பூரணமாக நீக்குவதற்காகவே ஒரு கத்தோலிக்க கவர்னர் நியமிக்கப்பட்டிருக்கிருரென நினைத்து உள்ளங் குளிர்ந் தனர். கத்தோலிக்கர்களுக்கு விடுதலையளிக்கும் மசோதா ஒன்று ஐரிஷ் பாராளுமன்றத்தில் கொணரும்படி அவர்கள் ஃபிட்ஸ் வில்லியத்தை நெருங்கினர். இதையறிந்து பிட், அவரை இங்கி லாந்துக்கே திருப்பி வரவழைத்துக்கொண்டார். பிட்டின் இச் செயலானது அயர்லாந்தியருக்குத் தாங்கொணு ஆத்திரத்தை மூட்டிற்று ஆசைகாட்டிமோசம் செய்து விட்டதாக அவர்கள் பிட்டை ஏசினர். பிரிட்டிஷ் அரசாங்கத்தின்மீது கொஞ்ச நஞ்சமிருந்த நம்பிக்கையும் ஐரிஷ் மக்களின் மனங்களினின்று மறைந்தது. அவர்கள் புரட்சிக்குத் தயாராயினர்.

1798 ஆம் ஆண்டுக் கலகம்

ஒன்றுபட்ட அயர்லாந்தியர்கட்சி நாளுக்குநாள் பலவீன மடைந்தது, கிராட்டன், பிரெஞ்சுக்காரர்களின் உதவியை நாடி ஞர். பிரெஞ்சு அரசாங்கமும், ஹாச் எனும் தளகர்த்தரின் தலைமையின் கீழ் 15,000 வீரர்களடங்கிய ஒரு படையை அயர்லாந் தின் உதவிக்கு அனுப்பியது. ஆனல் பிரிட்டனின் நற்காலமாகப் புயல் ஒன்று கிளம்பி அப்படை அயர்லாந்துக்கு வர முடியாமல்

செய்துவிட்டது. இதன்பின் பிரிட்டிஷ் அரசாங்கம் கலகக்காரர் மீது மிகக் கடுமையான நடவடிக்கைகளை எடுத்தது.

உல்ஃப்டோன் என்பார் கத்தோலிக்கரை ஆதரித்ததால் அவருடைய படையில் பிராடெஸ்டண்டுகள் சேர மறுத்தனர். ஒன்றுபட்ட அயர்லாந்தியர் சங்கத்தில் வெறும் கத்தோலிக்கர்களே இருந்தனர். இக் கத்தோலிக்கருக்கும், பிராடெஸ்டண்டுகளுக்கும் நாடெங்கும் கைகலப்புகள் ஏற்பட்டன. பிராடெஸ்டண்டுகள் அரசாங்கத்தை ஆதரித்தனர். அல்ஸ்டரின் ஆரஞ்சு விடுதியின் (Orange Lodges) என்று பிரெஸ்பிடீரிய சங்கங்கள் கத்தோலிக்கருக்கு எதிராகத்தோன்றின. ஆரஞ்சு வீரர்களுக்கும் கத்தோலிக்கருக்கும் ஓர் உள்நாட்டுப் போர் கிளம்பியது. பிராடெஸ்டண்டு சிறு நிலக்கிழார்கள் கத்தோலிக்கரை வீடுவீடாகப் புகுந்து அடித்துத் துன்புறுத்தினர். அவர்களது அட்டகாசங்களைச் சகிக்க முடியாமல் ஐரிஷ் கத்தோலிக்கர் 1798 ஆம் ஆண்டில் ஒரு பெருங்கலகத்திலிறங்கினர். நிலைமை முற்றுமுன் ஆங்கில அரசாங்கம் கலகத் தலைவர்களைக் கைது செய்துவிட்டது. எனவே கலகக்காரர்கள் ஒரு திட்டமின்றி அங்கு மிங்கும் கிளர்ச்சியிலீடுபட்டனர். ஜெனரல் லேக் (General Lake) எனும் பிரிட்டிஷ் தளபதி ஐரிஷ் கலக்காரர்களை வினிகர்குன்று (Vinegar Hill) என்னுமிடத்தில் தோற்கடித்தார் (1798). ஏனைய இடங்களில் கத்தோலிக்கக் குருமார்களால் நடத்தப்பட்ட கிளர்ச்சிகள் எளிதில் அடக்கப்பட்டன. கலகக்காரர்களுக்கு உதவி செய்ய வந்த ஆயிரம் பிரெஞ்சு வீரர்களை லேக் எளிதில் தோற்கடித்துத் துரத்தி விட்டார். இன்னொரு பிரெஞ்சுப் படையானது கடலிலேயே தோற்கடிக்கப்பட்டது. அப்படையினரின் கப்பலொன்றிலிருந்து உல்ஃபோன் கைது செய்யப்பட்டார். அவர் சிறையில் தள்ளப்பட்டு மரணதண்டனை விதிக்கப்பட்டார். ஆனால் அத்தண்டனை நிறைவேற்றுமுன் அவர் சிறையிலேயே தற்கொலை புரிந்துகொண்டார். ஏனைய கலகத் தலைவர்கள் மிகவும் கடுமையான தண்டனைகளுக்காளாயினர்.

## ஐக்கியச் சட்டம் (1800)

அயர்லாந்து மீண்டும் இங்கிலாந்துக்கு அடிபணிந்தது. அயர்லாந்தின் பிரச்சினையைத் தீர்க்க வேண்டுமானால் ஐரிஷ் கத்தோலிக்கர்களுக்குப் பூரண அரசியல் உரிமைகள் தரப்பட்டாலொழிய முடியாதென்பதைப் பிட் உணர்ந்தார். ஆனால் அவ்விதம் செய்வதானது பிராடெஸ்டண்டுச் சிறுபான்மையினருக்கு அபாயமாக முடியுமென்றும் பிட் எண்ணினார். எனவே, அவர் இங்கிலாந்து, அயர்லாந்துப் பாராளுமன்றங்களை இணைத்து விடுவதாலேயே

அயர் பிரச்சினையைத் தீர்க்க முடியுமென அறிந்தார். ஐரிஷ் பாராளுமன்றம் தனித்திருந்தால் அதில் கத்தோலிக்கர்களே பெரும்பான்மையினராயிருப்பர். ஆனால், இங்கிலாந்தின் பாராளுமன்றத்தோடு சேர்ந்தால் அவர்கள் சிறுபான்மையின ராகி விடுவர். இம்முறையில் கத்தோலிக்கரின் உரிமை வேட்கை யையும் தீர்த்தால் போலிருக்கும், அதே சமயம் சிறுபான்மையின ரான பிராடெஸ்டண்டுகளின் நலனும் காக்கப்படும். இங்ஙனம் இரண்டு மாங்காய்களை ஒரே கல்லில் வீழ்த்தலாம் எனப் பிட் நினைத்து ஓர் ஐக்கியச் சட்டத்தை அவர் முதலில் ஐரிஷ் பாராளு மன்றத்தில் கொணர்ந்தார். அச் சட்டத்தை எதிர்த்தவர்களை யெல்லாம் பணமும், பட்டமும் பதவியும் கொடுத்துப் பிட் வாயடக்கிவிட்டு வெற்றிகரமாக அதை அங்கு நிறைவேற்றினர், 1800 ஆம் ஆண்டில் அது இரண்டு பாராளுமன்றங்களிலும் நிறைவேறியது.

ஐக்கியச் சட்டப்படி இங்கிலாந்தும் அயர்லாந்தும் ஒரே நாடென அறிவிக்கப்பட்டது. இரண்டுக்கும் ஒரே அரசர், ஒரே பாராளுமன்றம், ஒரே சேனை, ஒரே கொடி என ஏற்பட்டது. 28 ஐரிஷ் பிரபுக்கள் பிரிட்டனின் பிரபுக்கள் சபையில் இடம் பெற்ற னர். ஐரிஷ் திருச்சபையின் தலைவரான ஆர்ச் பிஷப்பும் மூன்று பிஷப்புக்களும் ஆண்டுக்கொருவராக மாறிமாறி அதில் நியமனம் பெற வேண்டுமெனவும் திட்டப்படுத்தப்பட்டது. பொதுமக்கள் சபையில் நூறு ஐரிஷ் பிரதிநிதிகள் இடம் பெற்றனர். இருநாடு களிக்குமிடையே தடையிலா வாணிகம் ஏற்பட்டது. இருநாடு களின் திருச்சபைகளும் ஒன்றுபட்டன. ஐக்கிய இராஜ்யத்தின் (United Kingdom) வருமானத்தில் பதினேழில் இரண்டு பங்கை அயர்லாந்தும், பதினேழில் பதினைந்து பங்கை இங்கிலாந்தும் கொடுக்கவேண்டும் எனவும் அதே விகிதத்தில் கடன்களும் பிரிக் கப்படவேண்டுமெனவும் அச்சட்டம் கூறியது.

இதன்பின் பிட், ஐரிஷ் ரோமன் கத்தோலிக்கர்களுக்கு அரசி யல் மதத்துறைகளில் விடுதலையளிக்க ஒரு தீர்மானம் கொணர்ந் தார். அதை ஜார்ஜ் மன்னர் முழுமனதோடு எதிர்த்தார். அதை ஒப்புக்கொண்டால் தாம் முடியேற்றுக்கொண்டபோது எடுத்துக் கொண்ட பதவிப் பிரமாணத்துக்கே அது கேடு சூழ்வதாகு மெனக் கூறி அவர் பிட்டின் தீர்மானத்தை ஒப்புக்கொள்ள மறுத்து விட்டார். பின் தமது கௌரவத்தைக் காக்க வேண்டித் தம் பதவியைப் பிட் ராஜிநாமாச் செய்தார்.

இவ் ஐக்கியச் சட்டத்தில் அயர்லாந்தியருக்கு ஒன்றும் திருப்தி ஏற்படவில்லை. ஏனெனில் கத்தோலிக்கர்களுக்கு இதனால்

ஒன்றும் விமோசனம் கிட்டவில்லை. டப்ளின் கோட்டை அரசாங்கம் சீர்த்திருத்தப்படவில்லை. பிரிட்டிஷாருக்குக் கட்டுப்பட்ட அதிகாரிகளே அயர்லாந்தை ஆண்டனர். தடையற்ற வியாபாரத்தால் அயர்லாந்தியருக்குத் தீமையேயன்றி நன்மையெதுவும் ஏற்படவில்லை, தொழிற் புரட்சியின் காரணமாக இங்கிலாந்தில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை எளிய விலைக்கு விற்று ஆங்கிலேய வியாபாரிகள் பணம் திரட்ட, ஐரிஷ் கைத்தொழில்கள் பிரிட்டிஷ் பெருந்தொழிலதிபர்களோடு போட்டிபோட முடியாமல் நசிந்தன. மற்றும் ஐக்கியச் சட்டத்தால் நிலப் பிரச்சினையானது அயர்லாந்தில் தீர்க்கப்படவில்லை. எனவே அயர்லாந்தியர் ஐக்கியச் சட்டத்தை ஆரம்பத்திலிருந்தே வெறுக்க ஆரம்பித்தனர். சில ஆண்டுகள் கழித்து அவர்கள் மீண்டும் கிளர்ச்சியிலிறங்கினர்.

# 13. மூன்றாம் ஜார்ஜ் காலத்திய ஆங்கிலப் பேரரசு

இந்தியா : மூன்று கர்நாடகப் போர்கள் — கிளைவும் டியூப்ளேயும் — வங்காள வெற்றி — கிளைவின் சேவைகள் — வாரன் ஹேஸ்டிங்ஸ் — ஒழுங்கு முறைச் சட்டம் Regulating Act—பிட் இந்தியச் சட்டம் Pitt's India Act-காரன் வாலிஸும் வெல்ஸ்லியும் — நிலையான நிலவரி ஏற்பாடு Permanent Revenue Settlement—படைத்துணை உடன்படிக்கை முறை Subsidiary Alliance System.

கனடா : குவிபெக் சட்டம் Quebec Act (1774) — கனடாச் சட்டம் — CanadaAct (1791) — அமெரிக்கப் போர் (1812)

ஆஸ்திரேலியா — கேப்டன் குக் — பாடனிகுடா

உலக வரலாற்றில் தற்செயலாக நிகழ்ந்துவிட்ட அரும் பெருஞ் செயல்களுள் பிரிட்டிஷ் பேரரசின் வளர்ச்சியும் ஒன்றாகும். கதிரவன் மறையாத பான்மைபெற்ற' அகன்ற பிரிட்டிஷ்பேரரசு ஆங்கில மக்கள் திட்டம் போட்டுக் கட்டியதோர் கட்டடமன்று. வியாபாரத்திற்காகவும் வேறு காரணங்களுக்காகவும் வேற்று நாடுகளுக்குச் சென்ற பிரிட்டிஷ் மக்கள் அங்கு நிலவிய சூழ் நிலைகள் காரணமாக நாளடைவில் வியாபாரத் துறையில் மட்டு மின்றி அரசியல் துறையிலும் முன்னேறி நாடுகளைக் கைப்பற்ற லாயினர்.

இந்தியா

நாம் மேலே சொன்னபடி ஆங்கிலேயர் இந்தியாவுக்குள் முதன் முதலாக நுழைந்தபோது நாடுபிடிக்கும் ஆசையைக் கன விலும் கொள்ளாத சாதாரண வியாபாரிகளாகவே இருந்தனர். எலிஸபெத் இராணியார் காலத்தில் ஏற்பட்ட கிழக்கிந்தியக் கம்பெனி வெறும்வியாபார நோக்கத்துடனேயே இந்தியாவுக்குள் நுழைந்தது. சூரத்தில் முதன்முதல் 1612ஆம் ஆண்டில் அக்

கம்பெனி ஒரு வியாபாரக்கிடங்கை ஏற்படுத்தியது. அதன்பின் மதருஸ் (1639) பம்பாய் (1668), கல்கத்தா (1696), என்ற மூன்று முக்கிய இடங்களில் அக்கம்பெனி வியாபாரக் கிடங்குகளை ஏற்படுத்திக்கொண்டது. பிரிட்டிஷ் கம்பெனியைப்போல் பிரான்ஸிலும் ஒரு கிழக்கிந்தியக் கம்பெனி பதினான்காம் லூயியின் காலத்தில் கால்பர்ட் (Colbert) என்ற மந்திரியார் தோற்றுவித்தார். அதுவும் இந்தியாவில் பாண்டிச்சேரி, மாஹி, சந்திரநாகூர் போன்ற இடங்களில் வியாபாரக் கிடங்குகளை பிரெஞ்சுக்காரர் ஏற்படுத்திக் கொண்டனர்.

இங்ஙனம் வியாபாரிகளாய் வந்த ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும், நாளடைவில் நாடு பிடிக்கும் கலையில் கைதேர்ந்தவர்களாயினர், அதற்குக் காரணம் இந்தியாவில் அப்போது நிலவிய சூழ்நிலையேயாகும். அவுரங்கசீப் என்ற மொகலாயப் பேரரசர் 1,707 ஆம் ஆண்டுல் இறந்தார். அதன்பின் மொகலாயப் பேரரசு சீர்குலைந்தது. தடிஎடுத்தவன் தண்டல்காரன் என்றபடி மொகலாயச் சிற்றரசர்கள் சுயேச்சைநிலை பெற்றனர். தெற்கே ஹைதரபாத்தில் நைஜாமும், ஆற்காட்டில் நவாப்பும், வடக்கே அவுத், வங்காளம் முதலிய இடங்களில் ஆண்ட நவாப்புகளும், வடமேற்கே ஆப்கானியர்களும், மத்திய இந்தியாவிலும், மேற்கிலும் மராட்டியர்களும் சுயேச்சை பெற்றுத் தத்தம் பிரியம் போல ஆண்டனர். மற்றும் அவர்களுக்குள் ஓயாத போராட்டம் நடைப்பெற்று வந்தது. மராட்டியர்கள் பிறநாடுகளைக் கொள்ளையடிப்பதையே தொழிலாகக் கொண்டிருந்தனர். இந்த அபாயமான சூழ்நிலையினின்றும் தங்களைக் காத்துக்கொள்ள பிரிட்டிஷாரும் பிரெஞ்சுக்காரும் ஆங்காங்கே கோட்டைகளைக் கட்டிக் கொண்டு அவற்றில் வீரர்களையும் வைத்துக் கொண்டனர்.

மூன்று கர்நாடகப் போர்கள்-கிளைவும் டியூப்ளேயும்

ஐரோப்பாவில் எவ்வெப்போது பிரெஞ்சுக்காரர்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் போர் ஏற்பட்டதோ அப்போதெல்லாம் இந்தியாவிலும் மற்ற ஐரோப்பிய நாடுகளிலும் போர் ஏற்படுவது வழக்கமாக இருந்தது. அதன்படி ஆஸ்திரிய வாரிசுரிமைப் போரானது ஐரோப்பாவில் ஏற்பட்டபோது, இந்தியாவில் அப்போது பிரெஞ்சுக் கவர்னராயிருந்த டியூப்ளே (Dupleix) ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமான மதராஸைத் தாக்கிப் பிடித்தார் (1746), ஆனால், எய்க்ஸ்லா சாபெல்லே (Aixla Chapalle) உடன்படிக்கையின்படி அது பிரிட்டிஷாருக்கே திருப்பிக் கொடுக்கப்பட்டு விட்டது. அதன்பின் டியூப்ளே சுதேச மன்னர்களுக்குள் நடைபெற்ற பூசல்களில் கலந்து கொண்டார். உடனே ஆங்கிலேயரும்

அதில் கலந்துகொள்ள ஆரம்பித்தனர். பட்டத்துக்காகப் போட்டியிட்டவர்களில் வெவ்வேறு கட்சியினரை இருவரும் ஆதரிக்கலாயினர். நைஜாம் பதவிக்குப் போட்டியிட்டவர்களுள் முஜாபர்ஜங்கைப் பிரெஞ்சுக்காரரும், நாஜர்ஜங்கை ஆங்கிலேயரும் ஆதரித்தனர். அதேபோன்று ஆற்காடு நவாப் பதவிக்குப் போட்டியிட்டவர்களில் சந்தாசாகிபைப் பிரெஞ்சுக்காரரும் மகமதலியைப் பிரிட்டிஷாரும் ஆதரித்தனர். அச்சமயத்தில்தான் பிரிட்டிஷார் தரப்பில் ராபர்ட்கிளைவ் (Robert Clive) என்ற பெருவீரர் தோன்றினர். அவர்தமது புகழ் பெற்ற ஆற்காடு முற்றுகையால் (1751) பிரிட்டிஷாரின் கௌரவத்தை உயர்த்தினர். சந்தாசாகிபும் பிரெஞ்சுக்காரரும் திருச்சிஞப்பள்ளியிலிருந்து ஓடோடியும் வந்து ஆற்காட்டை மீட்கமுயன்றனர். ஆனல் கிளைவ் அதை 50 நாள்கள் வெற்றிகரமாகக் காத்தார். மேஜர் லாரன்ஸ் (Major Lawrence) எனும் தளகர்த்தர் கிளைவின் உதவிகொண்டு பிரஞ்சுப் படைகளைத் திருச்சிஞப்பள்ளி அருகே தோற்கடித்தார் (1752). டியூப்ளேயின் திட்டங்களெல்லாம் ஆங்கிலேயரின் தலையீட்டால் இவ்விதம் பாழாயின. எனினும் அவர் ஹைதராபாத்திலிருந்து தமது படையைக் கொண்டு வந்து மீண்டும் பிரெஞ்சுக்காரரின் ஆதிக்கத்தைத் தென்னுட்டில் நிலைநாட்ட எண்ணினர். ஆனல், அதற்குள் பிரெஞ்சு அரசாங்கம் அவரைத்திருப்பி அழைத்துக் கொண்டது. அவருக்குப்பின் சிறிது காலம் ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் அமைதியாய் இருந்தனர். அதற்குள் ஐரோப்பாவில் ஏழாண்டுப் போர் ஏற்படவே அதன் பிரதிபலிப்பாக இந்தியாவிலும் போர் ஏற்பட்டது. லாலி (Lalley) என்ற பிரஞ்சுத் தளகர்த்தர், மதராஸை முற்றுகையிட்டார் (1758). ஆனல் ஆங்கிலக்கப்பற்படை ஒன்று மதராஸின் அருகே தோன்றியதைக் கண்ட லாலி அம்முற்றுகையைக் கைவிட்டார். அவர் தமது சகாக்களோடு அடிக்கடி சச்சரவிட்டுக்கொண்டார். டியூப்ளேயைப் போன்று அவர் இராஜதந்திரியல்லர். அவரைப் போல் இந்திய சிப்பாய்களைப் பயன்படுத்திக் கொள்ளவும் அவர் விரும்பவில்லை. எனவே அவர் வந்தவாசி எனுமிடத்தில் ஆங்கிலப் படைத் தலைவரான சர் அயர்கூட் (Sir Eyre Coote) என்பவரால் தோற்கடிக்கப்பட்டார் (1760). லாலி புதுச்சேரிக்குப் பின் வாங்கினர். ஆங்கிலேயர் நிலத்தின் வழியேயும், கடலின் மூலமாகவும் புதுச்சேரியைத் தாக்கிப் பிடித்தனர் (1761). பாரீஸ் உடன்படிக்கையின்படி புதுச்சேரியும், மற்றப் பிரெஞ்சுப் பட்டணங்களும் பிரெஞ்சுக்காரருக்கே திருப்பிக்கொடுக்கப்பட்டன. ஆனல் இந்தியாவில் பிரெஞ்சுக்காரர் படைகள் வைத்துக்கொள்ள கூடாதென அச்சமாதான உடன்படிக்கை கூறியது. எனவே, இந்தியாவில் பிரெஞ்சுக்காரரின் அரசியல் செல்வாக்குக்குமேலே விவு

ரிக்கப்பட்ட மூன்று கர்நாடக யுத்தங்களும் (Carnatic Wars) ஒரு முற்றுப் புள்ளி வைத்தன.

வங்காள வெற்றி கிளைவின் சேவைகள்

வங்காளத்தில் நவாபாயிருந்த சிராஜ் உத்தௌலா ஆங்கிலேயர் மீது பகைமை கொண்டு அவர்களது வியாபாரக் கிடங்கான கல்கத்தாவைத் தாக்கிக் கைப்பற்றினுர் (1756). சிறைப் பிடிக்கப்பட்ட ஆங்கிலேயர்களைச் சற்றுக் கடுமையாக அவர் நடத்தினுர். எனவே அவரது செய்கைகள் ஒரு சில ஆங்கிலேயரால் மிகைப்படுத்திக் கூறப்பட்டன. சான்ருக, ஹால்வெல் (Holwell) என்னும் புளுகர், சிராஜ் உத்தௌலா ஒரு சிறிய அறையில் 146 ஆங்கிலேயர்களை வைத்துப்பூட்டி விட்டதாகவும், அதனுல் 23 பேர்களைத் தவிர மற்றையோர் அனைவரும் புழுக்கத்தால் மாண்டனர் என்றும் ஒரு கதை கட்டிவிட்டார். அதை உண்மை என நம்பிய பலரும் அந் நிகழ்ச்சிக்கு 'கல்கத்தா இருட்டறைத் துயர நிகழ்ச்சி' (Blackhole Tragedy) எனப் பெயர் கொடுத்தனர். இந் நிகழ்ச்சி பொய் என்ருலும் சிராஜ், ஆங்கிலேயரைச் சிறிது கடுமையாக நடத்ினுர் என்பது உண்மை. எனவே, அவர் மீது வஞ்சந் தீர்க்கக் கிளைவ், சென்னையிலிருந்து வங்காளத்துக்கு அனுப்பப்பட்டார். அவர், வங்காள நவாபைத் தோற்கடித்துக் கல்கத்தாவை மீட்டார். நவாப் தம் செய்கைக்கு வருத்தம் தெரிவித்து நஷ்ட ஈடாக ஒரு தொகையையும் ஆங்கிலேயருக்குக் கொடுத்தார். எனினும் அவருக்கு விரோதமாகக் கிளைவ், மீர்ஜாபர் என்பவரோடு சேர்ந்து கொண்டு சதி புரிந்தார். இதையறிந்த சிராஜ், ஆங்கிலேயர் மீது போர் தொடுத்தார். பிளாஸி என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் (1757) நவாபின் படைகள் சின்னுபின்னமாகச் சிதறடிக்கப்பட்டன. மீர்ஜாபர் எனும் நவாபின் தளபதி போர்க்களத்தில் வாளாவிருந்ததே சிராஜின் தோல்விக்குக் காரணம். அதன்பின் மீர்ஜாபர் வங்காள நவாப்பாக்கப்பட்டார். நன்றி உணர்ச்சி காரணமாக மீர்ஜாபர் ஏராளமான பணத்தைக் கிளைவுக்கும், அவரது நண்பர்களுக்கும் வாரி இறைத்தார். இதற்கிடையில் பிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமான சந்திரநாகூரையும், டச்சுக்காரருக்குச் சொந்தமான சின்சுராவையும் ஆங்கிலேயர் கைப்பற்றினர். கிளைவ் 1760 இல் இங்கிலாந்து திரும்பினுர்.

கிளைவ், இந்தியாவில் இல்லாத வேளையில் ஆங்கிலக் கம்பெனியார் வங்காளத்தில் தான்தோன்றித்தனமாய் நடந்து கொண்டனர். தங்களுக்குச் சாதகமான சட்டங்களையே இயற்றும்படி நவாபை அவர்கள் கட்டாயப்படுத்தினர். அவர்களது பேராசையைத் தணிக்க இயலாது மீர்ஜாபர் திணறினுர். எனவே

ஆங்கிலேயர் அவரை நீக்கிவிட்டு மீர்காஸிம் என்பவரை வங்காள நவாபாக்கினர். மீர்காஸிம் சற்று சுதந்திர மனப்பான்மை உள்ளவர். ஆங்கிலேயருக்கு அளிக்கப்பட்டு வந்த வியாபாரத் தனி உரிமைகளை அவர் ரத்துச் செய்ய விரும்பினர். அதை ஆங்கிலேயர் மறுத்ததால் அவர் அவ்வுரிமைகளை மற்றைய ஐரோப்பிய வியாபாரிகளுக்கும் வழங்கினர். அதனல் பிரிட்டிஷார் சினமுற்று மீர்காஸிமைப் பதவியிலிருந்து நீக்கினர். உடனே அவர் அவுத் நவாபோடும், மொகலாயப் பேரரசரோடும் சேர்ந்து கொண்டு ஆங்கிலேயரை எதிர்த்தார். ஆனல், பக்ஸார் (Buxar) எனுமிடத்தில் அம் மூவருடைய படைகளும், கட்டுப்பாடும் ஒழுங்கும் கொண்ட ஆங்கிலேயரின் சிறிய படையால் தோற்கடிக்கப்பட்டன *(1764)*.

*1765* இல் கிளைவ், இந்தியா திரும்பினர். மொகலாயப் பேரரசரோடு அவர் அலஹாபாத் உடன்படிக்கையைச் செய்து கொண்டார் *(1765)*. அதன்படி அவர் வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா மாகாணங்களிலிருந்து வரி வசூலித்துக் கொள்ளும் உரிமையை அதாவது திவானி உரிமையைப் (Diwani Right) பெற்ருர். அதனல் வரும் வருமானத்தில் பாதியை ஆங்கிலேயரும், பாதியை வங்காள நவாபும், பேரரசரும் பிரித்துக் கொள்வதென ஏற்பாடாயிற்று. வங்காள நவாபிடமிருந்து மேற்சொன்ன மாகாணங்களில் அமைதி காத்து நீதி பரிபாலனம் செய்யுமுரிமையான நைஜாமத் உரிமையையும் கிளைவ் பெற்ருர். இவ்வுரிமைகளால் வங்காளத்தின் இராணுவமும், பொருள்வளமும் ஆங்கிலேயரின் கட்டுப்பாட்டுக்குள் வந்தன. ஆனல், வரி தண்டல் வழக்குகளைத் தீர்த்தல் போன்ற காரியங்களுக்கு இந்தியர்களையே கிளைவ் பயன்படுத்திக் கொண்டார். இவ்விதம் அதிகாரம் ஆங்கிலக் கம்பெனியார் கையிலும் பொறுப்பு இந்தியர்கள் கையிலுமிருந்த ஒருவகை இரட்டை ஆட்சி (Dual Government) வங்காளத்தில் நடைபெற்றது. இதனல் பல ஊழல்கள் மலிந்தன. வரி வசூல் செய்த இந்தியர்கள் தங்கள் மனம் போனபடி குடியானவர்களைச் சுரண்டினர். கிழக்கிந்தியக் கம்பெனியின் ஊழல்களைக் களைய கிளைவ் பெரிதும் பாடுபட்டார். கம்பெனி வியாபாரிகள் தனிப்பட்ட வியாபாரம் செய்வதை அவர் தடுத்தார். இராணுவத்தினர் அமைதிக்காலத்தில் இரட்டைப்படி வாங்குவதை அவர் நிறுத்தினர். இன்னபல சீர்திருத்தங்களால் கோபமுற்ற அவரது எதிரிகள் அவர் இங்கிலாந்து திரும்பிய போது அவர்மீது அரசியல் துரோகக் குற்றம் சாட்டினர். அவர் மீது சுமத்தப்பட்ட பழிகளை விசாரிக்க ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. அது அவர்மீது சாட்டப்பட்ட குற்றங்கள் யாவும்

கற்பிதமானவை எனக் கூறியதோடு, நாட்டுக்கு நல்ல பல சேவைகளைச் செய்தற்காகக் கிளைவைப் பாராட்டியது. எனினும் கிளைவின் புகழுக்கு ஏற்பட்டுவிட்ட மாசைத் துடைக்க யாராலும் முடியவில்லை. எனவே அவர் மனமுடைந்து தற்கொலை செய்து கொண்டார் (1774).

வாரன்ஹேஸ்டிங்ஸ் (Warren Hastings)

1772இல் வாரன்ஹேஸ்டிங்ஸ் வங்காள கவர்னராக்கப் பட்டார். அவர் காலத்தில் பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனிக்குப் பெரிய பணவறட்சி ஏற்பட்டது. வங்காளத்தில் அப்போது ஏற்பட்ட பஞ்சம் அவ்வறட்சியை இன்னும் கடுமையாக்கி விட்டது. எனவே கம்பெனியானது தனக்குப் பணவுதவி செய்யும்படி ஆங்கில அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டது. நார்த் பிரபு எனும் அப்போதைய பிரிட்டிஷ் பிரதமர் பணஉதவி செய்ய ஒப்புக்கொண்டதோடு ஆங்கிலக் கம்பெனியின்மீது பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டையும் ஏற்படுத்தினார். ஒழுங்கு முறைச் சட்டமானது (Regulating Act) 1773இல் பாராளுமன்றத்தில் நிறைவேறியது, அதன்படி இந்தியாவின் ஆட்சி முறை ஒழுங்குபடுத்தப்பட்டது. இந்தியாவை ஆள்பவர் கவர்னர் ஜெனரெலென அழைக்கப்பட்டார். அவருக்கு நிருவாகக் காரியங்களில் ஆலோசனைகூற நால்வரடங்கிய ஒரு கவுன்ஸில் ஏற்படுத்தப்பட்டது. இச்சட்டம் பல குறைபாடுகளைக் கொண்டிருந்தது. கவர்னர்ஜெனரல் பெரும்பான்மைக் கவன்ஸிலர்களின் விருப்பத்துக்குக் கட்டுப்பட வேண்டியிருந்ததால் அவர் உருப்படியாக எதையும் செய்ய முடியவில்லை. கவுன்ஸிலில் மூவர், வாரன் ஹேஸ்டிங்ஸின் எதிரிகளானதால் அவர்கள் ஒன்று சேர்ந்து கொண்டு அவரது நடவடிக்கைகளுக்கெல்லாம் முட்டுக்கட்டை போட்டனர். மற்றும் பம்பாய், மதராஸ் மாநிலங்கள் மீது கவர்னர் ஜெனரலுக்கிருந்த அதிகாரம் என்னவென்பது சரிவர வரையறுக்கப்படவில்லை. அவசர காலங்களில் அவை நேரடியாகப் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அனுமதி பெற்றுக் காரியங்கள் செய்வதை இச் சட்டம் அனுமதித்தது. இதனால் பல சங்கடங்கள் நேர்ந்தன. மேலும் தலைமை நீதிமன்றமொன்று கல்கத்தாவில் ஏற்படுத்தப்பட்டது அதன் அதிகாரமும், கவுன்ஸிலின் அதிகாரமும் நன்கு வரையறுக்கப்படவில்லை.

பிட் பிரதமராக ஆனபோது ஒழுங்குமுறைச் சட்டத்தின் குறைபாடுகளை நீக்கிப் பிட் இந்தியச் சட்டத்தை 1784 ஆம் ஆண்டில் கொணர்ந்தார். அதன்படிக் கவர்னர் ஜெனரலின் அதிகாரங்கள் அதிகமாயின. கவுன்ஸில் உறுப்பினர்களின் தொகை மூன்றாகக் குறைந்தது. அதோடு அவர்களது தீர்மானங்களை நிராகரித்துக்

காரியங்கள் செய்யுமுரிமையைக் கவர்னர்ஜெனரல் பெற்றார். பம்பாய், சென்னை மாகாணங்கள் மத்திய அரசாங்கத்தின் கட்டுப் பாட்டுக்குள் வந்தன. கண்காணிப்புக் குழு ஒன்று (Board of Control) ஏற்பட்டது. கம்பெனியின் அரசியல் நடவடிக்கைகள் எல்லாம் அதன் கண்காணிப்பின் கீழ் வந்தன. கம்பெனி வியா பாரத்தில் மட்டுமே கவனம் செலுத்தும்படி அது வற்புறுத்தியது. கவர்னர் ஜெனரலை நியமிக்கும் அதிகாரம்கூட அதன் கைகளி லின்றும் நழுவி விட்டது.

வாரன்ஹேஸ்டிங்ஸ், கம்பெனியில் பல சீர்திருத்தங்களை ஏற் படுத்தினார்; கிளைவ் காலத்திய இரட்டையாட்சி முறையை ஒழித் தார்; கம்பெனி வியாபாரிகளின் தனி வியாபாரத்தை ஒடுக்கினார்; அவர்கள் சுதேசிகளிடம் பரிசுகள் வாங்குவதையும் தடுத்தார். ஐந் தாண்டுகளுக்கொருமுறை நிலவரியைத் திட்டம் செய்து வசூலிக் கும் முறையையும் (Quinqucnnial Settiement), பின்னர் ஆண்டுக் கொருமுறை அதைத் திட்டம செய்யுமுறையையும் (Annual Settlement) அவர் கையாண்டார். யார் மிக அதிகமான தொகையை வசூலிக்க முன் வந்தார்களோ, அவர்களுக்கே வரி தண்டும் உரிமையை அவர் வழங்கினார். அதனால் ஏழை உழவர்கள் தான் பெரிதும் சுரண்டப்பட்டனர். கம்பெனியின் செல்வ நிலை யைப் பெருக்க அவர் பல வழிகளைக் கையாண்டார்; வங்காள நவாப்புக்குக் கொடுக்கப்பட்டு வந்த உதவிப் பணத்தைக் குறைத் தார்; அவுத் நவாபின் பீகம்களிடமிருந்து பலவந்தமாகப் பணத் தைக் கவர்ந்தார்; செயித்சிங் எனும் காசிச் சிற்றரசரிடமிருந்து சிறிதும் ஈவிரக்கமின்றிப் பலமுறை பணத்தைக் கறந்ததோடு அவரைப் பதவியிலிருந்தும் கடைசியாக நீக்கினார்; ரோஹில்லர் களுக்கு விரோதமாக அவுத் நவாபுக்குப் படையுதவி செய்து ஏராளமான ரோஹில்லர்களைக் கொன்றார். நந்தகுமார் எனும் பிராமணர் அவர்மீது இலஞ்சம் வாங்கிய குற்றத்தைச் சாட்டினார் ஆனால் அக்குற்றம் நிரூபிக்கப்படுமுன் கள்ளக் கையெழுத்திட்ட குற்றத்துக்காக அவர் தூக்கிலிடப்பட்டார். இவைகளெல்லாம் ஹேஸ்டிங்ஸ் மீது பெருங் குற்றங்களாகப் பின்னர் பாராளுமன் றத்தில் டர்க், ஷெரிடியன், ஃபாக்ஸ் போன்றவர்களால் சுமத்தப் பட்டன. அரசியல் துரோகக் குற்றத்துக்காக அவர் ஏழாண்டு கள் பாராளுமன்றத்தில் விசாரிக்கப்பட்டுப் பின்னர் விடுதலை யடைந்தார். அவரை எதிர்த்து, பர்க் போன்றவர்கள் நிகழ்த் திய சொற்பொழிவுகள் ஆங்கில அரசாங்கத்தின் ஏகாதிபத்தியக் கொள்கைகளில் தாராள புத்தியை வளர்த்தன. ஹேஸ்டிங்ஸ் காலத்தில் முதல் மராட்டிய யுத்தம் நடைபெற்றது. அதில் பேஷ்வாவுக்குச் சாதகமாக ஆங்கிலேயர் போரிட்டுச் சிந்தியா

என்ற மராட்டியத் தலைவரை வென்றனர். குவாலியர், குஜராத் முதலிய இடங்கள் பிடிபட்டன. மராட்டியர் ஆங்கிலேயரின் வலிமையை உணர்ந்தனர். தெற்கே மைசூரில் ஹைதர்அலி எனும் முஸ்லீம் தலைவர், ஆங்கிலேயர்களை எதிர்த்தார். முதல் மைசூர் யுத்தமெனப்படும் அபபோரையும் ஹேஸ்டிங்ஸ் நன்கு சமாளித்தார். பறங்கிமலையில் ஹைதர் அலி, சர் அயர் கூட்டால் தோற்கடிக்கப்பட்டார். 1782இல் ஹைதர் இறந்தார். எனவே மைசூர்போர் ஓய்ந்தது. ஹேஸ்டிங்ஸ் 1785ஆம் ஆண்டில் தாய்நாடு திரும்பினர்.

**கார்ன்வாலிஸும் வெல்லெஸ்லியும்**

வாரன்ஹேஸ்டிங்ஸுக்குப் பின் கார்ன்வாலிஸ் எனும் கண்ணிய மிக்க கனவானை இந்திய கவர்னர்ஜெனரலாகப் பிட் நியமித்தார். அவரது பதவிக காலத்தில் (1786-1793) வங்காளத்தில் நிலையான நிலவரி ஏற்பாடு(Permanent Revenue Settlement) கொண்டுவரப்பட்டது. இவ்வேற்பாட்டால் நிலவரியானது நிரந்தரமாகத் திட்டம் செய்யப்பட்டது. அதை வசூலிக்க ஒரு ஜமீன்தாரி வகுப்பு ஏற்பட்டது. அவ்வகுப்பு ஆங்கிலேயருக்குப் பக்கபலமாக அமைந்தது. ஆனால் ஏழைக் குடியானவர்களைச் சுரண்டி வாட்டியது மற்றும் அவர் காலத்தில் இரண்டாம் மைசூர் யுத்தம் நடைபெற்றது. ஹைதரின் புதல்வரான திப்புசுல்தான், திருவாங்கூர் மீது படையெடுத்தார் (1789). திருவாங்கூர், ஆங்கிலக் கம்பெனியின் நட்பு நாடாதலால் ஆங்கிலப் படைகள் திப்புவை எதிர்த்தன. திப்பு தோற்கடிக்கப்பட்டார். ஒரு சில நிலப்பகுதிகளையும் அவர் ஆங்கிலேயருக்குக் கொடுத்து அவர்களோடு சமாதானம் செய்து கொண்டார்.

1793இல் கார்ன்வாலிஸ் இங்கிலாந்து திரும்பினர். அதன்பின் வந்த சர் ஜான் ஷோர் (Sir John Shore) என்பார் தலையிடாக் கொள்கையைக் கடைப் பிடித்தார். அவருக்குப்பின் வெல்லெஸ்லி கவர்னர் ஜெனரலானர். அவரது ஆட்சிக் காலத்தில் (1798-1805) மூன்றும் மைசூர் யுத்தம் நடைபெற்றது, அதில் பிரிட்டிஷ்படை திப்புசுல்தானைத் தோற்கடித்து, அவரது தலைநகரமான ஸ்ரீரங்கப்பட்டணத்தையும் கைப்பற்றியது. மைசூரின் பல பகுதிகளை ஆங்கிலேயரும், நைஜாமும், மராட்டியரும் தம்முள் பிரித்துக் கொண்டனர். எஞ்சிய பகுதிக்குப் பழைய அரசு பரம்பரையைச் சேர்ந்த உடையார் மன்னரொருவரை ஆங்கிலேயர் அரசராக்கினர். அவர் பிரிட்டிஷ் மேலதிகாரத்தை ஒப்புக் கொண்டார். இரண்டாம் மராட்டிய யுத்தமும் (1803-1805) அவர் காலத்தில் நடைபெற்றது. படைத் துணை உடன்படிக்கை (Subsidiary Alliance) என்ற நூதன முறையை வெல்லெஸ்லி

இந்தியாவில் புகுத்தினுர். அதன்படி ஒவ்வொரு இந்தியச் சிற்ற ரசரும் ஆங்கிலப் படை ஒன்றை வைத்துக்கொள்ளும்படி வற் புறுத்தப் பட்டனர். அப்படையைப் பராமரிக்க ஒவ்வொரு நாடும் சிறுபிரதேசத்தை ஆங்கிலேயருக்கு வழங்க வேண்டுமெனவும், பிரெஞ்சுப் படைகளை அவர்கள் தங்கள் நாட்டினின்றும் துரத்தி விட வேண்டுமெனவும் அவ்வுடன்படிக்கை கூறியது. இவ்வுடன் படிக்கையை நைஜாம், அவுத் நவாப், பேஷ்வா ஆகியோர் ஒப்புக் கொண்டு ஒவ்வொருவரும் ஒரு சிறு நிலப்பகுதியை ஆங்கிலே யருக்குத் தந்தனர். ஆனுல் பான்ஸ்லே, சிந்தியா என்ற இரு மராட்டித் தலைவர்கள் மேற்படி உடன்படிக்கையை ஏற்றுக் கொள்ள மறுத்தனர். வெல்லெஸ்லி, பான்ஸ்லேயை அஸ்ஸே, (Assaye), ஆர்கம் (Argaum) என்ற இடங்களிலும் சிந்தியாவை லாஸ்வாரியிலும் (Laswari) தோற்கடித்துப் படைத்துணை உடன் படுக்கைக்கு இணங்கும்படி செய்தார்; டெல்லியைக் கைப்பற்றி மராட்டியர் கைகளிலிருந்து மொகலாயப் பேரரசை விடுவித்தார். கடைசியாக ஹோல்க்கார் என்ற மூன்ருவது மராட்டியத் தலைவர் ஆங்கிலேயரை எதிர்த்தார். அவரது கோட்டைகளைப் பிடிக்க முடியாமல் ஆங்கிலேயர் திணறினர். பணச் செலவு ஏராளமாக ஆயிற்று. எனவே வெல்லெஸ்லியை ஆங்கில அரசாங் கம் திருப்பி அழைத்துக் கொண்டது (1805).

வெல்லெஸ்லி பிரிட்டனின் பெரிய ஏகாதிபத்தியவாதிகளுள் ஒருவர். அவர் தம் படை வலிமையாலும், படைத்துணை உடன் படிக்கையாலும் இந்தியாவில் பிரிட்டிஷ் பேரரசை நன்கு நிலை நாட்டினுர். மிகவும் வன்மைவாய்ந்த மராட்டியர்களையே மடக் கிய பெருமை வெல்லெஸ்லிக்கே உரியதாகும். மைசூர் போன்ற வல்லரசு நாடுகளை வென்ருலன்றிப் பிரிட்டிஷ் பேரரசு இந்தியா வில் ஏற்பட முடியாதென்பதை அவர் நன்கு உணர்த்தினுர். பின்னுல் வந்த ஹேஸ்டிங்ஸ் பிரபு அவரது ஏகாபத்தியக் கொள்கைகளைப் பின்பற்றிப் பிரிட்டிஷ் இந்தியப் பேரரசை இன்னும் பலப்படுத்தினுர். இந்தியாவில் பிரிட்டிஷார் தனித் தலைமை பெறுவதற்கான விதைகளைத் தூவிவிட்டுச் சென்றவர் வெல்லெஸ்லியேயாவார்.

### கனடா—குவிபெக் சட்டம் (Quebec Act 1774)

பிரிட்டிஷ் டொமினியன் நாடுகளுள் மிகச் சிறந்த கனடாப் பிரதேசமானது செண்ட்லாரன்ஸ் நதியின் இரு மருங்கிலும் ஆங்கிலேயர் 1763ஆம் ஆண்டு பிரெஞ்சுக்காரரிடமிருந்து கைப் பற்றி ஒரு சில நிலப் பகுதியினின்றும் வளர்ந்ததொன்ருகும். ஆரம்பத்தில் அதில் 70,000 பிரெஞ்சுக்காரர்களே இருந்தனர்.

அப் பிரதேசத்துக்கு 200 மைல்கள் கிழக்கேயிருந்த நோவாஸ் கோஷியா என்ற நாடானது யுட்ரெக்ட் சமாதானத்தின்படி (1713) ஆங்கிலேயருக்குக் கிடைத்தது. அதில் பிரெஞ்சுக்காரர் களும் ஆங்கிலேயர்களும் ஒருங்கே வாழ்ந்து வந்தனர். பிரெஞ்சுக் காரர்கள் கத்தோலிக்க மதத்தைத் தழுவினவர்களாகவும், பிரெஞ்சுமொழியைப் பேசுபவர்களாயும் இருந்ததால் அவர்களு டைய பிரச்சினை மிகவும் சிக்கலானதாக இருந்தது. அச் சிக்கலைத் தீர்க்க சர் கை கார்லிடன் (Sir Guy Carleton) என்ற கவர்னர் பெரிதும் முயன்றார். அவர் பிரெஞ்சுப் பழக்க வழக்கங்களை மதித்து நடக்கும்படி ஆங்கிலேயரைத் தூண்டி, இரு சமூகத் தாரிடையேயும் நட்புறவை வளர்த்தார். அவருடைய முயற்சி யால் 1774ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் பாராளுமன்றம் குவிபெக் சட் டம் (Quebec Act) எனும் சட்டத்தை நிறைவேற்றியது. அதன் மூலம் கனடாவில் வாழ்ந்த கத்தோலிக்கரனைவருக்கும் தொழு கைச் சுதந்திரம் வழங்கப்பட்டது. அதனால் பிரெஞ்சுக்காரர் மன மகிழ்ந்து ஆங்கிலேயர்களுக்கு, அமெரிக்கச் சுதந்திரப் போரில் பெரிதும் உதவி செய்தனர். அமெரிக்கக் கலகக்காரர், கனடா வைத் தாக்க முயற்சிசெய்தபோது, கார்லிடன் அவர்களை எளிதில் துரத்த முடிந்ததற்குக் காரணம் கனடியர்களின் ஆதரவேயாகும்.

### கனடாச் சட்டம் (Canada Act 1791)

அமெரிக்கச் சுதந்திரப் போரால் கனடாவின் சமூகத் தலை மையில் ஒரு பெருத்த மாறுதல் ஏற்பட்டது. அப் போரில் பிரிட் டிஷ் அரசருக்குச் சாதகமாகப் போரிட்ட இராஜவிசுவாசிகள் போர் முடிந்தபின் பல கொடுமைகளுக்குட்படுத்தப்பட்டனர். அவர்கள் அவற்றைச் சகிக்கமாட்டாமல் திரள்திரளாகத் தம் இருப்பிடங்களை விட்டு வெளியேறிக் கனடாவுக்குள் வந்து 'புகுந் தனர். அங்ஙனம் ஓடி வந்து பிரிட்டிஷ் கொடியின்கீழ் அடைக் கலம் புகுந்தவர்கள் யாவரும் 'ஐக்கியப் பேரரசின் இராஜ விசுவாசிகள்' (United Empire loyalists) எனப் பெயர் பெற்றனர். ஏறக்குறைய 45,000 இராஜவிசுவாசிகள், நோவாஸ், கோஷியா வுக்குள் புகுந்து நியூப் ரன்ஸ்விக் (New Brunswick) எனும் புதிய குடியேற்ற நாட்டைத் தோற்றுவித்தனர். வேறுபலர் பிரெஞ்சுக் காரரோடு சேர்ந்து குடியேறினர். மற்றுஞ்சிலர் அண்டாரியோ ஏரிக்கு வடகிழக்கில் சென்று குடியேறி அண்டாரியோ என்ற புதிய நாட்டை உருவாக்கினர். இங்ஙனம் கனடாவில் நோவாஸ் கோஷியா, ப்ரென்ஸ்விக் என்ற கடற்கரை நாடுகளும், அண் டோரியோ, குவிபெக் என்ற உள்நாட்டுப்பிரதேசங்களும் தோன் றின. முன்னைய இரண்டும் மேல்கனடாவொன்றும், பின்னைய இரண்டும் கீழ் கனடாவென்றும் பெயர் பெற்றன. இவ்விரு

கனடாவிலுமிருந்த பிரெஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் ஒன்றுக வாழ்வதில் சில சிக்கல்கள் ஏற்பட்டன. பிரெஞ்சுக்காரர்கள், கத்தோலிக்கர்கள் பிரதிநிதித்துவ ஆட்சிமுறையைப்பற்றி அவர்கள் அதிகம் அறியாதவர்கள். பாராளுமன்றத் துரைத்தனமென்பதும் அவர்கள் அறியாததொன்று. பழைய நிலமானிய முறைப்படியே அவர்கள் வாழ்க்கை நடத்தி வந்தார்கள். ஆனல், ஆங்கிலேயர்கள் பிராடெஸ்டண்டுகள்; பாராளுமன்ற ஆட்சியை விரும்பியவர்கள். எனவே, இருசாராரும் ஒன்றி வாழ்வதென்பது முடியாத காரியமாக இருந்தது. பிரிட்டிஷ் கனடியர்கள் இங்கிலாந்தில் இருப்பதைப்போன்ற சுயேச்சை பெற்ற பாராளுமன்றத்தையும், பிரதிநிதித்துவ அரசாங்கத்தையும் தங்கட்கு வழங்குமாறு பிரிட்டிஷ் அரசாங்கத்தை வேண்டிக்கொண்டனர். பிரெஞ்சுக் கனடியர் அதில் ஏதோ சூழ்ச்சியடங்கியிருப்பதாக ஐயமுற்று அவர்களது கோரிக்கைகளை எதிர்த்தனர். இந்நிலையில் பேரமைச்சர் பிட் என்பார் இரண்டு கனடாக்களும் தனித்தனி அரசாங்கங்களை நிறுவுவதன்மூலம் அவ்விரு சமூகத்தாரிடையே சுமுகமான நிலைமையை ஏற்படுத்தலாமென நினைத்தார். 1791ஆம் ஆண்டில் அவர் 'கனடாச் சட்டம்' (Canada Act) எனும் ஒரு சட்டத்தைப் பாராளுமன்றத்தில் நிறைவேற்றினுர். அதன்படி மேல்கனடாவுக்கும், கீழ்கனடாவுக்கும் தனித்தனி லெப்டினெண்ட் கவர்னர்கள் நியமிக்கப்பட்டனர்; ஒவ்வொரு கவர்னருக்கும் ஆலோசனை கூறத் தனித்தனிக் கவுன்ஸில்கள் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு மாகாணத்திற்கும் தனித்தனிச் சட்டசபை தேர்ந்தெடுக்கப்பட்டது. 'கவர்னர், அவரது கவுன்ஸிலர்கள் என்ற இரு சாராரின் ஒப்பமும் பெற்று அது சட்டம் செய்யலாமெனவும், வரிகள், போடலாமெனவும் கூறப்பட்டது. இந்தச் சட்டத்தால் அண்டோரியோ மாகாணத்தவர்க்கு நல்ல நன்மை ஏற்பட்டது. ஆனல் குவிபெக்கில் இருந்த பிரெஞ்சுக்காரர்களுக்கு, ஆங்கிலேயரின் துரைத்தன ஏற்பாட்டோடு ஒத்துப்போவது சற்றுக் கடினமாயிருந்தது, எனினும் அரை நூற்றுண்டுக்கு இம்முறையானது ஒன்றும் தகராரறின்றி ஒழுங்காக நடைபெற்று வந்தது.

### அமெரிக்கப் போர் (1812)

நெப்போலியனது கண்டத் திட்டத்துக்கு எதிராகப் பிரிட்டிஷார் கவுன்ஸில் கட்டளைகளை வெளியிட்டு, அமெரிக்கா போன்ற நடுநிலைமை நாடுகள், பிரெஞ்சுப் பேரரசரோடு வியாபாரம் செய்வதைத் தடுக்க முயன்றனர். அமெரிக்கக் கப்பல்களைச் சோதனை போடும் அதிகாரம் தமக்கிருப்பதாகப் பிரிட்டிஷார் கூறினர். இதை வெறுத்த அமெரிக்கர்கள் 1812 ஆம் ஆண்டில் பிரிட்டன் மீது போர் தொடுத்தனர். இரண்டு ஆண்டுகள் இப்போர் நடை-

பெற்றது. பெரிய ஏரிகளுக்குப் (Great Lakes) பக்கத்தில் பிரிட்டிஷ், அமெரிக்கப் படைகள் பலமுறை மோதிக்கொண்டன. 1814இல் பிரிட்டிஷ் படைகள், வாஷிங்டன் மீது படையெடுத்துக் கைப்பற்றின. அப்போது அமெரிக்கப் ஜனதிபதியின் மாளிகையுட்படப் பல அரசியல் கட்டடங்கள் கொளுத்தப்பட்டன. அதன்பின் கனடியர்கள் பின்வாங்கினர். அமெரிக்கப் பிரதிநிதிகளுக்கும், பிரிட்டிஷ் பிரதிநிதிகளுக்கும் கெண்ட் (Ghent) எனுமிடத்தில் சமாதானஉடன்பாடு ஏற்பட்டது (1814). இதுபற்றிய செய்தி அமெரிக்காவுக்கு எட்டுவதற்குள், பிரிட்டிஷ் படைகள் நியூ-ஆர்லியன்ஸ் நகரைத் தாக்கின. அமெரிக்கத் தளபதி ஆண்ட்ரூ ஜாக்ஸன்(Andrew Jackson) என்பார் அவர்களைத் தோற்கடித்துத் துரத்திவிட்டார். எனவே சமாதானத்தால் விரும்பிய பலன் கிட்டவில்லை. நாளடையில் இரு சாராரும் போரில் சலிப்புற்று ஓய்ந்தனர்.

## ஆஸ்திரேலியா

அமெரிக்கச்சுதந்திரப்போரில் ஆங்கிலேயர் தோல்வியுற்றதால் அவர்கள் தம் நாட்டில் தீவாந்திர சிட்சை பெற்ற குற்றவாளிகளை அனுப்ப வேருேர் இடத்தைத் தேடவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஏற்கெனவே 1768இல் கேப்டன் குக் என்பார் தென்கடல் தீவுக்குச் சென்று விஞ்ஞான ஆராய்ச்சி செய்யும்படி ஆங்கில அரசாங்கத்தால் பணிக்கப்பட்டார். அவர் ஒரு சிறு விஞ்ஞானிகள் கோஷ்டியுடன் புறப்பட்டுச் சென்று டஹிதி (Tahiti) எனுமிடத்தை அடைந்தார். அதன்பின் அவர் நியூஜிலாந்து தீவுகளை அடைந்து அதனை வலம்வந்தார். அங்கிருந்து மேற்கே திரும்பி அவர் அதுவரை கண்டுபிடிக்கப்படாத ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கடற்கரையை ஆராய்ந்தார். அக் கடற்கரையோரத்தில் பவளப்பாறைகள் (Great Barrier reef) இருப்பதையும், அவைகளில் மோதிக் கொள்ளாமல் எங்ஙனம் கடற்கரையோரமாகச் செல்லவேண்டுமென்பதையும் குக் கண்டுபிடித்தார். அவருடன் பல விஞ்ஞானிகள் சென்றிருந்தனர். அவர்களுள் ஒருவர் சர் ஜோஸப் பாங்க்ஸ் (Sir Joseph Banks) என்பவர். அவர் ஓரிடத்தில் செடி கொடிகள் மிகச் செழுமையாக வளர்ந்திருப்பதைக் கண்டு அதற்குப் பாடனிகுடா (Botany Bay) என்று பெயர் வைத்தார். அவ்விடத்தைச் சுற்றியுள்ள பிரதேசத்துக்கு நியூசௌத் வேல்ஸ் என்ற பெயரைக் குக் சூட்டினர். அதற்கப்புறம் குக் இருமுறை பசிபிக்மாக்கடலுள் பிரயாணம் செய்தார். கடைசியாக அவர் ஹாவாய்த் தீவிலிருந்த சில சுதேசிகளால் கொல்லப்பட்டார். சர் ஜோஸப் பாங்க்ஸ் என்பார் நியூசௌத் வேல்ஸில் ஒரு குடியேற்ற நாட்டை ஏற்படுத்தும்படி

பிரிட்டிஷ் அரசாங்கத்தை வேண்டிக்கொண்டார். ஆனால் அங்குக் குடியேற்ற நாட்டை ஏற்படுத்த பேரமைச்சர் பிட்டும், அவரது உள்நாட்டமைச்சரான ஸிட்னியும் விரும்பவில்லை. அதற்குப் பதிலாக அதுகாறும் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்கு அனுப்பப்பட்டுவந்த தீவாந்திர சிட்சை பெற்ற குற்றவாளிகளை அனுப்ப அந்நாட்டை பயன்படுத்தலாமென்ற எண்ணம் அவர்களுக்கு உதித்தது.

1788 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கேப்டன் ஆர்தர் பிலிப்ஸ் (Captain Arthur Philips) என்பவர் ஆங்கில அமைச்சரது பேரால் வழங்கப்பட்ட ஸிட்னி துறைமுகத்துள் வந்து இறங்கினார். அவரை அரசாங்கத்தார் படைக்காவலுடன் அனுப்பினர். 750 குற்றவாளிகள் நிரம்பிய ஆறு கப்பல்களுடன் அவர் வந்தார். அக் குற்றவாளிகள் வேளாண்மையில் ஈடுபடுவதற்காக வேண்டிய விதைத்தானியங்களும், கலப்பை போன்ற உழவுக் கருவிகளும், கால்நடைகளும், கப்பல்களிலேயே வந்தன. குற்றவாளிகள் நியூ சௌத் வேல்ஸில் குடியேறினர். அக் குற்றவாளிகளிற் பலர் வெகு சாதாரணக் குற்றங்களைச் செய்தவர்கள். எனவே அவர்கள் குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தக் கூடிய திறமையும் நாகரீகமும் உடையவர்களாக விளங்கினர். 1804ஆம் ஆண்டில் டாஸ்மேனியாவில் பல குற்றவாளிகள் குடியேற்றப்பட்டனர். நாளடைவில் நீலமலைகள் (Blue Mountains) என்ற கிழக்குக் கடற்கரையோரமாயிருந்த மலைகளில் கணவாய்கள் கண்டுபிக்கப்பட்டன (1813). அக் கணவாய் வழிச்சென்று பார்த்தோர் கண்ணுக்கெட்டியவரைப் பசும்புல்வெளிகள் கண்கொள்ளாக் காட்சியாய் விளங்குவதை அறிந்தனர். அவர்களது உள்ளம் உவகையால் துள்ளியது. பல ஆங்கிலேயர் அப் புல்வெளிகளில் குடியேறி ஆடு மாடு வளர்க்கும் தொழிலில் ஈடுபடலாயினர். அக்கால்நடைகளுக்கு ஏற்ற பசுந்தீவனம் அங்கு ஏராளமாய்க் கிடைத்ததால் அவை நன்கு பருத்து ஏராளமான இறைச்சியையும் உரோமத்தையும் தந்தன. மூன்றும் ஜார்ஜ் தமது பண்ணையிலிருந்து பல ஆடுகளை ஆஸ்திரேலியாவுக்கே அனுப்பி வைத்தார். ஆடு வளர்க்கும் தொழிலில் இன்றும் ஆஸ்திரேலியா உலகிலேயே முதன்மை பெற்று விளங்குகிறது.

# 14. பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் நிலைமை

**அரசியல் நிலைமை:** மன்னரது நிலை — பாராளுமன்றக்கூட்டம் — பாராளுமன்றமும் தல ஆட்சியும் — பாராளுமன்றத்தின் இறைமை நிலைநாட்டப்படல் — காபினெட் ஆட்சிமுறை — பிரபுக்கள் சபை — பாராளுமன்றக் கொடுங்கோன்மை — பாராளுமன்றத்தின் ஊழல்கள்.

**சமூக நிலைமை:** உயர் வகுப்பார் — வணிகர்கள் — உழவர்கள்.

**கலைகளின் நிலை:** இலக்கியம் — கட்டடக்கலை — மட்பாண்டம் வனையும் கலை — ஓவியக்கலை — நாடகக் கலை — கல்வியின் நிலை — புதுமைக் கருத்துகள்

**சமயநிலை** மெத்தாடிஸ்ட் இயக்கம்; மதநம்பிக்கைக் குறைவு — ஒழுக்கக் குறைவு — வெஸ்லி சகோதரர்கள் — மெத்தாடிஸ்டுகள் — வெஸ்லியின் போதனைகளின் பலன்கள்.

## அரசியல் நிலை

**மன்னர் நிலை**

ஏறக்குறைய நவீன ஆட்சி முறையின் சிறப்பியல்புகளெல்லாம் பதினெட்டாம் நூற்றாண்டுக்குள் இங்கிலாந்தில் பெருமளவுக்கு நிலை பெற்றுவிட்டன எனக் கூறலாம். மன்னரே அதிகாரமனைத்துக்கும் ஊற்று என்ற இடைக்காலக் கருத்து மாறி பாராளுமன்றத்தோடு கூடிய மன்னரும், பொதுமைச் சட்டமுமே நாட்டில் இறைமை பெற்றவை என்ற கருத்து நன்கு வேரூன்றி விட்டது. மன்னரது தனிச் சிறப்பதிகாரங்களும், அவ்வதிகாரங்கள் செலுத்தப்பட உதவியாயிருந்த நட்சத்திர அறை நீதிமன்றம், உயர்ஆணை நீதி மன்றம், வட நீதிமன்றம் போன்ற யதேச்சாதிகார நீதிமன்றங்கள் 1641 ஆம் ஆண்டளவில் ஒழிக்கப்பட்டு விட்டன. அரசரின் கைப்பாவையாயிருந்த பிரிவி கவுன்ஸிலின் அதிகாரமும் பெருமளவுக்குக் குறைக்கப்பட்டது

கப்பற்பணம் வசூலித்ததை மக்கள் கண்டித்ததன்பின் பாராளு மன்றத்தின் அனுமதியின்றி அரசர்கள் வரிவிதிக்கும் பழக்கம் ஒழிந்தது. 1660 ஆம் ஆண்டிலிருந்து 1760 ஆம் ஆண்டுவரை பாராளுமன்றத்தோடு கூடிய மன்னரும், பொதுமைச்சட்டமும் கூட்டாளிகள் போன்று தத்தம் அதிகாரத்தை நாட்டில நிலைபெறச் செய்ததை நாம் காண்கிறோம்.

### பாராளுமன்றக் கூட்டம்

பாராளுமன்றம் தொடர்ச்சியாகக் கூட்டப்படுகிற வழக்கம் நாளடைவில் இங்கிலாந்தில் நன்கு ஏற்பட்டு விட்டது. 1688ஆம் ஆண்டுப் புரட்சிக்குப்பின் பாராளுமன்றம் மன்னருக்குக் கடன் கொடுக்க ஆரம்பித்ததால் அக் கடனைத் தீர்ப்பதற்கான வழி வகைகளைத் தேடவேண்டி அது அடிக்கடி கூட்டப்படவேண்டியது இன்றியமையாததாகி விட்டது. படைகளை நிருவசிக்கவும் அதில் அமைதியை நிலைநாட்டவும் ஒவ்வோராண்டும் பாராளுமன்றம் சட்டமியற்ற வேண்டியிருந்தாலும், அது தொடர்ந்து கூட்டப்பட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

### பாராளுமன்றமும் தலஆட்சியும்

தலஆட்சி நிருவாகமும் மன்னரின் ஆதிக்கத்திலிருந்து பாராளு மன்றத்தின் கைக்கு மாறியது. 1610 ஆம் ஆண்டில் அரசர் தனியாணை அறிவிப்புகள் (Proclamations) மூலம் புதிய சட்டங்களை ஆக்குவது தடுக்கப்பட்டதாலும், அங்ஙனம் ஆக்கப் பட்ட சட்டங்களைப் பிரிவிகவுன்ஸில் அமுல் நடத்துவது 1641ஆம் ஆண்டில் தடுக்கப்பட்டதாலும், பரோக்களின் உரிமைச்சசானங் களை அரசர் ரத்து செய்வது தடுக்கப்பட்டதாலும் தல நிருவாகம் மந்திரிகளின் கைகளுக்கு மாறியது. பொதுமைச் சட்டத்தின் கட்டுப்பாடுகளுக்குள் அவை வந்தன, தனிப்பட்டவர்களது மசோதாக்களால் (Private Bills) தல நிருவாகத்தின் பெரும் பிரச்சினைகள் தீர்க்கப்பட்டன.

### பாராளுமன்றத்தின் இறைமை நிலைநாட்டப்படல்

பாராளுமன்றத்தின் இறைமையானது நாளுக்குநாள் பெருக்கப்படுவதை நாம் காண்கிறோம். சான்றாக, ஸ்காட்லாந்து ஐக்கியச் சட்டம் (1707), அயர்லாந்து ஐக்கியச்சட்டம் (1801) ஆகியவைகளை இயற்றியது பாராளுமன்றமேயாகும் அதன்மூலம் அதன் இறைமை அந்நாடுகளில் நிலை நாட்டப்பட்டது. மேலும் 1689 ஆம் ஆண்டுக்குப்பின் குடியேற்ற நாடுகளுக்கு உரிமைச் சாசனங்களை வழங்கும் உரிமையையும் பாராளுமன்றமே எடுத்துக் கையாளுகிறது. கிழக்கிந்தியக் கம்பெனிக்கும், இங்கிலாந்து பாங்கிக்கும் அதுவே உரிமைச் சாசனம் வழங்குவதையும் நாம் பார்க்கிறோம்.

அரசு என்பது இறவாமல், என்றும் நின்று நிலவுவது என்ற கொள்கை மன்னர்மூலமின்றிப் பாராளுமன்றத்தின் மூலமே வெளிப்படுத்தப்படுகிறது. அரசர் இறந்தபின்னும் ஆறுமாத காலத்துக்குப் பாராளுமன்றம் நீடிக்கலாமென 1696 ஆம் ஆண்டு ஏற்பட்ட சட்டமும், 1706, 1788 ஆம் ஆண்டுகளில் ஏற்படுத்தப் பட்ட ரீஜன்ஸி சட்டங்களும் (Regency Acts) மன்னனில்லாத காலத்தும் நாட்டின் இறைமையைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது பாராளுமன்றமே என்ற உண்மையை நிரூபிக் கின்றன.

பாராளுமன்றத்தின் அதிகாரம் பெருகிவிட்டதென்பது அதில் பிரதிநிதித்துவம் பெற மக்கள் போட்டி போடுவதினின்றும் நன்கு தெரிகிறது. 1509ல் 298 பேர்களே அடங்கியிருந்த பாராளுமன்றத்தில் 1603இல் 467 பேர்களும், 1707 இல் 558 பேர்களும் இடம் பெற்றனர். உறுப்பினர்களின் எண்ணிக்கை யானது பாராளுமன்றத்தின் சட்ட மூலமாகவேயின்றி, மன்ன ரது தனிச்சிறப்பதிகாரத்தால் பெருக்கப்படவில்லை. என்பது ஈண்டு நோக்கற்பாற்று.

மன்னனுக்குச் சொந்தமாயிருந்த பல தனிச் சிறப்புரிமைகள் இக்காலத்தில் பலவகையாலும் பொதுச்சட்டங்களின் அதிகார எல்லைக்குள் மாற்றப்படுவதை நாம் காண்கிறோம், உயர் ஆணை நீதிமன்றம், நட்சத்திர அறைநீதிமன்றம் முதலிய நீதிமன்றங்கள் மூலம், அரசர் செலுத்திய அதிகாரங்களைப் பொதுச்சட்ட நீதி மன்றங்கள் கவர்ந்து கொண்டன. அரசியல் துரோகக் குற்றச் சாட்டுகளில் வழங்கப்படும் தீர்ப்புக்கு மாருக இறுதி மன்னிப்பு வழங்கும் அதிகாரம் அரசரிடமிருந்து அரசுரிமை நிருணயச் சட்டத்தால் பறிக்கப்பட்டுவிட்டது, உரிமைகள் மசோதா வானது அரசரது சட்ட விலக்கதிகாரத்தையும், சட்ட நிறுத்த அதிகாரத்தையும் அரசரிடமிருந்து எடுத்துக் கொண்டது. இங்ஙனம் மன்னரது இறைமைக்குப் பதிலாகச் சட்டங்களின் இறைமை நாட்டில் ஏற்படுத்தப்பட்டது.

அரசாங்கத்தின் அமைப்பை மாற்றுவதிலும் பாராளுமன்றம் பெரும்பங்கெடுத்துக் கொண்டது. பாராளுமன்றச் சட்டத்தின் மூலம் 1710 ஆம் ஆண்டில் போஸ்ட்மாஸ்டர் ஜெனரல் பதவியும், 1794 ஆம் ஆண்டில் போர் அமைச்சர் பதவியும், 1801 ஆம் ஆண்டில் குடியேற்ற நாட்டு அமைச்சர் பதவியும் ஏற்படுத்தப் பட்டன. ராக்கிங்ஹாம், பிட் இவர்கள் காலத்தில் போர் அமைச் சரது காரியாலயமும், வாணிகக்குழுவின் (Board of Trade) காரி யாலயமும் பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிற்குள் வந்தன.

மன்னரது சொந்தத் தனிப்பட்ட செலவும், நாட்டின் பொதுச்செலவும் பாகுபாடு செய்யப்பட்டன. மன்னரது சொந்தச் செலவுக்காகவென்று ஒரு தொகையை ஒதுக்கிவிட்டு, மற்றச் செலவையெல்லாம் கருவூலத்தின் பொறுப்புக்கே பாராளுமன்றம் விட்டுவிட்டது வில்லியத்துக்கு 700,000 பவுன்கள் இங்ஙனம் பாராளுமன்றத்தால் வழங்கப்பட்டது. நாட்டின் பொதுச் செலவுகளைப் பொறுத்தவரை அதிகாரமானது இங்ஙனம் மன்னரது கைகளினின்றும் பாராளுமன்றத்துக்கு மாறியது.

காபினெட் ஆட்சிமுறை

இங்ஙனம் பாராளுமன்றம் அரசருடைய தனிச் சிறப்பதிகாரங்களைக் கைப்பற்றிக் கொண்டபின் அவற்றைத் தனது நம்பிக்கைக்குப் பாத்திரமான அமைச்சர்கள்மூலம் செயல்படுத்த முனைந்தது. அதனுல், காபினெட் ஆட்சிமுறை வளர்ந்தது, முதல் இரண்டு ஜார்ஜுகளின் ஆங்கில மொழி அறியாமையும், மூன்றும் ஜார்ஜின் சித்த சுவாதீனமின்மையும் காபினெட் ஆட்சி முறை வளர்வதற்கு உதவியாயிருந்தன. கட்சிகளின் வளர்ச்சி காபினெட் ஆட்சி வளர்வதற்கோர் காரணமாகும். ஆனுல் தற்காலத்தைப் போல் தெளிவான கட்சிகள் அக்காலத்தில் ஏற்படவில்லை. பாராளுமன்றத்தின் பெரும்பாலான உறுப்பினர்கள் எக்கட்சியிலும் சேராத சுதந்திரவாதிகளாகவே இருந்தனர். எனவே, மன்னர்கள் வலிமையுடையவர்களாயிருந்தால் அவர்களைப் பயன்படுத்திக்கொண்டு பாராளுமன்றத்தை எதிர்க்க வழியிருந்தது.

## பிரபுக்கள் சபை

பாராளுமன்றத்தில் பிரபுக்கள் சபையின் அதிகாரம் சிறுகச் சிறுகக் குறைந்து கொண்டே வந்தது. 1670-71 ஆம் ஆண்டுகளில் பணமசோதாக்களை பிரபுக்கள்சபை, திருத்தக் கூடாதென்ற தீர்மானத்தை பொதுமக்கள் சபையார் நிறைவேற்றினர். காபினெட் மந்திரிகளும் பிரபுக்கள் சபையை விடப் பொதுமக்கள் சபையினரையே பெரிதும் நம்பியிருந்தனர்.

பாராளுமன்றக் கொடுங்கோன்மை

இங்ஙனம் பெற்ற அதிகாரத்தைப் பாராளுமன்றம் அத்துமீறிச் சில சமயங்களில் கையாண்டது. பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்ட சிறையிடப்படா உரிமையானது கடன்பட்டு அதைத் திருப்பித் தராத நபர்களாலும் சில சமயம் பாராட்டப்பட்டது. வில்க்ஸ் வழக்கில், அம் மன்றமானது தேர்வாளர்களின் விருப்பத்துக்கு மாருகச் சிறுபான்மையினரின்

ஆதரவு பெற்ற ஒருவரையே உறுப்பினராக ஏற்றுக் கொள்ள முடியுமெனக் கூறிற்று. ஆனுல் பாராளுமன்றம், அரசர் இவ்விருவரது கொடுங்கோன்மையினின்றும் பொதுச்சட்டங்கள், குடிமக்களைக் காத்தன. வில்க்ஸ் வழக்கில் நீதிபதிகள், அமைச்சர்களையே தண்டித்தனர். காரணமின்றி ஒருவரைச் சிறையிடுவதை 1678இல் ஏற்பட்ட ஹெபியாஸ்கார்ப்ஸ் சட்டம் தடுத்தது. 1704இல் ஆஷ் பிவைட் வழக்கில் (Ashby Vs. White) பொதுமக்கள் சபை மட்டுமே தனிப்பட்ட முறையில் சட்டத்தைச் செய்ய முடியாதென்றும், ஹோல்ட்எனும் நீதிபதி கூறினுர். பொதுவாரண்டுகள்மூலம் அமைச்சர்கள் குடிமக்களைச் சிறை செய்யமுடியாதென வில்க்ஸ் வழக்கில் கேம்டன் என்ற நீதிபதி தீர்ப்பளித்தார். இங்ஙனம் மக்களின் உரிமைகள் பொதுச்சட்ட நீதி மன்றங்களால் காக்கப்பட்டன.

பாராளுமன்றத்தின் ஊழல்கள்

பிரிட்டிஷ் பொதுச் சட்டங்கள் மக்களின் உரிமைகளை காக்கப் பெரிதும் உதவினவாயினும் புதிய மாற்றங்கள் நாட்டில் ஏற்படுவதை அவை தடை செய்தன, சூழ்நிலைக்கேற்ப இங்கிலாந்து தன் நிறுவனங்களை மாற்றிக்கொள்ள இயலாது அவை முட்டுக்கட்டை போட்டன. உண்மையில் இங்கிலாந்தில் பல சீர்திருத்தங்கள் ஏற்படுவது இன்றியமையாததாயிருந்தது. 1403 ஆம் ஆண்டிலிருந்து தேர்வாளர்களின் வாக்குரிமை மாற்றப்படவேயில்லை. அமைதிகாண்நீதிபதிகளுக்கு வழங்கப்பட்ட அதிகாரங்கள் 1570ஆம் ஆண்டிலிருந்து அப்படியே இருந்தன. பரோக்களுக்கும், பல்கலைக்கழகங்களுக்கும் ஸ்டுவர்ட்டுகள் காலத்தில் வழங்கப்பட்ட உரிமைச் சாசனங்கள் மாற்றப்படவே இல்லை. இதனுலெல்லாம் பல ஊழல்கள் ஏற்பட்டன.

பாராளுமன்றம் நாட்டு மக்களின் உண்மைப் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக இல்லை. பொதுமக்கள் சபையின் கால்பாகத்தினர் தென்மேற்கிலிருந்த ஐந்து ஷயர்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஜனநெருக்கமிக்க இலண்டன் நகரப் பகுதியிலிருந்து பத்துப் பேர்களே அதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பர்மிங்ஹாம், லீட்ஸ், மான்செஸ்டர் போன்ற பெரும் பட்டணங்களுக்குப் பிரதிநிதித்துவமே இல்லாமலிருந்தது. மேலும் கவுன்டிகளைவிடப் பரோக்களுக்குப் பாராளுமன்றத்தில் அதிகமாகப் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டிருந்தது. பொதுமக்கட் சபையிலிருந்த 558 உறுப்பினர்களுள் 405 பேர் பரோக்களிலிருந்தே தேர்ந்தெடுக்கப்பட்டனர். அப் பரோக்களும் பெரும்பாலும் தென்பகுதியிலேயே இருந்தன. பல பரோக்களில் 500

பேருக்கு மேல் ஜனத்தொகை இல்லாதிருந்தது. வாக்குரிமையும் நியாயமாக வழங்கப்படவில்லை. ஆண்டுக்கு 40 ஷில்லிங் வருமானமுள்ள சுதந்திர மானியதாருக்கே வாக்குரிமை வழங்கப்பட்டது. குத்தகைச் சாகுபடியாளர், தொழிலாளர்கள் ஆகியோர் வாக்குரிமையின்றி வாடினர். பரோக்களிலும் வாக்குரிமை வரி செலுத்திய சுதந்திரக் குடிமக்களுக்கே (Freemen) அளிக்கப்பட்டது. நசித்துப் போன பரோக்களிலிருந்து செல்வந்தர்கள் தங்கட்டு வேண்டியவர்களையே பாராளுமன்றத்துக்குத் தேர்ந்து கொண்டனர். இங்ஙனம், பாராளுமன்றம் சீர்திருத்தப்பட்டாலொழிய. நாட்டில் நன்கு வேரூன்றிவிட்ட சுயநலன்கள் (Vested Interests) மக்களைச் சுரண்டுவது நிற்காது என்ற ஒரு நிலைமையே 18 ஆம் நூற்றாண்டு இங்கிலாந்தில் காணப்பட்டது.

## சமூக நிலைமை

### உயர் வகுப்பார்

தொழிற்புரட்சியும், விவசாயப் புரட்சியும் இங்கிலாந்தில் தோன்றுவதற்கு முன்னால் அங்குப் பெருநிலக்கிழார்களே மிகவும் செல்வாக்குடன் விளங்கினர். நாட்டுமக்கள் இப் பணக்கார நிலப்பிரபுக்களைத் தங்களது தலைவர்களாக ஏற்றுக்கொண்டனர். எனவே, பணக்காரரின் ஆட்சியே நாட்டில் நிலவியது. திருச்சபை உத்தியோகங்கள் யாவும் பிரபுக்களின் இளைய மக்கள் தம் தனியுரிமையாய்த் திகழ்ந்தன. ஏனைய சிவில், இராணுவம், நீதிமுறை போன்ற அரசாங்கத் துறைகளில் பிரபுக்களின் புதல்வர்களும், உறவினர்களுமே பதவி பெற்றனர். தல ஆட்சியில் அவர்களே அமைதிகாண் நீதிபதிகளாக இருந்து தலைமை செலுத்தினர். அவர்கள் பெருமாளிகைகளைக் கட்டிக் கொண்டு உல்லாச வாழ்க்கை நடத்தினர். ஆக்ஸ்போர்டு, கேம்பிரிஜ் பல்கலைக்கழகங்கள் தூங்கிவழிந்துகொண்டிருந்த காலத்தில், கலைகளையும் கல்வியையும் போற்றி வளர்த்தவர்கள் இப்பணக்கார உயர் வகுப்பினரேயாவர். கலைவாணர்களும், எழுத்தாளர்களும் அவர்களால் நன்கு ஆதரிக்கப்பட்டார்கள். மற்றும் அவர்கள் அவ்வப்போது ஐரோப்பாவெங்கணும் பிரயாணம் செய்து அங்கு நிலவும் அரசியல் நிலைமைகளை அலசி ஆராய்ந்து அதற்கேற்ப இங்கிலாந்தின் வெளிநாட்டுக் கொள்கையை வகுத்தனர்.

இங்ஙனம் இங்கிலாந்தின் தனித்தலைமை செலுத்திய செல்வாக்குக் குழுவினர் நாளடைவில் செல்வாக்கிழந்தனர். ஏனெனில் தொழிற்புரட்சியால் புதிய முதலாளி தொழிலாளி வகுப்புகள் தோன்றின. வறியோர்கள், தொழிலாளிகள் போன்றவர்

களின் நலன்களை அவ் ஆளும் வர்க்கத்தினர் புறக்கணித்தனர். முக்கியமாகக் குடியானவர்களின் நிலை மிகவும் மோசமாயிற்று புதுப்பணக்காரர்களும், பழைய பிரபுக்களும் ஏழைகளின் துயர் துடைக்க ஒன்றும் செய்யவில்லை. அவர்கள் தங்களுக்கென ஒரு வாழ்க்கையை வகுத்துக்கொண்டு அதன்படி வாழ்ந்தனர்.

உயர்வகுப்பாரின் ஆடை அணிகள் யாவும் மிகவும் விலையுயர்ந்தனவாகவே இருந்தன. எனினும் எளிமையான ஆடைகளை அணியும் வழக்கமும் கொஞ்சம்கொஞ்சமாக நாட்டில் ஏற்பட்டது. நீண்ட உட்சட்டைகளுக்குப் பதிலாகத் தற்காலத்தைப் போலப் பலர் கோட்டுகளையும், மார்புக் கோட்டுகளையும்அணிந்து கொண்டனர். பருத்தியாடைகள் அணியும் பழக்கம் வளர்ந்தது. எனினும் பட்டாடை உடுத்துதல் பணக்காரர்க்கு அழகு என்பதே பொதுவான கொள்கையாயிருந்தது. தலைமீது சுருள் சுருளான பொய்முடிகளை வைத்துக்கொள்ளும் பழக்கமும் மாய்ந்தது. பெண்டிர் தமது தலைமயிருக்குப் பவுடர் போட்டுக்கொள்ளும் வழக்கமும் 18ஆம் நூற்றுண்டின் இறுதிக்குள் நின்றது. பிரபுக்கள் இதாலியப் பெருமாளிகைகளையொத்த வீடுகளில் வாழ்ந்தனர். அவற்றுள் சலவைக் கற்களே தளங்களில் பரப்பப்பட்டிருந்தன. அழகிய பூங்காக்கள் அவ் வீடுகளை அலங்கரித்தன. மெழுகுவத்திகளும், சிறு எண்ணெய் விளக்குகளுமே வீடுகளில் ஒளிதுலக்கின. கண்கவர் வனப்பு வாய்ந்த, மேஜை, நாற்காலிகள், ஒவ்வொரு மாளிகைகளிலும் ஏராளமாக இருந்தன. சிப்பன்டேல் (Chippandale) என்னும் தச்சன் மகாகனி மரத்திலிருந்து அருமையான மரச்சாமான்களைச் செய்து தந்தான். தரைகளில் பெரிய இரத்தினக்கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. சுவர்களை வண்ணக் காகிதங்கள் அலங்கரித்தன. ஓய்வு நாள்களில் அச் செல்வர்கள் கடலில் குளித்துக் களிப்பெய்துவர். வேட்டையாடுதல், குதிரைப் பந்தயம், குத்துச் சண்டை போடல் முதலியன அச் செல்வந்தரின் பொழுதுபோக்காகும். வெறிக்கக் குடித்தலும், சூதாடலும் அவர்களிடம் சகஜமாகக் காணப்பட்டன. இருவரிடையே வழக்கு ஏற்பட்டால் அதைத் தீர்க்க அவ்விருவரும் நேர்முகமாகச் சண்டையிடும் வழக்கு போகவில்லை. பிரபுக்கள் வேட்டையாடுவதற்காகவே காடுகளிலிருந்த பறவைகளும் மிருகங்களும் வேட்டைச்சட்டங்களால் (Game Laws) பாதுகாக்கப்பட்டன. ஆனால் நாளடைவில், வறிஞர்களாயிருந்த குடியானவர்கள் அச் சட்டத்தை மீறுவது வழக்கமாகிவிட்டது. இங்ஙனம் ஒழுக்கமற்ற உல்லாச வாழ்க்கையில் பலர் ஈடுபட்டிருந்தாலும், ஒரு சிலர் ஓவியம், சிற்பம், இலக்கியம் போன்ற கலைகளை வளர்த்தனர்.

### வணிகர்கள்

நிலப்பிரபுக்களுக்கு அடுத்தபடியாகச் சமுதாயத்தில் நன்னிலையிலிருந்தவர்கள் வணிகர்களாவர். அவர்கள் பிறநாடுகளோடு வியாபாரம் செய்வதிலும், பணம் திரட்டுவதிலும் கண்ணுங் கருத்துமாயிருந்தனரேயன்றி அரசியலில் அவர்கள் அதிக கவனம் செலுத்தவில்லை. எனினும் அவர்களே அரசாங்கத்துக்கு அவ்வப்போது கடன் கொடுத்து உதவியவர்கள். எனவே, அவர்களது சொல்லுக்கு அரசியலில் நல்ல மதிப்பு இருந்தது. மேலும் பல வாணிகர்கள் தம் செல்வத்தைக் கொண்டு நிலங்களை வாங்கிக் கொண்டு நிலப்பிரபுக்களாகவும் திகழ்ந்தனர். அதேபோன்று நிலக்கிழார்களின் இளைய புதல்வர்கள் வியாபாரத்தில் ஈடுபடுவதும் சகஜமாய் இருந்தது. இங்ஙனம் தொழிற் புரட்சிக் காலம் வரை இவ்விரு உயர் வகுப்பாரும் தங்களுக்குள் ஒற்றுமையுடன் வாழ்ந்தனர்.

### உழவர்கள்

சமுதாயத்தில் மிகவும் மோசமான நிலையிலிருந்தவர்கள் ஏழை உழவர்களும் கலிகளுமேயாவர். அவர்களும் பிரெஞ்சு, ஜெர்மானிய ஏழைகளைவிட மிக நன்னிலைமையிலேயே இருந்தனர். ஐரோப்பாவில் காணப்பட்டதே போன்று இங்கிலாந்தின் நில அடிமை முறை (Serfdom) இல்லை. சாதாரண உழவர்களும் சுதந்திரமாகவே உழுதுண்டு வாழ்ந்து வந்தனர். ஒவ்வொரு ஊரிலும் 'வெஸ்டரி' என்னும் சபையானது அவ்வூரின் நிருவாகத்தைச் செலுத்தி வந்தது. பிச்சைக்காரத் தொல்லை போன்றவைகளையும் அச் சபைகளே கவனித்துக் கொண்டன. எனினும் வறுமை, நாட்டுப்புறங்களிலும், நகர்களிலும் தலைவிரித்தாடியது. ஏழைகள் ஜின் என்ற ஒரு கீழான சாராயத்தைக் குடித்துவிட்டுத் தம்முள் சச்சரவிட்டுக் கொண்டனர். அவர்களுடைய பழக்க வழக்கங்கள் அருவருக்கத் தக்கனவாய் இருந்தன. கொடூரமான கோழிச் சண்டை, கரடிச் சண்டை போன்றவைகளில் அவர்கள் மகிழ்ச்சி கண்டனர். பெண்டிர் மல்யுத்தம் செய்வதைக் கண்டு களிக்கும் வழக்கமும் அப்போது காணப்பட்டது. சூதாட்டமும், குடியும், கொள்ளையும் எங்கும் மலிந்திருந்தன.

## கலைகளின் நிலை

ஆன் இராணியார் காலத்திலும் மூன்று ஜார்ஜுகளின் ஆட்சியிலும் இலக்கியமும், மற்றக் கலைகளும் நல்ல மேம்பாடுற்றன. பொதுவாக நாட்டின் கல்வித்தரம் உயர்ந்தது. பத்திரிகைகள் படிக்கும் வழக்கம் நகரங்களில் வளர்ந்தது. முதலாம் ஜார்ஜ் இறந்தபோது மூன்று நாளிதழ்களும், ஐந்துவார ஏடுகளும் இலண்

னியிலிருந்து வெளிவந்தன. அதன்பின் எல்லா நகரங்களும் தமக்கெனத் தனித்தனிப் பத்திரிக்கைகளைக் கொண்டு விளங்கின. இப் பத்திரிகைகளில் அறிஞர்கள் பலர் கட்டுரைகளை எழுதிப் பொதுமக்களின் அபிப்பிராயங்களை உருவாக்கினர். அரசும் அக் கருத்துக்களுக்குச் செவிசாய்த்தது.

### இலக்கியம்

18 ஆம் நூற்றாண்டுக் கால இங்கிலாந்தானது பல இலக்கிய மேதைகளைத் தோற்றுவித்தது. ஆன் இராணியார் காலத்தில் புகழுடன் விளங்கிய அடிஸன் (Addison) ஸ்விப்ட் (Swift), டெஃபோ (Defoe) போன்ற அறிஞர்கள் அவருக்குப் பின்னும் இலக்கியத்துக்குச் சேவை செய்து வாழ்ந்தனர். டெஃபோவால் எழுதப்பட்ட 'ராபின்ஸன் க்ருஸோ' (Robinson Crusoe) என்ற நூலும், ஸ்விப்ட் என்பார் எழுதிய 'கல்லிவரின் பிரயாணங்கள்' (Gulliver's Travels) என்ற நூலும் உரைநடை இலக்கியத்துக்கு இலக்கணங்களாய் விளங்குவன. ஆங்கில நாவல் தோன்றிய காலமும் இதுவே, ரிச்சர்ட்ஸன் (Richardson) என்பார் எழுதிய 'பமீளாவும்' (Pamela), ஹென்றி பீல்டிங் (Henry Fielding) என்பார் எழுதிய 'டாம் ஜோன்ஸும்' (Tom Jones), கோல்ட்ஸ்மித் (GoldSmith) என்பார் எழுதிய 'விகார் ஆப் வேக் பீல்டும்' நாவல் இலக்கியத்தின் சிகரத்தையே எட்டிவிடுகின்றன. இன்றும் படிப்பதற்கு அவை சுவையாயிருப்பதைக் கொண்டு அவற்றின் பெருமையை நாம் நன்கு உணரலாம். கோல்ட்ஸ்மித் என்பார் நகைச்சுவை செறிந்த நாவல்களை எழுதுவதில் வல்லவர். ஷெரிடியன் (Sheridian) போன்ற நாடகாசிரியர்கள் ஷேக்ஸ்பியரைப் பின்பற்றிப் பல நல்ல நாடகங்களை எழுதியுள்ளனர். அவற்றில் அக்கால நாகரிக வாழ்க்கை நன்கு படம் பிடித்துக் காட்டப்படுகிறது. அலெக்ஸாண்டர் போப் (Alexander Pope) என்பார் அக்காலக் கவிஞர்களுள் தலை சிறந்தவராவார், அவர் எழுதிய 'மனிதனைப் பற்றிய கட்டுரை' (Essay on Man) எனும் நூலில் ஆங்கில மொழியில் காணப்படும் சில நல்ல கருத்துரைகளைக் காணலாம். கிரே (Gray) என்பார் இரங்கற்பா (Elegy)எழுதுவதில் வல்ல கவிஞர். பிளாக் (Blake) பர்ன்ஸ் (Burns) போன்ற வேறு புலவர்களும் இக்காலத்தில் தோன்றினர். டாக்டர் ஜான்ஸன் (Doctor Johnson) என்பார் இலக்கியப்படைப்பாளர்களுள் மன்னராய்த் திகழ்ந்தார். அவரைச் சுற்றி எப்போதும் ஓர் அறிஞர் குழாம், இருந்து கொண்டேயிருக்கும். உரையாடும் கலையில் அவர் கைதேர்ந்தவர் அவரது ஆங்கில அகாரதியானது அவரது அறிவுக்கு ஓர் எடுத்துக் காட்டாகும். வோர்ட்ஸ் வொர்த் (Wordsworth) கோல்ரிட்ஜ்

(Coleridge) போன்ற புலவர்கள் வாழ்ந்த காலமும் இதுவே. இயற்கையின் எழிலைப் பாடுவதில் வோர்ட்ஸ்.வொர்த் இணையற்றவர், பாஸ்வெல் (Boswell) என்பார் எழுதியுள்ள டாக்டர் ஜான்ஸனின் சுயசரிதையானது, சுயசரிதைகளின் சிகரமாய் விளங்குகிறது. ஹொரேஸ் வால்போல் (Horace Walpole), செஸ்டர்பீல்டு பிரபு (Lord Chesterfield) போன்றவர்கள் அழகிய கடிதங்களை எழுதுவதில் வல்லர்களாய்த் திகழ்ந்தனர். ப்ளேக்ஸ்டோன் (Blackstone) என்பார் ஆங்கில அரசியலமைப்பின் சட்ட நுணுக்கங்களை நன்கு விவரித்து எழுதியுள்ளார். ஆடம் ஸ்மித் (Adam Smith) என்பார் எழுதிய 'நாடுகளின் செல்வம்' (Wealth of Nations) எனும் பொருளாதார நூல், தலையிடாக் கொள்கையை வலியுறுத்துகிறது. பென்த்தாம் (Bentham) எனும் அறிஞர் அரசியல் அறிவுதரும் பல நூல்களை எழுதியுள்ளார். வரலாறானது அறிவியல் முறைப்படி நன்கு ஆராயப்பட்டு எழுதப்பட்டது இக்காலத்தில்தான் எனலாம். எட்வர்டு கிப்பன் Edward Gibbon, 1737-94) என்பார் அக்காலத்தில் வாழ்ந்த வரலாற்றாசிரியர்களுள் தலைசிறந்தவர். அவர் எழுதிய 'ரோமாபுரிப் பேரரசின் வீழ்ச்சியும் அழிவும்' (The Decline and fall of the Roman Empire) என்ற வரலாற்றுநூல் ஈடும் எடுப்புமற்றதாகும். ரோமப் பேரரசின் பதின்மூன்று நூற்றாண்டு வரலாற்றை அவர் தமக்கே உரிய கம்பீர நடையில் இனிமையாக எடுத்தியம்பியுள்ளார். மூன்றாம் ஜார்ஜ் காலத்தில் வாழ்ந்த பர்க் (Burke) என்பார் ஒரு பெரிய அரசியல் தத்துவ ஞானியாவார். அவர் சொன்ன அரசியல் தீர்க்கதரிசனங்கள் யாவும் பிற்காலத்தில் உண்மையாயின.

**கட்டடக்கலை**

செல்வச் சீமான்களிற் பலர் பிறநாட்டு இலக்கிய மேதைகளை ஆதரித்தனர். பிரான்ஸிலிருந்து மான்டெஸ்க் (Montesque) போன்ற அறிஞர்கள் இங்கிலாந்தில் வந்து தங்கியிருந்தனர். பிரெஞ்சு மொழியும் இலக்கியமும் இங்கிலாந்தில் நன்கு கற்கப்பட்டன. அச்செல்வர்களிற் பலர் கலையுணர்ச்சி நிரம்பியவர்கள் அழகிய ஓவியங்களையும். தட்டுமுட்டுச் சாமான்களையும், அவர்கள் தங்கள் வீடுகளில்சேர்த்து வைத்தனர். மறுமலர்ச்சிக் காலக் கட்டடக்கலை 18 ஆம் நூற்றாண்டில் நன்கு வளர்ச்சி பெற்றது. சர் கிறிஸ்தொபர் ரென் (Sir Christopher Wren) என்பார் ஒரு பெரிய கட்டடக் கலைஞர். அவரைத் தவிர ப்ளென்ஹீம் மாளிகையைக் கட்டிய சர் ஜான் வான்பிரா (Sir John Vanbran) என்பாரும், கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தின் செனெட் மண்டபத்தைக் கட்டி முடித்த ஜேம்ஸ் கிப்ஸ் (James

Gibbs) என்பாரும், ஆக்ஸ்போர்டு கல்லூரியின் நாற்சந்தியைக் கட்டிய நிக்கோலாஸ் ஹாக்ஸ்மூர் (Nicholas Hawksmoor) என்பாரும் இலண்டன் மாளிகைகள் பலவற்றைக்கட்டிய ஜான்வுட்டும் (John Wood) ஆடம்ஸ் சகோதரர்களும் (Adams Brothers) கட்டடக்கலைக்கு ஈடில்லாச் சேவைகளைச் செய்து சென்றுள்ளனர். இக்கட்டடங்கள் அழகு பொருந்தியனவாயில்லாவிடினும் எல்லா வகையிலும் சௌகரிய முடையனவாயிருந்தன. மேலும், 18 ஆம் நூற்றாண்டில் நாடெங்கும் பல அழகிய தோட்டங்களும் பூங்காக்களும் அமைக்கப்பட்டன. சில தோட்டங்களில் மரங்களும் செடிகளும் ஒழுங்காகவும் வரிசையாகவும் பயிரிடப்பட்டன. அவை டச்சுத் தோட்டங்கள் போன்று அழகாய் அமைந்திருந்தன. வேறு சில, சிறுகாடுகளே போன்று அமைக்கப்பட்டிருந்தன. அவற்றில் செடி கொடிகளும் மரங்களும் இயற்கையாக வளர்க்கப்பட்டிருந்தன.

### மட்பாண்டம் வனையும் கலை

அழகிய மட்பாண்டங்களை வனையும் கலை இக்காலத்தில் நன்கு வளர்ச்சி பெற்றது. டெர்பி, வோர்செஸ்டர், செல்சியா போன்ற இடங்களில் இக் கலை ஆதரிக்கப்பட்டது. ஜோஸியா வெட்ஜ்வுட் என்பார் ஸ்டிராபோர்டுஷயரில் ஒரு மட்பாண்டத் தொழிற்சாலையை அமைத்தார். அவரால் செய்யப்பட்ட பாண்டங்களில் அழகிய பூ வேலைகள் காணப்பட்டன.

### ஓவியக் கலை

ஆங்கிலேயருக்கே உரிய தனிப்பட்ட ஓவியங்கள் 18 ஆம் நூற்றாண்டில்தான் வரையப்படுகின்றன. ஹோகார்த் (Hogarth) என்ற ஓவியப்புலவர், 'ஜின்லேன்' (Gin Lane) என்ற தமது ஓவியத்தில் சாதாரண மக்களின் வாழ்க்கையைச் சற்று மிகைப் படவே சித்திரிக்கிறார். வேறு பல அரிய படங்களையும் அவர் வரைந்துள்ளார். 1768 ஆம் ஆண்டில், 'ராயல் அகாடமி' (Royal Academy) என்ற ஓவியச்சாலை ஏற்படுத்தப்பட்டது. ஸர் ஜோஸ்வா ரெயினால்ட்ஸ் (Sir Joshua Reynolds) என்பார் அதன் தலைவராகத் திகழ்ந்தார்.

### இசைக்கலை

இசைக்கலையானது இந் நூற்றாண்டில் அவ்வளவாக வளரவில்லை. ஆங்கிலேய இசைவாணர் எவரையும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாவிடினும், ஹேண்டல் (Handle) என்ற ஜெர்மானிய இசைக்கலைஞர் இங்கிலாந்திலேயே பல்லாண்டுகள் வாழ்ந்து இசைக்கலையை வளர்த்தார். இத்தாலியச் சங்கீதத்தை அவர் இங்கிலாந்தில் அறிமுகப்படுத்தினார். புனித கதாகாலட்சேபங்களைச் செய்வதிலும் அவர் வல்லவராகத் திகழ்ந்தார்.

நாடகக்கலை

18 ஆம் நூற்றுண்டில் ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் மீண்டும் புத்துயிர் பெற்றன. சில காலம் அவை மாற்றுப் பெயர்களுடன் நடிக்கப்பட்டன. கொஞ்சகாலம் கழித்து மூலக்கதைகளே நடிக்கப்பட்டன. கார்ரிக் (Garrick) 1717-1779 என்ற நடிகர் அக் காலத்திய நடிகர்திலகமாகத் திகழ்ந்தார். அவர் ஷேக்ஸ்பியரின் நாடகங்களுக்குப் புத்துயிருட்டி வளர்த்தார். ஷேக்ஸ்பியர் விழாவை அவர் 1769 ஆம் ஆண்டில் தொடங்கினுர். சாரா சிட்டன்ஸ் (Sara Siddens) என்ற அழகிய நங்கை அக் காலத்திய ஒப்பற்ற நடிகையாகத் திகழ்ந்தார். 'லேடி மாக்பத்' (Lady Macbath) என்ற பாத்திரத்தைச் சிறப்புற நடிப்பதற்கு அக் காலத்தில் அவளைத் தவிர வேறொருவருமில்லை.

இங்ஙனம் 18 ஆம் நூற்றுண்டில் பல கலைகளும் நன்கு வளர்ச்சியடைந்தன. அதே சமயத்தில் சூதாட்டம் என்னும் தீய கலையும் நன்கு வளர்ச்சி பெற்றிருந்தது. ஆயிரக்கணக்காகப் பணத்தைச் செல்வர்கள் சூதாட்டத்தில் இழந்தனர். 'பாத்' (Bath) என்று அழைக்கப்பட்ட இடத்தில் இச் சூதாட்டங்கள் பலவும் நடைபெற்றன. செல்வச் சீமான்களும் சீமாட்டிகளும் அங்கு ஒன்று கூடினர். பல திருமணங்கள் அங்கு நிச்சயிக்கப் பட்டன. நடனமாதர்கள் அங்கு நடனமாடிய வண்ணமிருந் தனர். கேலியும் கூத்தும் கோலாகலமும் அங்குக் காணப் பட்டன. அக்கால உயர் வகுப்பாரின் ஆடம்பர வாழ்க்கைக்கும் ஒழுக்கமற்ற நிலைக்கும் 'பாத்' ஒரு சின்னமாக விளங்கியது.

கல்வியின் நிலை

கல்வி முறையானது பெரும்பாலும் பழைய நிலையிலேயே இருந்தது. தொடக்க கல்விக்காக அரசு செலவிடுதல் என்பது அக் காலத்தில் ஒரு புதுமையாக இருந்தது. ஸ்காட்லாந்தில் மட்டுமே தொடக்கக் கல்விக்காகப் பொதுமக்களின் பணம் செலவழிக்கப்பட்டது. இங்கிலாந்தில் கல்விநிலையங்களனைத்தும் தரும சிந்தனையுள்ள செல்வந்தர்களாலேயே நடத்தப்பட்டன. ஏழை எளியவர்களுக்கு இலவசக்கல்வி வழங்க ராபர்ட் ரேய்க்ஸ் (Robert Raikes) என்பார் ஏற்படுத்திய 'ஞாயிறு பள்ளிகள்' (Sunday Schools) நல்ல முயற்சி எடுத்துக் கொண்டன. அப் பள்ளிகள் ஞாயிற்றுக்கிழமைகளில் வறியோர்க்கு அறிவுதானம் வழங்கின. ஹன்ஞ மூர் (Hannah More) என்ற டோரி, மதநிலைய உயர்சீமாட்டி (Highchurch Woman) கிராமங்களில் இலவச வகுப்புக்களைத் தொடங்கி நடத்தி வந்தாள். 1181 ஆம் ஆண்டுக் குப் பின் தொடக்கக்கல்வியை நடத்தும் பொறுப்பை ஆங்

கிலிக்கர், இணங்காதார் முதலியோரது திருச்சபைகள் ஏற்று நடத்த முன்வந்தன. உயர்தரக் கல்வியின் தரம் உண்மையில் மிக உயர்வாகவே இருந்தது. இல்லையெனில், கானிங், பீல் போன்ற அறிஞர்களை அது தோற்றுவித்திருக்க முடியாது. எனினும் கல்லூரிகளில் பழைய கிரேக்க, இலத்தீன் நூல்களே அதிகமாகக் கற்பிக்கப்பட்டன. 1800 ஆம் ஆண்டில் ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகங்கள் தேர்வுமுறைகளை முதன் முதலில் தங்கள் கல்லூரிகளில் புகுத்தின. நாடெங்கும் பல இலக்கணப் பள்ளிகள் (Grammar Schools) கல்வியை ஓம்பினவேயினும், அவற்றைச் சரிவர நிருவகிக்க ஒரு மத்திய நிறுவனம் நாட்டில் இல்லாதது ஒரு பெருங்குறையாகவே இருந்தது.

### புதுமைக் கருத்துகள்

பதினெட்டாம் நூற்றுண்டானது, புதுமைக் கருத்துகளை உலகுக்கீந்த பல சிந்தனைச் சிற்பிகளைத் தோற்றுவித்தது. ஸர் தாமஸ் பிரௌன் (Sir Thomas Brown) என்பாரின் 'ரிலிஜியோ மெடிஸி' (Religio Medici) என்ற நூலிலும், ஆட்வே (Otway) என்பாரது நாடகங்களிலும் நாம் பழைமையின் வாடையை நுகர்ந்தாலும், ட்ரைடன், போப், ஸ்விப்ட், அடிஸன், ஜான்ஸன், செஸ்டர்பீல்டு போன்றுரின் நூல்களிலே புதுமை மணங்கமழ்வதைப் பார்க்கிறோம். தத்துவக் கொள்கைகளும் சமய சிந்தாந்தங்களும் பொது அறிவு (Common Sense) எனும் நெருப்பில் புடம்போடப்பட்டு மெருகேற்றப்பட்டன. டியிஸ்டுகள் (Deists) என்ற ஒருவகைத் தத்துவவாதிகள் தோன்றினர். கடவுள் ஒருவர் உண்டென்பது உண்மையென்றும் அவரை நம்பினுல் இயற்கைக்கு முரணுன சித்திகளைப் பெறலாமென்பதெல்லாம் பொய்யென்றும், அறிவுக்கு அப்பாற்பட்ட செய்கைகளை நம்பக்கூடாதென்றும் பிரசாரம் செய்தனர். பட்லர் என்பவர் எழுதிய அக்காலத்திய ஒப்பற்ற கிறிஸ்தவ நூலான 'அனலஜி ஆப் ரிலிஜன்' (Analogy of Religion) என்ற நூலில்கூட பகுத்தறிவுக்கேற்பவே ஒழுக்க விதிகளும் சமய உரிமைகளும் வகுக்கப்படுகின்றன. வால்ட்டேர் போன்ற பிரெஞ்சுப் பகுத்தறிவுவாதிகளின் வாடை ஆங்கில நூல்களில் வீசக் காண்கிறோம். ஸ்காட்லாந்தில் ஹார்ட்லி, ரீட், ஹட்சிசன் போன்ற பகுத்தறிவுவாதிகள் தோன்றி, புலன்களைப்பற்றியதும் பொது அறிவு பற்றியதுமான பல உண்மைகளை வெளியிட்டனர். ராபர்ட்ஸன் என்ற வரலாற்றுசிரியர் அங்குத்தோன்றி, வரலாறு எழுதும் முறையில் ஒரு புதுமையைப் புகுத்தினுர். ஆடம்ஸ்மித் என்பார் தடையிலா வாணிகக் கொள்கை என்னும் புதிய பொருளாதாரக் கொள்கையை வெளியிட்டார். டேவிட் ஹியூம் என்பார் அரசியலில், சமுதாய

ஒப்பந்தம், நடைமுறைக்கொவ்வாத உரிமைகள் போன்ற கொள்கைகளைச் சாடினர்.

நடைமுறைக்கு ஒவ்வாததும், அறிவுக்குப் புறம்பானதுமான கொள்கைகள் எல்லாத் துறைகளிலும் கண்டிக்கப்பட்டன. பென்த்தாம் என்பார் தலைமையில் 'பயனீட்டுவாதிகள்' (Utilitarians) என்பார் தோன்றி எந்த அரசியல் வினையையும் அதனால் விளையக்கூடிய நன்மை தீமைக்கேற்பவே எடைபோட வேண்டுமென்று போதித்தனர். வெறும் கொள்கைக்காகவோ பழைய வழக்கம் என்பதற்காகவோ முன்னோர்கள் சொன்னார்கள் என்பதற்காகவோ எதையும் செய்யக்கூடாதென்றும், பெரும்பான்மையான மக்களுக்குப் பெருமளவுக்கு நன்மை விளைக்கும் செயல்களையே அரசு செய்ய வேண்டுமென்றும் போதித்தனர். சிறைச்சாலைச் சீர்திருத்தங்கள் போன்ற சீர்திருத்தங்கள் இங்கிலாந்தில் ஏற்பட அவர்களது போதனைகளே காரணம்.

அரசியலிலும் பொருளாதாரத்திலும் இக்காலத்தில் ஒரு பெரும் புரட்சியை விளைவித்த ஒரு கருத்து 'தலையிடாக் கொள்கை' (Laissez Faire) எனப்படும். அரசியலிலும் முக்கியமாகப் பொருளாதார வாழ்விலும் அரசு தலையிடவே கூடாதென்று ஆடம் ஸ்மித், பென்த்தாம் போன்ற அறிஞர்கள் கூறினர். வாரம் (Rent), கூலி (Wage), வட்டி (Interest), இலாபம் (Profits) முதலியன அரசியல் தலையீடின்றேல் தானாகவே சமநிலை பெற்றுவிடுமென்று அவர்கள் வாதித்தனர். அவர்கள் வாதத்தையொட்டி டேவிட் ரிக்கார்டோ என்பார் செல்வப்பங்கீடு பற்றிய விதிகளை வகுத்தார். கூலிநிதிக் கொள்கையையும் (Wage Fund Theory) அவர் விவரித்தார். அதன்மூலம் நாட்டிலுள்ள மூலதனத்துக்கும் கூலியாட்களின் எண்ணிக்கைக்குமுள்ள தொடர்பை அவர் விளக்கினார். 1798 ஆம் ஆண்டில் மால்த்தஸ் என்பார், 'ஜனத்தொகையைப் பற்றிய கட்டுரை' (Essay on Population) என்ற தமது புகழ்பெற்ற நூலை எழுதினார். உணவுப்பொருள் உற்பத்தியின் வேகம், மக்கட் தொகைப் பெருக்கத்தின் வேகத்துக்கு ஒருக்காலும் ஈடாகமுடியாதெனவும், ஜனத்தொகை உற்பத்தியை மக்கள் மனக்கட்டுப்பாட்டுமுறையால் குறைத்துக் கொண்டாலன்றி வறுமையை நாட்டினின்றும் நீக்கமுடியாதென்றும் அவர் கூறினார். மட்கட்தொகைக்கேற்பவே கூலி நிருணயிக்கப்படுமென்றும், அரசின் தலையீட்டால் ஒன்றும் முடியாது என்றும் அவர் வாதித்தார். இந்தக் கொள்கைகளைச் சில குறிக்கோள் வாதிகள் (Idealists) கண்டித்தனர்.

வோர்ட்ஸ்வொர்த் எனும் புலவர் 'இயற்கையின் தூய்மை மிகுந்த திட்டம்' (Nature's purer Plan) என்ற கொள்கையைப் பரக்கக்கூறி, எல்லாம் நாளடைவில் நன்மையாகவே முடிய இயற்கை அருள் செய்யுமென்ற நம்பிக்கையை மக்களுக்கு ஊட்டினார். இயற்கையோடியைந்த வாழ்க்கை வாழ்வதன் அவசியத்தை வற்புறுத்தினார். சத்தே (Southey) எனும் புலவர் 'குவார்ட்டர்லி' எனும் பத்திரிகையில் தொழிற்சாலைகளையும், ஆலைகளையும் கண்டித்து எழுதினார். கோல்ரிட்ஜ் (Coleridge) எனும் அறிஞர் கிறிஸ்தவ சமயத்தை ஆதரித்து அதன்வழி நிற்றலே துயர்துடைக்கும் ஒரே மருந்தெனக் கூறினார். ஓவென் (Owen) என்பார் வேலை செய்யும் கூலியாட்களுக்கு நல்ல ஊதியம் தந்து நல்ல சூழ்நிலையை உண்டாக்கினால் உற்பத்தியும் இலாபமும் பெருகும் என்பதை நடைமுறையில் மெய்பித்துக் காட்டினார் தன்னிறைவுபெற்ற பொதுவுடைமைத் தொழிலகங்களை நிறுவும் இலட்சியக் கனவுகளை அவர் கண்டார். தாமஸ் ஸ்பென்ஸ் (Thomas Spence) என்பார் நிலத்தையெல்லாம் தேசிய மயமாக்குவதொன்றே எல்லாத் தீமைகளுக்கும் மருந்து எனக் கூறினார். வில்லியம் காப்பெட் என்பார் பல விசித்திரக் கருத்துகளை வெளியிட்டார். நாட்டுக் கடன் ரத்து செய்யப்பட வேண்டுமெனவும், செலாவணித்தாள்கள் (Paper Currency) வெளியிடப்பட வேண்டுமெனவும், இரவலர் சட்டம் ஒழிக்கப்பட வேண்டுமெனவும், பல சீர்திருத்தக் கருத்துக்களை அவர் தமது 'அரசியல் பதிவேடு' (Political Register) என்னும் பத்திரிகையில் வெளியிட்டு மக்களின் ஆதரவைப் பெற்றார்.

இங்ஙனம் 18 ஆம் நூற்றாண்டில் மாறுபட்ட பல கருத்துகள் தம்முள் மோதிக்கொள்கின்ற காட்சியை நாம் பார்க்கின்றோம். பழைய நிறுவனங்களான முடியரசு, பல்கலைக்கழகங்கள், திருச்சபை, உரிமைச்சாசனம் பெற்ற பரோக்கள் இவை ஒருபுறமிருக்க, அவற்றை மாற்றவேண்டுமென்ற விருப்பம் கொண்ட புரட்சிக் கருத்து நிரம்பிய இடைநிலை வகுப்பும் கடைநிலை வகுப்பும் இங்கிலாந்தில் உருவாவதை நாம் காண்கிறோம். அவர்களது விருப்பங்களெல்லாம் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே ஒன்றன்பின் ஒன்றாய் நிறைவேறின.

## சமயநிலை - மெத்தாடிஸ்ட் இயக்கம்

### மதநம்பிக்கை குறைவு

டியூட்டர்கள் காலத்திலும், ஸ்டூவர்ட்டுகள் காலத்திலும், மக்களிடம் முழுமதிபோல் காணப்பட்ட தெய்வபக்தியும், மதவுணர்ச்சியும், ஹனோவரியர்கள் காலத்தில் மூன்றாம் பிறைச்

சந்திரன் போல் தேய்ந்து மங்கிவிட்டது. 18 ஆம் நூற்றுண்டானது இங்கிலாந்தின் பகுத்தறிவுக்காலம். அறிவின் மிகுதி காரணமாக மக்கள் எதையும் ஆராயாமல் நம்ப மறுத்தனர். மந்திரம், மாயம் முதலியவைகளில் மக்களுக்கிருந்த நம்பிக்கை மாறிவிட்டது. அதே சமயத்தில் மதத்தில் அவர்கள் வைத்திருந்த நம்பிக்கையும் குறைந்துவிட்டது. திருச்சபைக்கு உள்ளும் புறமும், கிறிஸ்துவ மதத்திலேயே நம்பிக்கையில்லாதவர்களின் தொகை நாளுக்குநாள் பெருகிக்கொண்டே வந்தது. மதகுருமார்களும் தங்கள் கடமையை மறந்து, போக வாழ்க்கையிலீடுபட்டிருந்தார்கள். கோயில்களில் வழிபாடு நிகழ்த்தியோர் ஏதோ கடனுக்குச் சடங்குகளைச் செய்தனரேயன்றி, அவர்களிடம் எள்ளளவேனும் பக்தியில்லை. பெரிய பிஷப்புகள் அரசியல்வாதிகளாகவும், அரண்மனைவாசிகளாயும் பொழுதுபோக்கினரேயன்றித் தங்களது ஆளுகைக்குட்பட்ட இடங்களில் மதப்பிரசாரம் செய்ய அவர்கள் சிறிதும் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. திருச்சபை அதிகாரிகளில் கீழ்த்தரமானவர்கள், படிப்பும், பண்பும், ஒழுக்கமும் அற்றவராக அவர்கள் வாழ்ந்துவந்த கிராமமக்களைப் போன்றே இருந்தனர். எனவே சமயத்தைப் பற்றிப் பேசுவோரும் அதன்படி நடப்போரும் நாட்டில் குறைந்தனர். பாலிங்ப்ரோக் பிரபு போன்றவர்கள் தங்களை நாத்திகர்கள் என்று கூறிக்கொள்வதில் பெருமையடைந்தனர்.

### ஒழுக்கக் குறைவு

மக்களிடம் மதநம்பிக்கை குறைந்ததால், அவர்களின் ஒழுக்கமும் குறைந்தது. உலோகாயதம் (Materialism) நாட்டில் வளர்ந்தது. வால்போல் போன்றவர்கள் உலகியல் முன்னேற்றத்துக்காக எதையும், எப்படியும், செய்யலாம் என்ற கொள்கையை வளர்த்தனர். விக்குகள் தங்களை ஆட்சிபீடத்தில் நிலைக்கச் செய்வதற்காக வேண்டுமென்றே இலஞ்சத்தையும், ஊழலையும் நாட்டில் பரப்பினர். குடித்துவிட்டுத் தெருவில் ஆடுவதென்பது சர்வசாதாரணமாக இருந்தது. உயர் வகுப்பினர், போர்ச்சுகல் தேசத்திலிருந்துவந்த, போர்ட் (Port) என்ற ஒரு வகை சாராயத்தையும், தாழ்வகுப்பினர் ஜின் என்ற மலிவான போதைப் பொருளையும் அருந்தினர். ஒரு பென்னி கொடுத்தால் ஒருவன் போதை வருமளவுக்குக் குடிக்க முடிந்ததால், ஏழை எளியோரெல்லாம் வரைமுறையின்றிக் குடிக்க ஆரம்பித்தனர். 1750 ஆம் ஆண்டில் இலண்டனில் மட்டும் 1500 ஜின் கடைகள் இருந்தனவாம். குடிப்பழக்கத்தோடு அதனைச் சார்ந்த சூது, விபசாரம், போன்ற கெட்டபழக்கங்களும் நாட்டில் மலிந்தன. கொலையும், கொள்ளையும் பெருகின. வழிப்பறி செய்வதையே

தொழிலாகக்கொண்டு நூற்றுக்கணக்கான பேர் வாழ்ந்தனர். நாட்டில் பெரிய மனிதர்கள் என்று மதிக்கப்பட்டவர்களின் தனிப்பட்ட வாழ்க்கை மிக அருவருக்கத் தக்க முறையில் அமைந் திருந்ததால் சாதாரண மனிதர்கள் அவர்களையே. முன்மாதிரி யாகக் கொண்டனர். 18ஆம் நூற்றாண்டில் தண்டனைகளும் மிகக்கொடூரமானவைகளாக இருந்தன. சிறு குற்றங்களுக் கெல்லாம் பெருந்தண்டனைகள் கொடுக்கப்பட்டன. சான்றாகப் பன்னிரண்டு பென்ஸைத் திருடிவிட்ட ஒருவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. எனினும் குற்றவாளிகளைக் கண்டு பிடிக்கக்கூடிய போலீஸ்படை அக் காலத்தில் இல்லாமையால் பலர் துணிந்து திருட்டுத் தொழிலில் இறங்கினர். இன்னும் சிலர் துறைமுகங்களில் வரும் கப்பல்களுள் புகுந்து, அவற்றை உடைத்து, மாலுமிகளைக் கொன்று, கப்பல் பொருள்களைக் கவர்ந்து சென்றனர்.

வெஸ்லி சகோதரர்கள் – மெத்தாடிஸ்டுகள்

இங்ஙனம் நாட்டில் ஒழுக்கமின்மை ஒருபுறம் தலைவிரித் தாடிய சமயத்தில், மறுபுறம் கடுமையான தூய்மை வாழ்க் கையை மேற்கொண்டவர்களின் எண்ணிக்கையும் வளர்ந்தது. அவர்கள் 'மெத்தாடிஸ்டுகள்' என அழைக்கப்பட்டனர். (மெத் தாடிஸ்டுகள் என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு ஒழுங்குமுறை வாதிகள் என்பது பொருள்.) எதிலும் ஒருவித முறையையும் ஒழுங்கையும் அவர்கள் கையாண்டதாலேயே அவர்களுக்கு அப் பெயர் ஏற்பட்டது எனலாம். (மெத்தாடிஸம் என்ற கொள் கைக்குத் தந்தையாவார் ஜான்வெஸ்லி (John Wesley) என்னும் பெரியார்.) அவரும் அவரது சகோதரரான சார்லஸ் வெஸ்லி யுமே ஆரம்பத்தில் இக் கொள்கையைப் பரப்பியவர்கள். இந்த வெஸலி சகோதரர்கள், லிங்கன்ஷயரில் (Lincolnshire) எப்வொர்த் (Epworth) எனுமிடத்தில் ரெக்டராக (Rector) வேலை பார்த்து வந்த சாமுவேல் வெஸ்லி என்பாரது புதல்வர் கள். (அவர்கள், ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் பயின்ற வர்கள்.) அங்கே அவர்கள் படித்துக்கொண்டிருக்கும்போது விட்பீட்டு (Whitfield) என்ற இளைஞர் ஒருவரும் அவர்களுடன் சேர்ந்தார், இவர்கள் ஒரு சிறு சங்கமமைத்துக்கொண்டு ஆன் மீகப் பயிற்சிகளிலீடுபட்டனர். (அதிகாலையில் எழுந்து அவர்கள் ஆன்மீகப் பயிற்சிகளிலீடுபடுவது வழக்கம்.) இவர்களுடைய செயல்கள் அனைத்தும் வரையறைக்குட்பட்டதாயும், ஒழுங்காக வும் இருந்ததால் மற்ற இளைஞர்கள் அவர்களை ஒழுங்குமுறை வாதிகள் அல்லது மெத்தாடிஸ்டுகள் எனக் கேலியாக அழைத் தனர். (ஒழுங்கீனமும், தீயநடத்தையும், குடிகொண்டிருந்த ஆக்ஸ்போர்டு கல்லூரியில், அவர்களது நடத்தை விசித்திரமான

தாகவே மற்றவர்களுக்குத் தோன்றியது. ஜான்வெஸ்லி, படிப்பு முடிந்தவுடன் 1735 ஆம் ஆண்டு அமெரிக்காவிலுள்ள ஜார்ஜியா மாகாணத்துக்குச் சமயப் பிரசாரகராகச் சென்றார். அங்கே அவர் குடியேற்றவாசிகளோடு சண்டைபோட்டுக்கொண்டு மன முடைந்து இங்கிலாந்து திரும்பினார்.

ஜான்வெஸ்லி, இங்கிலாந்துக்குத் திரும்பியவுடன் இலண்டனில் தமது சங்கத்தை ஆரம்பித்தார் (1738). வரும் வழியில் அவர் ஜெர்மன் தேசத்தைச் சேர்ந்த மொராவியர்கள் Moravians) எனும் கூட்டத்தினர்பால பெரிதும் கவர்ச்சியுற்றார் அவர்களது சமயப்பற்றும், சமயப்பிரசார ஆர்வமும் அவருக்குப் பெரிதும் பிடித்திருந்தது. இங்கிலாந்துக்கு வந்தபின்னும், அவர், அவர்களோடு தொடர்பு வைத்துக்கொண்டிருந்தார். அவர்களது துணைக்கொண்டு அவர் 1789 ஆம் ஆண்டில் ஒரு பெரிய ஆன்மீக அனுபவத்தைப் பெற்றார். தம்முடைய பாவங்களெல்லாம் முழுமையாக மன்னிக்கப்பட்டுவிட்டதுபோல் அவர் உணர்ந்தார். அவ்வனுபவத்தை அவர் மாற்றம் (Conversion) என்ற பெயரால் குறிப்பிடுகின்றார். இலண்டனிலிருந்தபோது வெஸ்லி சகோதரர்களும், அவர்களது சகாக்களும், இரவு முழுவதும் கண் விழித்து ஆன்மீகச் சாதனைகளிலீடுபட்டனர். அவற்றால் அவர்களது உள்ளங்கள் புடம்போட்ட தங்கமெனத் தூய்மையால் மிளிர்ந்தன.

வெஸ்லி சகோதரர்களும், விட்பீல்டும் சேர்ந்து வேல்ஸிலும் இங்கிலாந்திலும் சமயப் பிரசாரம் செய்து வந்தனர். அவர்கள் ஆங்கிலிகத் திருச்சபையினின்றும் வெளியேறவில்லை; அதன் உறுப்பினர்களாயிருந்தே சமயக் கொள்கைகளை மக்களிடம் பரப்பினர். ஊக்கம் சிறிதுமின்றிச் சோம்பித்திருந்த ஆங்கிலிக மதகுருமார்களுக்கு, மெத்தாடிஸ்டுகளின் உற்சாகமும் உணர்ச்சியும், கோபத்தை மூட்டின. அவர்கள் மெத்தாடிஸ்டுகளைத் திருக்கோயிலில் அனுமதிக்க மறுத்துவிட்டனர். எனவே, அவர்கள் திறந்த வெளியில் நின்று பிரசாரம் செய்யலாயினர். அவர்களுடைய திறந்தவெளிக் கூட்டங்களுக்கு மக்கள் திரள்திரளாக கூடினர். விட்பீல்ட் என்பார் ஓர் ஆவேசப் பேச்சாளர். பேசுவனவற்றை அப்படியே நடித்துக் காட்டும் திறமையும் அவருக்குண்டு. பேசும்போதே அவர் மனமுருகி அழுதுவிடுவார். கூட்டத்திலிருப்பவர்களும் அவருடன் சேர்ந்து அழுவார்களாம். விட்பீல்ட் கால்வினிய மதக்கொள்கையில் நம்பிக்கையுடையவர். எனவே அவர் கால்வினிய மெத்தாடிஸ்டுகள் இயக்கம் என்ற ஒரு புதிய இயக்கத்தைத் தோற்றுவித்தார்.

(ஜான்வெஸ்லியும் கேட்போரின் இதயங்களைக் கவரும் வண்ணம் பேசுவதில் வல்லவர்.) அவரது கம்பீரமான குரலானது மிகத்தொலைவிலிருப்போர்க்கும் நன்கு கேட்குமாறு ஒலித்தது. எனவே, ஆயிரக்கணக்கான மக்கள் அவரது சொற்பொழிவுகளைச் செவிமடுக்க வந்தனர். தமது உருக்கமான சொற்பொழிவுகளால் கூட்டத்தினர் கண்களிலிருந்து அவர் பல தடவை கண்ணீரை வர வழைத்ததுண்டு. அவர் ஒரு தளரா உழைப்பினர். குறுக்கும் நெடுக்குமாகப் பல்லாயிரம் மைல்கள் அவர் நடந்தே சென்று (இங்கிலாந்தின் மூலைமுடுக்குகளிலெல்லாம் தம் கொள்கைகளைப் பரப்பினுர். தமது 80ஆம் வயதுவரை அவர் ஓயாது அங்ஙனம் உழைத்தார்.)

(வெஸ்லி தம்மைப் பின்பற்றியவர்களை ஒன்று சேர்த்து, அவர்களை ஒரு தனி ஸ்தாபனமாக அமைத்தார். ஏனெனில், ஆங்கிலிக்கர்கள் அவரைத் தங்களது திருச்சபையில் சேர்த்துக் கொள்ள மறுத்துவிட்டனர்.) அவர், இங்கிலாந்தைப் பல சுற்று வட்டாரங்களாகப் (Circuits) பிரித்து ஒவ்வொரு வட்டாரத் துக்கும் சுற்றிவரும் குருமார்களை அனுப்பி வந்தார். குருமார் களுக்கு அவரே தீக்ஷை வழங்கினுர். ஆண்டுக்கொருமுறை அவர் ஒரு மாநாட்டைக் கூட்டி விழா நடத்தினுர். 1784 ஆம் ஆண் டில் அவரது முதல் மாநாடு நடைபெற்றது. மொராவியர்களில் வழக்கப்படி அவர் சாதகர்களுக்கு வாரவகுப்புகளும் நடத்தி வந்தார்.

வெஸ்லி கடைசிவரைத் தம்மை ஆங்கிலிக்க மதஸ்தாபனத் தைச் சேர்ந்தவரென்றே சொல்லிக் கொண்டிருந்தார். அவர் தனிப்பட்ட மதம் எதையும் உண்டாக்கவில்லை. ஆனுல் நாளடை வில் அவரது கொள்கைகள் திரண்டு ஒரு சமயமாக வடிவெடுத் தன. பௌத்த மதம் எப்படி முதலில் இந்து மதத்தைச் சீர் திருத்துவான் வேண்டித் தோன்றி, நாளடைவில் தனி மதமாக மாறியதோ, அதே போன்றுதான் (மெத்தாடிஸமும் கிறிஸ்தவ மதத்தினின்றும் பிரிந்து தனி மதமானது.) (வெஸ்லியின் காலத்தில் ஆங்கிலிக்க மதகுமார்கள் பாமர மக்களை ஏவி, மெத்தாடிஸ்டு களுக்குப் பெருந்துன்பம் விளைவித்தனர்.) அவர்கள்மீது கல்லும் மண்ணும், சில சமயங்களில் மலமும் வீசப்பட்டன. நாய்கள் அவர்கள் மீது அவிழ்த்துவிடப்பட்டன. அவர்களது வீடுகளில் காலிகள் புகுந்து அட்டகாசம் செய்தனர். (ஆனுல் இவற்றை யெல்லாம் அவர்கள் பொறுத்துக்கொண்டனர்.) (தமக்கு இன்னு செய்தார்க்கும் அவர்கள் இனியவே செய்து, அவர்களின் நன்

மதிப்பை நாளடைவில் பெற்றனர். (மெத்தாடிஸ்டு இயக்கம் அமெரிக்காவிலும் பரவியது. புதிய உலகுக்கு அவர் ஒரு பிஷப்பை அனுப்ப விரும்பினர். அப் பிஷப்புக்கு ஞானஸ்நானம் வழங்கும் படி அவர் ஆங்கிலேய பிஷப்புக்களைக் கேட்டுப் பார்த்தும் பய னில்லை. பின்னர், அவரே ஒரு பிஷப்புக்கு ஞானஸ்நானம் கொடுத்து அமெரிக்காவுக்கு அனுப்பினர்.)

### வெஸ்லியின் போதனைகளின் பலன்கள்

வெஸ்லி, மக்களிடையே மனமாற்றத்தை உண்டாக்கவே பாடுபட்டார். லூதரைப் போன்று, இறைவன்மீதுள்ள நம் பிக்கையால் மட்டுமே ஒருவன் பாவமன்னிப்பைப் பெற முடியும் என்றும் இறையருளைப் பெற ஓயாது உழைக்க வேண்டும் என்றும் அவர் போதித்தார்; பக்தியின் பெருமையை எங்கும் பாராட்டிப் பேசினர். அவர் கடும்விரதங்களையும் ஆன்மீகக் சாதனைகளையும் வற்புறுத்தியதில் ஒரு ஜைனராகவும், ஜீவகாருண்யத்தை வற் புறுத்தியதில் ஒரு பௌத்தராகவும், பக்தியை வற்புறுத்தியதில் ஓர் ஆழ்வாராகவும் அல்லது நாயன்மாராகவும் காட்சி அளித்தார். பாமர மக்களிடையே பக்தி உணர்ச்சியையும், சமயப்பற்றையும், ஒழுக்கத்தையும் வளர்த்த பெருமை ஜான் வெஸ்லிக்குரியது. அவரது போதனையால் பொதுவாக நாட்டின் ஒழுக்க நிலை பெரிதும் உயர்ந்தது. குடி, கொள்ளை, கொலை முதலியன நாட்டில் குறைந்தன. கண்ணியம், கட்டுப்பாடு போன்ற பண்புகள் ஓர் சாதாரணத் தொழிலாளிகளிடமும் மலர ஆரம்பித்தன. எங்கும் ஓர் ஆன்மீக விழிப்பு ஏற்பட்டது. தூங்கி வழிந்துக் கொண்டிருந்த குருமார்கள் சமயப் பிரசாரத்தில் சுறு சுறுப்பாக ஈடுபடலானர்கள். நற்செய்தி பரப்புவோர் சங்கங்கள் (Evangelical Societies) ஆங்காங்கே தோன்றிச் சமயக்கொள் கைகளைப் பரப்பின். உயிர்கள்பால் அன்பு செலுத்த வேண்டிய தன் அவசியத்தையும், இன்னலுறும் மக்களுக்குச் சேவை செய்வ தின் இன்றியமையாமையையும் பலர் உணர்ந்தனர். 1780ஆம் ஆண்டில் ராபர்ட்ரெய்க்ஸ் (Robert Raikes) என்பார் ஏழை மாணவர்களுக்கு இலவசமாகக் கல்வி புகட்ட ஞாயிறுதோறும் வகுப்புக்கள் நடத்தினர், உழவர்களின்நிலை மேம்பட ஹன்ன மோர் (Hanna More) என்பார் உழைத்து வந்தார். ஜான் ஹாவர்டு (John Haward) (1726 - 1790) என்பார் சிறைச் சாலைச் சீர்திருத்தத்துக்காகப் பாடுபட்டார். அவரது முயற்சி யால் சிறுகுற்றங்களுக்கும் பெருந்தண்டனை வழங்கும் வழக்கம் மாறியது. ஒரு குற்றவாளியைத் தண்டிப்பது அவனைச் சீர்திருத் துவதற்கேயன்றி அவனைத் துன்புறுத்தவல்ல என அவர் போதித் றதார். எலிஸபெத் பிரை (Elizabeth Fry 1780 – 1845) என்

பெருமாட்டி, பெண்கைதிகளின் நிலை உயரப் பெரிதும் பாடு பட்டார். வில்லியம் வில்பர்போர்ஸ் (William Wilber Fore 1759-1853) என்பார் அடிமை வியாபாரத்தை ஒழிக்க அரும்பாடு பட்டார். அவரது முயற்சியின் விளைவாக 1815-ஆம் ஆண்டில் ஐரோப்பிய நாடுகளிடையே ஏற்பட்ட வியன்னு உடன்படிக்கையில் எல்லா ஐரோப்பிய நாடுகளும் அடிமை வியாபாரத்தைக் கைவிட முன்வந்தன. ஆனுல், அடிமை வியாபாரம் நின்றதே ஒழிய அடிமை முறை அப்போதும் ஒழியவில்லை.

இங்ஙனம் பல நன்மைகளுக்கு வித்திட்ட மெத்தாடிஸ்டு இயக்கம் சில தீமைகளுக்கும் காரணமாயிற்று. மகிழ்ச்சியால் துள்ளி விளையாடிக்கொண்டிருந்த மக்களிடம் ஒருவித மோன நிலை வளர ஆரம்பித்தது. மெத்தாடிஸ்டு முறையில் படித்த மாணவர்கள் சாதாரண விளையாட்டுகளையும் வெறுத்தனர். கலை, நாடகம் போன்ற துறைகளில் ஒருவித மந்தம் ஏற்பட்டது. பலர் ஒழுக்கமுள்ளவர்கள் போன்று நடித்துப் பாமரமக்களை ஏமாற்றித் திரிந்தனர். கபட சந்நியாசிகள் பலர் நாட்டில் தோன்றினர். மதத்தின் பெயரால் பல அக்கிரமங்கள் நடை பெற இவ்வியக்கம் வகைசெய்தது. ஆனுல், பொதுவாகப் பார்க்குமிடத்து இவ்வியக்கத்தால் தீமையைவிட நன்மையே பெரிதும் விளைந்ததெனலாம்.

# 15. பத்தொன்பதாம் நூற்றுண்டு இங்கிலாந்தின் சிறப்பியல்புகள்

## (Charteristics of Nineteenth Century England)

**அரசியல் துறை :** ஜனநாயகத்தின் வளர்ச்சி, கட்சிகளின் வளர்ச்சி, தல ஆட்சியிலும் குடியேற்ற நாடுகளிலும் ஜனநாயகம் பரவல்.

**சமுதாயத் துறை :** சமத்துவக் கொள்கை, சமயப்பொறைக் கொள்கை கூட்டுறவு உணர்வு.

**பொருளாதாரத் துறை:** தொழிற்சங்க இயக்கம், கூட்டுறவு இயக்கம், சமதர்மக்கொள்கை.

**அறிவுத்துறை :** விஞ்ஞான வளர்ச்சி.
**பேரரசின் வளர்ச்சி.**

## அரசியல் துறை

**ஜனநாயகத்தின் வளர்ச்சி**

அரசியல் துறையில் 19 ஆம் நூற்றுண்டு இங்கிலாந்தின் சிறப்பியல்பு ஜனநாயகத்தின் (Democracy) வளர்ச்சியாகும். மக்களுக்காக, மக்களால் நடத்தபெறும் மக்களாட்சி மலர்ந்த காலம் 19 ஆம் நூற்றுண்டுதான் எனலாம். அதற்கு முன்பெல்லாம் பாராளுமன்றம் செல்வமிக்க பெருநிலக்கிழார்களின் கைப்பாவையாகவே இயங்கியது. சாதாரணப் பொதுமக்களின் பிரதிநிதியாக அது விளங்கவில்லே. இந்நிலே 19 ஆம் நூற்றுண்டில் கொஞ்சம் கொஞ்சமாக மாற ஆரம்பித்தது. பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டங்கள் பல ஏற்பட்டன. அவற்றின் விளேவாக அதிகாரம் நிலப்பிரபுக்களின் கைகளிலிருந்து முதலில் நடுத்தர வகுப்பாருக்கும், பின்னர் ஏழைத் தொழிலாளர்களின் கைகளுக்

கும் மாறியது. 1832 ஆம் ஆண்டு ஏற்பட்ட பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டத்தின் விளைவாக நடுத்தர வகுப்பினர் வாக்குரிமை (Franchise) பெற்றனர். பெருநிலக்கிழார் களின் சல்வாக்கு மாய்ந்து, வணிகப் பெருமக்களின் கைகள் ஓங்கின. இதைக் கண்ட ஆலைத் தொழிலாளிகள் அரசியலில் தாங்களும் பங்குகொள்ள விரும்பிக் கிளர்ச்சி செய்த னர். 1867-ம் ஆண்டில் டிஸ்ரேலி என்ற பெருமகனுரின் முயற்சி யால் அத்தொழிலாளர் வர்க்கமும் வாக்குரிமை பெற்றது. 1884 ஆம் ஆண்டில் விவசாயத் தொழிலாளர்களும் வாக்குரிமை பெற்றனர், பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் பணம் படைத் தோரின் பிரதிநிதிகளாக மட்டும் இருந்த நிலை மாறிப் பாமர மக்களின் பிரதிநிதிகளாக மாறினர். பொதுமக்கட் சபை (House of Commons) உண்மையில் பொதுமக்களின் பிரதிநிதியாக மாறி யது இக் காலத்தில்தாஞகும்.

கட்சிகளின் வளர்ச்சி

பாராளுமன்ற ஆட்கி முறை நன்கு பயன்தர வேண்டுமாஞல் அதற்கு நாட்டில் நன்கு வேரூன்றிய, பலம் பொருந்திய இருகட்சி கள் தேவை. இருகட்சிகள் 18ஆம் நூற்ருண்டிலேயே இங்கிலாந் தில் தோன்றிவிட்டனவென்ருலும், பத்தொன்பதாம் நூற்ருண் டில்தான் அக் கட்சிகள் தமக்கேயுரிய திட்டவட்டமான கொள் கைகளுடன் உருவாயின. விக்கு, டோரி என்ற இரு கட்சிகளும் நாளடைவில் லிபரல், கன்சர்வேடிவ் கட்சிகளாக வடிவெடுத்தன 18 ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியிலும், 19ஆம் நூற்ருண்டின்முற் பகுதியிலும் நாட்டில் டோரிக் கட்சியினரே ஆட்சி பீடத்தில் அமர்ந்திருந்தனர். ஆனுல் 1832ஆம் ஆண்டுக்குப்பின் விக்குக் கட்சி யினர் மீண்டும் தலையெடுத்தனர். அதன் பின் இருகட்சிகளும் ஒத் துழைத்து, நாட்டின் சிக்கல்களை யெல்லாம் சமாளித்துச் செல்லும் காட்சியை நாம் காண்கிருேம். ஆரம்பத்தில் கட்சிகள் மத வேறு பாட்டை அடிப்படையாய்க்கொண்டிலங்கின. ஆங்கிலத் திருச் சபையைச் சேர்ந்தோர் டோரிக்கட்சியிலும், திருச்சபைக்குப் புறம்பானேர் விக்குக் கட்சியிலும் இருந்தனர். நாளடைவில் தொழிலாளி வரக்கத்தாரும் விக்குக் கட்சியில் சேர்ந்து தங்கள் உரிமைகளைப் பெறப் போராடலாயினர். இரு கட்சியினரும் மாறிமாறி ஆட்சிபீடத்தில் அமர்ந்தனரென்ருலும் ஒரு சாரார், இன்னொரு சாராரின் தயவையும், ஒத்துழைப்பையும் நாடுவது வழக்கமாகி விட்டது.

தல ஆட்சியிலும் குடியேற்ற நாடுகளிலும் ஜனநாயகம் பரவுதல்

மத்திய ஆட்சியில் மட்டுமன்றி, தல ஆட்சியிலும் (Local Government) ஜனநாயகக் கொள்கைகள் புகுந்தன. சாதாரண

மக்கள் தல ஆட்சியில் பெரிதும் பங்கு பெற்றனர். 1835 ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஒரு சட்டப்படி கார்ப்பொரேஷன்கள் சீர்திருத்தப்பெற்றன. 1884 ஆம் ஆண்டளவில் கவுன்டிகளில் (Counties) ஆட்சி செய்த சபைகளிலும் 1894 ஆம் ஆண்டில் ஜில்லா பாரிஷ் (Parish) போன்ற உள்ளூர் வட்டார ஆட்சிச் சபைகளிலும் பதவி வகித்த உறுப்பினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்ற வழக்கம் ஏற்பட்டது. ஜனநாயகக் கொள்கைகள் இங்ஙனம் தலநிருவாகத்தில் புகுந்ததோடு நில்லாமல், பிரிட்டனுக்குச் சொந்தமான குடியேற்ற நாடுகளிலும் பரவியது. பொறுப்பாட்சியானது (Responsible Government) கனடாவிலும் (1840), ஆஸ்திரேலியாவிலும் (1850-1890) தென் ஆப்பிரிக்கக் கேப் காலனியிலும் (1872) ஏற்பட்டது.

## சமுதாயத்துறை

### சமத்துவக் கொள்கை

ஆக்கத் தொழிற்புரட்சியின் விளைவாகவும், பிரெஞ்சுப் புரட்சியின் காரணமாகவும் இங்கிலாந்தின் சமுதாயத்தில் பல புரட்சிகரமான மாறுதல்கள் நிகழ்ந்தன. நிலப் பிரபுகளுக்கு இணையாகப் பணம் படைத்த ஒரு முதலாளி வர்க்கம் (Capitalists) நாட்டில் தோன்றியது. உடனே அவர்களுக்கு எதிராக ஒரு தொழிலாளர் வர்க்கமும் தோன்றிற்று. முதலாளிகள் தொழிலாளிகளைச் சுரண்ட ஆரம்பித்ததால் அரசாங்கம் பல வகைகளிலும் சமுதாயத்தின் காரியங்களில் தலையிட ஆரம்பித்தது குழந்தைகள் பெண்டிர் ஆகியோரைத் தொழிற்கூடங்களில் வேலைக்கமர்த்துவதைத் தடுக்கவும் அங்குச் சுகாதார வசதிகளைப் பெருக்கவும் பல சட்டங்கள் தோன்றின. பிரெஞ்சுப் புரட்சியின் தாரகமந்திரங்களான சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்(Liberty Equality Fraternity) ஆகிய கொள்கைகள் நாடெங்கும் பரவின, சாதாரண மக்கள் செல்வாக்கு மிக்க உயர் வகுப்பாரோடு சமமாக வாழ விரும்பினர். அம்மக்களின் பிரதிநிதிகள் பொதுமக்கட்சபையுள் நுழைந்து, அவர்கள் கல்வியறிவு பெறுவதற்கான வழிவகைகளைச் செய்தனர். 1833 ஆம் ஆண்டுவரை மக்களிடையே கல்வியறிவு பரப்பும் திருப்பணியைத் திருச்சபைகள் (Churches) மட்டுமே செய்து வந்தன. அதன் பின்னர் கல்விச் சட்டங்களும் அரசாங்கமும் மக்களது கல்விச் சங்கங்களின் பணிகளை மேற்பார்வையிட ஒரு பிரிவிகவுன்சில் கமிட்டி ஏற்பட்டது. ஆக்ஸ்போர்டு கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்களின் படிப்பு முறையையும் நிருவாகத்தையும் ஆராய 1850ஆம் ஆண்டில் இரு ராயல் கமிஷன்கள்

நியமிக்கப்பட்டன. 1870 ஆம் ஆண்டில் ஏற்பட்ட கல்விச் சட்டமானது எல்லாக் குழந்தைகளுக்கும் ஆரம்பக் கல்வியை இலவசமாக வழங்கியது.

சமயப் பொறைக் கொள்கை

சமூகத் துறையில் சமத்துவத்தை வலியுறுத்திய ஆங்கில மக்கள், சமயத் துறையிலும் சகோதரத்துவத்தை நாடினர். அதன் விளைவாக, சமயப்பொறை, நாட்டில் நன்கு நிலைநாட்டப் பெற்றது. ஆங்கிலிகத் திருச்சபையைச் சேராதோர் தலஆட்சியில் பங்கு பெறுவதைத் தடுத்துவந்த சோதனைச் சட்டம், கார்பபொரேஷன் சட்டங்கள் (Test and Corporation Act) 1828ஆம் ஆண்டில் ரத்து செய்யப்பட்டன. கத்தோலிக்கர்கள் மீதிருந்த தடைகளை 1829 ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஒரு சட்டம் நீக்கியது. பல்கலைக் கழகங்களில் ஆங்கிலிகர்அல்லாதார் சேர்வதைத் தடுத்த சோதனைகளை 1871ஆம் ஆண்டுச் சட்டமொன்று ரத்து செய்தது.

கூட்டுறவு உணர்வு

சமுதாயத்தில் எங்குப் பார்த்தாலும் ஒரு கூட்டுறவு உணர்ச்சி தோன்ற ஆரம்பித்தது. 18ஆம் நூற்றாண்டில் தனிப்பட்டோரின் முயற்சிகள் எங்ஙனம் தலைதூக்கி நின்றனவோ, அங்ஙனமே 19ஆம் நூற்றாடில் பலபேர் சேர்ந்த குழுக்களின் செயலும் செல்வாக்கும் பெருக ஆரம்பித்தன. எதையும் மக்கள் ஒன்றுசேர்ந்து கூட்டு முயற்சியால் சாதிக்கக் கற்றுக்கொண்டனர். (கல்வியைப் பரப்பவென்றும், பிராணிகளுக்குத் தீங்கு செய்வதைத் தடுக்கவென்றும் தொழிலாளரின் நலன்களைப் பாதுகாக்கவென்றும் இன்னபிற காரணங்களுக்காகவும் எண்ணற்ற கழகங்கள் நாடெங்கும் தோன்றின.) இங்ஙனம் தோன்றிய சங்கங்களை அரசு ஆதரித்து அவை நன்கு வளர்வதற்கான வழிகளைச் செய்து கொடுத்தது. அரசும் மக்களிடையே இயல்பாயெழுந்த சங்கங்களும் (Voluntary Associations) ஒத்துழைத்ததால்தான் பிரிட்டனில் பலப்பல சீர்திருத்தங்கள் எளிதில் ஏற்பட முடிந்தது. கல்வி, மருத்துவம், சுகாதாரம் போன்ற துறைகளில் ஏற்பட்ட வியத்தகு மாற்றங்களைச் சாதித்தவை அத்தகு சங்கங்களேயாம். மக்கட் குழுக்கள் அரசாங்கத்தோடு ஒத்துழைத்ததைப் போன்றே, தல நிருவாகங்களும் மத்திய நிருவாகத்தோடு எல்லா வகையிலும் ஒத்துழைத்தன.

## பொருளாதாரத் துறை

தொழிற் சங்க இயக்கம்

ஆக்கத் தொழிற் புரட்சியின் விளைவாக இங்கிலாந்தில் தொழிலாளி, முதலாளி என்ற இரு வர்க்கங்கள் தோன்றின

என்று ஏற்கனவே கூறினோம். இவ்விருவரில் தொழிலாளிகள், முதலாளிகளைவிட எல்லாவகையிலும் தாழ்ந்தவர்களாயிருந்தனர். வலிமை மிக்க முதலாளிகளிடமிருந்து, வலிமை குறைந்த தொழிலாளிகள் பாரபட்சமற்ற நியாயத்தைப் பெற முடியவில்லை. எனவே, அவர்கள் தங்கள் உரிமைகளை வற்புறுத்த வேண்டிற் தொழிற் சங்கங்களைத் (Trade Unions) தங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்டனர். இத்தகைய சங்கங்கள் ஏற்படுவதை 1824ஆம் ஆண்டுவரை அரசு தடுத்துவந்தது. அதன்பின் தொழிற்சங்கங்களின் மீது விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் சிறிது சிறிதாகத் தளர்த்தப்பட்டு, இறுதியில் 1871ஆம் ஆண்டில் அவை சட்டபூர்வமான நிறுவனங்களாக ஒப்புக்கொள்ளப் பட்டன.

கூட்டுறவு யக்கம்

பொருளாதாரத் துறையில் இக் காலத்தில் மலர்ந்த இன்னொரு கருத்து கூட்டுறவுஇயக்கம் (Co-operative Movement) பற்றியதாகும். ராபர்ட்ஓவன் (Robert Owen) என்பவரது சிந்தனையில் உதித்த இக் கூட்டுறவுக் கருத்தானது நாளடைவில் நாடெங்கும் பரவியது. பொருள்களை வினியோகிப்பதில் கூட்டுறவு இயக்கம் பெரும் வெற்றி பெற்றது. நல்ல பண்டங்களை மலிவான விலையில் இம் முறையால் தொழிலாளர்கள் பெற்றனர். அதோடு ஜனநாயக முறையில் தொழில்களை அமைத்து நடத்துவதிலும் பல தொழிலாளர்கள் நல்ல பயிற்சி பெற்றனர். இலாபங்களை அவர்களே தங்களுக்குள் பகிர்ந்து கொண்டனர். எனினும், வினியோகத் துறையில் ஏற்பட்ட அளவு, உற்பத்தித் துறையில் கூட்டுறவு இயக்கத்திற்கு வெற்றி ஏற்படவில்லை. ஏனெனில், தொழில்களை நன்கு நடத்தவல்ல துணித்திறம் படைத்த ஒரு சில தொழில்மேதைகளைச் சரிவரப் பயன்படுத்திக் கொள்ளவும், அவர்தம் திறமைக்கேற்ற ஊதியம் அளிக்கவும் தொழிலாளர்கள் தவறிவிட்டனர்.

சமதர்மக் கொள்கை

நாட்டின் செல்வத்தை உற்பத்திச் சாதனங்களிடையே வினியோகிப்பதிலும் கூட்டுறவு இயக்கம் சரியான வெற்றி பெறவில்லை. எனவே, சமதர்மம் அல்லது சோஷியலிசம் என்ற கொள்கையை ராபர்ட் ஓவன் போன்றோர் விதந்து ஓதினர். நாட்டின் உற்பத்திச் சாதனங்கள். போக்குவரவுச் சாதனங்கள் அனைத்தையும் தேசீய உடைமையாக்கிவிட வேண்டுமென்பது அவர்கள் திட்டம். மக்கள் நலன்களை வளர்க்க, அரசு எல்லாத் துறைகளிலும் தலையிடல் இன்றியமையாதது என்றும் அவர்கள்

கருதினர். தனிப்பட்டோர், சமுதாயம் இவர்களது காரியங்களில் அரசு தலையிடக்கூடாது என்ற கொள்கை (Laissez Paire) மாய்ந்து விட்டது.

## அறிவுத் துறை

### விஞ்ஞான வளர்ச்சி

19ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் தொழில்வளம் வளர்ந்ததைப் போன்றே அறிவுவளமும் அதிகரித்தது. விஞ்ஞானம் எல்லாத் துறைகளிலும் புகுந்து பெரும் மாறுதல்களை ஏற்படுத்தியது. நீராவியின் உதவியால் ரெயில் வண்டிகளும் கப்பல்களும் இயங்க ஆரம்பித்ததால் நாட்டின் பல பகுதிகளும் இணைக்கப் பெற்றதோடு, பிரிட்டனும் அதன் குடியேற்ற நாடுகளும் நன்கு பிணைக்கப்பெற்றன. 1848ஆம் ஆண்டிலிருந்து தந்தி முறையும் நாட்டின் பல பகுதிகளை இணைத்தது. மின்சாரத்தின் உதவியால் நாட்டின் தொழில்கள் யாவும் விரைவாக வளர்ந்தன. டார்வின் (Darwin) என்பார் கண்டுபிடித்த பரிணாமக் கொள்கையும் (Theory of Evolution), டால்ட்டன் (Dalton) என்பார் கண்டுபிடித்த அணுக்கொள்கையும் (Atomic Theory) அறிவியலில் பெரும் புரட்சியை ஏற்படுத்தின. உயிர்நூல் (Biology) புவிநூல் (Geology). வேதியல் (Chemistry) முதலிய துறைகளில் வியத்தகு முன்னேற்றங்கள் பல இந் நூற்றாண்டில் ஏற்பட்டன.

## பேரரசின் வளர்ச்சி

பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்து, அமெரிக்காவில் இருந்த ஒரு பேரரசை இழந்தது. எனினும், பத்தொன்பதாம் நூற்றாண்டில் அஃது இன்னொரு பெரும் பேரரசுக்குத் தலைமை தாங்கும் வாய்ப்பினைப் பெற்றது. 1815ஆம் ஆண்டிலிருந்து பிரிட்டன், ஐரோப்பிய விவகாரங்களில் தலையிடும் பழக்கத்தைக் கைவிட்டது. 1914ஆம் ஆண்டுக்குள் அது கலந்து கொண்ட ஒரே ஐரோப்பியப் போர் கிரிமியப் போரேயாகும் (Crimean War) ஆனால் குடியேற்ற நாடுகளைப் பெருக்குவதற்காக இந்தியாவிலும் எகிப்திலும், ஆப்கானிஸ்தானத்திலும், ஆப்பிரிக்காவிலும், தென்னாப்பிரிக்காவிலும், கனடாவிலும் பிரிட்டிஷ் படைகள் போரிட்டவண்ணமிருந்தன. இந்தியாவில் கிளைவும் வாரன்ஹேஸ்டிங்சும் அமைத்துச் சென்ற அடிப்படையின்மேல் கார்ன்வாலிசும் (Cornwallis), வெல்லஸ்லியும் (Wellesly) உறுதியான பேரரசு மாளிகையை எழுப்பினர். காஸில்ரே (Castlereagh) என்ற வெளிநாட்டு அமைச்சரின் கொள்கையினாலும், மன்ரோ(Munroe) என்ற அமெரிக்க ஜனாதிபதியின் ஒத்துழைப்பினாலும் பிரிட்டன்,

தென்னமெரிக்க வியாபாரத்தில் பெரும்பங்கு பெற்றது. கனடாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையே இருந்த எல்லையில் படைக் கலைப்பு (Disarmament) ஏற்பட்டு,இரு நாடுகளுக்கிடையே நேசம் நிலவியது. ஆஸ்திரேலியாவிலும் நியூஸிலாந்திலும் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் ஏற்பட்டன. சூயெஸ் கால்வாயில் பிரிட்டன் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டிக்கொள்ள டிஸ்ரேலி (Disraeli) என்னும் ஆங்கிலப் பிரதமர் வழிசெய்தார். அதன்பின் எகிப்திய நாட்டு விவகாரங்களிலும் பிரிட்டன் பெரிதும் ஊக்கம் காட்டியது. அங்கு ஏற்பட்ட ஓர் அரபிக் கலகத்தை அடக்கியதன் மூலம், பிரிட்டன் 1833 ஆம் ஆண்டளவில் அங்கும் தனது செல்வாக்கை நிலைநாட்டியது. சூடானும் 1898ஆம் ஆண்டில் பிரிட்டனுக்கு அடிபணிந்தது. செசில் ரோட்ஸ் (Cecil Rhodes) போன்றவர்களின் அயரா உழைப்பால் தென்னாப்பிரிக்காவிலும் ஆங்கிலேயர் குடியேற்ற நாடுகளை உண்டாக்கினர். ஹாங்காங் என்ற சீனத் துறைமுகத்தைக் கைப்பற்றியதால் சீனாவுக்கும் பிரிட்டனுக்கும் வியாபாரம் பெருகியது. ஜிப்ரால்ட்டர், மால்டா போன்ற இடங்களைப் பெற்றதன்மூலம் மத்தியதரைக்கடலிலும், சிங்கப்பூர், கொழும்பு போன்ற துறைமுகங்களைப் பெற்றதால் இந்தியப் பெருங்கடலிலும் ஆங்கிலேயர் தனி ஆதிக்கம் செலுத்தினர். இங்ஙனம் 19 ஆம் நூற்றாண்டில் பிரிட்டன், உலகின் பல்வேறு பாகங்களிலும் குடியேற்ற நாடுகளை நிறுவுவதில் வெற்றி பெற்றது. அத்துடன் கனடா, ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா முதலிய குடியேற்ற நாடுகளுக்குத் தருணம் வந்தபோது டொமினியன் அந்தஸ்தை (Dominion Status) வழங்கி, அவற்றைத் தனக்குச் சமமான கூட்டாளிகளாக ஆக்கிக் கொள்ளவும் பிரிட்டன் தயங்கவில்லை. ஸ்காட்லாந்துக்கும் இங்கிலாந்துக்கும் இருந்த பகைமை 18ஆம் நூற்றாண்டில் மாறி நட்பேற்பட்டது போல், 19ஆம் நூற்றாண்டில் அயர்லாந்தோடு நட்புரிமையினை வளர்க்கப் பிரிட்டன் பாடுபட்டது. டேவிட் ஓ கானல் (David O' Connell) என்பவரது தலைமையில் ஏற்பட்ட கலகங்கள் (1841-48) பிரிட்டனின் ஐரிஷ் கொள்கையைப் பெரிதும் மாற்றியமைத்தன. இறுதியில் கத்தோலிக்கர்கள் விடுதலை பெற்றதோடு அயர்லாந்தும் சுதந்திரம் பெற்றது.

இங்ஙனம் அரசியல் துறையில் ஜனநாயகக் கொள்கைகளின் மலர்ச்சிக்கும், பேரரசின் பெருக்கத்துக்கும், பொருளாதாரத் துறையில் வாணிகச்சிறப்புக்கும், தொழிற்சங்க வளர்ச்சிக்கும், சமுதாயத்துறையில் நவீன விஞ்ஞான வாழ்வின் மலர்ச்சிக்கும் பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டு இங்கிலாந்தின் வரலாறு, சிறப்புற்றுத் திகழ்கிறது எனலாம்.

# 16. வாட்டர்லூவுக்குப் பின் இங்கிலாந்தின் நிலைமை (1815-1822)

## (England After Waterloo)

**அரசியல் நிலைமை-**

மன்னர், மந்திரிகள், கட்சிகள், சீர்திருத்தவாதிகள்.

**சமூகப் பொருளாதார நிலைமைகள்:**

வளமற்ற அமைதி, தானியச் சட்டமும் வருமானவரி ரத்தும், தொழிலாளிகளின் அவலநிலை, பொருள் தட்டுப்பாடு.

**1817ஆம் ஆண்டுக் கலவரங்கள்:**

ஸ்பா பீல்ட்ஸ் கூட்டம்—அரச துரோகமும் அடக்கு முறைகளும், மான்ச்செஸ்டர் ஊர்வலம், பீட்டர்லூ படுகொலை, ஆறு சட்டங்கள், கேட்டோ தெருச்சதி, இராணிபற்றிய சிக்கல்.

1793 ஆம் ஆண்டு முதல் ஐரோப்பாவையும் இங்கிலாந்தையும் அலைக்கழித்துவந்த புரட்சிப் புயல் 1815-இல் ஒருவாறு ஓய்ந்தது. மன்னர்களும் மக்களும் ஏதோ ஒரு நீண்ட கெட்ட கனவினின்று விடுபட்டதுபோல் உணர்ந்தனர். இனியும் தங்களது சுதந்திரத்துக்கு ஆபத்து நேராது என்ற நினைவால் அவர்களது இதயங்கள் குளிர்ந்தன. இங்கிலாந்து மக்களோவெனில், தங்களுக்கு நல்ல காலம் தொடங்கிவிட்டதாகவும், சீருஞ்சிறப்புமிக்க இங்கிலாந்து உருவாகப் போவதாகவும் எண்ணி இறுமாந்தனர். 'மழை விட்டும் தூவானம் விடவில்லை' என்பதுபோல், போர்கள் ஓய்ந்த போதிலும் அவற்றால் விளையும் தீய பலன்கள் சில ஆண்டுகளுக்காவது தொடரும் என்பதைப் பெரும்பான்மையான ஆங்கிலேயர் அப்போது உணராமற் போயினர். நாட்டில் அமைதி, வீட்டில் வளம் இவற்றை எதிர்பார்த்த அவர்கள் ஏமாந்தனர். பஞ்சமும், பிணியும், வேலையின்மையும், கொலையும், கொள்ளையும் கலகங்களும் நாடெங்கும் தோன்றலாயின.

## அரசியல் நிலைமை

### மன்னர்

வாட்டர்லூ போர்க்களத்தில் வெலிங்டன் பிரபு தமது வெற்றிக் கொடியை நாட்டியபோதெல்லாம், இங்கிலாந்தின் மன்னராயிருந்த மூன்றும் ஜார்ஜ், அவ் வெற்றியைப் பாராட்டி மகிழ்ச்சியடையக் கூடாத மனநிலையிலிருந்தார். 1810ஆம் ஆண்டி லிருந்தே அவர் தமது சுயநினைவை இழந்துவிட்டார். விண்ட்ஸர் (Windsor) மாளிகையில் அவர் இருந்தும் இல்லாத நிலையில் அடை பட்டுக் கிடந்தார். எனவே, ஆட்சிப் பொறுப்பெல்லாம் அவரது தனயனுன நான்காம் ஜார்ஜின்மீது விழுந்தது. 1820இல் மூன்றும் ஜார்ஜ் இறக்கும்வரை அவர் காப்பாளராகவும், அதன்பின்னர் 1830 வரை மன்னராகவும் ஆட்சிபுரிந்தார். அவர் திறமை மிக்கவர்; மனிதர்களை எடை போடுவதில் வல்லவர். 1814 ஆம் ஆண்டில் இங்கிலாந்துக்கு வந்த பல ஐரோப்பிய மன்னர்கள் அவரது கௌரவமான நடத்தையையும், விருந்துபசரிக்கும் தன் மையையும் வியந்து போற்றினர். வெளிநாடுகளில் அவருக்கு நல்ல புகழ் இருந்தது. ஆனால், உள்நாட்டில் அவர் பெருமை குன்றியது. ஏனெனில், அவர் ஓயாது குடித்தார்; சூதாடினர்; காமக்களியாட்டங்களில் ஈடு பட்டார்; பணத்தைத் தண்ணீர் போல் செலவு செய்தார்; பெற்ற தந்தையை அசட்டை செய் தார்; கட்டிய மனைவியைப் பழிவாங்கினர்; தம் ஒரே புதல்வனைக் கொடுமைப்படுத்தினர்; தொன்று தொட்டு இங்கிலாந்தின் மன்னர்கள் காப்பாற்றி வந்த கண்ணியம், கௌரவம் முதலிய வற்றைக் காற்றில் பறக்கவிட்டார்.

### மந்திரிகள்

நெப்போலியப் போர்களை வெற்றியுடன் நடத்திய டோரிக் கட்சியினர், போர் முடிந்த பின்பும் தொடர்ந்து பதவியிலிருந் தனர். 1812இல் பெர்சிவல் (Perceval) என்னும் பிரதமர் கொல் லப்பட்ட பின், லிவர்ப்பூல் பிரபு (Lord Liverpool) அப்பதவியில் அமர்ந்தார். அடுத்த 15 ஆண்டுகளுக்கு அவரது மந்திரி சபை நீடித்தது. அவர் குறிப்பிடத்தக்க சிறப்பியல்புகள் ஏதுமற்றவர் எனினும், சகாக்களை ஒன்று சேர்த்து வழி நடத்துவதில் வல்லவரா யிருந்தார். யாரிடமும் இனிமையாகப் பழகும் இயல்பும், எதிரிகளை மடக்கி வாயடைக்கும் திறமையும் அவருக்கு அரசியல் வாழ்வில் வெற்றியைத் தேடித் தந்தனவெனலாம். அவரது அமைச்சரவை யில் மாற்றம் விரும்பாத மிதவாதிகளே அதிக இருந்தனர். அவர் களுள் முக்கியமானவர்கள் உள்நாட்டு அமைச்சராயிருந்த சிட் மவுத் பிரபும் (Lord Sidmouth), வெளிநாட்டமைச்சராயிருந்த காஸில்ரேபிரபுவும் (Lord Castlereagh), கருவூல அமைச்சராயிருந்த

எல்டன் பிரபுவும் (Lord Eldon) ஆவர். சிட்மவுத் பிரபு நிதானப் போக்கினர்; எனினும் தைரியமிக்கவர். நெருக்கடியான நேரங்களில் அவர் காட்டிய உறுதியும் வீரமும் உண்மையில் மெச்சத்தக்கவை. காஸில்ரே பிரபு ஒழுக்கமும் சீலமும் கொண்ட உத்தமர். ஆனால் மக்களைக் கவரும் சக்தி ஒரு சிறிதும் அவரிடமில்லை. புன்னகை அவருக்குப் புரியாத ஒன்று; பேச்சுத் திறமை கிஞ்சித்தும் கிடை-யாது. எனவே, பாராளுமன்றத்தில் அவரது சொற்பொழிவுகளைக் கிண்டல் செய்து, எள்ளி நகையாடுவது அவரது எதிரிகளுக்கு எளிதாயிருந்தது. நெப்போலியப் போர்களின்போது, ஐரோப்பியக் கூட்டுறவைக் கட்டிக்காத்தும், சமாதானப் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றபோது இங்கிலாந்தின் பிரதிநிதியாக வியன்னா மாநாட்டில் கலந்து கொண்டும் அவர் அரும்பணியாற்றியவர். ஆனால், 1815-க்குப்பின் அவரதுபுகழ் மங்கியது. பிற்போக்குவாதி என்ற பெயர் எப்படியோ அவருக்கு ஏற்படலாயிற்று. 1822-இல் கானிங் பிரபு வெளிநாட்டமைச்சர் பதவியைக் கைப்பற்றிய பின்னர்தான் மந்திரி சபை வெளிநாட்டுக் கொள்கையில் தாராளத் தன்மையுடையதாக மாறியது எனச் சிலர் கூறுவர். இக் கூற்று அவ்வளவு பொருத்தமானதன்று என்பதைப் பின் வரும் அத்தியாயங்களில் பார்ப்போம்.

கட்சிகள்

விக்குக் கட்சியினர் இக்காலத்தில் மிகப் பலவீனமான நிலையில் இருந்தனர். அதன் தூண்போன்று விளங்கிய க்ரென்வில் (Crenville) 1818-இல் டோரிக் கட்சியில் சேர்ந்துவிட்டார். விக்குகளின் தலைவராயிருந்த க்ரே பிரபு உற்சாகமிழந்து அரசியலிலிருந்து ஒய்வு பெற்றுவிட்டார். புதிய தலைவராக வந்த லான்ஸ்டவுன் (Landsdowne) என்பாரும், பொதுமக்கள் கட்சித் தலைவராக இருந்த பொன்சன்பி (Ponsonby) என்பாரும் திறமையற்றவராயிருந்தனர். விட்பிராண்ட் (Whitbrand) ரோமில்லி (Romilly) போன்ற திறமைசாலிகள் மனமொடிந்து தற்கொலை செய்துகொண்டனர். ஹார்னர் (Horner) என்ற பொருளியல் நிபுணரும் இளவயதிலேயே அகால மரணமடைந்தார் இத்தகைய பல எதிர்பாராத துரதிர்ஷ்டங்களால் விக்குக் கட்சி, தக்க தலைவர்கள் இன்றித் தவித்தது. தீவிர சீர்திருத்தவாதிகளையும் அக்கட்சி புறக்கணித்தது. எனவே, பர்டெட் (Burdett), கார்ட்ரைட் (Cartwright), ஹன்ட் (Hunt). காப்பெட் (Cobbett) போன்ற அறிஞர்களின் ஆதரவையும் அது இழந்தது. எனவே, டோரிக் கட்சியினர் மேலும் சில காலம் செல்வாக்குடன் விளங்கினர். எனினும், அவர்களின் கொள்கைகளுக்கு நாட்டில் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது.

வாட்டர்லூவுக்குப் பின் இங்கிலாந்தில் ரேடிகல்ஸ் என்ற தீவிரச் சீர்திருத்தவாதிகள் தோன்றினர். அவர்களின் கட்சிக்குப் பாராளுமன்றத்தில் ஆதரவு ஏதும் கிடைக்கவில்லையெனினும், பொதுமக்களிடம் நல்ல செல்வாக்கு இருந்தது. மேஜர் கார்ட்ரைட் (Major Cartwright) அதன் முக்கியத் தலைவராக இருந்தார். ஹாம்ப்டன் கிளப்புகள் (Hampden Clubs) என்ற சீர்திருத்தச் சங்கங்களை அவர் ஆங்காங்கே தோற்றுவித்தார். திசில்வுட் (Thistlewood). ஹன்ட் (Hunt) என்பவர்கள் அதன் மற்றத் தலைவர்கள். ஹண்ட் ஓர் ஆவேசப் பேச்சாளர்; தம் பேச்சுவன்மையால் பாமர மக்களை எளிதில் கவர்ந்தவர்.

### சீர்திருத்தவாதிகள்

நெப்போலியப் போர்களினால் நின்றுபோயிருந்த சீர்திருத்த இயக்கம் 1815-க்குப் பின், மீண்டும் தோன்றலாயிற்று. வில்லியம் வில்பர்போர்ஸ் என்ற பெரியார், அடிமைமுறை ஒழிக்கப்படுவதன் அவசியத்தை மீண்டும் வற்புறுத்தினர். சர் சாமுவேல் ராமில்லி (Sir Samuel Romilly), சர் ஜேம்ஸ் மாக்கின்டோஷ் (Sir James Mackintosh) போன்றவர்கள் கிரிமினல் சட்டங்களைச் சீர்திருத்த வேண்டுமெனக் கோரினர். ஃபிரான்ஸிஸ் பிளேஸ் (Francir Place) போன்ற தொழிலாளர் தலைவர்கள், ஒன்றுகூடல் தடைச்சட்டங்களை (Combination Laws) ஒழிக்குமாறு வேண்டினர். பாராளுமன்றத்தைச் சீர்திருத்தியமைத்து, அதை உண்மைப் பிரதிநிதித்துவமுள்ளதாகச் செய்யவேண்டுமெனப் பலரும் கூறலாயினர். பாராளுமன்றம் சீர்திருந்திவிட்டால், மற்றவைத் தானகச் சீர்திருந்திவிடுமென்ற எண்ணத்தால் யாவரும் பாராளுமன்றச் சீர்திருத்தங்களைப் பெரிதும் வற்புறுத்தலாயினர். பென்த்தாம் (Bentham) என்ற அறிஞர் பாராளுமன்றச் சீர்திருத்தம் பற்றி ஒரு நூலை எழுதி (Catechism of Parliamentary Reform) வெளியிட்டார். 'பெரும்பான்மையான மக்களின் பெருநலன்' ஒன்றையே உரைகல்லாகக் கொண்டு சட்டங்களை எடைபோட வேண்டுமெனவும், அக்கொள்கையை அடிப்படையாகக்கொண்டு நாட்டின் சட்டங்களனைத்தையும் சீர்திருத்தியமைக்கவேண்டும் எனவும் அவர் கூறிவந்தார். அறிஞருலகில் பென்த்தாம் தனியாட்சி செலுத்தியது போலவே, வில்லியம் காபெட் (William Cobbett) என்ற பெரியார், பாமர மக்களின் இதயங்களில் தனியிடம் பெற்று விளங்கினர். அவர் தமது 'அரசியல் பதிவேடு' (Political Register) என்னும் செய்தித் தாளை இரண்டு பென்னிகளுக்கு விற்பனை செய்து, அதன்மூலம் தனது புரட்சிக் கருத்துகளை நாட்டின் மூலைமுடுக்குகளில் எல்லாம்

பரப்பினர். அதில் காணப்பட்ட ஆங்கில நடை மக்களைக் கவர்ந்தது. படிக்கத் தெரிந்தோர் அதை வாங்கிப் படித்து மகிழ்ந்தனர். படிப்பறியாப் பாமரர்கள் அதைப் பிறர் படிக்கக் கேட்டுப் பயன் பெற்றனர். நிலச்சுவான்தார்களையும், மதகுருமார்களையும் அவர் பெரிதும் சாடினர். தொழிற்சாலை அதிபர்களையும், பாழடைந்த பரோக்களின் உடமையாளர்களையும் அவர் பெரிதும் கண்டித்தார். அக் கால நிலைமைகளைக் கண்டித்துச் சீர்திருத்தங்களை வேண்டியவர்களுள் ஷெல்லி (Shelly) என்ற ஆங்கிலக் கவிஞரும் ஒருவராவார். அவர் தமது உணர்ச்சிமிக்க கவிதைகளால் அரசாங்கத்தை எதிர்க்குமாறு மக்களைத் தூண்டிவந்தார்.

## சமூகப் பொருளாதார நிலைமைகள்

வளமற்ற அமைதி (Peace Without Plenty)

மேற்சொன்னபடி சீர்திருத்தம் வேண்டுமெனப் பலரும் கிளர்ச்சி செய்ததற்குக் காரணங்களில்லாமலில்லை. வாட்டர்லூவுக்குபின் இங்கிலாந்தில் அமைதி ஏற்பட்டதென்னவோ உண்மைதான். ஆனால், அது வளமற்ற அமைதியாகவே இருந்தது. ஆக்கத் தொழில்களும் விவசாயமும் ஒருங்கே நசிய ஆரம்பித்தன. போர் நடைபெற்றுக்கொண்டிருந்தபோது பொறிசெய்பொருள்களுக்கும் உணவுத்தானியங்களுக்கும் மிகுதியான தேவையிருந்தது. அதனால் புதிய தொழில் பல பெருகின. தரிசாய்க் கிடந்த நிலங்களும் விளைநிலங்களாக்கப்பட்டன. முதலாளிகளும் நிலக்கிழார்களும் நல்ல இலாபமடைந்தனர். ஆனால், போர் முடிந்தவுடன் இந்த வளமெல்லாம் திடீரென மறைந்தது. போர்க்காலத்தில் ஐரோப்பிய நாடுகளுக்குப் பொருள்களை விற்கும் தனியுரிமையையும், அவைகளைப் கப்பலில் ஏற்றி இடத்துக்கிடம் எடுத்துச் செல்லும் தனியுரிமையையும் அனுபவித்து வந்த இங்கிலாந்து, போர் நின்றவுடன் அவ்வுரிமைகளை இழந்தது. ஐரோப்பிய நாடுகள் மும்முரமாகப் பொருள் உற்பத்தியிலும் தானிய உற்பத்தியிலும் ஈடுபட ஆரம்பித்தன. ஒவ்வொரு நாடும் தன்னிறைவு பெற முயன்றது. பிரிட்டிஷ் பொருள்கள் மீது அவை சுங்கவரி விதித்து, அதன் மூலம் தங்கள் சொந்தத் தொழில்களைக் காத்துக்கொள்ள முற்பட்டன. அத்துடன் ஐரோப்பிய நாடுகளில் உற்பத்தியான அபரிமிதமான தானியங்கள் இங்கிலாந்துக்குள் வந்து குவிய ஆரம்பித்தன. அதனால் தானிய விலை குறைந்தது. தானியத்தை வாங்கி உண்ணும் மக்களுக்கு அது இலாபமாக இருந்தது. ஆனால் பெருநிலக்கிழார்கள் அன்னிய நாட்டு விவசாயிகளோடு போட்டியிட முடியாமல் திகைத்தனர். ஏராளமான நிலங்களை அவர்கள் தரிசாகப்

போட வேண்டியதாயிற்று. போதாக்குறைக்கு 1816 இல் நாட்டின் அறுவடை என்றுமில்லாத அளவு குறைந்தது. இதனால் பலர் நிலங்களை விற்றுவிட்டு நொடித்துப்போயினர்.

தானியச் சட்டமும் வருமானவரி ரத்தும்

திடீரெனப் பல இக்கட்டுக்காளான நிலப் பிரபுக்கள் பாராளுமன்றத்தில் நிறைய இடம் பெற்றிருந்தனர். அவர்கள் தானியங்களின் விலையை உயர்த்த முயலுமாறு அரசாங்கத்தைத் தூண்டினர். அதன் விளைவாக லிவர்பூல் அரசு ஒரு தானியச் சட்டத்தை இயற்றியது (1815). அச் சட்டப்படி ஒரு குவார்டர் தானியத்தின் விலை 80 ஷில்லிங்குக்கு உயரும்வரை இங்கிலாந்துக்குள் இறக்குமதியாகும் அன்னிய தானியங்களின்மீது சுங்க வரிகளை அரசாங்கத்தார் விதிக்கலாயினர். இம் முறையால் தானிய விலை சமநிலைக்கு வந்துவிடுமென அவர்கள் கருதினர். ஆனால், அதற்கு மாறாகத் தானிய விலையில் பலத்த ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டன. இரண்டு பவுண்டு ரொட்டியின் விலை ஒரு ஷில்லிங்காக உயர்ந்தது. திறமைமிக்க ஒரு தொழிலாளியின் வார வருமானமே அப்போது ஏழு ஷில்லிங்குகள்தாம். எனவே, பலர் பட்டினியால் வாடலாயினர்.

நிலப் பிரபுக்களால் தூண்டப்பட்டு, அரசு இன்னொரு பெருந் தவற்றையும் செய்தது. போர்க்காலத்தில் மக்களின்மீது விதிக்கப்பட்டிருந்த வருமான வரியை நீக்கிவிட வேண்டுமென அப் பிரபுக்கள் கோரியதற்கேற்ப, லிவர்பூல் மந்திரிசபை அவ் வரியை ரத்துச் செய்தது. அதனால் நாட்டின் வருமானம் பெருமளவுக்குக் குறைந்துவிட்டது. அதை ஈடுகட்டவும், போர்க்காலத்தில் ஏற்பட்ட கடனின் வட்டியைக் கட்டவும் அரசு மக்கள்மீது பல வரிகளைச் சுமத்தியது. வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள் மீது வரிகள் போடப்பட்டிருந்ததால் சாதாரண மக்கள் பேரின்னலுற்றனர்.

தொழிலாளிகளின் அவல நிலை

தொழிலாளிகளின் நிலை நாளுக்குநாள் மோசமாகிக் கொண்டே வந்தது. தொழிற்சாலை முறையில் (Factory System) பல ஊழல்கள் ஏற்பட்டன. இலாபமொன்றையே குறிக்கோளாகக் கொண்டு, முதலாளிகள் கூலியாட்களிடம் நிறைய வேலை வாங்கிக் கொண்டு குறைந்த கூலி கொடுத்தனர். குழந்தைகளையும் பெண்டிரையும் வேலைக்கமர்த்தி, அவர்கள் தங்கள் செலவைக் குறைத்துக்கொண்டதால் உடலுரம் வாய்ந்த ஆடவர் பலர் வேலையின்றி அவதியுற்றனர், வேலை கிடைத்தாலும், கூலி

குறைவாகவே இருந்தது. காற்று வசதி இல்லாத, அழுக்கும் முடைநாற்றமும் நிறைந்த இடங்களில் அவர்கள் தொழில் புரியவேண்டியிருந்தது. அவர்களது வீடுகளும் சுகாதார வசதி சிறிதுமில்லாத குடில்களாகவே இருந்தன. தூய்மை சிறிதுமற்ற, நெருக்கமிக்க அவர்களது குடியிருப்புகள் முடைச்சேரிகள் (Slums) என அழைக்கப்பட்டன. அவைகளை ஒழிக்க அரசாங்கம் எவ்வித முயற்சியும் மேற்கொள்ளவில்லை.

நாட்டுப்புறங்களில் வாழ்ந்த தொழிலாளிகள் பட்டணத் தொழிலாளிகளைவிட நல்ல சூழ்நிலையில்தானிருந்தனர். நிலங் களில் வேலை செய்ய நேரம்போக, மீதி நேரங்களில் அவர்கள் நெசவுத் தொழிலில் ஈடுபட்டுப் பணம் சம்பாதித்து வந்தனர். ஆனால், தொழிற்புரட்சியின் விளைவாக, அவர்களுக்கு நெசவுத் தொழிலில் வருமானம் கிடைப்பது நின்றது. கூலிகள் வெகு வாகக் குறைந்தன. அக் கூலியைக்கொண்டு தங்களது மனைவி மக்களைக் காக்க இயலாத நிலையில் பலர் இருந்தனர். இங்ஙனம் வறுமையில் வாடிய ஏழைத்தொழிலாளிகளுக்கு ஸ்பீன்ஹாம் லாண்டு திட்டப்படி அவரவர் தேவைக்கேற்ப உதவிப் பணம் வழங் கப்பட்டது. குறைந்த கூலி பெற்றோர்க்கு அதிக உதவி வழங்கப் பட்டதால், நிலச் சொந்தக்காரர்கள் வேண்டுமென்றே கூலியைக் குறைத்துக் கொடுத்தனர். என்னதான் வேலை செய்தாலும், ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் தங்களுக்குக் கூலி கிடைக்காது என் பதை அறிந்த கூலியாட்களும் ஊக்கமின்றி வேலையில் ஈடுபட்ட னர். தன்னம்பிக்கையையும் சுயமரியாதையையும் அவர்கள் அறவே இழந்தனர். முதலாளிகள் கொடுக்கவேண்டிய பணத் தைச் சாதாரண மக்கள், வறியோர் வரி (Poor rate) மூலம் செலுத்த வேண்டியதாயிற்று. வேலையில்லாத் திண்டாட்டம் நாளுக்குநாள் பெருகியது. போர் நின்றவுடன் ஏராளமான பேர் வேலையிழந்தனர். கடற்படையிலிருந்து மட்டும் ஒரே ஆண்டில் 230,000 பேர்கள் நீக்கப்பட்டனர்.

### பொருள் தட்டுப்பாடு

போர்க் காலத்தில் ஏற்பட்ட செலவின் காரணமாக நாட்டுக் கடன் 240 மில்லியன் பவுன்களிலிருந்து 861 மில்லியன் பவுன் களாக உயர்ந்தது. அக் கடனுக்கான வட்டியே பட்ஜெட்டில் பாதியை விழுங்க ஆரம்பித்தது. இக் கடனைக் கட்டப் பெரிதும் உதவியாயிருந்த வருமான வரியையும் அரசாங்கத்தார் செல்வர் களின் நச்சரிப்புக்கு அஞ்சி நீக்கிவிட்டனர். இதனால், விலைவாசியும் வாடகையும் நாட்டில் இரட்டித்தன. இங்கிலாந்து பாங்கும் தாள் நாணயங்களுக்கு ரொக்கப் பணம் கொடுப்பதை மறுத்து வந்தது. இச் சமயம் பார்த்துத் தாள்நாணயங்களும் இரட்டிக்கப்

பட்டன. அதனல், அவற்றின் நடைமுறை மதிப்புப் பெரிதும் குறையலாயிற்று.

இங்ஙனம் நாலாவகையிலும் மக்களின் நிலே நாளுக்குநாள் அவலமாகிக்கொண்டே வந்தது. அவற்றைப் பொறுக்க முடியாமல் அவர்கள் ஆங்காங்கே அரசாங்கத்தை எதிர்த்துக் கிளர்ச்சியில் ஈடுபட்டனர்.

## 1817 ஆம் ஆண்டுக் கலவரங்கள்

மேலே விவரிக்கப்பட்ட அவல நிலேமையினுல் மக்கள் பொறுமையின் எல்லேயைக் கடந்தனர். பட்டினியால் வாடிய குடியானவர்கள் விவசாயக் கருவிகளே உடைத்தெறிந்ததுமன்றி, ரொட்டி சுடுபவர்கள், இறைச்சி விற்போர் அனைவரையும் அடித்து விரட்டிவிட்டு உணவுப் பொருள்களேச் சூறையாடினர். ஏற்றுமதிக்காக வைக்கப்பட்டிருந்த உருளேக்கிழங்கு, கோதுமை முதலியவைகளே அவர்கள் கைப்பற்றிக்கொண்டனர். வேலேவாய்ப்புகள் நிறைய ஏற்படவேண்டும். கூலி உயரவேண்டும், உணவுப் பொருள்களின் விலே குறையவேண்டும், இவையே அவர்தம் கோரிக்கைகளாயிருந்தன.

ஸ்பா பீல்ட்ஸ் கூட்டம் (Meeting in Spa Fileds)

மக்களிடம் பரவலாயிருந்த இந்த அதிருப்தியைத் தீவிர சீர்திருத்தவாதிகள் நன்கு பயன்படுத்திக் கொண்டனர். 1816இல் ஸ்பா பீல்ட்ஸ் (Spa Fields) என்ற இடத்தில் அவர்கள் தொழிலாளர்களின் குறைகளே ஆராய ஒரு மாபெரும் கூட்டம் கூட்டினர். கூட்டம் கட்டுக்கடங்காத நிலேயை அடைந்தது. வாட்ஸன் போன்றவர்களின் ஆவேசப் பேச்சைக் கேட்ட மக்கள் ஸ்நோஹில் (Snow Hill) என்னுமிடத்துக்கு நேரே புறப்பட்டுச் சென்று, அங்கிருந்த துப்பாக்கி உற்பத்திசாலேயொன்றைத் தாக்கினர். அங்குக் கிடைத்த துப்பாக்கிகளே எடுத்துக்கொண்டு, அரச நாணயமாற்று (Royal Exchange) நிலேயத்தை முற்றுகையிட்டனர். நகரத் தந்தை மேத்யூ வுட் (Mathew Wood) என்பவர் அக் கலகக் கூட்டத்தினரை அடக்கி, ஒழுங்கையும் அமைதியையும் நிலேநாட்டினுர்.

அரசத் துரோகமும் அடக்கு முறைகளும்

1817இல் காப்பாளரான இளவரசர் (Prinee Regent) பவனி வந்துகொண்டிருந்த கோச்சு வண்டியின் ஜன்னல்களே ஒரு கலகக்காரன் குண்டுவீசி உடைத்துவிட்டான். இதையறிந்த அமைச்சர்கள் துணுக்குற்றனர். அரசரைக் கொன்று அரசாங்கத்தைக் கவிழ்க்க

ஏதோ சதி நடப்பதாக அஞ்சினர். அதற்கேற்ப இலண்டன் நகர மக்கள் நாட்டின் பொதுச் செலவைக் குறைக்கும்படியும், பாராளு மன்றத்தைச் சீர்திருத்துமாறும் வேண்டிப் பெரு மகஜர் ஒன்றை இளவரசரிடம் சமர்ப்பித்தனர். உடனே நாட்டின் நிலையை நன்கு ஆராயுமாறு அரசாங்கம் பல இரகசியக் குழுக்களை ஏற்படுத்தியது. அக் குழுக்கள் வெளியிட்ட அறிக்கைகள் மூலம், தங்களுக்கு விரோதமாக ஒரு பெருஞ் சதித்திட்டம் உருவாக்கிக்கொண்டிருப் பதை அமைச்சர்கள் புரிந்துகொண்டனர். பிரான்சில் ஏற்பட்டது போன்ற நிலைமை இங்கிலாந்திலும் ஏற்பட்டுவிடுமோ என அஞ்சிய அவர்கள் பல அடக்கு முறைகளைக் கையாளலாயினர். ஹேபியஸ் கார்பஸ் சட்டம் ஓராண்டுக்கு நிறுத்திவைக்கப் பட்டது. கூட்டங் களில் கலந்துகொள்வோர், அரசு உத்தரவிடும்போது கலைந்து போகாமற்போனுல் மரணத்தண்டனை விதிக்கப்படுவர் என அறி விக்கப்பட்டது. கலகங்களை ஒடுக்க முன்வந்த அரசு அவற்றுக் கான காரணங்களைக் கண்டு களைய முன்வரவில்லை.

### மான்செஸ்டர் ஊர்வலம்

காப்பாளரான இளவரசரிடம் தங்கள் குறைகளைத் தெரிவிக்க மான்செஸ்டர் நகரிலிருந்து ஒரு பெரிய தொழிலாளர் ஊர்வலம் புறப்பட்டது. இவ்வூர்வலத்தில் கலந்துகொண்ட ஒவ்வொருவனும் ஒரு குறைப்பத்திரத்தை (Petition) வைத்திருந்தான். அத்துடன் குளிரினின்றும் தன்னைக் காத்துக் கொள்ளக் கம்பளிப் போர்வை யொன்றும் வைத்திருந்தான். எனவே, அவர்கள் 'கம்பளிக்காரர் கள்' (Blanketeers) என அழைக்கப்பட்டனர். ஊர்வலத்தை இடையிலேயே வழிமறித்துத் துருப்புகள் கலைத்தன. கலைந்தவர் கள் அரசாங்கத்துக்கெதிராகப் புரட்சியிலிறங்கப் போவதாக அச்சுறுத்தினர். ஆனுல், அவ்விதப் பயங்கரப் புரட்சியெதுவும் ஏற்படவில்லை.

### பீட்டர்லூ படுகொலை (Massacre of Peterloo)

அரசாங்கத்தின் குறைகளைக் கண்டிக்க மான்செஸ்டர் நகரின் மத்தியில் ஒரு மாபெருங் கூட்டம் கூடியது. ஏறக்குறைய 80,000 மக்கள் நாற்புறத்திலிருந்தும் அங்கு வந்து கூடினர். தானியச்சட் டங்களை ஒழிக்கவேண்டுமெனவும், வயது வந்தோருக்கு வாக் குரிமை வழங்கவேண்டுமென்றும், இரகசிய வாக்களிப்பு முறை வரவேண்டுமெனவும் கூட்டத்தில் பலர் பேசினர். ஆவேசமான அப் பேச்சுக்களைக் கேட்ட நகர நிருவாகிகள் பெரிய புரட்சி ஏற் படுமோவென அஞ்சினர். எனவே, ஹன்ட் என்ற பெரும் பேச் சாளரைக் கைது செய்யும்படி, ஒரு சிறு குதிரைப் படையை நகர மாஜிஸ்திரேட்டுகள் அனுப்பினர். ஹன்ட் மேடைமீது ஏறிப் பேச ஆரம்பித்ததும் குதிரை வீரர்கள் அவரைக் கைது செய்யக்

கூட்டத்தில் புகுந்தனர். கூட்டம் மிக நெருக்கமாக இருந்ததால் அவர்கள் கூட்டத்தில் புக முடியாமல் தவித்தனர். இதைக் கண்ட நகர அமைதித் தலைவர்கள் மீண்டும் ஒரு குதிரைப் படையை அங்கு அனுப்பினர். அப்படை வீரர்கள் கூட்டத்தினுள் பாய்ந்து, அதை நாற்புறமும் சிதறடித்தனர். கொல்லப்பட்டவர்கள் 11 பேர்; காயமடைந்தவர் பலர். ஹன்ட் இறுதியில் கைது செய்யப்பட்டார். நகர அதிகாரிகளின் இச் செய்கையை அரசு மிக நன்று எனப் பாராட்டியது. இதைக் கண்ட மக்கள், அரசின் மீது மேலும் வெறுப்புக்கொண்டனர். வாட்டர்லூ போர்க்களத்தில் நெப்போலியனை முறியடித்த அதே பிரிட்டிஷ் வீரர்கள் மான்செஸ்டரில் உள்ள செண்ட் பீட்டர் பீல்டு (St. Peter's Field) என்னுமிடத்தில் கேவலம் சாதாரண மக்களைக் கொல்லப் பயன் படுத்தப் பட்டதால், மக்கள் இந் நிகழ்ச்சியைப் 'பீட்டர் லூ படுகொலை' எனப் பெயரிட்டுக் கேலிசெய்தனர்.

ஆறு சட்டங்கள் (Six Acts)

இதையெல்லாம் கண்ட அரசு 1819 இல் ஆறு சட்டங்கள் என்ற அடக்குமுறைச் சட்டங்களை இயற்றியது. அதன்படி நாட்டுக்கு எதிரான நடவடிக்கைகளில் கலந்துகொள்வோர் தாமதமின்றி உடனே விசாரிக்கப்படவேண்டும். போர்க்கருவிகளை யாரும் கையாளக்கூடாது. போர் நடவடிக்கைகளில் ஈடுபடக் கூடாது; அரச துரோகமான பேச்சுக்களையும் பிரசுரங்களையும் தடுத்து நிறுத்தவும், கலகம் நடக்கும் இடங்களில் இராணுவத் தளவாடங்களைக் கைப்பற்றவும், வட்டார அமைதிகாண நீதிபதிகள் அதிகாரம் பெற்றனர். கருத்து வெளியீட்டு உரிமை, கூட்டம் கூட்டும் உரிமை, பேச்சுரிமை முதலியன கட்டுப்படுத்தப் பட்டன. இச் சட்டங்களின் கடுமையை அனைவரும் கண்டித்தனர். ஆனால், அமைதியை ஏற்படுத்த அப்போது வேறு வழியில்லை.

கேட்டோ தெருச் சதி (Cato Street Conspiracy)

இந் நிலையில் 1820 இல் மூன்றாம் ஜார்ஜ் மன்னர் இறந்தார். வேல்ஸ் இளவரசர், நான்காம் ஜார்ஜ் என முடிசூட்டிக் கொண்டார். பழைய மந்திரிகளே பதவியில் தொடர்ந்து இருந்து பணியாற்றினர். அவர்களையும், மன்னரையும் கொல்ல மறைமுகமான சதிகள் பல உருவாயின. அவற்றில் 'கேட்டோ தெருச் சதி' மிக முக்கியமானதாகும். அத் தெருவில் திசில்வுட் (Thistlewood) என்பாரும் அவரைச் சார்ந்த 30 நபர்களும் அரசைக் கவிழ்க்கச் சூழ்ச்சி செய்தனர். ஆனால், அரசாங்கப் போலீசார் அதை எவ்வாறோ கண்டுபிடித்து விட்டனர். சதி செய்தவர்களுள் நால்வர் தூக்கிலிடப்பட்டனர்.

## இராணி பற்றிய சிக்கல் (The Queen's Affair)

மந்திரிசபையின் செல்வாக்கு நாளுக்குநாள் குறைந்தது. மன்னர் தமது இராணியை நடத்திய விதத்தை அச்சபை ஓரளவு ஆதரித்ததானது அபின் செல்வாக்கை மேலும் குறைத்தது. கேரோலின் என்ற இராணி தன் கணவரைப் பிரிந்து பல்லாண்டுகள் ஐரோப்பாவில் வசித்துவந்தாள். அப்போது அவள் ஒழுக்கம் சரியில்லை எனப் பலரும் கூறினர். 1820 இல் அவள் இங்கிலாந்து திரும்பினாள். மக்கள் தங்கள் இராணியை மகிழ்வோடு வரவேற்றனர். அவள் ஒழுக்கமற்றவள் என மக்கள் அறிவர். எனினும் ஜார்ஜ் மன்னர் அவளைவிட எவ்வகையிலும் உயர்ந்தவர் அல்லர் என்பதை உணர்ந்திருந்ததாலேயே, அவர்கள் இராணிக்குப்பெரும் வரவேற்பு நல்கினர். ஆனால், அமைச்சர்கள், அரசரைப் புறக்கணிக்கத் துணியவில்லை. அரசரால் தூண்டப்பட்ட அமைச்சரவை, கேரோலின் இராணி சமூக வாழ்வில் ஓர் அரசிக்குரிய மரியாதைகளைப் பெறக்கூடாதெனக் கூறும் சட்டம் ஒன்றைக் கொண்டுவந்தது. அச் சட்டத்திற்குப் பாராளுமன்றத்தில் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. ப்ரோஹாம் (Brougham) பிரபு போன்றவர்கள் இராணி குற்றமற்றவர். என வாதாடினார்கள். அவர்கள் எழுப்பிய கூக்குரலுக்குப் பணிந்து லிவர்ப்பூல் பிரபு அச் சட்டத்தை வாபஸ் பெற்றுக்கொண்டார். இராணிக்கு உதவித் தொகையளிக்க ஒப்புதல் அளித்தார். இராணியும் அதை ஏற்றுக் கொண்டதால் மக்களுக்கு அவள் மேலிருந்த மதிப்புக் குறைந்தது. 1821 இல் அவள் இறந்ததால் அப் பிரச்சினை தீர்ந்தது.

1822 இல் காஸில்ரே பிரபு தற்கொலை செய்துகொண்டார். உடனே லிவர்ப்பூல் பிரபு, கானிங் பிரபுவை வெளிநாட்டமைச்சராக நியமித்தார்; பீல் என்பவரை உள்நாட்டு அமைச்சராக்கினார். மந்திரி சபை தாராளக் கொள்கையுடையதாக மாறிற்று. மக்களின் விருப்பத்திற்கேற்ப கானிங்கும், பீலும் எங்ஙனம் நடந்துகொண்டனர் என்பதை இனி வரும் அத்தியாயங்களில் காண்போம்.

# 17. 1815-க்குப் பின் டோரிகளின் வெளிநாட்டுக் கொள்கை

**வியன்ஞ காங்கிரசும் காஸில்ரேயும் :** புனிதக் கூட்டுறவும் நால்வர் கூட்டுறவும் அடிமை வியாபார ஒழிப்பு, ஆச்சன் காங்கிரஸ், ட்ரோப்பா காங்கிரஸ் லெப்பாக் காங்கிரஸ்.

**காஸில்ரேயும் கானிங்கும் - கானிங்கின் வெளிநாட்டுக் கொள்கை :** கானிங்கும் ஸ்பெயின் புரட்சியும், கானிங்கும் தென் அமெரிக்கப் புரட்சிகளும்; கானிங்கும் கிரேக்கச் சுதந்திரப் போரும்.

**வெளிங்டன் பிரபுவின் வெளிநாட்டுக் கொள்கை :** கிரேக்க நாடும் வெலிங்டனும் வெலிங்டனும் பிரான்சும், வெலிங்டனும் போர்ச்சுகலும்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்தின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளே வகுத்து வழி நடத்தியவர்கள் டோரிக் கட்சியினரேயாவர். மூன்றும் ஜார்ஜ் மன்னரது ஆட்சிக் காலத்தின் ஆரம்பத்திலேயே அரசாங்கத்தைக் கைப்பற்றிய டோரிக் கட்சியினர், 1830 ஆம ஆண்டு வரை தொடர்ந்து பதவியிலிருந்து பணியாற்றினர். நெப்போலியப் போர்களே வெற்றியுடன் நடத்திய பெருமை அவர்களுடையதே. புகழ் பெற்ற வாட்டர்லூ வெற்றிக்குப் பின், நாட்டின் வெளிநாட்டுக் கொள்கையை நிருணயிக்கும் பொறுப்பையும் அவர்களே மேற்கொண்டனர். 1812 ஆம் ஆண்டிலிருந்து 1827 வரை டோரிகள் தலைவராகவும், நாட்டின் பிரதமராகவும் இருந்தவர் லிவர்ப்பூல் பிரபு. அவரது மந்திரிசபையில் ஆரம்பக் காலத்தில் வெளிநாட்டு அமைச்சராக இருந்து அரும் பணியாற்றியவர் காஸில்ரே பிரபு (Lord Castlereagh) ஆவார். 1822 இல் அவர் இறந்த பின் அவரது பணியைத் தொடர்ந்து ஆற்றியவர் ஜார்ஜ் கானிங் (George Canning) பிரபுவாவார். 1827 இல் அவர் இறந்தார். லிவர்ப்பூல் மந்திரி சபையும் அவ்வாண்டில்

கலந்தது, (லிவர்ப்பூல் பிரபுவுக்குப் பின்னும் 1830 வரை கானிங்காடரிச் (Goderich), வெலிங்டன் (Wellington) என்ற டோரித் தலைவர்கள் இங்கிலாந்தின் பிரதமர்களாக இருந்தனர்.)

## வியன்னு காங்கிரசும் காஸில்ரேயும்

(வட்டர்லூவுக்குப் பின் ஐரோப்பாவைப் புதிய முறையில் உருவாக்கும் பொறுப்பை வியன்னு காங்கிரஸ் மேற்கொண்டது) அக் காங்கிரசின் தலைவராக இருந்தவர் முற்போக்குக் கொள்கைகளின் முழு எதிரியான மெட்டர்னிக் (Metternich) என்னும் ஆஸ்திரிய அமைச்சராவார். (பிரிட்டனின் பிரதிநிதியாக அதில் பங்கெடுத்துக் கொண்டவர்கள் காஸில்ரே பிரபுவும் வெலிங்டன் பிரபுவுமாவர்.) பிரான்ஸ் மீண்டும் பலம் பெற்று, ஐரோப்பிய அமைதிக்குப் பங்கம் விளைவிக்காத வண்ணம் அதை ஒடுக்கக் காங்கிரஸ் எடுத்துக்கொண்ட முயற்சிகளைக் (காஸில்ரே) ஓரளவு ஒப்புக் கொண்டார். ஆனால், சில சமயங்களில் (ஆஸ்திரியாவோடும் பிரான்ஸோடும் சேர்த்துகொண்டு, அவர் பிரஷ்யாவையும் ரஷ்யாவையும் எதிர்த்தார்) இவ்வெதிர்ப்பின் காரணமாக் (ரஷ்யா, போலந்தின் ஒரு பகுதியை விட்டுக்கொடுக்க நேர்ந்தது) பிரஷ்யாவும் சாக்ஸனியின் ஒரு பகுதியை விட்டுக் கொடுத்தது. மற்றபடி (நெப்போலியப் போர்களில் நெப்போலியனை ஆதரித்த நாடுகளைத் தண்டித்து, எதிர்த்த நாடுகளுக்கு வெகுமதியளிக்கும் கொள்கையையும், பழைய முடியரசுகளை மீண்டும் நிலைநாட்ட வேண்டும் என்ற கொள்கையையும் காஸில்ரே எதிர்க்கவில்லை.) போலந்தின் பெரும் பகுதியை ரஷ்யா எடுத்துக்கொண்டதை எதிர்த்து, (அதன் சுதந்திரத்தைக்காக்க அவர் முன்வரவில்லை.) ஜெனேவா, பியட்மாண்டுடன் சேர்க்கப்பட்டதையும், வெனிஸ் ஆஸ்திரியாவுக்குக் கொடுக்கப்பட்டதையும் எதிர்த்து அச் சிறு நாடுகளின் சுதந்திரத்தைக் காக்க அவர் பாடுபடவில்லை. (ஜெர்மனியும் இத்தாலியும் பிரிக்கப்படாத ஐக்கிய நாடுகளாக விளங்க வேண்டுமென்ற கொள்கையையும் அவர் ஆதரிக்கவில்லை.) இதனால்தான் (காஸில்ரே பிரபு தாராளக் கொள்கையுடையவரல்லர் என்றும் பிற்போக்குக் கொள்கையினரென்றும் ஒரு சிலர் கருதுகின்றனர்) ஆனால், அவர்கள் கருத்து முற்றிலும் (சரியன்று.)

### புனிதக் கூட்டுறவும் நால்வர் கூட்டுறவும்

வியன்னு காங்கிரஸ் ஐரோப்பிய அமைதியைக் காக்க எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் சிலவற்றை காஸில்ரே ஒப்புக் கொள்ளவில்லை. மக்கட்புரட்சிகளே ஐரோப்பிய அமைதியின்மைக்குக் காரணமென நம்பிய மெட்டர்னிக்கும், ரஷ்ய அரசர்

அலெக்சாந்தரும் புரட்சிகள் எங்குத் தோன்றினும், அவற்றை முளையிலேயே கிள்ளி எறிந்து விடவேண்டுமெனவும், முடியாட்சியைப் பல நாடுகளிலும் பலப் படுத்த வேண்டுமெனவும் கருதினர். இக் கருத்து காஸில்ரேக்கு அவ்வளவு பிடித்தமாயில்லை. ஸார் அலெக்சாந்தர் ஒரு நல்ல கிறிஸ்துவர். அவர் கிறிஸ்தவ மதச்கொள்கைகட்கு ஏற்ப ஐரோப்பிய விவகாரங்களைத் தீர்க்கவேண்டுமென்றும் அதற்காக எல்லாக் கிறிஸ்தவ நாடுகளையும் உட்கொண்ட புனிதக் கூட்டுறவு (Holy alliance) ஒன்றை ஏற்படுத்த வேண்டும் எனவும் எடுத்துக் கூறினர். அவரது கருத்தைக் கிறிஸ்தவ நாடுகளான ஐரோப்பிய நாடுகள் எவற்றாலும் மறுக்க இயலவில்லை. எனினும் கிறிஸ்தவக் கொள்கையென்றால் என்ன என்பதைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் காங்கிரசில் காணப்பட்டன. மன்னர்கள் தெய்வத்தின் பிரதிநிதிகள் எனக் கூறும் தெய்வீக உரிமைக்கொள்கை கிறிஸ்தவ மதத்துக்கு ஏற்றதொரு கொள்கையாக இருந்தமையின் மெட்டர்னிக் என்பார் மன்னர்களைக் காப்பதும் அவர்களுக்கெதிராகக் கிளம்பும் புரட்சிகளை ஒடுக்குவதுமே தூய கூட்டுறவின் குறிக்கோள்களாயிருக்க வேண்டும் எனப் புகன்றார். மக்களது இயக்கங்களை நசுக்கும் கொள்கையைக் காஸில்ரேயால் ஒப்புக்கொள்ள இயலவில்லை. அதே சமயம் பிரிட்டன், கிறிஸ்தவ நாடாதலால் கிறிஸ்தவக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டிருந்த புனிதக் கூட்டுறவை கண்டிக்கவும் அவரால் முடியவில்லை. இந்த இக்கட்டான நிலையினின்றும் தப்ப அவர் ஒரு தந்திரமான வழி கண்டுபிடித்தார். பிரிட்டனின் மன்னராக அப்போது விளங்கிய மூன்றும் ஜார்ஜ் சித்தப்பிரமை பிடித்தவராயிருந்தார். ஆட்சிப் பொறுப்பெல்லாம் அப்போது இளவரசர் கையிலேயே ஒப்படைக்கப்பட்டிருந்தது. எனவே நாட்டை எந்தக் கூட்டுறவிலும் புகுத்த சட்டப்படி அவ்விளவரசருக்கு அதிகாரமில்லை என்று காஸில்ரே கூறிவிட்டார். ஆனல் அவ்வப்போது எழும் ஐரோப்பியப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காகக் கூட்டப்பெறும் காங்கிரசுகளுக்கு இங்கிலாந்து தன் பிரதிநிதிகளை அனுப்பும் என்று அவர் கூறினார். இங்ஙனம், முக்கியமான சிக்கல்களைத் தீர்ப்பதற்கான கூட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ள, நால்வர் உடன்பாடு (Quadruple alliance) ஒன்று ஏற்பட்டது. (ரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா, கிரேட் பிரிட்டன் ஆகிய நாடுகள் அதன் உறுப்பினர்கள்.) புனிதக் கூட்டுறவில் சேர மறுத்த பிரிட்டன், நால்வர் கூட்டுறவில் சேர்ந்தது. ஏனெனில், முன் கூட்டியே எந்தக் கொள்கைக்கும் கட்டுப்பட வேண்டிய கட்டாயம் பின்னைய கூட்டுறவில் இல்லை. ஆனல் புனிதக் கூட்டுறவில் பிரிட்டன் ஒருசில கொள்கைகளைக் கட்டாயமாக ஒப்புக்கொள்ள வேண்டியிருந்தது. நால்வர் கூட்டுறவு கூட்டும் காங்

இரசுகளில் பிரிட்டிஷ் பிரதிநிதிகள் கலந்து கொண்டு, தங்கள் கட்சியை எடுத்து வாதிடலாம். மற்றப் பிரதிநிதிகளின் கருத்து களை மறுக்கலாம். விரும்பினால் மற்றவர்களின் கருத்துக்கு மாறாகவும் நடக்கப் பிரிட்டனுக்கு உரிமை யிருந்தது. எனவேதான் காஸில்ரே நால்வர் கூட்டுறவில் பிரிட்டனைச் சேர்த்தார்.

### அடிமை வியாபார ஒழிப்பு

வியன்னு காங்கிரசில் காஸில்ரே பிரபு சாதித்தவைகளுள் மிக முக்கியமானது அடிமை வியாபார ஒழிப்புக்கு பிரான்ஸ், ஸ்பெயின், போர்ச்சுகல், ஹாலந்து நாடுகளின் சம்மதத்தைப் பெற்றதாகும். பிரிட்டனில் 1807ஆம் ஆண்டிலேயே அடிமை வியாபார ஒழிப்புச் சட்டம் நிறைவேறிவிட்டது. வியன்னு காங்கிரஸில்தான் மற்ற ஐரோப்பிய நாடுகளும், பிரிட்டன் கடைப் பிடித்த கொள்கையை ஒப்புக்கொண்டன. ஆனால், எம் முறையில் அஃது ஒழிக்கப்பட வேண்டும் என்பதை, அந்தந்த நாடுகளின் விருப்பத்துக்கே காங்கிரஸ் விட்டுவிட்டது. மத்திய தரைக் கடலிலும், மேற்கு ஐரோப்பியக் கடற்கரைகளிலும் கொள்ளையடித்துவந்த பார்பரி கார்சார்கள் (Barbary Corsairs) என்னும் கடற்கொள்ளைக் கூட்டத்தினரை ஒடுக்கவும் காங்கிரஸ் நடவடிக்கை எடுத்துக்கொண்டது. அதன் வேண்டுகோளுக்கு ஏற்ப, எக்ஸ்மௌத் பிரபுவின் (Lord Exmouth) தலைமையில் ஒரு பிரிட்டிஷ் கடற்படை புறப்பட்டுச் சென்று, அல்ஜியர்ஸ் துறை முகத்தைத் தாக்கிக் கொள்ளைக்காரர்களை வேரறுத்துப் பல்லாயிரம் கிறிஸ்தவ அடிமைகளை விடுவித்தது.

### ஆச்சன் காங்கிரஸ்

நால்வர் கூட்டுறவின் விளைவாக ஐரோப்பாவில் ஏற்பட்ட முதல் காங்கிரஸ், ஆச்சன் (Aachen) என்னுமிடத்தில் 1818 இல் கூடியது. காஸில்ரே பிரபு அதில் பங்கெடுத்துக் கொண்டார். காங்கிரசின் கருத்துகள் சிலவற்றைக் காஸில்ரேயால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. எனினும், அவர் வெளிப்படையாக யாரையும் பகைத்துக்கொள்ளவில்லை. புனிதக் கூட்டுறவு நாடுகளுக்கும் பிரிட்டனுக்கும் பிளவு ஏதும் ஏற்படவில்லை. இக் காங்கிரசின் தீர்மானப்படி பிரான்ஸிலிருந்து தத்தம் துருப்புக் களைத் திருப்பி அழைத்துக்கொள்ள எல்லா நாடுகளும் ஒப்புக் கொண்டன. நால்வர் கூட்டுறவில் சேரப் பிரான்சும் அனுமதிக் கப்பட்டது. எனவே, நால்வர் கூட்டுறவு ஐவர் கூட்டுறவாக (Quintuple alliance) மாறியது.

ட்ரோப்பா காங்கிரஸ்

1820 ஆம் ஆண்டில் ஸ்பெயின், போர்ச்சுகல், நேப்பில்ஸ் ஆகிய நாடுகளில் மன்னர்களது யதேச்சாதிகாரத்தை எதிர்த்து மக்கள் புரட்சி செய்தனர். அவைகளைப்பற்றி ஆராய ட்ரோப்பா (Troppau) என்னுமிடத்தில் ஒரு காங்கிரஸ் கூடியது. புரட்சிகளை அடக்க எந்த நாட்டிலும் ஐரோப்பிய வல்லரசுகள் தலையிடலாம் என்ற கொள்கையை இக் காங்கிரஸ் ஒப்புக்கொண்டது. இவ்வாறு ஒரு நாடு, இன்னொரு நாட்டின் விவகாரங்களில் பலவந்தமாகத் தலையிடும் கொள்கைக்குக் காஸில்ரே தமது மறுப்பைத் தெரிவித்தார். இந்த நிகழ்ச்சிக்குப் பின் பிரிட்டன் மற்ற நாடுகளோடு முழுமனத்துடன் ஒத்துழைக்க முடியவில்லை.

லெய்பாக் காங்கிரஸ்—வெரோனு காங்கிரஸ்

நேப்பில்ஸில் தோன்றிய மக்கட் புரட்சியை ஒடுக்க வழிவகை காண, லெய்பாக் (Laibach) என்னுமிடத்தில் 1821 இல் ஒரு காங்கிரஸ் கூடிற்று. நேப்பில்ஸ் புரட்சியை அடக்கும் பொறுப்பை ஆஸ்திரிய நாட்டுக்கு அக் காங்கிரஸ் கொடுத்தது. ஆஸ்திரியத் துருப்புகள் நேப்பில்சுக்கு விரைந்தன. புரட்சியும் ஒழிக்கப்பட்டது. காஸில்ரே, ஆஸ்திரியாவின் இச் செய்கையைப் பலமாகக் கண்டித்தார். 1822 இல் வெரோனு (Verona) என்னுமிடத்தில் ஓர் ஐரோப்பிய காங்கிரஸ் கூடி, ஸ்பெயின் நாட்டில் கிளர்ந்தெழுந்த மக்கட் புரட்சிகளை ஒடுக்கும் வழிவகைகளை ஆராய்ந்தது. புனிதக் கூட்டுறவு நாடுகள் ஸ்பெயினில் தலையிடுவது தகாது எனக் காஸில்ரே கூறியதோடு, அங்ஙனம் தாம் கூறுவதற்கான காரணங்களையும் விளக்கி ஒரு மறுப்புரை வெளியிட்டார். வெரோனு காங்கிரஸ் கூடுவதற்கு முன்பே, காஸில்ரே தமது பொது வாழ்க்கையில் கசப்புற்றுத் தற்கொலை புரிந்து கொண்டார்.

வியன்னு காங்கிரசில் பங்கெடுத்துக்கொண்டு, ஐரோப்பிய அமைதியை நிலைநாட்டக் காஸில்ரே அரும்பாடுபட்டதைப் பிரிட்டிஷ் மக்கள் போற்றினர். பொதுமக்கட் சபையின் முழு நம்பிக்கையையும் அவர் பெற்றிருந்தார். எனினும், இங்கிலாந்தில் மக்களது அபிமானத்தைப் பெற்றிருந்த கரோலின் (Caroline) என்ற அரசியை அவர் எதிர்த்ததாலும், அடக்குமுறைக் கொள்கைகளுக்கு ஆதரவு காட்டியதாலும் மக்கள் அவரைப் பிற்போக்குவாதி எனக் கண்டித்தனர். ஐரோப்பிய வல்லரசுகள் லைபெறுவதை அவர் விரும்புவதாகப் பலர் தப்பாக நினைத்து

விட்டனர். எனவேதான் அவரது மரணத்தைப் பிரிட்டிஷ் மக்கள் வரவேற்றனர். இலண்டன் நகர மக்கள் அவரது சடலம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டபோது கைகொட்டி ஆரவாரம் செய்தனர்.

## காஸில்ரேயும் கானிங்கும்

உணமையில் காஸில்ரே பிரபு அவ்வளவு வெறுக்கத்தக்க பிற்போக்குவாதியல்லர். ஐரோப்பியச் சிறுநாடுகளின் உரிமைகளைக் காக்க அவர் பேராடியவர்; இங்கிலாந்தில் கத்தோலிக்கர்களின் மத உரிமைகளுக்கு ஆதரவு காண்பித்தவர். புனிதக் கூட்டுறவின் அடக்குமுறைக் கொள்கைகளைக் காஸில்ரே ஆதரித்ததாகவும், அவருக்குப் பின்வந்த கானிங் பிரபு முற்றிலும் வேறான கொள்கையைக் கடைபிடித்ததாகவும் பலர் கருதியது தவறு என்பதை இக்கால வரலாற்று ஆராய்ச்சி வெளிப்படுத்துகின்றது. கானிங் பிரபு உண்மையில் காஸில்ரேயின் கொள்கைகளையே தொடர்ந்து கடைப்பிடித்தார். காஸில்ரே விட்டுச்சென்ற மறுப்புரையின் அடிப்படையிலேயே அவர் தமது கொள்கையை அமைத்துக்கொண்டார். அக்கொள்கையை அமல் நடத்திய விதத்தில்தான் இருவரும் வேறு பட்டனர். ஐரோப்பிய வல்லரசுகள் சிறு நாடுகளின் சுதந்திரத்தையும். மக்களின் புரட்சிகளையும் ஒடுக்க முயன்றபோதெல்லாம் காஸில்ரே தமது பலமான கண்டனத்தைத் தெரிவித்திருந்தார். ஆனால், கானிங் பிரபு ஒரு படி மேலே சென்று, வல்லாசுகளுக்கு எதிராகவும், குடிமக்களுக்குச் சாதமாகவும் இராணுவ உதவி செய்ய முன்வந்தார். இந்த வேறுபாட்டிற்குக் காரணம் சூழ்நிலையேயாகும். காஸில்ரே பதவி வகித்தபோது இங்கிலாந்தின் படை பலம் மிகவும் குறைந்திருந்தது. நெப்போலியப் போர்களில் ஈடுபட்ட போர்வீரர்கள் பலர் மாண்டனர், எஞ்சியிருந்த சிலரும் போர் என்றாலே சலிப்புற்றனர். ஐரோப்பாவில் சிறு நாடுகளின் சுதத்திரத்திற்காகப் போரிடுகின்ற நிலையில் பிரிட்டிஷ் இராணுவம் அப்போதைக்கில்லை. அதனால்தான் காஸில்ரே வெறுங்கண்டனத்தோடு நிறுத்திக்கொண்டார். ஆனால், கானிங் பிரபுவின் பதவிக்காலத்தில் பிரிட்டிஷ் இராணுவம் மீண்டும் எண்ணிக்கையிலும் வலிமையிலும் பன்மடங்கு பெருகிவிட்டது. பிறநாடுகளில் சென்று, ஜனநாயகத்துக்காகப் போரிடக்கூடிய நிலையில் அஃது இருந்ததால், கானிங்பிரபு தயக்கமின்றித் தம் கொள்கைகளை நடைமுறையில் நடத்திக்காட்டினார். எனவே, கொள்கைகளைப் பொறுத்தவரையில் காஸில்ரே, கானிங் இருவருக்கும் ஒருவித வேறுபாடும் இருந்ததாகத் தெரியவில்லை. அதைக் கடைப்பிடித்த

வகையில்தான் இருவரும் வேறுபட்டனர். இருவரது வெளி நாட்டுக் கொள்கைகளின் உயிர் ஒன்றே; உடல்தான் வேறு.

## கானிங்கின் வெளிநாட்டுக் கொள்கை

கானிங் ஓர் உயர்ந்த தேசபக்தர்; பிரிட்டிஷ் நலன்களில் பெரிதும் அக்கறை கொண்டவர். ஐரோப்பிய விவகாரங்களில் பிரிட்டன் வீணுகத் தலையிட்டு நஷ்டம் அடைவதை அவர் சிறிதும் விரும்பவில்லை. எந்தவொரு நாடும் மற்றெரு நாட்டின் சொந்த விவகாரங்களில் தலையிடுதல் தவறு என்ற காஸில்ரேயின் கொள்கையை அவர் நன்கு வலியுறுத்தினுர்.

### கானிங்கும் ஸ்பெயின் புரட்சியும்

வெரோஞ கொங்சிரசில் பங்கெடுத்துக் கொண்ட பேரரசர களானமுதலாம் அலெக்சாந்தர் இரண்டாம் பிரான்சிஸ் மூன்றும் பிரடெரிக் வில்லியம் என்பவர்கள். மக்கள். மன்னரை எதிர்த்து நடத்தும் உரிமைப் போராட்டங்களைத் தகர்த்தெறிய, எல்லா ஐரோப்பிய நாடுகளும் ஒத்துழைக்கவேண்டுமெனக் கூறியபோது, கானிங் அதைப் பலமாக எதிர்த்தார். தமது தலையிடாக்கொள் கையை வற்புறுத்திஞரெனினும், ஸ்பெனில் நடைபெற்ற உரிமை கிளர்ச்சியை வெரோஞ காங்கிரசின் ஏவலுக்கு ஏற்ப, பிரான்ஸ் தனது துருப்புகளை அனுப்பி அடக்கியபோது கானிங்கால் அதைத் தடுக்க இயலவில்லை. அவரது கண்டனம் காரணமாகப்போர் ஓர் ஐரோப்பியப் போராக மாருமல், பிரான்சுக்கும் ஸ்பெயி னுக்கும் மட்டுமே நடைபெற்ற ஒரு போராக மாறிவிட்டது; ஸ்பெயினில் வல்லரசு மீண்டது. 1823 ஆம் ஆண்டு அக்டோபர் முதல் நாளில் ஏழாம் பெர்டிஞண்டு மீண்டும் ஸ்பெயின் மன்ன ராஞர்.

### கானிங்கும் தென் அமெரிக்கப் புரட்சிகளும்

ஸ்பெயினில் வல்லரசை எதிர்த்து நடைபெற்ற கிளர்ச்சியின் போது, தென் அமெரிக்காவில் அதற்குச் சொந்தமாயிருந்த குடியேற்ற நாடுகள் தங்களது சுதந்திரத்தை அறிவித்தன. பெர்டிஞண்டு ஸ்பெயினின் மன்னராக 1823 ஆம் ஆண்டு அறிவிக் கப்பட்டபோது, தென் அமெரிக்க நாடுகள் அவரைத் தங்களது மன்னராக ஏற்றுக்கொள்ள முடியாது எனவும், இனித் தாம் சுயேச்சை பெற்ற நாடுகளாகவே இருக்கப்போவதாகவும் தெரிவித்து விட்டன. இதைக் கேட்ட பெர்டிஞண்டு அமெரிக்கக் குடியேற்ற நாடுகளை அடக்கப் புனிதக் கூட்டுறவு நாடுகளின் ஆதரவை நாடிஞர். இச் சமயத்தில் கானிங் பிரபு, தென் அமெரிக்க நாடுகளின் சுதந்திரத்தை இங்கிலாந்து அங்கீகரிப்ப தாகத் துணிவுடன் அறிவித்தார். கானிங்கின் கொள்கையை உறுதி செய்வதேபோல் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செய்கை

யும் அமைந்தது. அப்போது அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருந்த மன்றோ என்பார் தமது புகழ் பெற்ற மன்றோ கொள் கையை (Munroe Doctrine) 1823 ஆம் ஆண்டு டிசம்பர் 2 இல் வெளியிட்டார். ஐரோப்பிய நாடுகள் அமெரிக்காவில் குடியேற் றங்கள் ஏற்படுத்துவதை நிறுத்தவேண்டுமெனவும், அமெரிக்காவின் விவகாரங்களில் சிறிதும் அவை தலையிடக் கூடாதெனவும், இங்ஙனம் தலையிடுவதைப் பலவந்தமாகத் தடுக்க அமெரிக்க ஐக்கிய நாட்டுக்கு உரிமையுண்டு எனவும், மன்றோ கொள்கை திட்ட வட்டமாகக் கூறியது. இவ்வறிக்கைக்கு எதிராக நடக்க எந்த ஐரோப்பிய நாட்டிற்கும் துணிவில்லை. ஸ்பெயினுக்கு எந்த நாட்டின் உதவியும் கிட்டவில்லை. எனவே, அதற்குச் சொந்தமா யிருந்த தென் அமெரிக்க நாடுகள் முழுச் சுதந்திரம் பெற்றன. கானிங் பிரபுவின் வெளிநாட்டுக் கொள்கைக்கு இஃது ஒரு பெருத்த வெற்றியாக அமைந்தது. பிரான்சும் ஸ்பெயினும் ஒன்று சேர்ந்ததால், பழைய உலகமான ஐரோப்பாவில் குலைந்துபோன சமநிலையைச் சரி செய்யவே, தாம் அக்கரை நாடுகளில் ஒரு புதிய உலகத்தைத் தோற்றுவித்ததாகக் கானிங் பிரபு பெருமையடித் துக் கொண்டார். உண்மையில் இங்கிலாந்தின் வியாபார நலன் களை வளர்க்கவே, கானிங், புதிய உலகக் குடியேற்ற நாடுகளின் சுதந்திரத்தை ஆதரித்தார். தென் அமெரிக்க நாடுகளோடு வியா பாரம் செய்வதை ஸ்பெயின் தனது தனியுரிமையாகக் கொண்டு விளங்கியதைப் பிரிட்டனால் பொறுக்க முடியவில்லை. அந்நாடுகள் சுதந்திரம் பெற்று விட்டால் இங்கிலாந்து அவைகளோடு தாராள மாக வியாபாரம் செய்யலாம் என்ற எண்ணத்தாலேயே கானிங். அவைகளின் சுதந்திரத்தை வரவேற்றார். மற்றபடி கானிங், தென் அமெரிக்க நாடுகளில் குடியரசு ஏற்படுவதை விரும்பவில்லை. ஜனநாயகம் என்றாலே அவருக்கு அதிகம் பிடிக்காது.

கானிங்கும் கிரேக்கச் சுதந்திரப் போரும்

1821 ஆம் ஆண்டில் கிரேக்கர்கள் தங்களை ஆண்டுவந்த துருக்கியர்களுக்கு விரோதமாகத் தங்களது சுதந்திரப் போரைத் துவக்கினர். மொரியா (Morea) என்ற மாகாணத்தில் அவர்கள் கலகம் உச்சநிலையடைந்தது. கிரேக்கக் கிறிஸ்தவர்களின் இச் சுதந்திரப் போரை ரஷ்யா முழுமனதுடன் ஆதரித்தது. ஐரோப் பிய நாடுகள், கிறிஸ்தவ நாடுகள் என்ற முறையில் கிரேக்கர்களை ஆதரிக்க வேண்டியிருந்தது. அதே சமயம் மன்னர்களுக்கு எதிராக நடைபெறும் மக்கட் புரட்சிகளை அடக்க வேண்டும் என்ற வியன்னா காங்கிரஸின் கொள்கைப்படி, புனிதக் கூட்டுறவு நாடுகள் கிரேக்கர்களை வெளிப்படையாக ஆதரிக்கவும் தயங்கின. ஐரோப் பிய வல்லரசர்களின் ஒருவராகக் கருதிய துருக்கிய மன்னரை

ஆதரிக்கவும் அந் நாடுகளுக்கு பிரியமில்லை. ஏனெனில், அவர் கிறிஸ்தவர்களின் எதிரி என்பது யாவருக்கும் தெரியும். இந்த இக்கட்டான நிலையில் (கானிங் பிரபு தமது தலையிடாக் கொள்கையைத் தொடர்ந்து கடைப்பிடித்தார்.) கிரேக்கர்களின் சுதந்திர விருப்பத்தை அவர் உள்ளூரப் போற்றினாரெனினும் (துருக்கியப் பேரரசு பலவீனமடைவதையும் அவர் விரும்பவில்லை) துருக்கி தளர்ந்தால் ரஷ்யாவின் ஆதிக்கம் அங்குப் பரவிவிடும் என்ற பயம் அவருக்கு இருந்துகொண்டேயிருந்தது. கிரேக்கர்களின் சுதந்திரத்தை ஆதரிப்பதன் மூலம் (ரஷ்யா தனது செல்வாக்கைப் பால்கன் தீபகற்பத்தில் நிலை நாட்டிக்கொள்ளுமென்றும்) அதன்பின் கொஞ்சங் கொஞ்சமாக மத்தியதரைக் கடலுக்குள் புக அஃது ஒரு துறைமுகத்தைக் கைப்பற்ற முயற்சி செய்யுமென்றும் (கானிங் பயந்தார்) ஆஸ்திரியாவுக்கும் ஏறக்குறைய அதே பயம் இருந்தது. எனவே ஆஸ்திரியாவும் இங்கிலாந்தும் கிரேக்க விடுதலைப் போரை ஆதரிக்க ஆரம்பத்தில் முன்வரவில்லை. ஆனால், விரைவிலேயே சூழ்நிலை முற்றிலும் மாறியது. 1825ஆம் ஆண்டில் துருக்கி சுல்தானுக்கு உதவி செய்ய எகிப்திய சுல்தானாகிய (இப்ராஹிம் பாஷா) (Ibrahim Pasha) முன்வந்தார். (கிரேக்கக் கலகத்தை ஒடுக்க, ஒரு கப்பற் படையையும் தரைப்படையையும் அவர் துருக்கிக்கு அனுப்பினார்) மொரியாவில் எகிப்தியப் படையானது பல அட்டூழியங்களைப் புரிந்தது. அண்டையிலிருந்த ரஷ்யர்களால் அவற்றைப் பார்த்துக்கொண்டு வாளா இருக்க முடியவில்லை. மற்ற ஐரோப்பிய நாடுகள் என்ன நினைத்த போதிலும், (கிரேக்கர்களைத் தான் ஆதரித்தே தீருவது எனவும், அவர்களுக்குப் படையுதவி செய்வது எனவும் ரஷ்யா தீர்மானித்தது.) துருக்கர்கள், கிரேக்கர்களுக்கு இழைத்த இன்னல்களைக் கண்ணுற்ற கானிங்கும் தம் கருத்தை மாற்றிக்கொண்டார். கிரேக்கர்களுக்குச் சாதகமாக இங்கிலாந்து தலையிடுவது தவிர்க்க முடியாதது என்பதை அவர் உணர்ந்தார். எனவே, அவர் வெலிங்டன் பிரபுவை செயின்ட் பீட்டர்ஸ் பர்க்குக்கு அனுப்பிக் கிரேக்க விவகாரத்தில் ரஷ்யாவும் இங்கிலாந்தும் ஒருங்கு சேர்ந்து தலையிடுவது பற்றி ஆராய்ந்து வருமாறு ஏவினார். வெலிங்டன், ரஷ்யாவை அடைந்தபோது, முதலாம் அலெக்சாந்தர் என்னும் ரஷிய மன்னர் இறந்து விட்டார். அவரது வழித்தோன்றலாக வந்த முதலாம் நிக்கோலஸ் (Nicholas I) வெலிங்டன் கூறிய யோசனைகளை ஏற்றார். கிரீசுக்கும் துருக்கிக்கும் சமரசம் ஏற்படுத்த (ரஷ்யாவும் இங்கிலாந்தும் நடுவர்களாக இருந்து பணியாற்றுவதற்குத் தயாராயிருப்பதாக இரு நாடுகளும் அறிவித்தன) துருக்கி சுல்தானோ, அந்த அறிவிப்பை ஏற்கத் தயாராயில்லை.) எனவே, (இங்கிலாந்தும் ரஷ்யாவும் கிரேக்கரின் சுதந்திரத்தை ஒப்புக்கொள்ளப் போவதாகப் பயமுறுத்தின.)

பிரெஞ்சு அரசும் அக் கொள்கையை ஏற்றுக்கொண்டது. 1827இல் இந்த மூன்று நாடுகளும் சேர்ந்து தம்முள் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டன. இலண்டன் உடன்படிக்கை (Treaty of London) என்ற அவ்வொப்பந்தத்தின்படி துருக்கியை ஐரோப்பிய நாடுகளின் மத்தியஸ்தத்திற்கு உடன்படும்படி வற்புறுத்துவது என மூன்றும் தீர்மானித்தன. அதன்பின் மேற்சொன்ன மூன்று நாடுகளும் சேர்ந்து ஒரு கப்பற்படையைக் கருங்கடலுக்கு அனுப்பின. 'நவாரினோ குடா'வில் அக் கப்பற்படை தங்கியிருந்தபோது, துருக்கிய கப்பற்படையை சார்ந்த கப்பல் ஒன்று, தற்செயலாக அதை நோக்கிச் சுட்டுவிட்டது. அதையே சாக்காகக் கொண்டு ஐரோப்பியக் கப்பற்படை துருக்கிய கப்பற்படையைத் தாக்க ஆரம்பித்தது. தற்செயலாக விளைந்த இப் பெரும்போரில் இப்ராஹிம் பாட்சாவின் கப்பற்படை முற்றிலும் அழிந்தது. கிரேக்கர்கள் சுதந்திரம் பெறுவது ஏறக்குறைய நிச்சயமானது. இச்சமயத்தில் (1718) வெலிங்டன் பிரபு இங்கிலாந்தின் பிரதமரானார். அவர் கானிங்கின் கொள்கையை அறவே மாற்றிவிட்டார். பால்கன் நாடுகளில் தலையிடுதல் தகாது எனக் கருதிய அவர், இங்கிலாந்தின் படைகளை அங்கிருந்து திருப்பி அழைத்துக்கொண்டார். ரஷ்யர்கள் தனித்து நின்று துருக்கியர்களை எதிர்த்தனர். துருக்கியர்கள் வீராவேசத்தோடு போரிட்டனர்; எனினும், முடிவில் படுதோல்வியுற்றனர். ரஷ்யப் படைகள் அட்ரியநோபில் (Adrianople) நகருக்கு அருகில் சென்று விட்டன. கான்ஸ்டாண்டிநோபில் நகரையும் விரைவில் அவர்கள் கைப்பற்றிவிடுவார்கள்போல் தோன்றியது. துருக்கி சுல்தான் இதைக் கண்டு பயந்து, ரஷ்யர்களோடு அட்ரியநோபில் உடன்படிகையைச் செய்து கொண்டார். அதன்படி ரஷ்யா, டான்யூப் நதிக்கரையில் சில மாகாணங்களைப் பெற்றது. கருங்கடலிலும், டான்யூப் நதியிலும் நடுநிலைநாடுகளின் கப்பல்கள் செல்லலாமெனச் சுல்தான் ஒப்புக்கொண்டார். மால்டேவியா (Moldavia) வாலாசியா (Wallachia) என்ற இரு மாகாணங்களுக்கும் ரஷ்யாவின் மேற்பார்வைக்குட்பட்ட சுயாட்சி வழங்கப்பட்டது. கிரேக்க நாட்டைப் பொறுத்தவரை இலண்டன் உடன்படிக்கையைத் துருக்கி ஒப்புக் கொண்டு, அந்நாட்டுக்குச் சுதந்திரத்தை வழங்கியது.

## வெலிங்டன் பிரபுவின் வெளிநாட்டுக் கொள்கை

### கிரேக்க நாடும் வெலிங்டனும்

எது நடைபெறக் கூடாதென்று கானிங் நினைத்தாரோ, அது நடந்துவிட்டது. ரஷ்யா தனிப்பட்ட முறையில் துருக்கியோடு

போரிட்டுத் தன் செல்வாக்கைப் பால்கன் தீபகற்பத்தில் நிலை நாட்டிக்கொள்ளக் கூடாது என்பதே கானிங்கின் விருப்பமாகும். ஆனால், வெலிங்டனின் செய்கையால் அவரது விருப்பம் ஈடேறாமற் டன் போயிற்று. வெலிங்டன் ஒரு பிற்போக்குவாதி. தாராளக் கொள்கைகளை அறவே வெறுத்தவர். அதனால்தான் அவர் துருக்கிய வல்லரசை ஆதரித்து, கிரேக்கரின் சுயேச்சைப் போரைக் கைவிட்டார். ஆனால், அவர் எண்ணயபடி துருக்கி தனது வல்லரசைக் காப்பாற்றிக் கொள்ள முடியாமற்போகவே, வெலிங்கிடன் தமது கொள்கையை மாற்றிக்கொண்டார்; கிரேக்கர்களின் சுயேச்சையை ஒப்புக் கொள்ள முன்வந்தார். இலண்டனில் கூடிய வல்லரசுகளின் மாநாடு ஒன்று கிரேக்க நாட்டுப் பிரச்சினையை ஆராய்ந்து, பாமர்ஸ்டன் என்ற ஆங்கிலப் பிரபுவின் முயற்சியால் 1831-இல் அப் பிரச்சினைக்கு ஒரு முடிவு சாணப்பட்டது. கிர்ஸ் ஒரு முடியரசு நாடாக அங்கீகரிக்கப்பட்டது. 1832-இல் ஆட்டோ என்ற பவேரிய இளவரசர் அதன் மன்னராக யாவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டார். ஆனால் கிரீஸின் சுதந்திரம் அங்கீகரிக்கப்படு முன்னரே, வெலிங்டன் மந்திரி சபை வீழ்ச்சியுற்றது.

வெலிங்டனும் பிரான்சும்

வெலிங்டன் பிரபு பிரான்ஸில் ஏற்பட்ட மக்களின் உரிமைப் போராட்டங்களைக் கண்டித்தார். 1830-இல் பிரெஞ்சு மன்னர் பத்தாம் சார்லஸ் என்பார் மக்களின் பிரசுர உரிமை, பேச்சுரிமை முதலியவற்றைப் பறித்துக்கொண்டு, அடக்குமுறை ஆட்சியில் இறங்கியபோது, வெலிங்டன் அவரை ஆதரித்தார். சார்லசுக்கு எதிராகப் புரட்சியொன்று 1830இல் தோன்றியது. சார்லஸ் இலண்டனுக்கு ஓடி வந்தார். லூயி பிலிப் என்பவரை மக்கள் மன்னனாக ஏற்றுக்கொண்டனர். பிலிப் தாராளக் கொள்கையினர். எனவே, வெலிங்டன் அவரை ஆதரிக்கவில்லை.

வெலிங்டனும் போர்ச்சுகலும்

போர்ச்சுகல் நாட்டில் எற்பட்ட ஒரு வாரிசுரிமைச் சச்சரவில் கானிங் பிரபுவும், வெலிங்டனும் வெவ்வேறு வகையில் ஈடுபட்டனர். 1826இல் போர்ச்சுகல் மன்னர் ஆறும் ஜான் இறந்தார். உடனே மேரியா டிலா குளோரியா (Maria dela Gloria) என்னும் அவரது மகளை மக்கள், அரசியாக ஆக்கினர். ஆனால், அரசியை எதிர்த்து அவளது சிற்றப்பனை டாம் மிகுவேல் (Dom Migual) என்பவர் ஒரு கலகத்தைத் தோற்றுவித்தார். அவரைப பிரான்சும் ஸ்பெயினும் ஆதரித்தன. இதைக்கண்ட கானிங் பிரபு அரசியை ஆதரித்து ஒரு கப்பற்படையைச் போர்ச்சுகல் நாட்டுக்கு அனுப்

பினர். (போர்ச்சுகலின் கூட்டுறவால் ஸ்பெயின், பிரான்ஸ் ஆகிய நாடுகளின் வலிமை பெருகிவிடக்கூடாதென்பதே கானிங்கின் நோக்கம், அவரது நோக்கம் வெற்றிபெற்றது.) மிகுவெல் பின் வாங்கினர். (குளோரியா, போர்ச்சுகல் அரசியாக ஏற்றுக்கொள்ள பட்டாள். (இங்ஙனம் போர்ச்சுகலை ஆதரித்த கானிங், அதே சமயம் (போர்ச்சுகலை எதிர்த்துக் கலகம்செய்த அதன் குடியேற்றநாடான பிரேஜிலையும் ஆதரித்தார். அதன் சுதந்திரத்தை அவர் அங்கீகரித் தார்.) ஐரோப்பியச் சக்திச் சமநிலையைக் காக்கவே, அவர் தென் அமெரிக்கநாடுகளின் சுதந்திரத்தை ஆதரித்தார். பிரிட்டனின் நலன் ஒன்றையே கருத்தில் கொண்டு, அதற்கேற்பத் தம்கொள் கைகளை வகுத்துக்கொண்டார் கானிங். அவை வெளித்தோற்றத் துக்கு மிகத் தாராளக் கொள்கைகள் போல் தோற்றமளித்தன. ஆனல், வெலிங்டனது கொள்கைகள் நாட்டின் நலத்துக்கு அவ் வளவு உகந்ததாக இல்லை. போர்ச்சுகல் சிக்கலில் கூட அவர் டாம் மிகுவெல்லையே ஆதரித்தார். (1828 இல் அவர் பலவந்த மாகப் போர்ச்சுகல் அரசைக் கைப்பற்றியபோது, வெலிங்டன் அதைக் கண்டிக்கவில்லை.) (இங்ஙனம் கானிங்கும் வெலிங்டனும் மாறுபட்ட வெளிநாட்டுக் கொள்கைகளைக் கடைப்பிடித்து வந்தனர்.)

# 18. டோரிக் கட்சியினர் ஆட்சியின் அந்திய காலம் (1822 - 1830) அவர்களின் உள்நாட்டுக் கொள்கை

**லிவர்ப்பூல் மந்திரி சபையில் மாற்றம்; மந்திரி சபையின் முன்நின்ற பிரச்சினைகள்.**

**மந்திரி சபை செய்த சீர்திருத்தங்கள்:** கிரிமினல் சட்டத்தொகுதி சீர்திருத்தம்; போலீஸ்படை உருவாதல்; நிதித்துறைச் சீர்திருத்தங்கள்; வியாபாரத் துறையில் சீர்திருத்தங்கள்; தடையிலா வாணிகக் கொள்கை; தொழிலாளர் முதலாளிகள் உறவு பற்றிய சீர்திருத்தங்கள்.

**லிவர்ப்பூல் மந்திரி சபையின் வீழ்ச்சி; கானிங் பிரபுவின் வாழ்வும் சாதனைகளும் [1770 - 1827];**

**வெலிங்டன் பிரபுவின் அமைச்சரவை [1829 - 30]:** உள் நாட்டுக் கொள்கை; சோதனைச் சட்டங்கள்; மாநகராட்சிச் சட்டங்களின் நீக்கம்; தானியச் சட்டங்கள்; கத்தோலிக்கர் விடுதலை; டேனியல் ஓ கானல்,

**டோரிக் கட்சி ஆட்சியின் முடிவு:** நான்காம் ஜார்ஜ் இறத்தல்.

டோரிக் கட்சியினரின் வெளிநாட்டுக் கொள்கை, நெப்போலியனது வீழ்ச்சிக்குப்பின் எவ்வாறு அமைந்ததென்பதைச் சென்ற அத்தியாயத்தில் ஆராய்ந்தோம். அவர்தம் உள்நாட்டுக் கொள்கைகளையும், அவைகளின்வழி அவர்களியற்றிய சீர்திருத்தங்களையும் ஈண்டுக்கவனிப்போம். லிவர்ப்பூல் மந்திரிசபையில் காஸில்ரே பிரபு இறந்து, கானிங்பிரபு வெளிநாட்டு அமைச்சரானபின், வெளிநாட்டுக்கொள்கையில் பெரியதொரு மாறுதல் ஏற்படவில்லை என்பது உண்மையேயாயினும், உள்நாட்டுக்கொள்கையைப் பொறுத்தவரையில் கானிங்கின் வருகைக்குப்பின் புதியதொரு திருப்பம் ஏற்பட்டதென்பதை எவரும் மறுக்க இயலாது. பீல் (Peel), ஹஸ்கிஸன் (Huskisson) ராபின்ஸன் (Robinson) போன்ற

அறிவுசான்ற அமைச்சர்களின் துணைகொண்டு கானிங்பிரபு இயற்றிய சட்டங்கள் உண்மையில் நாட்டில் சீர்திருத்த சகாப்தத்தைத் தோற்றுவித்தனவென்றே கூறலாம். 1830 ஆம் ஆண்டில் விக்குக் கட்சியினர் ஆட்சிப்பொறுப்பை ஏற்ற பின்னரே சீர்திருத்த சகாப்தம் (Reform Era) இங்கிலாந்தில் ஏற்பட்டதெனப் பொதுவாகக் கூறப்படினும், 1822 ஆம் ஆண்டிலிருந்தே அத்தகு சகாப்தம் தோன்றிவிட்டதென்பதே சாலப் பொருத்தமுடையதாகும்.

## லிவர்ப்பூல் மந்திரி சபையில் மாற்றம்

1822ஆம் ஆண்டில் லிவர்ப்பூல் மந்திரிசபை, நாம் ஏற்கனவே குறிப்பிட்டபடி, முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டது. காஸில் ரேக்குப் பதிலாகக் கானிங் பிரபு வெளிநாட்டு அமைச்சர் ஆனர். சிட்மவுத் பிரபுவுக்குப் பதிலாகப் பீல் என்னும் பொருளியல் அறிஞர் உள்நாட்டு அமைச்சரானர். தாராளக் கொள்கையினரான வில்லியம் ஹஸ்கிஸன் வாணிகக் குழுவின் (Board of Trade) தலைவராக நியமிக்கப்பட்டார். வேன்சிட்டார்ட் (Vansitart) என்பவருக்குப் பதிலாக ராபின்ஸன் கருவூலத் தலைவரானர். வெல்லெஸ்லி பிரபு அயர்லாந்தின் ஆட்சிப் பொறுப்பாளராகவும், பிளங்கெட் (Plunkett) என்பார் அட்டர்னி ஜெனரலாகவும் (Attorney General) நியமிக்கப்பட்டதைக் கத்தோலிக்கர்கள் வரவேற்றனர். இங்ஙனம் பழமையில் ஆழ்ந்த பற்றுக்கொண்டு இருந்தவர்கள் வகித்துவந்த பதவிகள் எல்லாம் புதுமையில் பற்றுக்கொண்ட தாராளக் கொள்கையினர் கைகளுக்கு மாறியதால், கொள்கையில் ஒரு புதிய ஊக்கம் ஏற்பட்டது. புதிய இரத்தம் பாய்ச்சப்பெற்ற நோயாளி போன்ற டோரி மந்திரிசபை சீர்திருத்தப் பாதையில் சீரடி எடுத்துவைக்க ஆரம்பித்தது. சூழ்நிலையும் அதற்குச் சாதகமாய் அமைந்தது. நெப்போலியனோடு போர் புரிந்துவந்த 20 ஆண்டுகளில் இங்கிலாந்து மக்களுக்குச் சீர்திருத்தம்பற்றி எண்ணவே நேரமில்லை. போர்கள் ஓய்ந்து 5ஆண்டுகள் வரை, மழை விட்டும் தூவானம் விடவில்லை என்பதுபோல், நாட்டில் பல பிரச்சினைகள் எழுந்தன. 1820ஆம் ஆண்டுக்குப் பின்தான் சீர்திருத்தங்கள் பற்றி ஆரஅமர எண்ணிப் பார்க்கவும் செயலாற்றவும் ஆங்கிலேயருக்கு அவகாசம் கிடைத்தது. அச் சமயம் பார்த்துப் பீல், ஹஸ்கிஸன், ராபின்ஸன், கானிங் போன்ற பொருளியல் நிபுணர்களும், சீர்திருத்த மனப்பான்மையுள்ளவர்களும் அமைச்சரவையில் இடம் பெற்றது இங்கிலாந்தின் நற்காலம் என்றே சொல்லவேண்டும்.

## மந்திரி சபையின் முன்னின்ற பிரச்சினைகள்

இத்தகைய சீர்திருத்த மனப்பான்மையுள்ள அமைச்சர்களை எதிர்நோக்கி நின்ற பிரச்சினைகள் பல. நாட்டில் நிலவிய தேர்தல் முறையில் பல குறைபாடுகளிருந்தன. மாறுப்பட்ட சூழ்நிலைகளுக்கேற்ப அதை மாற்றி அமைக்கவேண்டும் என ஜான் ரஸ்ஸல் பிரபு (Rord John Russel) போன்றோர் பெரிதும் விரும்பினர். ஆங்கிலக்கத்தோலிக்கர் நிலை மிக மோசமாயிருந்தது அவர்களுக்கு விடுதலையளித்து நல்வாழ்வு வழங்க வேண்டுமெனக் கானிங், பிளங்கெட் போன்றவர்கள் கருதினார்கள். ஹஸ்கிஸன் நாட்டின் பொருளாதாரத் துறையைச் சீர்திருத்தி அமைக்க வேண்டும் எனக்கூறிவந்தார். கிரிமினல் சட்டத்தொகுதியின் கடுமை மிகக் காட்டுமிராண்டித்தனமாக இருந்தது. நாகரிக முற்ற ஒரு சமுதாயத்திற்கு ஏற்ற முறையில், அதை முற்றிலும் மாற்றி யமைக்க வெண்டுமென மாக்கின்டோஷ் (Mackintosh) என்ற அறிஞர் பாராளுமன்றத்தில் ஓயாது பறைசாற்றி வந்தார். பவல் பக்ஷடன் (Bowell Buxton) போன்றவர்கள் அடிமை முறை ஒழிப்பின் அவசியத்தை எடுத்தோதினர். கைத்தொழில் துறையில் தொழிலாளர் தம் உரிமைகள் பற்றியும், முதலாளி-தொழிலாளி உறவு பற்றியும் பற்பல சீர்திருத்தங்கள் தேவைப்பட்டன.

## மந்திரிசபை செய்த சீர்திருத்தங்கள்

### கிரிமினல் சட்டத் தொகுதி சீர்திருத்தம்

சர் ராபர்ட் பீல் உள்நாட்டு அமைச்சராக இருந்தபோது, சாதித்தவைகளுள் மிகச் சிறப்பானது அவரது கிரிமினல் சட்டத் தொகுதியின் சீர்திருத்தமேயாகும். அவருக்கு முன்பே சர் சாமுவேல் ரோமில்லி (Sir Samuel Romilli) அச்சட்டங்களின் ஊழல்களைப் பற்றி எடுத்துரைத்துள்ளார். கிரிமினல் சட்டச் சீர்திருத்தம்பற்றியும், சிறைச்சாலை சீர்திருத்தம்பற்றியும் பொது மக்களின் சிந்தனையைக் கிளறிவிட்டவர் ரோமில்லியே யாவார். எனினும், அவர் கோரிய எந்தச் சீர்திருத்தமும் நிறைவேறும் மூன்பே அவர் இறந்துபோனார் (1818). அவரது தொண்டினை தொடர்ந்து ஆற்றியவர் மாக்கின்டோஷ் ஆவார். இவ்விருவரது அடிச்சுவடுகளைப் பின்பற்றியும், பென்த்தாம் (Bentham) என்ற அறிஞரின் ஆலோசனைகளுக்கு ஏற்பவுமே, பீல் தமது சீர்திருத்தங்களைச் செய்தார் எனலாம். பல நூற்றாண்டுகளாகப் பாராளுமன்றம் கிரிமினல் குற்றங்களுககுக் கொலைத் தண்டனையளிக்கும் முறையொன்றையே கடைப்பிடித்து வந்தது. எனவே, கொலைத் தண்டனைகளின் எண்ணிக்கை நாளுக்குநாள் பெருகிக்கொண்டே வந்தது. பீல் பதவியேற்ற காலத்தில் சுமார் 200 குற்றங்

களுக்குக் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டது. சாதாரண மான குற்றங்களுக்குக்கூடக் குற்றவாளிகள் சிரச்சேதம் செய்யப்பட்டனர். சான்ருக, ஒருவன், மற்றவன் குளத்திலிருந்து மீனைக் களவாடி விட்டாலோ, அரசருக்குச் சொந்தமான காடுகளில் வேட்டையாடி குருவிகளையோ, பிராணிகளையோ சுட்டு விட்டாலோ, வெஸ்ட்மினிஸ்டர் பாலத்தின்மீது கீறி அதைப் பங்கப்படுத்திஞலோ அன்னருக்குத் தூக்குத் தண்டனை விதிப்பது வழக்கமாயிருந்தது. சட்டங்களின் கடுமை காரணமாக ஜூரிகள் பல குற்றவாளிகளை நிரபராதிகள் எனக் கூறிவிடலாயினர். தண்டனை விதிக்கப்பெற்றபோதும், அவை பல சமயங்களில் நிறைவேற்றப்படாமலேயே விடப்பட்டன. 1805 முதல் 1807-வரை 655 பேர் கடைகளில் திருடியதற்காகக் குற்றம் சாட்டப் பட்டனர். அவர்களுள் 113 பேர்களுக்குக் கொலைத் தண்டனை விதிக்கப்பட்டது. ஆனுல் உண்மையில் ஒருவராவது தூக்கில் இடப்படவில்லை. அதே சமயத்தில் கள்ளக் கையெழுத்து இட்டதற்காக நூறு பேர்கள் 1811 முதல் 1818-க்குள் தூக்கில் இடப் பட்டனர். இவ்வாறு, பல குறைபாடுகளைக் கொண்டிருந்த கிரிமினல் சட்டங்களைத் திருத்தப் பொதுமக்கள் சபை பலமுறை முயன்றது. ஆனுல், பிரபுக்கள் சபை விடாப்பிடியாக அம் முயற்சிகளைத் தகர்த்துக் கொண்டே வந்தது. இறுதியாகப் பீல் தமது சீர்திருத்த மசோதாக்களை 1823 இல் கொண்டு வந்தபோதுதான் பிரபுக்கள் சபை அவற்றை ஒப்புக்கொண்டது. சுமார் 100 குற்றங்களுக்குக் கொலைத் தண்டனை விதிப்பது அதனுல் நின்றது. தண்டனை கடுமையாக இருப்பதைவிட, விதிக்கப்பட்ட தண்டனையை நிச்சயமாக நிறைவேற்றுவதொன்றே அதிகப் பலனைக் கொடுக்கும் என்பது பீலின் கொள்கையாகும். எனவே, அவர் முன்பு கொலைத் தண்டனை விதிக்கப்பட்ட பல குற்றங்களுக்குச் சிறைவாசத்தையோ, நாடுகடத்தலையோ விதித்தார்; கொலை, கொள்ளை, ராஜத்துரோகக் குற்றம், அரசரின் கப்பல் கட்டும் தளத்துக்கு நெருப்பு வைத்தல் என்ற நான்கு குற்றங்களுக்கு மட்டுமே கொலைத் தண்டனை என விதித்தார். அதே சமயத்தில் கிரிமினல் குற்றங்கள் செய்த குருமார்கள் தண்டனைகளினின்றும் தப்பித்துக்கொள்ளும் வழக்கத்தையும் அவர் நிறுத்திஞர். திருமணச் சட்டங்களில் காணப்பட்ட பல ஊழல்களை அவர் களைந்தார். சிறைச்சாலைகளின் நிலையை அவர் பல வழிகளில் உயர்த்த முயன்ருர். ஜூரி முறைபற்றிய பல சட்டங்களும் திருத்தப் பட்டன.

போலீஸ் படை உருவாதல்

அமைச்சர் பீல் செய்த மற்ெருரு முக்கியச் சீர்திருத்தம் இலண்டன் மாநகரில் அவர் 1829 இல் தோற்றுவித்த போலீஸ் படை

யாரும். அப் படையினர் மற்ற நாடுகளின் போலீஸ்காரர்களைப் போன்று போர் வீரர்களாக இருக்கவில்லை. சாதாரண மக்கள் போன்றே அவர்கள் உடையணித்தனர். அவர்கள் கையில் இருந்த குறுந்தடி ஒன்றே அவர்களை மற்றவர்களினின்றும் வேறு படுத்திக் காட்டியது. இலண்டன் போலீஸ் படையைப் பார்த்து ஏனைய நகரங்களும் போலீஸ் படைகளை அமைத்துக்கொள்ள லாயின. விரைவில் நாடு முழுவதும் அவை பரவின. இன்றைக் கும் இலண்டன் நகரப் போலிசார் முதன் முதலில் போலீஸ்படை யைத் தோற்றுவித்த ராபர்ட் பீலின் சுருங்கிய பெயரான 'பாப்' என்னும் பெயரை அடிப்படையாகக் கொண்ட 'பாபீஸ்' (Bobbies) என்ற பெயராலேயே அழைக்கப்படுகின்றனர். அவர்களது புகழ் உலகெங்கும் பரவியுள்ளது. வெளிநாடுகளிலிருந்து இலண் டனுக்குச் செல்லும் பிரயாணிகளுக்குப் பொறுமையாக வழி காட்டித் தேவையான உதவிகளைச் செய்பவர்கள் அவர்களே. தங்கள் போலீஸ் படையினைப்பற்றி பிரிட்டிஷ் மக்கள் உண்மை யிலேயே பெருமிதம் கொள்கின்றனர். அதற்குக் காரணம் அப் படையினரின் திறமை மிக்க அரும்பெரும் சாதனைகளேயாகும்.

### நிதித் துறைச் சீர்திருத்தங்கள் (Financial and fiscal reforms)

சீர்திருத்த முயற்சிகளில் பீல் காட்டிய ஊக்கம் விரைவில் மற்ற அமைச்சர்களிடையும் பரவியது. உள்நாட்டுத் துறை யில் அவர் நல்ல பல சீர்திருத்தங்களைச் செய்தது போலவே, ராபின்ஸன் (Robinson) என்பவரும், ஹஸ்கிஸன் (Huskisson) என்பவரும் வியாபாரம், பொருளியல் துறைகளில் பல நல்ல மாற்றங்களைச் செய்தனர். ராபின்ஸன் தனது தளரா முயற்சி யால் நாட்டின் வரவு செலவுக் கணக்குகளை ஒழுங்குபடுத்தினர்; கடன் கழிவு நிதியின்கண் (Sinking Fund) காணப்பட்ட ஊழல் கள் பலவற்றைக் களைந்தார்; வரிகளில் பலவற்றை நீக்கினர்; வரி வசூல் செய்வதில் ஏற்பட்ட பல செலவுகளைக் குறைத்தார்; இச் சீர்திருத்தங்களால் நாட்டுக் கடனை (National Debt) ஆண் டுக்கு ஆறு மில்லியன் பவுன்கள் வீதம்,அடைக்க வழி செய்தார்.

### வியாபாரத் துறையில் சீர்திருத்தங்கள் : தடையிலா வாணிகக் கொள்கை (Free Trade Policy)

ராபின்ஸனது சீர்திருத்தச் செயல்களுக்குப் பெரிதும் ஊக்க மளித்து வந்தவர், அவரது உற்ற நண்பர் ஹஸ்கிஸன் என்பவர். அவர் அப்போது வாணிகக் குழுவின் தலைவராகப் (President of

the Board of Trade) பணியாற்றி வந்தார். அவர் ஆடம்ஸ்மித் (Adam Smith) என்ற பேரறிஞர் எழுதிய 'நாடுகளின் செல்வம்' (Wealth of Nations) என்ற நூலில் விவரிக்கப்பட்டிருந்த தடையிலா வாணிகக் கொள்கையில் பெரிதும் நம்பிக்கையுள்ளவர். வாணிகத்தின்மீது விதிக்கப்பட்டிருந்த அவசியமற்ற கட்டுப்பாடுகளை எல்லாம் நீக்கவேண்டுமென்பதும், நாட்டின் உற்பத்தியைப் பெருக்கி, அதன்மூலம் வியாபாரத்தையும் பொருளாதார வளத்தையும் மேம்படுத்த வேண்டும் என்பதும் அவரது குறிக்கோள்களாகும். இக் குறிக்கோள்களைச் செயலாக்கும் முயற்சியில் அவர் சிறிது சிறிதாக இறங்கினார்.

ஹஸ்கிஸ்ன் காலத்துக்கு முன்பு இங்கிலாந்தின் வியாபாரக் கொள்கை மெர்கன்டலிசம் (Mercantalism) என்ற கொள்கையின் அடிப்படையிலேயே அமைந்திருந்தது. அதன்படி வெளிநாட்டுப் பண்டங்கள் உள்நாட்டில் இறக்குமதியாவதை அரசாங்கம் கூடிய வரை தடைசெய்யக் காப்புவரிகளைப் போட்டு,அஃது உள்நாட்டுத் தொழில்களைக் காத்து வந்தது. கச்சாப் பொருள்களை உற்பத்தி செய்து அளிக்கும் சாதனங்களாகத் தனது குடியேற்ற நாடுகளைப் பிரிட்டன் மதித்ததேயன்றி, அவற்றின் தொழில், வியாபார வளர்ச்சி பற்றி அது சிறிதும் கவலைப்படவேயில்லை. பிரிட்டிஷாரின் கப்பலோட்டும் தொழிலையும் வியாபாரத்தையும் பெருக்கப் பிரிட்டிஷ் அரசு 1651, 1660, 1672-ஆம் ஆண்டுகளில் நாவாய்ச் சட்டங்களை இயற்றியது. வெளிநாட்டுப்பண்டங்கள் எவையாயினும், அவை பிரிட்டிஷ் கப்பல்களின் மூலமே பிரிட்டனில் இறக்குமதியாக வேண்டுமெனவும், இல்லாவிடில், அப் பண்டங்கள் எந்த நாட்டிலிருந்து வருகின்றனவோ, அந்த நாட்டைச் சேர்ந்த கப்பல்களின் மூலம் இறக்குமதி செய்யப்பட வேண்டுமெனவும் இச் சட்டங்கள் கூறின. பல நாட்டின் பண்டங்களையும் ஏற்றி வந்து இங்கிலாந்தில் இறக்குமதி செய்து பெரும் பொருளீட்டி வந்த டச்சுக்காரர்களின் வியாபாரத்தில் மண்ணைப் போடவே நாவாய்ச் சட்டங்கள் எழுந்தன. பிரிட்டிஷ் வியாபாரத்தைப் பெருக்கி, டச்சுக்காரர்களின் வியாபாரத்தைக் குறைக்க அச் சட்டங்கள் பெரிதும் துணை செய்தன. ஆனால் அயர்லாந்தும் அமெரிக்காவும் அச் சட்டங்களால் பெரிதும் துன்புற்றன. கள்ளக் கடத்தல் நாளுக்குநாள் அதிகமாகி, அதை பிரிட்டிஷ் அரசு கட்டுப்படுத்த முயன்றதாலேயே அமெரிக்கர்கள் தங்கள் சுதந்திரப் போரைத் துவக்கினார்கள். அமெரிக்கா சுதந்திரம் பெற்றது, நாவாய்ச் சட்டங்களினால் ஏற்பட்ட தீமைகளுக்கு ஒரு சான்றாக அமைந்தது, சுதந்திரம் பெற்ற அமெரிக்கா நாவாய்ச் சட்டங்களுக்கு எதிராகப் பல சட்டங்களை இயற்றியது. பிரிட்டிஷ் பண்டங்கள் அமெரிக்காவில் இறக்குமதியாகும்போது, கடுமை

யான காப்பு வரிகள் அவற்றின் மீது விதிக்கப்பட்டன. இதைக் கண்ட பிரிட்டன் அமெரிக்காவுடன் பேச்சுவார்த்தை நடத்தி, 1814இல் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டது. அதற்கு கென்ட் (Ghent) உடன்பாடு என்று பெயர். அதன்படி அமெரிக்கப் பொருள்களுக்குப் பிரிட்டனிலும், பிரிட்டிஷ் பொருள் களுக்கு அமெரிக்காவிலும் விதிக்கப்பெற்ற காப்பு வரிகள் நீக்கப் பட்டன. அமெரிக்காவைப் போலவே போர்ச்சுகல், பிரஷ்யா, நெதர்லாந்து போன்ற நாடுகளும் தங்கள் நாட்டுக்குள் இறக்கு மதியாகும் பிரிட்டிஷ் பொருள்கள் மீது காப்பு வரிகளை விதிக்க ஆரம்பித்தன. அமெரிக்காவிலிருந்த பிரேஜில் நாடும், தென் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளும் சுயேச்சை பெற்றன. இங்கி லாந்து தன் பழைய வியாபாரக் கொள்கையையே கடைபிடித்து வந்ததால், அமெரிக்காவின் வியாபாரம் ஏனைய தென்ன மெரிக்க நாடுகளின் வியாபாரத்தைவிடப் பெரிதும் குறைந்து போகும் என்றும், அது பிரிட்டிஷ் வியாபாரத்தைப் பெரிதும் பாதிக்குமென்பதையும் ஹஸ்கிஸன் உணர்ந்து, அதைப்பாராளு மன்றத்துக்கு எடுத்து விளக்கினார். 1822இல் பாராளுமன்றம் சட்டமியற்றி குடியேற்ற நாடுகளுக்கு ஓரளவு வியாபாரச் சுதந் திரம் அளித்தது. 1825இல் ஹஸ்கிஸன் விரிவாக மற்றொருசட்டம் கொண்டுவந்து அதை நிறைவேற்றினார். பரஸ்பர வரி விலக்குச் சட்டம் (Reciprocity Act) எனப்பட்ட அச் சட்டத்தின்படி பிரிட்டிஷ் பொருள்கள்மீது இறக்குமதி வரியை விதிக்காத நாடு எதுவாயினும், அந் நாட்டிலிருந்து வரும் பொருள்களுக்குக் காப்பு வரி விதிப்பதில்லை எனப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்புக்கொண் டது. எனவே, அமெரிக்காவுக்குக் கொடுக்கப்பட்ட சலுகை யானது இச் சட்டத்தால் ஏனைய நாடுகளுக்கும் கிடைத்தது. இந்த நிபந்தனைக்குட்படாத நாடுகளைப் பொறுத்தவரை பிரிட் டன் தொடர்ந்து பழைய கட்டுப்பாட்டுக் கொள்கையையே கடைபிடித்தது. பல ஐரோப்பிய நாடுகள் பிரிட்டனோடு பரஸ்பர வரி விலக்கு உடன்படிக்கைகளைச் (Recjprocity Treaties) செய்து கொண்டன. நாவாய்ச் சட்டங்களின் கடுமை இவ்வாறு ஓரளவு குறைக்கப்படினும், அவை முற்றிலும் நீக்கப்பெறவில்லை.

சட்டங்களின் பிடியைத் தளர்த்திய ஹஸ்கிஸன், தடையிலா வாணிகத்தை வளர்க்க வேறுபல வழிகளையும் மேற்கொண்டார். பட்டுத் துணி நெய்யும் தொழிலை வளர்ப்பதற்காக அவர் ஸ்பிடா ஃபீல்ட்ஸ் (Spita Fields) என்னுமிடத்தில் வேலை செய்து வந்த நெசவாளிகளின் குறைகளைப் போக்கினார். அவர்கள் ஊதியத்தை, மாஜிஸ்ட்ரேட்டுகளே தங்கள் விருப்பம்போல் நிருணயிக்கும்வழக் கத்தை அவர் 1823இல் ஒருசட்டத்தின்மூலம் ஒழித்தார். அதனால் அவர்களின்ஊதியம்உயர்ந்தது. 1824இல் அவர், பட்டின்மீதுவிதிக்

கப்பெற்ற வரிகளைக் குறைத்தார். இங்கிலாந்துக்குள் இறக்குமதி யான இந்தியக் கச்சாப் பட்டின்மீது விதிக்கப்பெற்றிருந்த வரி யைப் பவுண்டுக்கு 4 ஷில்லிங்கிலிருந்து 3 பென்ஸாக்க் குறைத் தார். மற்ற நாடுகளினின்றும் இறக்குமதியான பட்டின்மீது விதிக் கப்பட்ட வரியைப் பவுண்டுக்கு 5 ஷில்லிங் $7\frac{1}{2}$ பென்ஸிலிருந்து 4 பென்ஸாகக்குறைத்தார். 1823இல் இங்கிலாந்துக்குள் இறக்குமதி யான கச்சா கம்பளியின் மீது விதிக்கப்பட்ட வரியையும், இங்கி லாந்தில் இருந்து ஏற்றுமதியான ஆங்கிலக் கம்பளியின்மீது விதிக் கப்பட்ட வரியையும் அவர் குறைக்க முயன்றார். இறக்குமதி வரியைக் குடியானவர்களும், ஏற்றுமதி வரியை ஆக்கத்தொழிலதி பர்களும் எதிர்த்ததால் அவரது முயற்சி தோல்வியுற்றது. ஆனால், 1824இல் அவர் தமது நோக்கத்தில் வெற்றிபெற்றார். கச்சாக் கம்பளியின்மீது விதிக்கப்பட்டிருந்த இறக்குமதி வரியைப் பவுண் டுக்கு 6 பென்ஸிலிருந்து ஒரு பென்ஸாகக் குறைத்தார். ஆங்கிலக் கம்பளிமீது விதிக்கப்பட்ட ஏற்றுமதி வரியையும் அதேமுறையில் அவர் குறைத்தார். நாளடைவில் இரும்பு, துத்தநாகம், தகரம், பயம், மட்பாண்டங்கள், கண்ணாடி, காகிதம், நூல்கள் போன்ற பலபொருள்களின் மீது விதிக்கப்பெற்ற இறக்குமதி வரிகளை அவர் குறைத்தார். நாட்டில் வளர்ந்து வந்த கள்ளக் கடத் தலைக் குறைக்கவே ஹஸ்கிஸன் மேற்சொன்ன சீர்திருத் தங்களைச் செய்தார். குடியேற்ற நாடுகளுக்கு அவர் தனிச் சலுகை வழங்கினார். அவர் இங்கிலாந்தில் இறக்குமதி செய்த பொருள்களுக்குப் பெருமளவு சுங்கவரியைக் குறைத்தார். இவ் வித முறைகளால் நாட்டின், தொழில்கள் சில வேற்று நாடு களின் போட்டிக்கு உள்ளாக நேர்ந்தன. இருப்பினும், கச்சாப் பொருள்களுக்குக் குறைந்த வரி விதித்ததின்மூலம் அந்நியப் போட்டியால் அத் தொழில்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை அவர் ஈடு செய்தார்; ஏற்றுமதிக்காகக் கொடுக்கப்பட்ட உதவித் தொகைகளைச் (Bounties) சிறுகச்சிறுக ஒழித்தார். கைத்தொழில் நுணுக்க வல்லுநர்கள் வேற்று நாடுகட்குச் செல்லக்கூடாது என்று கட்டுப்படுத்திய சட்டங்களையும் நீக்கினார். இத்தகு ஏற்பாடுகளால் கட்டுப்பாடற்ற வாணிகத்தை வளர்க்க அவர் பெரிதும் முயன்றார்.

### தொழிலாளர்—முதலாளிகள் உறவு பற்றிய சீர்திருத்தங்கள்

தொழிலாளர்கள் ஒன்றுகூடிச் சங்கமமைத்துக் கொள்வதை ஆங்கிலேயர் வெகு நாள்களாகவே எதிர்த்து வந்தனர். அங்ஙனம் சங்கம்அமைப்பதைத்தடுக்க, ஏறக்குறைய 40சட்டங்கள்1823இல் ஆங்கிலச் சட்ட நூல்களில் காணப்பட்டன. 'பிட்' என்பவர் ஏற் படுத்திய 'ஒன்றுகூடல் தடைச் சட்டங்கள்' (Combination Laws)

தொழிற் சங்க வளர்ச்சியைத் தடுக்கவில்லை. எனவே, அச் சட்டங்களை ரத்து செய்வதே நல்லது என, ஜோசப் ஹ்யூம் (Joseph Hume) என்ற புரட்சியாளரும், ஃபிரான்சிஸ் பிளேஸ் (Francis Place) என்ற தையற்காரச் சீர்திருத்தவாதியும் ஓயாமல் பிரசாரம் செய்து வந்தனர். ஹ்யூம் என்பவர் 1824 இல் ஒன்றுகூடற் தடைச்சட்டங்களை ஒழிக்கவென ஒரு சட்டத்தைப் பாராளுமன்றத்தில் நிறைவேற்றினர். ஹஸ்கிஸனுக்கு அச்சட்டம் அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அவர் நினைத்தபடியே நாட்டில் தொழிற் சங்கங்கள் குறைவதற்குப் பதிலாகப் பெருக ஆரம்பித்தன. எங்கு நோக்கினும் வேலை நிறுத்தங்களும் கலகங்களும் தோன்றின, ஆலைத்தொழில் முதலாளிகள், அரசிடம், தொழிலாளர்கள் சங்கம் அமைத்துக் கொள்வதைத் தடை செய்யுமாறு முறையிட்டனர். நிலைமையை ஆராய ஒரு குழுவை அரசு நியமித்தது. அதன் சிபார்சுகளுக்குஏற்ப 1825ஆம் ஆண்டில் ஒரு சட்டம் நிறைவேறியது. அதன்படி தொழிலாளர்கள் தங்கள் கூலி முதலியவற்றைத் தீர்மானித்துக் கொள்ளவெனச் சங்கங்கள் அமைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். ஆனல், அச் சங்க உறுப்பினர்கள் முதலாளிகளையோ உடன் வேலைசெய்யும் தொழிலாளர்களையோ பயமுறுத்தவோ அடிக்கவோ, கூடாதென்றும், அத்தகைய பலாத்கார வழிகளில் ஈடுபட்டால் கடுமையாகத் தண்டிக்கப்படுவார் எனவும் அச் சட்டம் கூறியது. அச் சட்டப்படித் தொழிற் சங்கங்களெல்லாம் சட்டத்துக்குப் புறம்பான சதிகாரக் கும்பல்போல் நடத்தப்பட்டன. ஆனல், அதே சமயம் ஓரளவு உரிமைகளை அஃது தொழிலாளர்களுக்கு வழங்கியது.

## லிவர்ப்பூல் மந்திரி சபையின் வீழ்ச்சி

ராபின்ஸன், ஹஸ்கிஸன் ஆகிய இருவரது சீர்திருத்தங்களால் நாட்டில் எங்குப் பார்த்தாலும் வளமையும் மகிழ்ச்சியும் காணப்பட்டன. விவசாயமும் கைத்தொழிலும் ஒருங்கே வளர்ந்தன. மக்களிடையே பணப் புழக்கம் அதிகமாயிற்று. அதற்கேற்பத் தாள் நாணயங்களை அரசாங்கம் ஏராளமாக வெளியிட்டது. அதனல், சொத்துக்களின் விலை உயர்ந்தது. பணத்தின் மதிப்பு அதற்கு ஏற்பக்குறைந்தது. புதிய தொழிலில் ஈடுபட விரும்பினேருக்கு எளிதில் மூலதனம் கிடைத்தது. பாங்குகள் தாராளமாகக் கடன்கள் தர முன்வந்தன. இந்த நிலையைப் பயன்படுத்திக்கொண்டு, பல பேராசைக்காரர்கள் கண்மூடித்தனமான ஊக வாணிக நடவடிக்கைகளில் (Wild Speculation) இறங்கினர். தென்னமெரிக்காவில் புதிதாகச் சுதந்திரம் பெற்ற குடியேற்ற நாடுகளோடு வியாபாரம் செய்யப் பல விசித்திரமான கம்

பெனிகள் தோன்றின. சான்றாக வெப்பமிகுந்த பூமத்திய ரேகைப் பிரதேசங்களில், பனியில் வழுக்கி விளையாடும் கருவிகளை (Skates) விற்பதற்காகவென்று ஒரு கம்பெனி ஏற்பட்டது. அதற்கும் பணம் தர மக்கள் முன் வந்தனர். ஆனால், வெகு சீக்கிரத்திலேயே அப்படிப்பட்ட ஏமாற்றுக்காரர் களின் சாயம் வெளுத்துவிட்டது. போலிக் கம்பெனிகள் மீது மக்கள் வைத்திருந்த நம்பிக்கை தளர்ந்தது அதனால், பல கம்பெனிகள் சீர்குலைந்தன. பல பாங்குகள் மூடப்பட்டன. ஏழே வாரங்களில் சுமார் எழுபது பாங்குகள் முறிந்தன. நாட்டில் கடன் கொடுப்பாரின் தொகை சுருங்கியது. பொருள்களின் விலை குறைந்தது. பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது. இந் நெருக் கடியைச் சமாளிக்க அரசாங்கம் பல நடவடிக்கைகளை மேற் கொண்டது. இலண்டன் பாங்கானது தன்னிடம் இருந்த தங்கக் கட்டிகளை யெல்லாம் நாணயங்களாக மாற்றித் தாள்நாணயங் களுக்கு மாற்றாக வழங்கியது. தனிப்பட்ட பாங்குகள், தாள் நாணயங்கள் அச்சிடுவது தடுக்கப்பப்பட்டது. இலண்டன் பாங்கு நாடெங்கும் தனது கிளைகளை ஏற்படுத்திக்கொள்ள அனுமதிக்கப்பட்டது. தனிப்பட்ட பாங்குகளில் 6 பேருக்குமேல் கூட்டாளிகள் இருத்தல் கூடாது என்னும் சட்டம் ஒழிக்கப் பட்டது. எனவே, பல பேர் சேர்ந்த ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கு கள் (Joint Stock Banks) ஆங்காங்கே தோன்ற வசதி ஏற்பட்டது. வியாபாரப் பண்டங்களை அடமானமாக வைத்துப்பணம் பெற இலண்டன் பாங்கு அனுமதி தந்தது. அப்படிக் கடன் தருவதற் காக அவ்வங்கி 30,00,000 பவுன்களை ஒதுக்கியது. இத்தகைய செயல்களால் நெருக்கடி ஓரளவு சமாளிக்கப்பட்டது. எனினும், ஆங்காங்கே எதிர்ப்புகள் கிளம்பின, ப்ளாக்பர்ன் (Blackburn) என்னுமிடத்தில் ஒரே வாரத்தில் 100 விசைத் தறிகள் (Power looms) உடைத்தெறியப்பட்டன. லங்காஷயரிலும் இக்கலக மனப்பான்மை விரைவில் பரவியது. போதாக்குறைக்கு இயற் கையும் சேர்ந்துகொண்டு சதி செய்தது. நாட்டில் போதிய மழை யின்மையால் அறுவடை சரிவரக் கிடைக்கவில்லை. தனது கிடங்கு களில் அடைபட்டிருந்த கோதுமையை வெளியிட்டத்தின் மூலமும், வெளிநாட்டிலிருந்து ஓட்ஸ் போன்ற சில தானியங் களை இறக்குமதி செய்ததன் மூலமும் அரசு பஞ்சத்தின் கடுமை யைச் சிறிது குறைத்தது. அதற்கான சட்டங்களைச் செய்த பின் பாராளுமன்றம் கலைந்தது. பொதுத்தேர்தல் நடைபெற்றது. தானியச்சட்டங்கள், கத்தோலிக்கர் விடுதலை என்ற இரு பிரச் சினைகளே தேர்தல் பிரச்சினைகளாக விளங்கின. 1827ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 5 ஆம் தேதி புதிய பாராளுமன்றம் கூடியது. அது கூடிய ஒரு வாரத்துக்கெல்லாம் லிவர்ப்பூல் பிரபு

வாதநோயால் பீடிக்கப்பட்டு, நடப்பதற்கும் சக்தியற்றவர் ஆனார். அவரது நோய் டோரிக் காபினெட்டைக் கலைத்ததுமன்றி அக் கட்சியிலும் பெரும் பிளவை ஏற்படுத்தியது. அவருக்குப் பின் யார் பிரதமராக வருவது என்பது பற்றிப் பலத்த விவாதங்கள் நடைபெற்றன, கட்சியினரை ஒன்றுபடுத்திச் செயற்படச் செய்யத்தக்க சாதுரியமும், அதிகாரமும் கொண்ட லிவர்பூல் பிரபுவைப் போன்ற தலைவர் ஒருவரும் டோரிக் கட்சியில் அப்போது இல்லை. பல வாரங்கள் ஓயாமல் நடைபெற்ற பேச்சுவார்த்தைகளின் பின் கானிங் பிரபுவைப் பிரதமராக அரசர் நியமித்தார். அவரது தாராளக் கொள்கைகளை வெறுத்த பல பெரும் பிரபுக்கள் அவரைப் பிரதமராக நியமிக்கக்கூடாதென அரசரிடம் முறையிட்டனர். ஆனால். வேறு நல்ல தலைவர்கள் கிடைக்காமையால் கானிங்கையே அரசர், பிரதமராக்கினார். பழைய காபினெட்டில் அமைச்சர்களாக இருந்த பீல், எல்டன், பாத்ஹஸ்ட் பிரபு (Lord Bathhust), மெல்வில் பிரபு (Lord Melville), வெஸ்ட் மோர்லாந்து பிரபு (Lord Westmoreland) ஆகியோர் கானிங்கின் கீழ் பணி புரிய மறுத்து விட்டனர். எனவே, விக்குகளின் ஆதரவைக் கானிங் நாடவேண்டி வந்தது. லான்ஸ்டவுன் பிரபு (Lord Lansdowne), டீர்னி பிரபு (Lord Tierney) என்ற இரு பெரும் விக் தலைவர்களை அவர் தமது காபினெட்டில் சேர்த்துக் கொண்டார். மற்றப்படி, டோரிகளே காபினெட்டில் பெரும்பான்மையராக இருந்தனர். ராபின்ஸன், பிரபுக்கள் சபையின் தலைவராகவும், குடியேற்ற நாட்டு அமைச்சராகவும் நியமிக்கப்பட்டார். டட்லி பிரபு அயல்நாட்டு அமைச்சரானார். லான்ஸ்டவுன் பிரபு உள்நாட்டு அமைச்சராகவும், ஹஸ்கிஸன் வாணிகக் குழுவின் தலைவராகவும், பாமர்ஸ்டன் பிரபு போர் அமைச்சராகவும் அமைந்தனர். கானிங் பிரபு தமது வாழ்நாளின் குறிக்கோளைக் கடைசியாக எய்தினாரென்றாலும், அவர் நீண்டநாள் அந்தப் பெருமையை அனுபவிக்கவில்லை. அங்ஙனம் அவர் அனுபவிக்காமல் செய்ய, அவருடைய எதிரிகள் பார்லிமென்டின் இருசபைகளிலும் காத்திருந்தனர். ஓயாது அவரைக் குறை கூறி அவரது உற்சாகத்தைக் குறைத்து, இறுதியில் அவரைச் சாகடித்துவிட்டனர். 1827 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பிரதமராகப் பதவியேற்ற கானிங் பிரபு அதே ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் உயிர்நீத்தார்.

## கானிங் பிரபுவின் வாழ்வும் சாதனைகளும் (1770-1827)

'கானிங் பிரபுவின் மந்திரி சபையானது ஆங்கில வரலாற்றிலும் ஐரோப்பிய வரலாற்றிலும் ஒரு புதிய சகாப்தத்தைத்

[1] See Hearnshaw's Prime Ministers of the 19th Century: Page-1.

தோற்றுவித்தது'[1] என்று மெட்டர்னிக் என்ற அரசியலறிஞர் ஒரு முறை கூறினார். அக் கூற்று, கானிங் பிரபு பிரதமராக இருந்த குறுகிய காலத்தில் சாதித்த அரும்பெரும் செயல்களின் காரண மாக எழுந்ததன்று. அக்காலத்தில் அவர் சதா வற்புறுத்தி வந்த தும், அவருக்குப் பின் வந்தவர்களைப் பெரிதும் கவர்ந்ததுமான ஒரு கொள்கையின் காரணமாகவே அவரது ஆட்சி முக்கியத்துவம் உள்ளதாகின்றது. சீர்திருத்தங்களை விரும்பாத பழமையாளர் களின் காலத்துக்கும், பல அடிப்படைச் சீர்திருத்தங்களை விரும் பிய புதுமையாளர்களின் காலத்துக்கும் இடையிலிருந்த ஒரு பாலத்தின்மீது கானிங் பிரபு உலவினார் எனலாம். பழமைக் கொள்கைகள் சிலவற்றின் மீது பற்றுக்கொண்டவர்தாம் எனினும், காப்பு வரிச்சீர்திருத்தம், தானியச் சட்டங்களின் சீர்திருத்தம், கத்தோலிக்கர்தம் குறைகளைக் களைதல் போன்ற கொள்கைகள் அவரை வெல்லிங்டன் போன்ற பழைய டோரி களினின்றும் நன்கு பிரித்துக் காட்டின. ஆனால், அரசியல் அமைப்பையும், வாக்குரிமையையும் சிறிதும் மாற்றக்கூடாது என்பதில் அவர் ஏனைய டோரிகளைப் போன்றே காட்சியளித் தார். எனினும், விக்டோரியா மகாராணியார் காலத்தில் சிறப் புற்று விளங்கிய பாமர்ஸ்டன், கிளாட்ஸ்டன் என்ற இரு பெரு அமைச்சர்களுக்கு ஒரு வழிகாட்டியாக விளங்கியவர் கானிங் பிரபுவே யாவார்.

கானிங் 1770 ஆம் ஆண்டு, ஆகஸ்ட் 11 ஆம் தேதியன்று பிறந்தார். அவரது தந்தை ஓர் ஐரிஷ் நிலக்கிழாராவார். அவ ருடைய தாயார் ஒரு நடிகை அதனால்தான் பிற்காலத்தே அவ ருடைய எதிரிகள் அவரை ஒரு நடிகையின் புதல்வன் எனக் கூறி இகழ்ந்தனர். அவர் தமது இளவயதில் பர்க், ஃபாக்ஸ் (Fox) போன்ற விக்குகளோடு நெருங்கிப் பழகிவந்தார். அவர் எழுதிய கட்டுரைகளைக் கண்டு மகிழ்ச்சியுற்ற அமைச்சர் பிட் அவருக்கு 1796 இல் பாராளுமன்றத்தில் ஓர் இடம் அளித்தார். பிட்டின் போர்க் கொள்கைகளை ஆதரித்தும், ஃபிரெஞ்சுப் புரட்சிக்கு விரோதமாயும் அவர் பல கட்டுரைகளைத் தமது பத்திரிகை ஒன்றில் ஓயாது எழுதி வந்தார். ஆடிங்டன் (Addingdon) என்ற அமைச்சரைப் பழித்துரைப்பதிலும் அவர் வல்லவராயிருந்தார். 1804இல் பிட்டின் அமைச்சர் அவையில் கடற்படை நிதிக் காப் பாளராக (Treasurer of Navy) அவர் நியமிக்கப்பட்டார். 1807 – 1809 இல் போர்ட்லாந்து (Portland) மந்திரி சபையில் அவர் அயல்நாட்டு அமைச்சராகப் பணியாற்றினார். அச் சமயம் நெப்போலியனை அவர் அறவே வெறுத்ததோடு, நெப்போலியனின்

---

1 See Hearnshaw's Prime Ministers oft he 19th Century: Page-1.

கண்டத் திட்டத்தையும் கண்டித்து, அதற்கெதிராகக் கவுன்சில் உத்திரவுகளைப் பிறப்பிக்கவும் அவர் துணைபுரிந்தார். ஸ்பெயின் தீபகற்பப் போரில் பிரிட்டனை அதிகக் கவனம் செலுத்துமாறு செய்தவரும் அவரே. போர் அமைச்சராக இருந்த காஸில்ரேக் கும் அவருக்கும் சதா சச்சரவேற்பட்டுக்கொண்டே யிருந்தது. 1809 இல் அவர்கள் இருவரும் நேருக்கு நேர் சண்டையிட்டுத் தங்களது பகைமையைத் தீர்த்துக்கொள்ள முயன்றனர். காஸில் ரேயின்மீது இருந்த வெறுப்பின் காரணமாகவும், தான் பிரதம ராகவேண்டுமென்ற ஆசை நிறைவேருததாலும், 1809-16 வரை அவர் எப் பதவியையும் ஏற்காது தனித்திருந்தார். 1812 ஆம் ஆண்டுமுதல் அவரது வாழ்க்கையில் ஒரு புதிய மாற்றம் தோன் றியது. தாராளக் கொள்கை என்னும் புதிய பாதையில் அவர் விரைந்து நடைபோடலானுர். கத்தோலிக்கர் விடுதலைக்காக அவர் பாடுபட ஆரம்பித்தார். 1812 இல் அவர் கத்தோலிக் கரின் உரிமைகளைக் காக்கப் பொதுமக்கள் சபையில் ஒரு சட்டம் கொணர்ந்தார். பொது மக்கள் சபையில் நிறைவேறிய அம் மசோதா, பிரபுக்கள் சபையில் தோற்றது. அதே ஆண்டில் பெர்சிவல் (Percevel) என்னும் பிரதமர் கொலை செய்யப்பட்டார். வெல்லஸ்லி பிரபுவை மன்னர் அழைத்துக் கானிங்கின் ஒத்துழைப் புடன் மந்திரி சபையை அமைக்குமாறு இருமுறை வேண்டிக் கொண்டார். ஆனுல், பிரதமர் பதவிமீது கண் வைத்திருந்த கானிங், வெல்லஸ்லியோடு ஒத்துழைக்க மறுத்துவிட்டார். அதன் பின் ஏற்பட்ட லிவர்ப்பூல் மந்திரிசபையில் அவருக்கு அளிக்கப் பட்ட அயல்நாட்டு அமைச்சர் பதவியையும் ஏற்க மறுத்துவிட் டார். ஏனெனில், காஸில்ரே பிரபு பொதுமக்கள் சபையின் தலைவராக இருப்பதை அவர் வெறுத்தார். அச் சபையின் தலைமையும் தமக்கே கிட்டவேண்டுமென அவர் விரும்பினுர். எனவே, காஸில்ரே அயல் நாட்டு அமைச்சராகப் பணியாற்றி னுர். 1816 முதல் 1821 வரை அவர் கிழக்கிந்தியக் கம்பெனியின் கட்டுப்பாட்டுக் குழுவின் (Board of Control) தலைவராக இருந் தார். அப்போது அவர் ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் பிண்டாரிக் கொள்கையையும், சிட்மவுத் பிரபுவின் அடக்குமுறைக் கொள்கை யையும் ஆதரித்தார். 1820இல் கரோலின் அரசிக்கு விரோத மாக நடைபெற்ற செயல்களை அவர் பெரிதும் கண்டித்தார். அரசியை விசாரணை செய்யப் பொதுமக்கள் சபை தீர்மானித்த போது அவர் தம் பதவியை ராஜினுமாச் செய்துவிட்டு ஐரோப்பா வுக்குப் போய்விட்டார். 1822 இல் அவர் இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்டார். ஆனுல், திடீரென்று காஸில்ரே தற்கொலை செய்துகொண்டதால், கானிங் அயல்நாட்டு அமைச்ச ராக நியமிக்கப்பட்டார். 1822 முதல் 1827 வரை அயல்நாட்டு

அமைச்சராக அரும்பணியாற்றினர். 1827 இல் தான் அவர் வெகுநாள்களாக விரும்பிய பிரதமர் பதவி கிடைத்தது. கிடைத்தும். அதிகநாள் அப் பதவியை அனுபவிக்க முடியாமல் அகால மரணமடைந்தார். இறக்கும்போது அவர் 57 வயதே நிரம்பப் பெற்றிருந்தார். கானிங் பிரபுவின் பெருமையெல்லாம் அவரது வெளிநாட்டுக் கொள்கைகளேயே பெரிதும் அடிப்படையாகக் கொண்டது. அவற்றை நாம் சென்ற அத்தியாயத்தில் ஆராய்ந்தோம். பிரிட்டனின் நலமும் ஐரோப்பியச் சமாதானமுமே அவரது கொள்கைகளின் அடிப்படையாய் அமைந்தன. ஐரோப்பிய ராஜதந்திரிகள் முழு வல்லரசுக் கொள்கைகளைப் ((Absolutist Principles) பற்றிப் பறைசாற்றிவந்த காலத்தில் தாராளக் கொள்கைகளின் அவசியத்தைப் பற்றிப்பேசியவர் கானிங் ஒருவரே. தேசிய இனங்கள் (Nationalities) மற்றவர்களின் தலையீடின்றித் தனித்து வளர்ச்சியுற வேண்டுவதன் அவசியத்தை அவர் ஒருவரே வற்புறுத்திவந்தார். தேசியப் பண்பின் வளர்ச்சியை வற்புறுத்தியதில் அவர் பிற்காலத்தே தோன்றிய கவூர், பிஸ்மார்க் போன்ற பெரும் ராஜதந்திரிகளோடு இணையாக வைத்து மதிப்பிடத் தக்கவர். உள்நாட்டுக் கொள்கைகளில் அவரது அடிச்சுவடுகளைப் பின்பற்றியே விக்குகள் பிற்காலத்தில் பெரிதும் மேம்பாடுற்றனர். அவரது மரணத்தால் மத சமத்துவம் அடிமை விடுதலை, தடையிலா வாணிகம், தொழிலாளர் விடுதலை போன்ற அரும்பெரும் கருத்துக்களை ஓயாது பறைசாற்றி வந்த ஒரு தனிப்பெருந் தலைவரை இங்கிலாந்து இழந்தது.

## வெல்லிங்டன் பிரபுவின் அமைச்சரவை (1829-30)

கானிங் பிரபுவின் மரணத்திற்குப் பின் ராபின்ஸன் அல்லது காடரிச் பிரபு (Lord Goderich) அவரது பணியைத் தொடர்ந்து நடத்திவந்தார். ஆனல், அமைச்சர்களிடையே காணப்பட்ட போட்டியையும் பொருமையையும் கண்ட அவர் விரைவிலேயே தம்பதவியை (ஜனவரி 8, 1828) ராஜிநாமாச் செய்துவிட்டார். அதன்பின் வெலிங்டன் பிரபு தலைமையமைச்சர் பதவி ஏற்ருர். பழைய மந்திரி சபையில் அதிக மாற்றம் எதுவும் அவர் செய்யவில்லை. பீல், உள்நாட்டு அமைச்சராகவும், கோல்பர்ன்(Goulburn) நிதியமைச்சராகவும் பதவி ஏற்றனர். ஹஸ்கிஸன் தமது பதவியை ராஜிஞமாச் செய்தார். அவரைத் தொடர்ந்து டட்லி, பாமர்ஸ்டன் கிராண்ட், லாம்ப் (Lamp) ஆகியோரும் பதவியைத் துறந்தனர். அதனல், வெலிங்டன் மந்திரி சபை சிறிது பலவீனமடைந்தது.

அதன் விளைவாக வெளிநாட்டுக் கொள்கையில் தவறுகள் பல நேர்ந்தன, அவற்றை நாம் முந்திய அத்தியாயத்தில் கண்டோம்.

உள்நாட்டுக் கொள்கை

வெல்லிங்டன் கடமையுணர்ச்சி நிரம்பப்பெற்றவர், மன்னருக்குச் சேவை செய்வதே தம் தலையாய கடமை என்றும், அதற்கு முட்டுக்கட்டையாக இருக்கும் எதையும் நீக்குவதே முறை என்றும் நம்பினார். எனவே, மற்ற எந்தக் கொள்கையைப் பற்றியும் கவலைப்படாமல் தமது கொள்கையிலேயே அவர் உறுதியாக இருந்தார். அதனால் அவர் பல சமயங்களில் கொள்கையற்றவர் போலவும், கிறுக்குத்தனமாய் நடந்து கொள்பவர் போன்றும் தோன்றினார்.

சோதனைச் சட்டங்கள், மாநகராட்சிச் சட்டங்களின் நீக்கம்

வெல்லிங்டன் பிரபு, பதவி வகித்த இரண்டு ஆண்டுகளில் மூன்று பெரிய சீர்திருத்தச் சட்டங்களை இயற்றிய பெருமைதனைப் பெற்றார். முதலில் அவர் ஆங்கில மத ஏற்பாட்டுக்கு இணங்காதார் மீது விதிக்கபபட்டிருந்த கடுமையான கட்டுப்பாடுகளைத் தளர்த்தினார். முன்னிலை மீட்சியின்போது ஆங்கில மத ஏற்பாட்டை நாட்டில் நன்கு நிலைநாட்ட வேண்டி ஏற்பட்ட சோதனைச் சட்டங்கள், அந்த நிலைமை மாறிய பின்னும் அப்படியே சட்ட நூல்களில் இருந்து வந்தன. ஆங்கில மத ஏற்பாட்டுக் கிரியைகளின் படியே ஒவ்வொரு உத்தியோகஸ்தரும் புனிதத் திருவிருந்தை (Sacrament) ஏற்றுக்கொள்ள வேண்டுமென வற்புறுத்திய சோதனைச் சட்டமானது வெகுநாள்களாகவே உண்மையில் செயற்படுத்தப்படாமல் இருந்து வந்தது. அச் சட்டத்தைமீறி இணங்காதவர்களை மன்னிக்கின்ற சட்டமொன்று (Indemnity Bill) ஆண்டுதோறும் பாராளுமன்றத்தில் இயற்றப்பட்டு வந்தது. இருந்தும், இறந்துபோன ஒரு சட்டத்தை ஒழித்து விடுவதே சாலச்சிறந்தது என்ற கருத்துடன் பொதுமக்கள் சபையில் கொணர்ந்தார். டோரிக் கட்சித் தலைவர்களும் அமைச்சர்களும் எதிர்த்தும், பொதுமக்கள் சபையில் பெரும்பான்மையோரின் ஆதரவைப் பெற்று, அத் தீர்மானம் நிறைவேறியது. அதைக் கண்ட வெல்லிங்டனும் பீலும் மக்கள் குரலுக்கு மதிப்பளிக்க முன்வந்தனர். சோதனைச் சட்டம் சட்டநூலினின்றும் அகற்றப்பட்டது. அவையொட்டித் தல ஆட்சித் துறையில் அம்மாதிரியே இணங்காதவர்களைக் கட்டுப்படுத்தி வந்த மாநகராட்சிச் சட்டங்களும் நீக்கப்பட்டன.

தானியச் சட்டங்கள்

இணங்காதார்க்கு வாழ்வளித்த அதே பாராளுமன்றக் கூட்டத்தில், தானியச் சட்டம் ஒன்றும் நிறைவேறியது. அதன்படி

தானியங்களின் விலை குறைவாக இருக்கும்போது அதிகமான சுங்கவரியும் விலை உயரும்போது குறைந்த வரியும் விதிக்கப்பட்டது. தானியங்களின் விலைமாறுபாட்டைக் குறைக்கவே அம்முறை கையாளப்பட்டது. ஆனால், அஃது எதிர்பார்த்த வெற்றியளிக்கவில்லை. ஊக வாணிகத்திலீடுபட்டோர் (Speculators) அதனால் நல்ல இலாபம் பெற்றனர்.

கத்தோலிக்க விடுதலை

மேற்சொன்ன இரண்டு சீர்திருத்தங்களையும் விட மிகப் பெரிதும் கடினமானதுமான கத்தோலிக்கர் பிரச்சினைகளைத் தீர்த்து வைத்த பெருமையும் வெல்லிங்டனுக்கே உரித்தாகும். கத்தோலிக்கர் மீது விதிக்கப்பட்டிருந்த தண்டனைச் சட்டங்களை ரத்து செய்ய வேண்டுமென்ற இயக்கம் வெகுநாள்களாகவே இங்கிலாந்தில் வளர்ந்து கொண்டு வந்தது. 1774 முதல் 1792ஆம் ஆண்டு வரை அயர்லாந்து சட்டசபை, தண்டனைச் சட்டங்களின் (Penal Code) பல பகுதிகளை ரத்து செய்து வந்தது. 1793ஆம் ஆண்டில் கத்தோலிக்கர்கள் பாராளுமன்றத் தேர்தலில் வாக்களிக்கும் உரிமையைப் பெற்றார்கள். எனினும், அவர்கள் பல கட்டுப்பாடுகளில் சிக்கித் தவித்தனர். அயர்லாந்தில் பெரும்பான்மையினராக இருந்த கத்தோலிக்கர்கள் எவ்வித அரசியலுரிமையும் இல்லாமல் வாடினர். சிறுபான்மையினரான பிராட்டெஸ்டெண்டுகளே அயர்லாந்தின் பிரதிநிதிகளாக இங்கிலாந்தின் பாராளுமன்றத்தில் அமர்ந்திருந்தனர். கத்தோலிக்கர்களுக்கு அங்குப் பிரதிநித்துவம் கொடுத்தால் அவர்கள் பிராட்டெஸ்டெண்டுகளை நசுக்கச் சட்டங்கள் செய்யக் கூடும் என்ற பயத்தாலேயே அவர்களுக்கு இடங்கொடுக்கப் பிரிட்டிஷ் அரசு மறுத்தது. ஆனால், இங்கிலாந்தும் அயர்லாந்தும் ஐக்கியமாகிவிட்டால், அயர்லாந்தின் பிரதிநிதிகளாகக் கத்தோலிக்கர்களிருந்தாலும் ஐக்கியப் பாராளுமன்றத்தில் அவர்கள் சிறுபான்மையராகவே இருப்பாராதலால் பிராட்டெஸ்டெண்டுகளுக்கு எதிராக எந்தச் சட்டத்தையும் கொரண இயலாது என்பதைப் 'பிட்' உணர்ந்தார். அவ்வெண்ணத்தோடுதான் அயர், இங்கிலாந்து ஐக்கியச் சட்டத்தை அவர் கொணர்ந்தார். இருநாடுகளும் ஐக்கியமுற்றன. ஆனால் கத்தோலிக்கர் விடுதலை பெறவும், பாராளு மன்றத்தில் இடம் பெறவும் அவர் வழி செய்ய இயலாதபடி மன்னர் மூன்றும் ஜார்ஜ் முட்டுக்கட்டை போட்டார். அதனால் பிட் தமது பதவியை ராஜினாமாச் செய்தார். கத்தோலிக்கர் பாராளுமன்றத்திலும், நீதித் துறை, சட்டத்துறை, சேனை ஆகிய துறைகளிலும் இடம்பெற இயலாது கிடந்தனர். மதத் துறையில் அவர்

கள் அயர்லாந்துத் திருச்சபைக்குக் கட்டுப்பட்டு வரி செலுத்தினர். வியாபாரத் துறையில் தடையிலா வாணிகக் கொள்கையின்படி அவர்கள் ஆங்கிலேயரின் போட்டியினுல் தவித்தனர். பிரிட்டிஷ் பொருள்கள் அயர்லாந்தில் குறைந்த விலைக்கு விற்கப்பட்டதால், அயர்லாந்தின் கைத்தொழில்கள் நசிந்தன. அரசியல் துறையில் பெரும்பாலும் ஆங்கில அதிகாரிகளின் ஆட்சிக்கு அடங்கியே அவர்கள் வாழ்ந்தனர். விவசாயத் துறையிலும் ஆங்கிலப் பிரபுக்களின் ஆதிக்கமே மிகுதியாகக் காணப்பட்டது. இத் தொல்லைகளை எல்லாம் நீக்கப் பலர் பல சமயங்களில் முயன்றனர். 1807இல் கிரென்வில் பிரபு, பிரபுக்கள் சபையில் கத்தோலிக்கர்களுக்கு விடுதலை அளிக்கும் மசோதா ஒன்றைக் கொணர்ந்தார். மன்னர் அதை எதிர்த்ததோடு மீண்டும் அம் மாதிரிப் பிரச்சினைகளைக் கிளறுவதில்லை என வாக்குறுதியளிக்கும்படி கிரென்வில் மந்திரி சபையை வற்புறுத்தியதினுல், அச்சபை கலைந்தது. 1812இல் கானிங் பிரபு கத்தோலிக்கர் பிரச்சினையை மீண்டும் பரிசீலிக்க வேண்டுமென்ற தீர்மானத்தைப் பொது மக்கள் சபையில் நிறைவேற்றினுர். அதன் மூலம் கத்தோலிக்கர் விடுதலைப்பற்றிப் பேசுவதே தவறு என்றிருந்த நிலைமை மாறியது. 1813, 1819ஆம் ஆண்டுகளில் கிராட்டன் (Grattan) என்பவர் பொதுமக்கள் சபையில் கத்தோலிக்கர் விடுதலை பற்றிப் பேருரைகள் நிகழ்த்தியதோடு, தீர்மானங்களும் கொணர்ந்தார். ஆனுல், அவை வெற்றிபெறவில்லை. 1821 இல் கத்தோலிக்க நிவாரண மசோதா (Catholic Relief Bill) ஒன்று பொதுமக்கள் சபையில் நிறைவேறியது. ஆனுல், பிரபுக்கள் சபையில் அது தோற்றது. அதேபோன்று கத்தோலிக்கர்களுக்கு ஓரளவு நிவாரணமளிக்கும் சட்டங்களை 1822, 1823ஆம் ஆண்டுகளிலும் பிரபுக்கள் சபை தோற்கடித்தது. 1825 இல் சர் ஃபிரான்ஸிஸ் பர்டெட் (Francis Burdett) என்ற கத்தோலிக்கரின் நண்பர் நிவாரண மசோதா ஒன்றைச் சபையில் கொணர்ந்தார். இச் சட்டம் நிறைவேறிவிட்டால், அடுத்து, பிராட்டெஸ்டெண்டுகளை மகிழ்விப்பதற்காகக் கத்தோலிக்கர் வாக்குரிமையைக் குறைக்கும் ஒரு சட்டத்தைக் கொண்டுவருதாக வாக்களித்தார். இருப்பினும் யார்க் கோமகனது எதிர்ப்பால் பிரபுக்கள் சபையில் அச் சட்டம் தோல்வியுற்றது.

## டேனியல் ஓ' கானல் (Daniel O' Connell)

இவ்வாறு இங்கிலாந்தில் தீர்க்கப்படாமலிருந்த கத்தோலிக்கர் பிரச்சினை இறுதியில் அயர்லாந்தில் தீர்க்கப்பட்டது. அதற்கு மூலகாரணமாயமைந்தவர் ஐரிஷ் தலைவர் டேனியல் ஓ' கானல் என்பவர். அயர்லாந்து தோற்றுவித்த வீரத் தலைவர்களில் முதன்

மையாக எண்ணப்படத்தக்கவர் ஓ' கானல் ஆவார். நல்ல உடற் கட்டும், நுண்ணறிவும், கேட்பாரைப் பிணிக்கவல்ல நாவன்மையும் ஒருங்கேயமைந்தவர் அவர். எடுத்த செயலை எத்தகைய இடையூறுவரினும் விடாப் பிடியாக நடத்தி, வெற்றி பெறுகிற சீரிய பண்பும் அவர்பால் மிகுந்திருந்தது. 1775 இல் பிறந்த அவர், 1810 இல் கத்தோலிக்கக் குழுவின் செயலாளரானூர். 1823 இல் அவர் கத்தோலிக்கச் சங்கம் (Catholic Association) ஒன்றை நிறுவினூர். பிற்போக்காளரான வெல்லஸ்ஸி பிரபு அப்போது அயர்லாந்து கவர்னராயிருந்தார். கத்தோலிக்கர் சங்கம் ஒரு தனிப்பட்ட அரசு போல் தொழில் புரிந்து வந்தது. 'கத்தோலிக்க வரி (Catholic rent) என்றவரியை அச் சங்கம் மக்களிடையே வசூலித்தது. அங்ஙனம் செய்தல் சட்ட விரோதமானது எனக் கூறிப் பாராளுமன்றம் 1828 இல் ஒரு சட்டமியற்றியது. வெல்லஸ்லி, கத்தோலிக்கர் விடுதலையை வெறுக்கிறூர் என்பதையறிந்த அயர்லாந்து மக்கள் ஆங்காங்கே பலகிளர்ச்சிகளில் ஈடுபட்டனர். அவர்கள் கலகத்தில் தீவிரமாக இறங்காமல் கட்டிக்காத்து வந்தவர் ஓ' கானல் என்னும் அவர்களது தலைவரேயாவார். அவர் ஒரு சாத்வீக வாதி. கட்டுப்பாடான அமைதியோடு கூடிய முறைகளாலேயே தம் காரியத்தைச் சாதிக்கப் போவதாக அவர் கூறிவந்தார். சிறு கிளர்ச்சிகளில் இறங்கினூல், ஆங்கிலேயர் தம் படைபலத்தால் அவற்றை, எளிதில் அடக்கி விடுவாரென்பதை அவர் நன்கு அறிந்திருந்தார். 1823 ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலில் அவர் கிளேர் என்ற கவுண்டியின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவரை எதிர்த்த வெஸெஃபிட்செரால்டு (Vesey Fitzgerald) ஒரு செல்வாக்கு மிக்க நிலப்பிரபு, அவரது தோல்வியினைக் கேள்வியுற்ற பீல் திடுக்கிட்டார். வெல்லிங்டன் பிரபு வெகுண்டார். என்ன செய்வது என்றே அவருக்குப் புரியவில்லை. ஓ' கானல் கத்தோலிக்கரானதால் சோதனைச் சட்டப்படி ஆங்கிலப் பாராளுமன்றத்தில் அமரத் தகுதியற்றவராக இருந்தார். ஆனூல், அவரது செல்வாக்கைக் கண்ட யாவரும் அவருக்குப் பாரளுமன்றத்தில் இடம் தராமற்போனூல், அவரிடம் கட்டுப்பட்டுக் கிடந்த கத்தோலிக்கர் யாவரும் புரட்சியில் இறங்கக் கூடுமோ என அஞ்சினர். அச் சமயத்தில், அயர்லாந்தில் லெப்டினன்ட் பிரபுவாக இருந்த ஆங்கில்செ பிரபு (Lord Angiesey) அயர்லாந்தில் ஓர் உள்நாட்டுப் போர் ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டுமானூல், கத்தோலிக்கருக்கு விடுதலையளிப்பதைத் தவிர வேறு வழியில்லை எனத் திட்டவட்டமாக அறிவித்தார். நன்கு ஆலோசித்த பின், பீலும், வெல்லிங்டனும் கத்தோலிக்கர்களுக்கு விடுதலையளிப்பதே சிறந்தது என்ற முடிவுக்கு வந்தனர். கத்தோலிக்கர் விடுதலைச் சட்டமானது 1829 ஆம் ஆண்டு மார்ச் மாதம்

பாராளுமன்றத்தில் நிறைவேறியது. அதன்படி கத்தோலிக்கர்களுக்குப் பல சிவில் உரிமைகள் கிடைத்தன. அயர்லாந்தின் பாது காப்பாளர் (Regent), லெப்டினன்ட் பிரபு, சான்ஸலர் பிரபு என்ற மூன்று பதவிகளைத் தவிர, மற்ற எல்லாப் பதவிகளுக்கும் கத்தோலிக்கர் அருகதையுள்ளவராயினர். ஆனால் கத்தோலிக்கக் கழகத்தை கலேக்கும்படியும், ஓ' கானல் மீண்டும் கிளேர் தொகுதியில் தேர்ந்தெடுக்கப்பட்டால்தான் பாராளுமன்றத்தில் இடம் பெறலாம் எனவும் அது அறிவித்தது. மேலும், வாக்காளிப் போருக்கு இருக்கவேண்டிய சொத்தின் மதிப்பை 40 ஷில்லிங்கிலிருந்து 10 பவுனாக உயர்த்தியது. அதற்கான சட்டமொன்று 1829 இல் ஆங்கிலப் பாராளுமன்றத்தில் நிறைவேறியது. இங்ஙனம் வலக்கையால் தந்த உரிமைகளை ஆங்கில அரசு இடக்கையால் பிடுங்கிக்கொண்டது. ஓ' கானலும் அச்சட்டத்தை ஒப்புக் கொண்டார். உண்மையில் அது அவரைத் தேர்ந்தெடுத்த வாக்காளர்களுக்கு இழைத்த நம்பிக்கைத் துரோகம் என்பதில் சற்றும் ஐயமில்லை. எனினும், கத்தோலிக்கர்களுக்குக் கிடைத்த வேறு பல சலுகைகளை முன்னிட்டு ஓ' கானலும் அவரது சகாக்களும் மேற்சொன்ன வாக்குரிமைச் சட்டத்தை ஏற்றுக்கொண்டனர். அதனால், அயர்லாந்தின் வாக்காளர் தொகை இரண்டு இலட்சத்திலிருந்து 26,000 ஆகக் குறைந்தது. எனவே, அயர்லாந்து மக்களின் கோபம் குறையவில்லை. இங்கிலாந்திலிருந்து பிரிந்து விடவேண்டுமென்ற உணர்ச்சி நாளுக்கு நாள் வளர ஆரம்பித்தது

## டோரிக் கட்சி ஆட்சியின் முடிவு

**நான்காம் ஜார்ஜ் இறத்தல்**

**1830ஆம் ஆண்டு ஜூன் மாதம் 26 ஆம் நாளன்று நான்காம் ஜார்ஜ் மன்னர் இறந்தார். அவர் ஒரு தீய அரசர் மட்டுமல்லர்; தீய மனிதரும் ஆவார். எனவே, அவர் மறைவு குறித்துப் பிரிட்டனில் வருந்துவார் யாருமில்லை. அவர் சகோதரர், நான்காம் வில்லியம் என்ற பட்டத்தோடு அரியணை ஏறினார்.**

நான்காம் ஜார்ஜ் இறந்ததால் பாராளுமன்றம் கலேக்கப்பட்டது. பொதுத்தேர்தல் மீண்டும் நடைபெற்றபோது, நாட்டு மக்களிடையே பெரும் பரபரப்பும் உற்சாகமும் காணப்பட்டன. அரசாங்கத்தின் ஆட்கள் பலவிடங்களில் தோல்வியுற்றனர். நவம்பர் மாதம் 2 ஆம் நாள் புதிய பாராளுமன்றம் கூடிற்று. வெல்லிங்டன் பிரபு தமது தொடக்க உரையில் தனது கொள்கையை விளக்கமாகக் கூறினார். புனிதமான பிரிட்டிஷ் அரசியல் திட்டத்தை மாற்றவோ பாராளுமன்றத்தைச் சீர்திருத்தவோ செய்யப்படும் முயற்சி யாவற்றையும் அடியோடு தாம் வெறுப்ப

தாயும், அத்தகு செயல்களை முழுமூச்சோடு எதிர்ப்பதையே தம் தலையாய கடமை எனக் கருதுவதாயும் திட்டவட்டமாக அறிவித்தார். இந்த உரை டோரிக் கட்சியின் செல்வாக்குக்குச் சாவுமணி அடித்தது. வெல்லிங்டனையும், அவரது சகாக்களையும் பாராளுமன்றத்தின் இரு சபையினரும் சேர்ந்துகொண்டு கேள்விக் கணைகளால் துளைக்க ஆரம்பித்தனர். அரசரின் செலவுத்தொகையை (Civil List) நிருணயிக்க அரசாங்கம் கொண்டுவந்த மசோதாவைப் பாராளுமன்றம் தோற்கடித்தது. அதைக்கண்ட வெல்லிங்டன் தமது மந்திரி சபையைக் கலைப்பதாக நவம்பர் 16ஆம் நாள் அறிவித்தார்.

கடந்த அறுபதாண்டுகளாக நாட்டைத் தொடர்ச்சியாக ஆண்டுவந்த டோரிகளின் ஆட்சி, இறுதியில் 1830 ஆம் ஆண்டில் முடிவுற்றது. அமெரிக்கச் சுதந்திரப் போர், நெப்போலியப் போர்கள், அயர்லாந்து ஐக்கியம், கத்தோலிக்கர் விடுதலை போன்ற அரும்பெரும் நிகழ்ச்சிகளில் அவர்கள் பங்கெடுத்துக் கொண்டவர்கள். எனினும், அவர்களது செல்வாக்கு நாளடைவில் குறைந்தது. டோரிக் கட்சியிலேயே பிளவு ஏற்பட்டது. கத்தோலிக்கர் விடுதலை போன்ற தாராளக் கொள்கைகளை அவர்களுள் ஒரு சிலர் ஆதரித்ததே அப்பிளவுக்குக் காரணமாகும் அத்தோடு பாராளுமன்றச் சீர்திருத்தத்தை மக்களிற் பெரும்பாலோர் வேண்டிநின்ற காலத்தில், டோரிக் கட்சியினர் அதைப் பிடிவாதமாக எதிர்த்தனர். பாராளுமன்றச் சீர்திருத்தம் என்னும் பாறையில் மோதியதாலேயே, ஓர் அரை நூற்றாண்டாகப் பிரிட்டிஷ் மக்களை ஏற்றிச் சென்ற டோரிக் கப்பலானது சிதைந்தது. விக்குக் கட்சியினர் அரசைக் கைப்பற்றினர்.

# 19. நான்காம் வில்லியம் [1830-1837] பாராளுமன்றச் சீர்திருத்தம் (1832 - 1948)

## (Parliamentary Reform)

பாராளுமன்றச் சீர்திருத்தத்தின் அவசியம் : பிரதிநிதித்துவ முறையில் குறைபாடுகள், வாக்குரிமையில் குறைபாடுகள், தேர்தல் முறையில் காணப்பட்ட ஊழல்கள், சீர்திருத்தத்துக்கான கிளர்ச்சிகள், சீர் திருத்தமனப்பான்மையுள்ள கிரே மந்திரிசபை.

1832-ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டம் : சட்டத்துக்கிட்டுச் சென்ற சூழ்நிலை, சட்டம் நிறைவேறல், 1832ஆம் ஆண்டுச் சட்டத்தின் முக்கிய அம்சங்கள், இச் சட்டத்தின் விளைவுகள், சட்டத்தின் குறைகள்.

பாராளுமன்றச் சீர்திருத்த இயக்கம் (1832-1948) சார்ட்டிஸிட் இயக்கம், இரண்டாவது பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம் (1867) இரகசிய வாக்களிப்புச் சட்டம் (1872), மூன்றாவது பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம் (1884), 1911 ஆம் ஆணடுப் பாராளுமன்றச் சட்டம், மக்களின் பிரதிநிதித்துவச் சட்டம் (1918), 1928 ஆம் ஆண்டுச் சட்டம், 1944-48 ஆம் ஆண்டுச் சீர்திருத்தங்கள்.

'சீர்திருத்தக்காரர்' (Reformer) என்ற பெயரெடுக்க விரும்பிய நான்காம் வில்லியத்தின் ஆட்சிக்காலம் உண்மையில் பல சீர்திருத் தங்களுக்குப் புகழ் பெற்று விளங்குகிறது. அவைகளுள் முதன்மையானதாகக் கருதப்படக் கூடியது பாராளுமன்றச் சீர் திருத்தமாகும். 1832 இல் ஏற்பட்ட பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம் (Parliamentary Reform Act) நாட்டில் புதியதொரு சகாப்தத்தையே தோற்றுவித்தது. ஏனெனில், அதுவரை செல்வச் சீமான்களாகிய ஒரு சிலரின் ஆளுகைக்குட்பட்டிருந்த இங் கிலாந்து அச் சட்டம் நிறைவேறிய பின்னர்தான் சாதாரண, நடுத்தர வகுப்பினரின் ஆட்சிக்குள் வந்தது. 1688ஆம் ஆண்டு

வரை இங்கிலாந்தில் கட்டற்ற வல்லரசு நிலவியது, அதன்பின் வரம்பிற்குட்பட்ட முடியரசு நாட்டில் ஏற்பட்டதெனினும், செல்வந்தர்களான பிரபுக்களே உண்மையில் நாட்டை ஆண்டு வந்தனர், கோனாட்சி பெயரளவில் இருந்ததேயன்றி, உண்மையில் உயர்குடிப் பெருமக்களாட்சியே (Aristocracy)நாட்டில்நிலவியது முதலில் விக்குகளும், பின்னர் டோரிகளும் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டு மன்னரையும் பாராளுமன்றத்தையும் தங்கள் விருப்பம்போல் ஆட்டிவந்தனர். 1832ஆம் ஆண்டிலிருந்து தான் பிரபுக்களாட்சி மாய்ந்து நாட்டில் மக்களாட்சி அல்லது ஜனநாயகம் (Democracy) தழைக்கத் தொடங்கியது. அவ்வப்போது ஏற்பட்ட பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டங்களின் காரணமாக நாட்டின் தொழிலாளர்களும், ஏனைய பாமர மக்களும், பெண்டிரும் சட்ட சபையில் இடம் பெற்றனர். பொதுமக்கள் சபை உண்மையிலேயே பொதுமக்கள் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக இக் காலத்தில்தான் மாறியது.

## பாராளுமன்றச் சீர்திருத்தத்தின் அவசியம்

பிரதிநிதித்துவ முறையில் குறைபாடுகள் (Defects in the System of Representation).

1689ஆம் ஆண்டில் நடைபெற்ற புரட்சியின் விளைவாகத் தனது தனித்தலைமையைப் (Supremacy) பாராளுமன்றம் நன்கு நிலைநாட்டிய போதிலும், அது நாட்டின்கண் வாழ்ந்த பல்வேறு வகுப்பாரின் பிரதிநிதிகளையும் கொண்ட தொரு சபையாக விளங்கவில்லை. ஏற்கனவே கூறியபடி, பணம் படைத்த நிலப்பிரபுக்களின் பிரதிநிதிகளே அதில் மிகுதியாக இருந்தனர். ஆக்கத் தொழிற் புரட்சியின் விளைவாக நாட்டில் தோன்றிய புதுப் பட்டணங்களுக்கும், புதிய வகுப்பாருக்கும் அதில் இடமில்லை. ஆலைத்தொழில் அதிபர்களும், தொழிலாளர்களும் நிலப்பிரபுக்களைப் போன்றே தங்களுக்கும் பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவம்வேண்டுமெனக் கூறலாயினர்.

பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் எப்போதோ ஏற்பட்ட பழைய முறையின்படியே தேர்ந்தெடுக்கப்பட்டனர். மக்கள் தொகைக்கும், பிரதிநிதித்துவத்துக்கும் எவ்விதச் சம்பந்தமுமில்லை. கார்ன்வால் என்ற சிறு பிரதேசமானது 45 பிரதிநிதிகளைப் பாராளுமன்றத்தில் பெற்றிருக்க, அதைவிட எட்டு மடங்கு பரப்புள்ள ஸ்காட்லாந்து 46 உறுப்பினர்களையே பெற்றிருந்தது. 658 உறுப்பினர்கள் அடங்கிய பொதுமக்கள் சபையில், வேல்சும் இங்கிலாந்தும் சேர்ந்து 513 உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தன. அயர்

லாந்து 100 உறுப்பினர்களையும், ஸ்காட்லாந்து 45 உறுப்பினர் களையும் தேர்ந்தெடுத்தன. இங்கிலாந்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட 513உறுப்பினர்களில் 419 பேர் பரோக்களிலிருந்தும்,[1] 94 பேர் கவுன்டிகளிலிருந்தும்,[2] தேர்ந்தெடுக்கப்பட்டனர். பரோக் களோடு ஒப்பிடப்பட்டபோது, கவுன்டிகளின் பிரதிநிதித்துவம் மிகவும் குறைவாகக் காணப்பட்டது. உண்மையில் கவுன்டிகளே பரோக்களைவிடப் பரப்பளவிலும் ஜனத் தொகையிலும் பெரி யவை. கவுன்டிகளிலும் ஒரு சில பெரிதாகவும், சில சிறிதாக வும் இருந்தன. இருந்தும், எல்லாக் கவுண்டிகளும் இரண்டிரண்டு உறுப்பினர்களை மட்டுமே பொதுமக்கள் சபைக்கு அனுப்ப உரிமை பெற்றிருந்தன. பரோக்கள் என்ற நகரங்களுக்கும் மக் கள் தொகைக்கேற்ப பிரதிநிதித்துவம் இல்லை. அளவுக்கு ஏற்ப இன்றி, ஒவ்வொரு பரோவும் ஒரே மாதிரியாக இரண்டிரண்டு உறுப்பினர்களைப் பாராளுமன்றத்துக்கு அனுப்பின. டியூடர் வல் லரசர்கள் தங்களுக்குச் சாதகமான உறுப்பினர்களைப் பாராளு மன்றத்தில் நிரப்ப வேண்டிப் பல பரோக்களைப் புதிதாக ஏற் படுத்தினர். அவைகளில் ஒரு சில நாளடைவில் மிகவும் முக்கி யத்துமடைந்தனவென்றாலும், பல நகரங்கள் நசித்து விட்டன. சான்றாக பழையசாரம் (Old Sarum) என்ற பரோவானது மக்கள் நடமாட்டமில்லாத ஒரு புல்மேடாகக் கிடந்தது. காட்டன் (Gatton) என்பது பூங்காவில் நின்ற ஒரு நெடுஞ்சுவரைச்குறித் தது. டன்விச் (Dunwich) என்ற பரோவைக் கடல் விழுங்கி விட்டது. அப்படி எல்லாமிருந்தும் அப்பரோக்கள் இரண்டிரண்டு உறுப்பினர்களைப் பாராளுமன்றத்துக்கு அனுப்பி வந்தன. அப் படிப்பட்ட சிறு நகரங்கள் எல்லாம் பணம் படைத்த பெரும் பிர புக்களின் கட்டுப்பாடுகளுக்குட்பட்டு இருந்தன. நசித்துப்போன பரோக்களில் ஒரு சிலரே வசித்து வந்தமையால், அவர்களின் வாக்குகளைப் பெரும் பிரபுக்கள் பணம் கொடுத்து விலைக்கு வாங்க முடிந்தது. பிரபுக்களுக்கே சொந்தமாயிருந்த சில பரோக்களி லிருந்து தங்கள் விருப்பம்போல் அவர்கள் பாராளுமன்ற உறுப் பினர்களை நியமித்து வந்தனர். அத்தகு பரோக்களுக்குச் சட்டைப் பைப் பரோக்கள் (Pocket Boroughs) என்று பெயர் வழங்கப் பட்டது. பொதுமக்கள் சபையில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பகுதி யினர் இங்ஙனம் பெரும் பிரபுக்களால் நியமிக்கப்பட்டவர்களா கவே 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் விளங்கினர்.

---

1 பரோக்கள் (Boroughs) மன்னரிடம் உரிமைப் பத்திரங்கள் பெற்றுத் தங்களைத் தாங்களே ஆண்டுவந்த நகரங்கள்.

2 கவுண்டிகள் (Counties) என்பன அயர்லாந்திலும் இங்கிலாந்திலும் நிருவாகத் துக்காக வகுக்கப்பட்ட பிரதேசங்களாகும். நம் நாட்டு மாவட்டங்களைப் போன்றவை அவை.

### வாக்குரிமையில் குறைபாடுகள் (Defects in Franchise)

**1832** ஆம் ஆண்டுக்கு முன் இங்கிலாந்தில் வாக்குரிமை பெற்றிருந்தவர்கள் வெகு சிலரேயாவர். கவுன்டிகளில் சொந்த நிலம் படைத்த உரிமை மானியதார்களே (Free holders) வாக்குரிமை பெற்றிருந்தனர். அவர்களிலும் ஆண்டொன்றுக்கு 40 ஷில்லிங்குகள் குத்தகை பெறத்தக்க நிலம்படைத்தவர்களுக்கே வாக்குரிமை யிருந்தது. சொந்த நிலமில்லாத குத்தகைச் சாகுபடியாளருக்கும், வியாபாரிகளுக்கும், ஆலைத்தொழிலதிபர்களுக்கும் வாக்குரிமையில்லை. நகரங்களிலும் வாக்குரிமை பழைய மரபுகளையொட்டி இடத்துக்கு இடம் மாறிக் காணப்பட்டது. ஒரு பானையை மட்டுமே அடுப்பிலிட்டிறக்கத் தகுந்த ஓரடுப்பிருந்த சிறு வீட்டில் குடியிருந்தோர்க்கும் சில இடங்களில் வாக்குரிமை இருந்தது. அத்தகையோர் பாட்வலோப்பர்கள் (Potwallopers) எனப்பட்டனர். வேறு சில நகரங்களில் பண்டைய குடியிருப்புகள் (Ancient tenements) என்ற இடங்களில் வசித்தவர்க்கு மட்டுமே வாக்குரிமை யிருந்தது. இன்னும் சிலவிடங்களில் சுயேச்சைக் குடிமக்கள் (Freemen) என்போருக்கும், நகரசபை உறுப்பினர்களுக்கும் மட்டுமே வாக்குரிமையிருந்தது.

### தேர்தல் முறையில் காணப்பட்ட ஊழல்கள்

தேர்தல் காலங்களில் எங்குப் பார்த்தாலும் இலஞ்சம் தாண்டவமாடியது. பயமுறுத்தியோ, பணம் கொடுத்தோ வாக்குகள் பெறுவது சாதாரண வழக்கமாகிவிட்டது. இந்தியாவிலிருந்து திரும்பிய நவாபுகள் (Nabobs) என்ற புதுப் பணக்காரர்கள் தங்கள் பொருளைக் கொண்டு, நசித்துபோன பல பரோக்களை விலைக்கே வாங்கிக்கொண்டனர். தேர்வாளர்களும் (Electors) அவர்களின் ஆதரவாளர்கள் (Patrons) தங்கள் தேர்தல் தொகுதிகளின் விலையை ஏலம் போடுமளவுக்கு நிலைமை மோசமானது. நிலச்சுவான்தார்களும் முதலாளிகளும் தங்களிடம் வேலை செய்வோரை அச்சுறுத்தி வாக்குகளை வாங்கினர். கடை வைத்திருந்தவர்கள் தங்கள் வியாபாரம் குறையக்கூடாது என்பதற்காகத் தங்களது வாடிக்கைகாரரின் (Customers) விருப்பப்படியே வாக்களித்தனர். மேலும், வாக்குகள் வெளிப்படையாக வழங்கப்பட்டதால், தேர்தலில் போட்டியிடும் நபர்கள், வாக்காளர்கள் யாருக்கு வாக்குகளை வழங்குகிறார்கள் என்பதைக் கண்டுக்கொள்ள முடிந்தது. தேர்தல்கள் பல நாள்கள் நடந்தன. தேர்தல் முடிவுகள் அன்றாடம் அறிவிக்கப்பட்டதால், தோல்வியடைவதுபோல் காணப்படும் நபர்கள் வாக்காளர்களைப் பயமுறுத்தியும் பணம் கொடுத்தும் வாக்குகளைத் திரட்டும் முயற்சியில் ஈடுபட வசதி

யிருந்தது. அதனுல், கடைசிக்காலத்தில் வாக்களிக்கும் சிலரை அபேட்சகர்கள் மொய்த்துக்கொண்டனர். தேர்தலில் போட்டியிடுவோர் ஏராளமாகப் பணம் செலவு செய்ய நேர்ந்தது. 1807 இல் யார்க் கவுன்டியில் நடைபெற்ற தேர்தலுக்கு மட்டும் 2,00,000 பவுன்கள் செலவானதாகக் கணக்கிட்டுள்ளனர்.

### சீர்திருத்தத்துக்கான கிளர்ச்சிகள்

இங்ஙனம், ஊழல் நிறைந்த பாராளுமன்றத்தைச் சீர்த்திருத்தப் பதினெட்டாம் நூற்ருண்டிலிருந்தே பல முயற்சிகள் நடைபெற்றன. கவுன்டி உறுப்பினர்களின் தொகையை அதிகரித்து அதன்மூலம் நசித்துப்போன பரோக்களின் சொந்தக்காரர்களின் செல்வாக்கைக் குறைக்கவேண்டுமென 1766 ஆம் ஆண்டிலேயே பிட் என்னும் சாத்தாம் பிரபு ஒரு யோசனை கூறினுர். ஆனுல், அதை ஏற்றுக்கொள்வார் எவருமிலர். 1780 இல் ரிச்மண்ட் பிரபு என்பவர் சமமான தேர்தல் தொகுதிகள் வேண்டுமென்றும், வாக்கு அளிக்கும் உரிமை ஒவ்வொருவருக்கும் வேண்டுமென்றும் கூறினுர். 1785 இல் பிட் பல நசித்துப்போன பரோக்களின் பிரதிநிதித்துவத்தை ஒழிக்கவும், இலண்டன் உறுப்பினர்களின் எண்ணிக்கையையும் கவுன்டிகளின் உறுப்பினர் தொகையையும் அதிகரிக்க முயன்ருர். ஆனுல் முடியவில்லை. அதன் பின் ஃபிரெஞ்சுப் புரட்சி காரணமாகவும், நெப்போலியப் போர்கள் காரணமாகவும் மேற்சொன்ன சீர்திருத்த முயற்சியானது ஓரளவு நின்றது. 1820-க்குப் பின், மீண்டும் அவ்வியக்கம் தழைத்தது. பர்டட் (Burdett), ஜான் ரஸ்ஸல் பிரபு (Lord John Russell) போன்றவர்கள், அவ்வியக்கத்திற்குப் புத்துயிரூட்டினர். பர்மிங்ஹாம் யூனியன் போன்ற சீர்திருத்தக் கழகங்கள் ஆங்காங்கே தோன்றின. அவர்களது கிளர்ச்சியின் காரணமாக 1821 இல் கிராம்பவுண்டு (Grampound) என்ற நசித்துப்போன பரோவின் வாக்குரிமை ரத்துச் செய்யப்பட்டு, அவ்வுரிமையானது யார்க்ஷையருக்கு வழங்கப்பட்டது. இம் முதல் வெற்றிக்குப் பின் ரஸ்ஸல் பிரபு தொடர்ந்து பல முயற்சிகளைச் செய்தார். 1827 இல் பென்ரின் (Benryn) என்ற பரோவின் வாக்குரிமை ரத்துக்குப் பொதுமக்கள் சபையின் அனுமதிபெற்ருர். ஆனுல், அவரது தீர்மானம் சட்டமாகவில்லை. அங்ஙனமே, கிழக்கு ரெட்ஃபோர்டு (East Retford) என்ற பரோவின் வாக்குரிமையை ஒழிக்க அவர் செய்த முயற்சியும் வெற்றியளிக்கவில்லை. 1830-ஆம் ஆண்டு ஃபிரான்சில் நடைபெற்ற ஜூலை மாதப் புரட்சியானது சீர்திருத்த முயற்சிகளுக்கு ஒரு புதிய தெம்பையும் உற்சாகத்தையும் ஊட்டியது. பத்தாம் லூயி என்னும் கொடுங்கோலரை மக்கள் அரியணையினின்றும் அகற்றிவிட்டு, அவர்களது

அன்புக்குப் பாத்திரமான லூயி பிலிப் என்னும் குடிமக்கள் மன்னரை (Citizen King) அவர்கள் அரசராக்கினர். அதே போன்று, சாத்வீக முறையில் இங்கிலாந்தில் மக்கள் தங்களது குறைகளைத் தீர்த்துக்கொள்ள முயன்றனர். பாராளுமன்றச் சீர் திருத்தம் செய்வதையே குறிக்கோளாகக் கொண்ட சங்கம் ஒன்றை ஆட்வுட் (Atwood) என்ற டோரிப் பொருளாதார நிபுணர் நிறுவினர். வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை வழங்கவேண்டுமெனக் காபெட் (Cobbett) என்னும் தலைவர் ஓயாது கூறி வந்தார். இரவலர் சட்டங்கள், தானியச் சட்டங் கள் முதலியவைகளால் பாதிக்கப்பட்ட விவசாயிகளும், தொழிற் புரட்சியால் இன்னலுற்ற தொழிலாளர்களும் தங்கள் குறைகள் எல்லாம் தீர ஒரே வழி பாராளுமன்றச் சீர்திருத்தமேயன்றி வேறு இல்லை என நம்பினர். ஆயிரக்கணக்கான தொழிலாளி கள் கூலி உயர்வு வேண்டும், வரிகள் குறையவேண்டும் எனக் கூவிக்கொண்டு ஆங்காங்கே வீதிகளில் வலம் வந்தனர். கென்ட் (Kent) பிரதேசத்தில் ஒரு தொழிலாளர் கலகம் தோன்றி, மெல்ல அது மேற்கேயும் வடக்கேயும் பரவியது.

### சீர்திருத்த மனப்பான்மையுள்ள கிரே மந்திரிசபை

இச் சமயத்தில் சீர்திருத்தத்தை அறவே வெறுத்து வந்த நான்காம் ஜார்ஜ் இறந்து, நான்காம் வில்லியம் அரியணை ஏறினர். வில்லியம் சீர்திருத்தப் பிரியர் என அறிந்த சீர்திருத்த வாதிகள் மேலும் ஊக்கமுற்றனர். அதற்கேற்றாற் போல 1830 இல் நடைபெற்றப் பொதுத்தேர்தலில் சீர்திருத்தவாதிகள் பெருவாரியாக வெற்றியடைந்தனர். அவர்களது கூச்சலுக்குப் பயந்தே வெலிங்டன் பிரபு என்னும் பிற்போக்குவாதியின் மந்திரி சபையும் கலைந்தது. அவருக்குப்பின் பிரதமராக வந்த கிரே (Grey) என்னும் விக் பிரபு பணக்காரராயிருந்தும் தாராளக் கொள்கைகளையுடையவராயிருந்தார். பாராளுமன்றத்தைச் சீர் திருத்தியே தீருவோம் என்று மார்தட்டித் தேர்தலில் வெற்றி பெற்ற கூட்டத்தார்க்கு அவர் தலைவராய்த் திகழ்ந்தார். அவர் விக்குகளையும் டோரிகளையும் கொண்ட ஒரு கலப்பு மந்திரி சபையை உருவாக்கினர். அதில் இடம் பெற்ற அனைவரும் அவரது கருத்துகளை ஏறக்குறைய ஏற்றுக்கொள்பவர்களாகவே இருந்தனர். ஹஸ்கிஸன் என்பார் ஒருவர் மட்டுமே பாராளு மன்றச் சீர்திருத்தத்தைச் சற்றும் விரும்பாதவர். அவரும் லிவர்ப் பூல்-மான்செஸ்டர் ரயில்வேயைத் திறந்துவைத்தபோது ஒரு விபத்துக்குள்ளாகி மாண்டுவிட்டார். பாமர்ஸ்டன் என்னும் அமைச்சர் சீர்திருத்தத்தை விரும்பாதவரேனும், நாட்டு மக்கள்

விருப்பத்தின் வழியே நடக்கவேண்டும் என்ற கொள்கையினரா யிருந்தார். ஹாலண்ட் (Holland), லான்ஸ்டௌன் (Lansdowne) ஜான் ரஸ்ஸல் (John Russel), ஆல்த்தார்ப் (Althorp) என்ற தாராளக் கொள்கையுள்ள அமைச்சர்கள் கிரேயுக்குத் தக்க பக்க பலமாயிருந்தனர். அவரது மருமகன் டர்ஹாம் (Durham) என் பவரும் ப்ரோஹாம் (Brougham) என்பவரும் தீவிரச் சீர்திருத்த வாதிகள். காடரிச், மெல்போர்ன், பாமர்ஸ்டன், என்போர் கானிங்கைப் பின்பற்றிய தாராளவாதிகள். ரிச்மண்ட் என்பார் டோரியேயாயினும், சீர்திருத்தத்தை விரும்பியவர். இங்ஙனம் பல்வேறு கொள்கைகளைக் கொண்ட ஒரு கேபினட்டின் தனித் தலைவராகக் கிரே பிரபு திகழ்ந்தார். அவர் அறிவும் திருவும் ஒருங்கே பெற்றவர்; தமது சகாக்களைத் தேர்ந்தெடுப்பதில் அபாரமான திறமையை வெளிப்படுத்தினர். மாறுபட்ட குணங் களையுடைய டர்ஹாம், ப்ரோஹாம் போன்ற மந்திரிகளைக் கட்டி யாண்டு சமாதான முறையில் அவர்களை வழிநடத்துவதில் அவர் வல்லவர். அதனுல்தான் அவர் ஆங்கிலேய வரலாற்றில் ஓர் அழியா இடம் பெற்ருர். ஃபாக்ஸ், பர்க் போன்ற அறிஞர்களின் கருத்துகளை நன்கு அறிந்திருந்த அவர், மக்கள் தக்க காரணங்க ளின்றிக் கிளர்ச்சியில் இறங்கமாட்டார்கள் என்று கருதினர். எனவே, மக்களை மகிழ்விக்க நிலையான பல மாற்றங்களைப் பாராளுமன்றத்தில் ஏற்படுத்த அவர் விழைந்தார். அதற்காக டர்ஹாம் என்பவரின் தலைமையில் ஒரு குழுவினை அவர் நியமித் தார். அதில் ரஸ்ஸல், கிரஹாம், டன்கானன் (Duncannon) என் போரும் இடம் பெற்று இருந்தனர்.

## 1832 ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டம் (Reform Act of 1832)

சட்டத்துக்கிட்டுச் சென்ற சூழ்நிலை

டர்ஹாம் கமிட்டியின் சிபாரிசுகளுக்கேற்பத் தயாரிக்கப் பட்ட சீர்திருத்த மசோதா ஒன்று, பொதுமக்கள் சபையில் 1831-ஆம் ஆண்டு மார்ச் மாதம். ரஸ்ஸல் பிரபுவால் கொண்டு வரப் பட்டது. பழைய பிரதிநிதித்துவ முறையில் காணப்பட்ட ஊழல்களை ரஸ்ஸல் விவரித்தார். பழைய சாரம் போன்ற பரோக்கள் இரண்டு உறுப்பினர்களைப் பிரதிநிதிகளாக அனுப்ப உரிமை பெற்றிருந்தபோது, மான்செஸ்டர், பர்மிங்ஹாம் போன்ற பெரும் கைத்தொழிற் பட்டணங்களுக்கு ஓர் உறுப் பினர்கூடத் தேர்ந்தெடுக்கப்படாததை அவர் சுட்டிக்காட்டினர். அதன்பின் அவர் மசோதாவின் அம்சங்களை விளக்கினர். அறுபது

சிறு பரோக்களின் பிரதிநிதித்துவத்தை அறவே அகற்றவேண்டு மென்றும், 46 பரோக்களிலிருந்து ஒரே ஒரு பிரதிநிதி மட்டுந் தான் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றும், அதன்மூலம் மிஞ்சிய பாராளுமன்ற இடங்களைப் பெரும் கைத்தொழிற் பட்ட ணங்களுக்கும், கவுன்டிகளுக்கும் பிரித்துக் கொடுக்க வேண்டும் என்றும் அம் மசோதா கூறியது. வாக்குரிமையிலும் அம் மசோதா சில மாறுதல்களை வற்புறுத்தியது. பரோக்களில் எல் லாம் ஒரே மாதிரித் தகுதியுள்ளவர்கள்தாம் வாக்காளர்களாக இருக்கவேண்டும் எனவும், 10 பவுனுக்குக் குறைவாக வாடகை பெறக்கூடிய வீடுகளில் வசிக்கும் யாவரும் வாக்குரிமை பெற வேண்டும் என்றும் அது கூறியது. கவுன்டிகளில் 40 ஷில்லிங் குத்தகை மதிப்புள்ள நிலங்களைச் சொந்தமாக உடையவர்களே அன்றி, 10 பவுன் மதிப்புள்ள பத்திரமானியதாரர்களும் (Copyholders),[1] 50 பவுன் மதிப்புள்ள குத்தகைச் சாகுபடியாளர் களும் (Lease holders)[2] வாக்குரிமை பெறவேண்டுமென்றும் அம் மசோதா கூறியது. மசோதா புரட்சிகரமானதெனவும், அது நிறைவேறினால் ஏழைகள் சேர்ந்துகொண்டு பிரபுக்களைக் கொள்ளையடிப்பதில் இறங்கிவிடுவரென்றும் வெலிங்டன் போன்ற டோரிகள் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தனர். ஒரே ஒரு வாக்கினை அதிகப்படியாகப் பெற்று மசோதா பொதுமக்கள் சபையில் நிறைவேறியது. ஆனால் கமிட்டியில் அது பரிசீலனை செய்யப்பட்டபோது, பெரும்பான்மையோரால் அது எதிர்க்கப் பட்டு நிராகரிக்கப்பட்டது. அதைக் கண்ட கிரே பிரபு, பொது மக்கள் சபையைக் கலைத்து மீண்டும் பொதுத்தேர்தல் நடத்தும் படி மன்னரை வேண்டினார். மன்னரும் அவ்வாறே செய்து பொதுத்தேர்தல் நடத்த உத்தரவிட்டார். வாக்காளரிடையே என்றும் காணா உணர்ச்சியும் உத்வேகமும் காணப்பட்டன. திருத்தப்படாத முழு மசோதாவையன்றி வேறெதையும் ஒப்புக் கொள்ள முடியாது ('The Bill, the whole Bill and nothing but the Bill') என்ற கோஷம் நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் கேட்டது. சீர்திருத்தவாதிகள் பெருவாரியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

### சட்டம் நிறைவேறல்

1831 ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் ரஸ்ஸல் பிரபு இரண் டாம் முறையாகத் தமது சீர்திருத்த மசோதாவைக் கொண்டு வந்தார். பழைய மசோதாவில் ஒரு சில திருத்தங்களே அதில் செய்யப்பட்டன. திருத்தப்பட்ட மசோதா 136 வாக்குகள் அதிகம் பெற்றுப் பொதுமக்கள் சபையில் நிறைவேறியது. ஆனால், பிரபுக்கள் சபையினர் அதைத் தோற்கடித்து விட்டனர்.

பிரபுக்களின் இச் செய்கையைக் கேள்வியுற்ற மக்கள் கொதித்தெழுந்தனர். அரசாங்கத்தை ஆதரித்துக் கூட்டங்கள் ஆங்காங்கே நடைபெற்றன. பொதுமக்கள் சபையில் மெக்காலே என்னும் வரலாற்றறிஞர் (இரண்டாம் ஜேம்ஸ், மூன்றாம் வில்லியம் ஆகியோர்கால வரலாற்றை வரைந்தவர்) மக்களின் ஆதரவு அரசாங்கத்திற்கு இருப்பதைக் காட்டிச் சீர்திருத்த முயற்சிகளில் உறுதியாய் நின்று மக்களை வழிநடத்துவதன் அவசியத்தை வற்புறுத்தினார். சீர்திருத்தத்துக்கு முட்டுக்கட்டை போட்ட பிரபுக்களின் மீது மக்களுக்கு வெறுப்பேற்பட்டது. பலாத்கார வழிகளால் அவர்களைப் பணியவைக்கப் பலர் நினைத்தனர். பர்மிங்ஹாம் யூனியனைச் சேர்ந்த உறுப்பினர்கள் மசோதா நிறைவேறினாலன்றித் தாங்கள் வரி செலுத்தப் போவதில்லை எனத் தீர்மானம் நிறைவேற்றினர். வேறு பலர் மன்னரையும், அவரது இராணியாரையும் குறைகூறி முடியரசு ஒழிக எனக் கூச்சலிட்டனர். வேறு சிலர் பிஷப்புகளைக் கண்டித்தனர். நாட்டிங்ஹாம் என்னுமிடத்தில் மக்கள் பலாத்காரத்திலிறங்கினர். நியூகாஸிலில் பிரபுவின் வீட்டை அவர்கள் தாக்கினர். பிரிஸ்டல் நகரையும் அவர்கள் சூறையாடினர். இக் கலவரங்களைக் கண்டு கிரே பிரபு மீண்டும் மூன்றாம் முறையாகச் சீர்திருத்த மசோதாவைப் பொது மக்கள் சபையில் கொண்டுவந்தார். (1831 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 12 ஆம் தேதி). 1832 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 23 ஆம் தேதி அது பொதுமக்கள்சபையில் நிறைவேறியது. ஆனால்; பிரபுக்கள் சபை அதை எளிதில் ஏற்றுக்கொள்வதாக இல்லை. லிண்ட்ஹர்ஸ்ட் பிரபு (Lord Lyndhurst) என்பவரால் கொணரப்பட்ட ஒரு பெருந்திருத்தத்தைப் பிரபுக்கள் சபை ஏற்றுக்கொண்டது. சில பரோக்களின் வாக்குரிமை ரத்துசெய்யப்படுவதை அஃது ஒத்திவைக்கும்படி கூறியது. இதைக் கண்ட கிரே பிரபு, ஐம்பது புதிய விக் பிரபுக்களைப் பிரபுக்கள் சபையில் உடனே நியமித்து அங்கு மசோதா நிறைவேறச்செய்யும்படி மன்னரைக் கேட்டுக் கொண்டார். மன்னர் அதற்கு ஒப்புக்கொள்ளத் தயங்கவே, கிரே பிரபு தமது சகாக்களுடன் ராஜிநாமாச் செய்தார். வெல்லிங்டன், பீல் என்ற இருவரையும் மன்னர் அழைத்து மந்திரி சபையை அமைக்குமாறு கேட்டுக்கொண்டார். பீல் ஏற்கனவே கத்தோலிக்கர் விடுதலையை ஆதரித்துக் கெட்ட பெயரைத் தேடிக் கொண்டது போன்று, மீண்டும் தன் கட்சிக் கொள்கைகளுக்குத் துரோகம் செய்ய விரும்பவில்லை. எனவே, வெலிங்டன் பிரபுவோடு ஒத்துழைக்க மறுத்துவிட்டார். நாடெங்கும் வெல்லிங்டனை எதிர்த்துக் கூச்சல்கள் கிளம்பின. வெல்லிங்டன் பதவியேற்றால் வரிகொடுப்பதை நிறுத்தப் போவதாயும், பாங்குகளில் போடப்பட்டிருந்த தங்கத்தையெல்லாம் எடுத்துப் பொருளா

தாரத்தைக் குலைக்கப் போவதாயும் பலாத்காரத்தில் இறங்கப் போவதாயும் சீர்திருத்தவாதிகள் கூறினார்கள். பொது மக்கள் சபை, கிரே பிரபுவை மீண்டும் அழைத்து மந்திரி சபையை அமைக்குமாறு கேட்டுக்கொண்டது. அவசியமானால், புதிய பிரபுக்களை நியமிக்க அரசர் ஒப்புக்கொண்டாலன்றி பதவியேற்க முடியாது எனக் கிரே பிரபு அறுதியிட்டுக் கூறினார். அரை மனத்துடன் வில்லியம் அவ் வாக்குறுதியைக் கொடுத்தார். அதன்பின் வெல்லிங்டன் பிரபு தம் பிடிவாதத்தைக் கைவிட்டார். புதிய பிரபுக்கள் நியமிக்கப் படுவதைத் தடுக்க மசோதா, பிரபுக்கள் சபைக்கு வந்தபோது அவரும் அவரது சகாக்களும் சபைக்கு வராமலேயிருந்துவிட்டனர். மன்னர் விருப்பமும் அதுவாகவே யிருந்தது. எனவே, ஜூன் மாதம் 4ஆம் நாள் சீர்திருத்த மசோதா பிரபுக்கள் சபையில் நிறைவேறியது. அப்போது டோரிக் கட்சியினர் யாரும் அங்கு இல்லை. ஜூன் மாதம் 7ஆம் தேதி அரசரது அங்கீகாரம் பெற்று மசோதா, சட்டமாக மாறியது.

### 1832ஆம் ஆண்டுச் சட்டத்தின் முக்கிய அம்சங்கள்

இச் சட்டமானது ஒரேயடியாக 56 பரோக்களின் பிரதிநிதித்துவத்தை அறவே அகற்றியது. வேறு 31 பரோக்களுக்கு ஒரே ஓர் உறுப்பினரை மட்டுமே தேர்ந்தெடுக்க அனுமதித்தது. 2,000-க்குக் குறைந்த ஜனத்தொகையுள்ள பரோக்கள் தம் பிரதிநிதித்துவத்தை இழந்தன. 2,000-க்கு மேற்பட்டும், 4000-க்குக் குறைந்ததுமான மக்கள்தொகையுடைய பரோக்கள் ஓர் உறுப்பினரை இழந்தன. இச் சீர்திருத்தத்தால் பாராளுமன்றத்தில் 143 இடங்கள் மிஞ்சின. அவை, கவுன்டிகள், புதிய ஆலைத்தொழிற் பட்டணங்கள், ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகிய தொகுதிகளிடையே பகிர்ந்தளிக்கப்பட்டன. கவுன்டிகள் 65 உறுப்பினர்களை அதிகமாகப் பெற்றன. ஜனத்தொகை மிகுந்த 54 பெரும் பட்டணங்கள் இரண்டு உறுப்பினர்களையும், 21 சிறிய பட்டணங்கள் ஒவ்வொன்றும் ஓர் உறுப்பினரையும் பாராளுமன்றத்தில் பெற்றன. ஸ்காட்லாந்தும் அயர்லாந்தும் முறையே எட்டு, ஐந்து உறுப்பினர்களை அதிகமாகப் பெற்றன. ஆனால், ஜனத்தொகைக்கேற்ப இப் பிரதிநிதித்துவம் எல்லாப் பட்டணங்களுக்கும் வழங்கப்படவில்லை.

வாக்குரிமையைப் பொறுத்தவரையில் இச் சட்டம் பல்லாயிரம் மக்களுக்கு அவ்வுரிமையை விஸ்தரித்தது. 46 ஷில்லிங் குத்தகை மதிப்புள்ள உரிமை மானியதாரர்களும், ஆண்டுக்குப் பத்துப் பவுன் மதிப்புள்ள பத்திர மானியதாரர்களும், 50 பவுன்

மதிப்புள்ள குத்தகைச் சாகுபடியாளர்களும் வாக்குரிமை பெற்றனர். நகரங்களில் ஆண்டுக்குப் பத்துப் பவுன் வாடகை மதிப்புள்ள வீடுகளில் குடியிருப்பவர்களெல்லாம் வாக்குரிமை பெற்றனர்.

இச் சட்டத்தின் விளைவுகள்

'1832ஆம் ஆண்டுச் சட்டத்தின் வெற்றியானது ஜனநாயகத்தின் வெற்றியன்று. ஆனால், அது பொதுமக்கள்சபையும் நடுத்தர மக்களும் பெற்ற வெற்றியாகும். அரசரும் பிரபுக்களும் பெற்ற வெற்றியென்று அதைக் கூற முடியாது. ஆனால், அது பொது மக்கள்சபையின் விருப்பத்தை உண்மையிலேயே பிரதிபலித்த காபினெட்டின் வெற்றியாகும், எனக் கீத்ஃபீலிங் என்னும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்'[1]. அவர் கூற்று முற்றிலும் உண்மையே. ஏனெனில் இச் சட்டத்தின் விளைவாகக் கவுன்டிகளிலும் நகரங்களிலுமிருந்த ஓரளவு செல்வாக்குள்ள நடுத்தர வகுப்பினர் வாக்குரிமை பெற்றனரேயன்றிச் சாதாரண ஆலைத் தொழிலாளிகளும் விவசாயத் தொழிலாளிகளும் எவ்வித அரசியலுரிமையும் பெற்றாரல்லர். எனவேதான், அச் சட்டத்தால் ஜனநாயகம் வெற்றிபெற்றதாகக் கூற முடியாததாயிருக்கின்றது. விக்குகளும், தாராளக் கொள்கையுடைய மிதவாதிகளும் ஒன்று சேர்ந்த ஒரு நடுத்தர வகுப்பார் கூட்டம், 1832 முதல் 1868 வரை அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்டு தன் பிரியம் போல் ஆட்சி செலுத்திவந்தது. பொதுமக்கள்சபையில் அவர்கள் வைத்ததே சட்டமாயிருந்தது. விக்குகள் பலர் இச்சட்டத்தை ஆதரித்ததற்குக் காரணம் ஜனநாயக இயக்கம் மேலும் வளராமல் தடுக்கவே யாகும். அதற்கு மேலும், வாக்குரிமை விஸ்தரிப்பு செய்யப்படுவதை அவர்கள் முழு மூச்சோடு எதிர்க்கத் தயாராயிருந்தனர். பாராளுமன்றம் சீர்திருத்தப்படுவது அதுவே கடைசி முறையாக இருக்கும் என ரஸ்ஸல் பிரபுவே கூறுவது வழக்கம். அதனால், அவருக்குக் 'கடைசி ஜாக்சி' (Finality Jack) என்ற கேலிப் பெயரும் ஏற்பட்டது.

இச் சட்டம் நிறைவேறியதால் இங்கிலாந்தின் வடபகுதியிலும், மத்தியப் பகுதியிலும் இருந்த ஆலைத்தொழிற் பட்டணங்கள் பல அரசியல் முக்கியத்துவம் பெற்றன. அவைகளின் செல்வாக்கு ஏனைய நகரங்களைவிட அதிகமாக வளரத் தொடங்கியது. வாக்குரிமை பெரிதும் விஸ்தரிக்கப்பட்டும் நாட்டுப்புறங்களில் இருந்த நிலப் பிரபுக்களின் ஆதிக்கம் குறையவில்லை. அச் செல்வர்கள் மீண்டும் பாராளுமன்றத்தில் தங்கள் செல்வாக்கை நிலைநாட்டிக் கொண்டனர்.

இச் சட்டம் நிறைவேறிய முறையானது பிரிட்டிஷ் அரசியலமைப்பின் மரபுகள் சிலவற்றை நன்கு நிலைநாட்டியது. பொது மக்கள் விருப்பத்தைப் புறக்கணிக்க மன்னனுக்கோ பிரபுக்கள் சபைக்கோ எவ்வித உரிமையுமில்லை என்பது நன்கு நிறுவப்பட்டு விட்டது. சீர்திருத்தத்தை மறுத்த மன்னனும் பிரபுக்களும் முடிவில் மக்கள் விருப்பத்துக்குத் தலைவணங்கியதை நாம் காண்கிறோம். மேலும், காபினெட் எனும் அமைச்சர்அவை, மன்னரின் விருப்பப்படி அவரது கட்டளைகளை நிறைவேற்றும் ஓர் அவையாக இருக்கக் கூடாதென்பதும், பொதுமக்கள்சபையின் ஆதரவைப் பெற்றதாயும், அதன் விருப்பத்தை அப்படியே பிரதிபலிப்பதாயும் இருக்கவேண்டும் என்பதும் நிலைநாட்டப் பட்டது. மன்னரின் ஆசியைப் பெற்றும், பொதுமக்கள் சபையின் ஆதரவைப்பெருத வெல்லிங்டன் அமைச்சரவை வீழ்ச்சியுற்றதும் பொதுமக்கள் சபை ஆதரவைப் பெற்ற கிரே மந்திரிசபை வெற்றி பெற்றதும் மேற்சொன்ன உண்மைக்குத் தக்க சான்றுகளாகும். பொதுமக்கள் சபையே, பிரபுக்கள் சபையைவிட அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தது என்பதும் நிலைநாட்டப்பட்டது. இரு சபைகளுக்கும் இடையே அதுகாறும் இருந்த ஒற்றுமை பெரிதும் குறைந்து, பொதுமக்கள் சபையும் காபினெட்டும் சேர்ந்து பிரபுக்கள் சபையையும், மன்னரையும் கட்டுப்படுத்த முடியும் என்ற உண்மையும் நடைமுறையில் நிலைநாட்டப்பட்டது.

கட்சிகளின் அமைப்பிலும் மேற்படி சீர்திருத்தமானது சில மாற்றங்களைச் செய்தது. விக்குக் கட்சியில் பணம் படைத்த நிலப்பிரபுக்களோடு பணக்கார ஆலைத்தொழிலதிபர்களும், சில தீவிரச் சீர்திருத்தவாதிகளும் (Radicals) சேர்ந்தனர். டோரிக் கட்சியிலும் ஒரு பிளவு ஏற்பட்டது. பாராளுமன்றச் சீர்திருத் தங்களை வெளிப்படையாக ஆதரித்த கூட்டம் அக் கட்சியில் பெருகியது. பீல் அத்தகைய சீர்திருத்தங்களை வரவேற்று ஓர் அறிக்கையை வெளியிட்டார். அவரைப் பின்பற்றியவர்களெல் லாம் கன்சர்வேடிவ் கட்சியினர் என்று பெயர் பெற்றனர். இச் சீர்திருத்தச் சட்டம் ஏற்பட்டதானது நாட்டில் மேலும் பல துறைகளில் சீர்திருத்தம் ஏற்படச் சாதகமான ஒரு சூழ்நிலையை உருவாக்கியது. பயனீட்டுவாதம் (Utilitarianism), ஜீவகாருண்ய வாதம் (Humanitarianism) போன்ற சீர்திருத்தங்கள் நாட்டில் தோன்றவும், அவைகளின் அடிப்படையில் பல சீர்திருத்தங்கள் ஏற்படவும் இச் சட்டம் ஒரு வழிகாட்டியாய் அமைந்தது எனலாம்.

[1] Keith Feiling—History of England, p. 826

சட்டத்தின் குறைகள்

இங்ஙனம் பல சிறப்புகளைக் கொண்ட சீர்திருத்தச் சட்டத்தில் சில குறைகளும் இருப்பதாகச் சிலர் கூறுவர். ஆங்கில அரசியல் அமைப்பில், தொன்றுதொட்டுக் கடைப்பிடிக்கப்பட்ட கொள்கைக்கு இச் சட்டம் முற்றுப்புள்ளி வைத்துவிட்டது என்றும், அதனால் புதிதாக நல்ல பலன் எதுவும் ஏற்பட்டுவிட வில்லை என்றும் சிலர் கூறுவர். பணம் படைத்தவர்களே நாட்டை யாளத் தகுதியுள்ளவர்களென்பதும், அவர்கள் தம் அதிகாரத்தை மக்கள் நலன் கருதியே செலுத்தவேண்டும் என்பதும், தொன்று தொட்டு நாட்டில் உலவிவந்த கொள்கை என்றனர் சிலர். ஆனால், அவைதாம் சிறந்த கொள்கைகள் என்பதை எல்லாரும் ஒப்புக்கொள்ள முடியாது. பழைய முறையே சிறந்தது என்றும், அம் முறையில் நல்ல திறமை பெற்ற ஒரு சில ஏழை அறிவாளிகள், கனவானொருவனால் ஒரு சில பரோக்களுக்குப் பிரதிநிதிகளாக நியமிக்கப்படுவதற்கும், அவர்கள் தொடர்ந்து நாட்டிற்குச் சேவை செய்வதற்கும் வழியிருந்தது என்றும், புதிய முறையில் ஏழைகளான அறிவாளிகளுக்குப் பாராளுமன்றத்தில் இடமே கிடையாது எனவும் அவர்கள் கூறினர். ஒருவகையில் அது உண்மையே. பிட், பீல் போன்ற பேரமைச்சர்கள் முன்னுக்கு வர முடிந்தது பழைய முறையில்தான் என்றாலும் அதற்காகப் பெரும்பான்மை மக்களுக்கு அரசியலுரிமையை மறுப்பதை உசிதமாக யாரும் கருதுதற்கில்லை. புதிய முறை யினால், பல ஆலைத்தொழிலதிபர்கள் பாராளுமன்றத்தில் இடம் பெறலாம். ஆனால் அவர்களுக்கு முன்பிருந்த அறிவாளிகளைப் போல் அவர்கள் நாட்டுக்குப் பணியாற்ற இயலாது எனச் சிலர் கூறினர். மேலும், பழைய முறையில் அமைந்த டோரிக் காபி னெட்டும், பாராளுமன்றமும் தேச சேவையிலும் தேசபக்தியிலும் சற்றும் குறைந்துவிடவில்லை என்றும், புரட்சியும், போர்களும் ஐரோப்பாவில் நிறைந்திருந்த காலத்தில், இங்கிலாந்தை வெற்றிப்பாதையில் நடத்திச் சென்ற பெருமை அவற்றிற்கே உரியதாகும் என்றும், சீர்திருத்தப்பட்ட பாராளுமன்றமும் காபினெட்டும் அதைவிட உயர்ந்த சேவைகளைச் செய்ய முடியா தென்றும் வேறு சிலர் வாதாடினர். இவையெல்லாம் மாறுபட்ட சூழ்நிலைகளை நன்கு புரிந்துகொள்ளாதவர்களின் கூற்றாகும். நன்கு ஆண்டார்கள் என்பதற்காகச் செல்வர்களையே பதவிகளில் வைத்திருக்க வேண்டுமென்பதும். அதிலும், பணக்கார முதலாளி களையும் வணிகர்களையும் புறக்கணித்துவிட்டு, நிலப் பிரபுக்களை மட்டுமே அதிகாரத்திலிருக்கச் செய்யவேண்டும் என்பதும், ஆட்களேயில்லாத பரோக்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்கி

விட்டு, ஜனநெருக்கம் மிகுந்த புதிய ஆலைத்தொழிற் பட்டணங்களுக்கு ஒரு பிரதிநிதித்துவமும் அளிக்கக்கூடாது என்பதும் ஜனநாயகக் கருத்துக்களுக்கு முற்றிலும் முரண்பாடானவை.

நடுத்தர வகுப்பினருக்கு இச் சட்டம் முழுமையான அதிகாரத்தைத் தரவில்லை என்று ட்ரெவெல்யான் என்ற ஆசிரியர் குறிப்பிடுகின்றார். 10 பவுன் வாடகை பெறுமான வீடுகளில் குடியிருப்போருக்கு நகரங்களில் வாக்குரிமை அளிக்கப்பட்டதே அன்றிக் கவுன்டிகளில் அது விஸ்தரிக்கப்படவில்லை. அதனால், நடுத்தர வகுப்பினரில் ஏறக்குறைய பாதிப்பேர் வாக்குரிமையில்லாது போயினர். கவுன்டிகளில் வாக்குரிமையளிக்கப் பெற்ற குத்தகைச் சாகுபடியாளர்கள் (Tenant Farmers), உண்மையில் தங்களது நிலப்பிரபுக்களின் கையாட்களாக இருந்தனரேயன்றி, எவ்வித உரிமையையும் சுதந்திரமாகச் செலுத்த இயலாதிருந்தனர். எனவே, பிரபுக்களின் செல்வாக்கு கவுன்டிகளில் மேலும் வளரவே இச் சட்டம் துணைபுரிந்தது எனலாம். சொத்துள்ளவர்கள்தாம் அரசியல் அதிகாரத்தைச் செலுத்தத் தகுதியுள்ளவர்கள் என்ற கொள்கை மாய்ந்துவிடவில்லை. வேறு வடிவத்தில் அது செயல்புரிந்தது. மற்றும் பழைய முறைகள் முற்றும் சீர்திருத்தப்படவில்லை. மக்கள் தொகைக்கேற்றபடி பிரதிநிதித்துவம் வழங்கப்படவில்லை. பல சிறு பட்டணங்களின் பிரதிநிதித்துவம் அகற்றப்படவில்லை. எனவே, 1832ஆம் ஆண்டுச் சட்டம் ஓரளவுதான் சீர்திருத்தத்தைச் செய்தது எனலாம். கவுன்டிகளில் பணம் படைத்த நிலப்பிரபுக்களின் செல்வாக்கை அது குறைக்கவில்லை. பட்டணங்களில் மட்டுமே நடுநிலை வகுப்பினர், அதுவும் ஓரளவு பணக்கார வகுப்பினர் செல்வாக்குப் பெற்றனர். எனவேதான், இச் சட்டம் பணக்காரரின் ஆதிக்கத்தைக் குலைக்கவில்லை என்றும், அவ்வாதிக்கத்தை நாட்டுப்புறச் சீமான்களும் நகர்புறச் செல்வர்களும் தமக்குள் பங்கு போட்டுக் கொள்ளவே வகைசெய்தது என்றும் சிலர் கூறுவர். எனினும், அப்போதிருந்த சூழ்நிலையில் அதற்குமேல் ஒன்றும் செய்திருக்கமுடியாதென்பதை எவரும் மறுக்க இயலாது. ஆனால், ரஸ்ஸல், கிரே போன்றவர்கள் எதிர்பார்த்தபடி, அதுவே முடிவான சீர்திருத்தமாய் அமையவில்லை. விரைவிலேயே, மேலும் பல சீர்திருத்தங்களுக்கான கிளர்ச்சிகள் நாட்டில் தோன்றலாயின. அவை யாவும், நான்காம் வில்லியத்தின் ஆட்சிக் காலத்துக்குள் ஏற்படாதவையெனினும் வரலாற்றுத் தொடர்பை முன்னிட்டு அவற்றையும் ஈண்டு ஆராய்வோம்.

# பாராளுமன்றச் சீர்திருத்த இயக்கம் [1832-1948]

சார்ட்டிஸ்ட் இயக்கம் (Chartist Movement)

1832ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டம் தங்களுக்கு வாக்குரிமை வழங்குமென எதிர்பார்த்த தொழிலாளி வர்க்கத்தினர் அறவே ஏமாந்தனர், சீர்திருத்தத்திற்காகக் கிளர்ச்சி செய்தவர்கள் பெரும்பாலும் தொழிலாளிகளேயாவர். ஆனால், அதன் பலனை அனுபவித்தவர்கள் எல்லாம் நடுத்தர வகுப்பினராகவேயிருந்தனர். கறையான் புற்றெடுக்கக் கருநாகம் குடிபுகுந்த கதையாயிற்று. சீர்திருத்தப்பட்ட பாராளுமன்றம் நன்றியுணர்ச்சி காரணமாகத் தங்களுக்கு ஏதாவது நன்மை செய்யுமென அவர்கள் எதிர்பார்த்ததும் வீணாய்ப் போயிற்று. அவர்களது நிலை நாளுக்குநாள் கேவலமாகிக்கொண்டே வந்தது. அவர்களது கூலியோ குறைவாக இருந்தது. ஆனல், பொருள்களின் விலையோ விஷம்போல் ஏறிக்கொண்டே சென்றது. தங்கள் குறைகளை அரசுக்கு அறிவித்து, நிவர்த்தியைத் தேடிக்கொள்ள அவர்கள் 1836இல் சார்ட்டிஸ்ட் இயக்கம் என்றதோர் இயக்கத்தைத் தோற்றுவித்தனர்.

சார்ட்டிஸ்ட் இயக்கத்தினர் 1838ஆம் ஆண்டில் தங்கள் கோரிக்கைகளையெல்லாம் புலப்படுத்தச் சாசனம் ஒன்றை வெளியிட்டனர். மக்கள் சாசனமென்று (People's Charter) அழைக்கப்பட்ட அச் சாசனத்தில் ஆறு கோரிக்கைகள் காணப்பட்டன. அவை :

1. வயதுவந்தோரனைவருக்கும் வாக்குரிமை வழங்கப்படல் வேண்டும்.
2. ஆண்டுக்கு ஒரு முறை பாராளுமன்றம் கூட்டப்படல் வேண்டும்.
3. இரகசிய வாக்களிப்பு முறை கையாளப்படல் வேண்டும்.
4. ஒரே எண்ணிக்கையுள்ள பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கக் கூடிய சம தேர்தல் தொகுதிகளாக நாடு பிரிக்கப்படல் வேண்டும் (equal electoral district).
5. பாராளுமன்ற உறுப்பினராவதற்கு இவ்வளவுதான் சொத்துரிமை யிருக்கவேண்டுமென்ற நிபந்தனை அகற்றப்படல் வேண்டும்.

6. பாராளுமன்ற உறுப்பினர்களுக்குச் சம்பளம் வழங்கப் பெற வேண்டும்.

தங்களுக்கென ஒரு வீடோ, நிலமோ இல்லாத தொழிலாளிகளும் பாராளுமன்ற உறுப்பினர்களாக வேண்டுமென்ற எண்ணத்தாலேயே அவர்கள் கடைசி இரண்டு கோரிக்கைகளையும் வெளியிட்டனர். முதலாளிகளின் பயமுறுத்தலின்றி வாக்குரிமை வழங்கவே அவர்கள் இரகசிய வாக்களிப்பு முறையைக் கோரினர். அவர்கள் கேட்டதெல்லாம் மிக நியாயமான கோரிக்கைகளே யென்பது பிற்காலத்தில் அவற்றில் ஐந்து கோரிக்கைகள் ஒவ்வொன்ருக வெற்றி பெற்றதனின்றும் நன்கு விளங்கும். ஆனால், 1838ஆம் ஆண்டில் அவை தொழிலாளர்களின் பேராசையில் முளைத்தவையாகக் கருதப்பட்டன.

சார்ட்டிஸ்ட்டுகள் தங்கள் இயக்கத்தைத் தொடர்ந்து பத்து ஆண்டுகள் நடத்தினர். 1848இல் அவர்கள் தங்கள் விண்ணப்பத்தைப் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கவேண்டி ஒரு மாபெரும் ஊர்வலத்தை ஏற்பாடு செய்தனர். மக்கள் சாசனத்தைப் பாராளுமன்றம் ஒப்புக்கொள்ளவேண்டுமென்று கூறிய அவ் விண்ணப்பத்தில் ஏராளமான பேர் கையெழுத்திட்டனர். அம் மாபெரும் விண்ணப்பத்துடன் ஓர் ஊர்வலம் கென்னிங்டன் (Kennington) என்னும் இடத்திலிருந்து புறப்பட்டு, வெஸ்ட்மின்ஸ்டரை நோக்கிச் சென்றது. எங்குக் கலவரம் ஏற்பட்டுவிடுமோ என்று பயந்த அரசு போலீஸ் படையொன்றைத் தயாராக வைத்திருந்தது. நிலைமை முற்றிப்போனல் அதைச் சமாளிக்கப் போதிய துருப்புக்களை வெல்லிங்டன் பிரபுவின் தலைமையில் அனுப்ப அரசு தயாராக இருந்தது. ஆனால், ஊர்வலம் வெஸ்ட்மின்ஸ்டர் நகரை அடையுமுன்பே கலைந்தது. விண்ணப்பத்தை மட்டும் சிலர் பாராளுமன்றத்துக்கு எடுத்துச் சென்று சமர்ப்பித்தனர். அதில் காணப்பட்ட கையெழுத்துகள் பல பொய்க்கையெழுத்துக்களாயிருந்ததைக் கண்ட பாராளுமன்றம் அதை எளிதில் நிராகரித்துவிட்டது. சார்ட்டிஸ்ட் இயக்கம் இங்ஙனம் கேலிக் கூத்தாய்ப் போயிற்று. சிறிதுசிறிதாக அவ்வியக்கம் நிலைகுலைந்தது. ஆண்டுக்கொருமுறை பாராளுமன்றம் கூட்டப்படவேண்டும் என்பதைத் தவிர, அவர்களது மற்றக் கோரிக்கைகளெல்லாம் நியாயமானவைதான் என்பதில் சந்தேகமில்லை. அதனால்தான், அவ்வொரு கோரிக்கையைத் தவிர, மற்றவை யாவும் நாளடைவில் செயலுக்கு வந்தன.

விக்டோரியா இராணியார் காலத்தில் எங்கும் சீரும் சிறப்பும் நிலவினமையால் பாராளுமன்றச் சீர்திருத்தத்துக்காகக் கிளர்ச்சி

களில் யாரும் இறங்கவில்லை. எனினும் 1858ஆம் ஆண்டில் வாக்காளர்கள் சொத்துரிமையுடையவர்களாக இருக்கவேண்டுமென்ற நிபந்தனை அகற்றப்பட்டது. அதே ஆண்டில் யூதர்கள் பொது மக்கள் சபையில் உறுப்பினராவதற்கும் வழி செய்யப்பட்டது. 1859இல் டிஸ்ரேலி பிரபு வாக்குரிமையை ஓரளவு கல்வியறிவும், வங்கியில் பண இருப்பும் உடையவர்களுக்கெல்லாம் வழங்கலாம் என்று பொதுமக்கள் சபைக்கு ஓர் ஆலோசனை கூறினார். ஆனால், அவ் ஆலோசனை சபைக்கு உதவாதது எனக் கருதப்பட்டுத் தோற்கடிக்கப்பட்டது. பமர்ஸ்டன் பிரபு பிரதமராயிருந்த காலத்தில் சீர்திருத்தங்களைப் பற்றிய பேச்சேயில்லை. ஏனெனில், 1832ஆம் ஆண்டுச் சட்டமே இறுதியான சீர்திருத்தச் சட்டம் என நம்பிய விக்குகளில் பாமர்ஸ்டனும் ஒருவராவார். விக்குக் கட்சியினரில் இன்னொரு பகுதியினர் ஓரளவு முற்போக்குக் கொள்கைகளையுடையவர்களாக இருந்தனர். ஜான் ரஸ்ஸல் பிரபு என்பார் அத்தகையோர்களுள் ஒருவர். அவரது தலைமையில் அமைந்த மந்திரிசபை (1865-66) பாராளுமன்றச் சீர்திருத்தத்தை ஆதரித்தது. அதில் கருவூலத் தலைவராயிருந்த கிளாட்ஸ்டன் என்பார் 1865இல் (பாமர்ஸ்டன் இறந்தபின்) வாக்குரிமையை விரிவுபடுத்தும் தீர்மானமொன்றைப் பொதுமக்கள் சபையில் கொண்டுவந்தார். நகரங்களில் ஆண்டொன்றுக்கு 7 பவுன் வாடகை செலுத்துபவர்களுக்கும், கவுன்டிகளில் 14 பவுன் வாடகை செலுத்துபவர்களுக்கும் வாக்குரிமை வழங்கப்பட வேண்டும் என்று அவர் வாதித்தார். ஆனால், விக்குகளில் பலர் அவரது தீர்மானத்தை ஆதரிக்காததால் அது தோல்வியுற்றது. விக்குகள் பதவியைவிட்டு நீங்கினர். கன்சர்வேடிவ் கட்சியினர் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்தனர். ஜான் பிரைட் (John Bright) என்ற தீவிரச் சீர்திருத்தவாதி பாராளுமன்றச் சீர்திருத்தத்தின் அவசியத்தை ஓயாது எடுத்துச் சொல்லி வந்தார்.

### இரண்டாவது பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம் (1867)

டெர்பி (Derby) பிரபுவால் கூட்டப்பட்ட மந்திரி சபையில் மிகவும் செல்வாக்குடன் விளங்கிய டிஸ்ரேலி, எதிர்க்கட்சியினரின் கொள்கைகளைத் தாமே நடைமுறையில் கொண்டுவர விரும்பினார். அதன்மூலம் எதிர்க்கட்சியின் செல்வாக்கைக் குறைக்கலாமென்பது அவரது எண்ணம். அதன்படியே அவர் 1867 ஆம் ஆண்டில் இரண்டாவது சீர்திருத்த மசோதாவைக் கொண்டுவந்தார். பல திருத்தங்களுடன் அம்மசோதா சட்டமாக நிறைவேறியது. அதன்படி நகரங்களில் சொந்த வீடுகளில் குடியிருந்த எல்லா ஆண்களும், கவுன்டிகளில் ஆண்டுக்குப் 12 பவுனுக்குக்

குறையாமல் வாடகை செலுத்துவோரனைவரும் வாக்குரிமை பெற்றனர். நகரங்களில் சொந்த வீடில்லாமல் வாடகை இல்லங்களில் வசிப்பவர்களாக இருப்பினும், அவர்கள் ஆண்டுக்குக் குறைந்தது 10 பவுன்களாவது வாடகை செலுத்துகின்றவர்களாகயிருந்தால், அத்தகையோருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. பல சாதாரண பரோக்களின் பிரதிநிதித்துவத்தை நீக்கிவிட்டு, அதன்மூலம் கிடைத்த இடங்களை, அச்சட்டம் ஜனத்தொகை நிரம்பிய பல முக்கியப் பட்டணங்களுக்கும் கவுன்டிகளுக்கும் வழங்கிற்று. ஸ்காட்லாந்து, அயர்லாந்துப் பிரதிநிதித்துவங்களைச் சீர்திருத்த ஒரு தனிச் சட்டம் 1868இல் கொண்டு வரப்பட்டது. பிரதிநிதித்துவ முறையில் காணப்பட்ட பல ஊழல்களைக் களைய இங்ஙனம் 1867-68ஆம் ஆண்டுச் சட்டம் முயன்றது, எனினும், சீர்திருத்தப்படவேண்டிய அம்சங்கள் இன்னும் எவ்வளவோ பாராளுமன்றத்தில் இருந்தன. குடியிருப்பு வசதியுள்ளவர்களுக்கெல்லாம் வாக்குரிமை அளித்ததன்மூலம் இச்சட்டம் தொழிலாளர்களுக்குப் பாராளுமன்றத் தேர்தலில் உரிமையளித்தது. ஆரம்பத்தில் அவர்களது பிரதிநிதிகளாகப் பிரபுக்கள் சிலரே தேர்ந்தெடுக்கப்பட்டனர். எனினும், நாளடைவில் தகுதியுள்ள ஒருவனைத் தங்களிலிருந்தே தேர்ந்தெடுத்துக் கொள்ள அவர்கள் முன்வந்தனர்.

### இரகசிய வாக்களிப்புச் சட்டம் (Ballot Act-1872)

மேற்சொன்ன முறையில் வாக்குரிமையைப் பெற்ற தொழிலாளிகள் தங்களது எஜமானர்களின் பயமுறுத்தலுக்கு அஞ்சி, அவர்கள் விருப்பப்படியே வாக்களித்துவந்தனர்.இவ் அநீதி நீங்க வேண்டுமானால், தொழிலாளர்கள் மறைவிடத்திற்குச் சென்று இரகசியமாக வாக்களிக்கவேண்டும் என்று பலஅறிஞர்கள் நினைத்தனர். அதற்கேற்ப 1872ஆம் ஆண்டில் மறைவு வாக்கீட்டுத் தேர்தல் (Ballot Act) சட்டமொன்று பாராளுமன்றத்தில் நிறைவேறியது. அதனால், வாக்காளர்கள் தங்கள் விரும்புவோர்க்குப் பயமின்றி வாக்களிக்க முடிந்தது. வாக்காளர்களுக்கு ஏராளமாக இலஞ்சம் கொடுக்கும் வழக்கமும் இச் சட்டத்தால் பெரிதும் குறைந்தது. ஏனெனில்'தொழிலாளர்கள் பணத்தையும் வாங்கிக் கொண்டு,வாக்கையும் வழங்காது போய்விடக்கூடும் என்று பணக்காரர்கள் அஞ்சினர். 1883ஆம் ஆண்டில் தேர்தல் காலங்களில் பதவி விரும்பும் பணக்காரர்கள், சட்டவிரோதமாக ஊழல்களில் ஈடுபடுவதைத் தடுக்கும் சட்டமொன்று (Corrupt and Illegal Practice Act) கொணரப்பட்டது. அச் சட்டப்படி தேர்தல் காலங்களில் இலஞ்சங் கொடுத்தோர், வாக்காளர்களைப்

பயமுறுத்தினோர், ஆள்மாறாட்டஞ் செய்தோர் (Impersonation) அனைவரும் கடுமையான தண்டனைகளுக்குட்படுத்தப்பட்டனர்.

மூன்றுவது பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம் (1884)

கிளாட்ஸ்டன் என்னும் அமைச்சர் 1884இல் பாராளுமன்றத்தைச் சீர்திருத்தவேண்டி வாக்குரிமைச் சட்டம் (Franchise Act) மறு வினியோகச் சட்டம் (Re-distribution Act) என்ற இரு சட்டங்களைக் கொண்டுவந்தார். முதற் சட்டப்படி கவுன்டிகளில் குடியிருப்பு வசதியுள்ள அனைவருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. அதன்மூலம் விவசாயத் தொழிலாளர்களும் வாக்குரிமைபெற்றனர். இரண்டாவது சட்டப்படி 15,000 மக்களுக்கும் குறைந்த ஜனத்தொகையுள்ள நகரங்களெல்லாம் பாராளுமன்றத்துக்கு உறுப்பினர்களை அனுப்பும் உரிமையை முற்றிலும் இழந்தன. 15,000 முதல் 50,000 வரை ஜனத்தொகையுள்ள நகரங்கள் ஒவ்வொரு உறுப்பினரையும், 50,000 முதல் 1,65,000வரை ஜனத்தொகையுள்ளநகரங்கள் இரண்டிரண்டு உறுப்பினர்களையும் பாராளுமன்றத்துக்கு அனுப்பும் உரிமையைப் பெற்றன. கவுன்டிகளும் பெரிய நகரங்களும், ஒவ்வொரு உறுப்பினரைத் தேர்ந்தெடுத்து அனுப்பக்கூடியதும் ஏறக்குறைய சமமான அளவுடையதுமான சிறுதேர்தல் தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. என்றாலும், சமத்துவப் பிரதிநிதித்துவமென்பது நடைமுறையில் ஏற்படவில்லை. 16,000 மக்களைக் கொண்ட ஒரு நகாம் ஓர் உறுப்பினரை அனுப்ப உரிமை பெற்றிருந்தபோது, 1,60,000 பேர்களைக் கொண்ட ஒரு நகரம் இரண்டு உறுப்பினர்களை மட்டுமே தேர்ந்தெடுக்கும் உரிமை பெற்றது. எனவே, ஜனத்தொகைக்கேற்றபடி பிரதிநிதித்துவம், இச் சட்டத்தாலும் வழங்கப்படவில்லை. எனினும், வயல்களில் வேலைசெய்த ஏழைத் தொழிலாளர்களுக்கும், வாக்குரிமையை விரிவுபடுத்தியதால், இச் சட்டமானது ஜனநாயக வளர்ச்சிக்குப் பெருமளவு துணைபுரிந்ததென்று கூறலாம்.

1911ஆம் ஆண்டுப் பாராளுமன்றச் சட்டம்

19ஆம் நூற்றாண்டில் பாராளுமன்றச் சீர்திருத்தம் என்றால், பொதுமக்கள் சபையைப் பற்றிய சீர்திருத்தமாகவே அது பலராலும் கருதப்பட்டது. ஆனால், 20ம் நூற்றாண்டில் அது பொதுமக்கள் சபை, பிரபுக்கள் சபை இரண்டுக்கும் உள்ள உறவுகளைச் சீர்திருத்துவதாகக் காட்சியளித்தது. 1911ஆம் ஆண்டில் ஏற்பட்ட பாராளுமன்றச் சட்டப்படி பிரபுக்கள்சபையின் அதிகாரங்கள் பெரிதும் குறைக்கப்பட்டன. பண மசோதாக்களைத்

களைத் (Money Bills) திருத்தவோ, நிராகரிக்கவோ பிரபுக்கள் சபைக்கு ஒருவித அதிகாரமுமில்லை என்றும், ஏனைய மசோதாக்களை நிறுத்திவைக்கும் அதிகாரமேயன்றி, நிராகரிக்கும் உரிமையும் அதற்குக் கிடையாதென்றும் அச்சட்டம் கூறியது. சாதாரண மசோதாக்களைப் பிரபுக்கள் சபை இரண்டு முறை நிராகரிக்க லாம். அதன் பின்னர், மூன்றும் முறையும் பொதுமக்கள் சபையில் அதுநிறைவேறி, பிரபுக்கள் சபையால் நிராகரிக்கப் படுமானால், அம் மசோதா தானாகவே சட்டமாகி விடும். அங்ஙனம் அச் சட்டம் பொதுமக்கள் சபையின் வலிமையைக் குறைத்தது. மேலும் பாராளுமன்றத்தின் காலவரையறை ஏழாண்டுகளி லிருந்து ஐந்து ஆண்டுகளாகக் குறைக்கப்பட்டது. இச்சட்டத் தைப் பாராளுமன்றத்தில் கொண்டுவந்த ஆஸ்குவித் பிரபு, சட்டத்தைப் பிரபுக்கள் சபையில் நிறைவேற்ற 500 புதிய பிரபுக்களை நியமிக்குமாறு மன்னரைக் கேட்டுக் கொள்ளலா மென்று எண்ணினார். ஆனால், அதற்கு அவசியமில்லாதபடி பிரபுக்கள் சபைநடந்து கொண்டது. 1832 இல் அவர்கள் செய்தது போல் மசோதா, பிரபுக்கள் சபையில் வந்தபோது, அதை விரும்பாதவர்களெல்லாம் சபைக்கு வராமல் தத்தம் வீடு களிலேயே தங்கிவிட்டனர்.

**மக்களின் பிரதிநிதித்துவச் சட்டம்** (Representation of the People Act) 1918

மக்கள் தொகைக் கேற்றபடி பிரதிநிதித்துவம் அமைய வேண்டுமென்ற கருத்தை மேற்சொன்ன சீர்திருத்தச் சட்டங்க ளெவையும் நடைமுறையில் கொண்டுவரவில்லை. இக் குறையை நீக்க, 1918 இல் மக்களின் பிரதிநிதித்துவச் சட்டம் பாராளு மன்றத்தில் நிறைவேறியது. அதன்படி நகரங்களும் கவுண்டி களும் ஒன்றுபோல் மக்கள் தொகைக்கேற்பப் பிரதிநிதிகளை அனுப்பும் உரிமையைப் பெற்றன. 70,000 ஜனத்தொகைக்கு ஓர் உறுப்பினர் வீதம் தேர்ந்தெடுக்க அவை உரிமைபெற்றன. ஒரு தொகுதியிலுள்ள மக்கள் தொகையை 70,000-த்தால் வகுக் கும்போது, எஞ்சியுள்ள எண்ணிக்கை 50,000-க்கும் அதிகமாக இருப்பின் அதற்கும் ஓர் உறுப்பினரைத் தேர்ந்தெடுக்க அத் தொகுதி உரிமை பெற்றது. 50,000-க்கும் குறைந்த மக்கள் தொகையுள்ள நகரங்கள் உறுப்பினரைப் பாராளுமன்றத்துக்கு அனுப்பும் உரிமையை இழந்தன. 50,000-க்கும் 1,20,000-க்கும் இடைப்பட்ட மக்கள் தொகையுள்ள தொகுதிகள் ஒவ்வொரு உறுப்பினரையும், 1,20,000 முதல் 1,90,000 வரை மக்கள் தொகையுள்ள பிரதேசங்கள் இரண்டிரண்டு உறுப்பினர்களையும் அனுப்பும் தகுதிகளைப் பெற்றன. இச் சட்டம் மேலும் ஒரு புரட்சிகரமான மாறுதலையும் தேர்தலில் ஏற்படுத்தியது. அது

வரை ஏற்பட்ட சட்டங்களெல்லாம் பெண்களுக்கு வாக்குரிமை யளிக்க முன்வரவில்லை. அதைக் கண்டித்து பென்தாம் (Bentham) மில் (Mill) போன்றவர்கள், எவ்வளவோ எழுதியும் பயனில்லை. 20 ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் பெண்களே தங்கள் உரிமைகளுக்காகக் கிளர்ச்சி செய்தனர். வாக்குரிமை வாதிகள் தங்கள் (Suffragetts) என்ற பெண்கள் சங்கத்தை ஏற்படுத்தி, அவர்கள்தங்கள்உரிமைக்காகப்போராடினுர்கள். சில சமயங்களில் அவர்கள் பாராளுமன்றத்தின்மேல் படையெடுத்துக் கடைகளின் ஜன்னல்களையும் உடைத்தனர். இதைக் கண்ட லாயிட் ஜார்ஜ் என்னும் பிரதமர் 1918 ஆம் ஆண்டுச் சட்டத்தைக் கொண்டு வந்து, அதன்மூலம் 30 வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்கு வாக்குரிமை வழங்கினுர். இச் சட்டத்தின் மூலம் பொதுமக்கள் சபையில் இடம்பெற்ற பெண்கள் ஒரு சிலரே யாவர். பால்டுவின் (Baldwin) என்பாரது அமைச்சரவையில் ஆத்தோல்கோமகள் (Duchess of Atholl) என்பவர் ஒரு துணையமைச்சர் பதவியைப் பெற்றுர். மாக்டனுல்ட் (Macdonald) மந்திரி சபையில் குமாரி மார்க்கரெட் பாண்ட்பீல்ட் (Margaret Bondfield) என்ற மங்கை காபினெட் அமைச்சர் பதவிபெற்றுர்.

### 1928 ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டம்

1928 ஆம் ஆண்டில் பால்டுவின் என்பார் கொணர்ந்த ஒரு சட்டப்படி ஆண்களுக்கும் பெண்களுக்கும் வாக்குரிமை சமமாக வழங்கப்பட்டது. 21 வயதுக்கு மேற்பட்டவர்கள் ஆண்களா யினும், பெண்களாயினும் சரிநிகர் சமமாக வாக்குரிமை பெற் றனர். வயது வந்த எல்லா ஆண்களும் பெண்களும் இங்ஙனம் நாட்டின் தேர்தலில் கலந்துகொள்ள உரிமை பெற்றனர்.

### 1944, 1948 ஆம் ஆண்டுச் சீர்திருத்தங்கள்

1944 ஆம் ஆண்டில் நாட்டின் மக்கள் தொகையில் ஏற்பட்ட பல மாறுதல்களால் மீண்டும் பாராளுமன்றப் பிரதிநிதித்துவ முறையை மாற்றியமைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆனுல், உலகப்போர் காரணமாகத் திட்டமாக எதையும் செய்ய முடியாத நிலையில் அரசும் பாராளுமன்றமும் இருந்தன. எனினும் பெரிய தொகுதிகள் இரண்டு மூன்று சிறிய தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு தொகுதிக்கும் ஒவ்வொரு அங்கத் தினரைப் பாராளுமன்றத்துக்கு அனுப்பும் உரிமையை அரசு வழங்கியது. 1948 இல் மீண்டும் பாராளுமன்ற இடப்பங்கீட்டு முறையில் ஒரு பெருஞ்சீர்திருத்தம் ஏற்பட்டது. அதன் பின்னரும் அவ்வப்போது ஏற்படும் மக்கள்தொகை மாறுதல்களுக்கேற்ப அ ஙவ பங்கிடப்படுவதற்கும் அச் சீர்திருத்தம் வகைசெய்தது.

# 20. நான்காம் வில்லியம் (தொடர்ச்சி)

# (1833-37)

## சீர்திருத்த சகாப்தம் (1833-50)

## (Era of Reforms)

**சீர்திருத்தக் கருத்துக்கள் ;** அடிமை முறை ஒழிப்பு (1833) ; தொழிற்சாலைச் சட்டம் (1833) ; புகைக் கூண்டு துடைப்போர் சட்டம் 1840- சுரங்கங்கள் சட்டம் 1842-1844, 1847, 1887, 1878. 1880 1901 ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட தொழிற்சாலைச் சட்டங்கள் ;

**கல்விச்** சீர்திருத்தம் (1833) ; இரவலர் சட்டத்திருத்தம் (1834-35); பொருளாதாரச் சீர்திருத்தம்; மதத் துறைச் சீர்திருத்தங்கள்; தல ஆட்சித் துறைச் சீர்திருத்தங்கள் ; இதர சீர்திருத்தங்கள்; தடையிலா வாணிகம்.

நான்காம் வில்லியத்தின் ஆட்சிக் காலத்தில் பிரிட்டனில் பாராளுமன்றச் சீர்திருத்தம் ஏற்பட்டதையொட்டி. வேறு பல நல்ல சீர்திருத்தங்களும் வெவ்வேறு துறைகளில் ஏற்பட்டன. 1832 ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டமானது, அதுகாறும் அடைபட்டுக் கிடந்த சீர்திருத்தப் பாதையைத் திறந்துவிட்டதெனக் கூறலாம். அதன் பின்னர், தாராளக் கொள்கையினர் என்ற புகழ்பெற்ற விக்குக் கட்சியினர் வெகு வேகமாக அச் சீர்திருத்தப் பாதையிலே முன்னேறலாயினர். அவர்களை முன்னேறினர் என்று சொல்வதை விடச் சூழ்நிலை அங்ஙனம் அவர்கள் முன்னேறும்படி வற்புறுத்தியது எனக் கூறலாம். எனினும், இங்கிலாந்தின் வரலாற்றில் 1833 முதல் 1837 வரையுள்ள காலமானது சீர்திருத்த சகாப்தம் என அழைக்கப்படுவதற்குப் பெரிதும் காரணமானவர்கள் விக்குக் கட்சியினரும் வில்லியமுமேயாவர் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. 1837க்குப் பின்னரும்

டோரிகள், விக்குகள் சென்ற வழியைப் பின் பற்றிச் சில சீர்திருத்தங்கள் செய்தனர்.

## சீர்திருத்தக் கருத்துக்கள்

19 ஆம் நூற்றாண்டுகளுக்கு முன்னர் இங்கிலாந்தில் உலவி வந்த கருத்துக்கள் சீர்திருத்தங்களுக்கு - முற்றிலும் முட்டுக்கட்டை போடுவனவாக அமைந்திருந்தன. ஆடம் ஸ்மித் போன்றோரின் தலையிடாக் கொள்கையானது (Laissez Faire Theory) அரசாங்கமோ, அதன் சட்டங்களோ தனி மனிதர்களின் செயல்களில் எவ்வளவுக்கெவ்வளவு தலையிடாதிருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு நாட்டு நலனுக்கு நல்லது என்று பறை சாற்றி வந்தது. அதேபோன்று மால்த்தஸ் (Malthus) என்பார் நாட்டின் ஜனத்தொகையைப் பற்றி ஒரு விதியை வெளியிட்டார். அதன்படி நாட்டின் உணவு உற்பத்தியானது ஜனத்தொகை பெருக்கத்தைவிட என்றுமே மிகமிகக் குறைவாகவே இருக்குமென்றும், ஜனத்தொகையானது பிணி, மரணம் போன்ற இயற்கை அபாயங்களாலும், போர் போன்ற செயற்கை இன்னல்களாலும் குறைவதே முறையென்றும், இல்லாவிடில், ஜனத்தொகைப் பிரச்சினை தீரவே தீராது எனவும் கூறினார். நாட்டின் செல்வநிலை ஒரு மாறாத நிதிக்குவை எனப் பலர் நினைத்தனர். அதிலிருந்தே தொழிலாளர்கள் தங்கள் கூலியைப் பெறுகிறார்களாதலால், தொழிற்சங்கங்களின் கிளர்ச்சியாலும், வேறு பல பரோபகாரிகளின் முயற்சியாலும் ஒரு சாரார் அதிகக் கூலி பெற்றால், அதற்கேற்ப மற்றொரு சாராரின் கூலிகள் குறைந்து விடும் என்றும் அன்னார் கருதினர். அதேபோல் ஏழைகள், அனாதைகள் முதலியோரைக் காப்பாற்றுவதும் தவறு என்றும், அதனால் ஜனத்தொகை பெருகி எல்லோர் ஊதியமும் குறைந்து விடும் என்று அவர்கள் கூறினர். இத்தகையோரின் கொள்கைக்குக் கூலிநிதிக் கொள்கை (Wage Fund Theory) எனப் பெயர். இத்தகையகொள்கைகளால் நாட்டின்தொழிலாளர்கள் நிலையை உயர்த்துவதும், சுகாதார நலன்களை வளர்ப்பதுங்கூடத் தவறு என மக்கள் நினைத்து வந்தனர். ஆனால், 19ஆம் நூற்றாண்டில் அக்கொள்கைகள் எல்லாம் ஒவ்வொன்றாகத் தவிடு பொடியாயின. மெத்தடிஸ்டுகளும், சுவிசேஷ நற்செய்தி பரப்புவோரும் (Evangelicals) உயிர்களுக்குச் செய்கிற சேவையே இறைவனுக்குச் செய்யும் உயர்ந்த வழிபாடாகும் என்ற கொள்கையை வற்புறுத்தலாயினர். ஆனால், அரசு பலவந்தப்படுத்தி மக்களைத் தர்மம் செய்யச் சொல்லக்கூடாதென அவர்கள் கூறினர். அல்லல்படும் மக்களைக் காத்து அவர்தம் இன்னல்களைத் தீர்ப்பதே அரசின் கடமையாகும்

என, வேறு சிலர் வற்புறுத்தினர். பென்தாம் (Bentham). மில் (Mill) போன்ற பயனீட்டுவாதிகள் (Utilitarians) எந்தக் கொள்கையையும், அது விளைவிக்கும் பயனைக்கொண்டே மதிப்பிட வேண்டுமெனக் கூறலாயினர். முன்னையோர் மொழிந்தது என்பதற்காகவோ, பண்டைய மரபு என்பதற்காகவோ எதையும் நல்லது எனக் கருதக்கூடாதென்றும், பெரும்பான்மையான மக்களுக்குப் பெரியதொரு நன்மையை விளைவிப்பவை எவையோ அவைமட்டும் நல்லவை என்றும். மற்றவை எல்லாம் தீயவை என்றும் அவர்கள் போதித்தார்கள். கிரிமினல் சட்டச் சீர்திருத்தங்கள், சிறைச்சாலைச் சீர்திருத்தங்கள் முதலியன ஏற்படுவதற்கெல்லாம் அவர்கள் பெரிதும் காரணமாயிருந்தனர். நாட்டில் பரோபகாரிகளின் (Humanitarians) தொகை நாளுக்குநாள் பெருகியது. மக்களை மாக்களாய் மதிப்பதை நிறுத்தி, மக்களாக மதித்து அவர்தம் வாழ்வை வளப்படுத்த வேண்டும் என வில்பர்ஃபோர்ஸ் (Wilber force) போன்ற பரோபகாரவாதிகள் சதா கூச்சலிட்டுவந்ததும் நாட்டில் நல்ல பல சீர்திருத்தங்கள் ஏற்படக் காரணமாயிருந்ததெனலாம்.

## அடிமைமுறை ஒழிப்பு [1833]

## (Abolition of Slavery)

*1832* ஆம் ஆண்டுச் சட்டப்படி சீர்திருத்தப்பட்ட பாராளுமன்றமானது *1833* ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் கூடியது. அதில் ஏறக்குறைய 150 டோரிகளும், 320 விக்குகளும், 70 தீவிர சீர்திருத்த வாதிகளும் (Radicals) பிரதிநிதிகளாக வீற்றிருந்தனர். விக்குகள் பெரும்பான்மையினராகயிருந்தும் அவ்வவ்வமயங்களில் அவர்கள் தீவிர சீர்திருத்தவாதிகள், ஐரிஷ் பிரதிநிதிகள் ஆகிய இரு வகுப்பாரின் தயவையும் எதிர்பார்க்க வேண்டியிருந்தது. பொதுமக்கள் சபையிலும் பிரபுக்களின் செல்வாக்கே அதிகமாக இருந்தது. அதில் மூன்றில் ஒரு பகுதியினர் பிரபுக்களின் புதல்வர்களாகவே இருந்தனர். ஏனையோரும் விக்குகளின் ஆதரவாளர்களாகவே இருந்தனர். எனவே, விக் மந்திரிகளும், தீவிர சீர்திருத்தவாதிகளும், டோரிகளுள் பீல் போன்றவர்களும் ஒத்துழைத்துப் பல நல்ல சீர்திருத்தச் சட்டங்களை இயற்றினர். அவற்றுள் முதன்மையாக வைத்து எண்ணப்படத் தக்கது அடிமைமுறை ஒழிப்புச் சட்டமாகும்.

மனிதன் மனிதனுக்கு இழைத்துவந்த தீங்குகளில் எல்லாம் தலையாயது அடிமை வியாபாரமாகும். இவ் வியாபாரத்தில் முதன் முதலில் ஈடுபட்டவர்கள் ஸ்பானியர்களும் போர்த்துக்

கீசியர்களும் ஆவர். 16 ஆம் நூற்றுண்டுமுதல் அவர்கள் ஆப்பிரிக் காவுக்குச் சென்று நீக்ரோக்களை மிருகங்கள்போன்று வேட்டை யாடிப் பிடித்துப் புழுக்கம் நிறைந்த சிறு கப்பல்களில் அடைத்து, அமெரிக்காவிலும் மேற்கிந்தியத் தீவுகளிலும் விற்றுப் பெரும் பொருள் ஈட்டினர். இதைக் கண்ட ஆங்கிலேயர்களும் இவ் வியாபாரத்தில் மெல்ல ஈடுபடலாயினர். எலிசபெத் இராணி யார் போன்ற ட்யூடர்களும், ஜேம்ஸ் போன்ற ஸ்டுவர்ட்டுகளும் அவ் வியாபாரத்திற்கு ஊக்கம் அளித்தனர். ஆனால், இதை எதிர்த்த தாமஸ் கிளார்க்சன் (Thomas Clarkson) வில்லியம் வில்பர் ஃபோர்ஸ் (Wtlliam Wilberforce) என்ற இரு அறிஞர்கள் ஓயாது பிரசாரம் செய்தனர். அவர்களும், அவர்களது நண்பர்கள் பத்துப்பேரும் சேர்ந்து அடிமை வியாபார ஒழிப்பை வற்புறுத்த வென்றே 1788 இல் ஒரு கழகத்தைத் தோற்றுவித்தனர். 1792 இல் வில்பர் ஃபோர்ஸின் முயற்சியால் அடிமை வியாபார ஒழிப்பு மசோதா பொதுமக்கள் சபையில் நிறைவேறியது. பிரபுக்கள் சபை அதை நிராகரித்துவிட்டது. கடைசியாக 1807 இல் அம் மசோதாவானது ஃபாக்ஸ் (Fox) என்பவரது முயற்சியால் சட்ட மாயிற்று. ஆனால். அச் சட்டம் அடிமை வியாபாரத்தை மட்டும் ஒழித்ததேயன்றி, அடிமை முறையை ஒழிக்கவில்லை. எனவே கள்ளத்தனமாக வியாபாரம் நடக்க ஆரம்பித்தது. அமெரிக்கா விலும் மேற்கிந்தியத் தீவுகளிலும் கரும்பு, பருத்தி முதலிய பொருள்களை விளைவித்தவர்கள் நீக்ரோ அடிமைகளாதலால், அங்கிருந்த ஐரோப்பிர்களுக்கு அடிமைகளில்லாமல் வாழ முடிய வில்லை. பிரிட்டிஷ் கப்பல்கள், அமெரிக்கக் கப்பல்களைச் சோதிப் பதை அவர்கள் கண்டித்தனர். ட்ரினிடாட் (Trinidad) போன்ற ஆங்கிலக் குடியேற்றத் தீவுகளில் அடிமை வியாபாரம் ஓரளவு நின்றதுமின்றி, அடிமைகளைக் கொடுமைப்படுத்தும் தீய பழக்க மும் நின்றது. ஆனால், ஜமைகா போன்ற தீவுகளில் 1807ஆம் ஆண்டுச் சட்டம் அமல் நடத்தப்படவே இல்லை. இதைக்கண்ட பிரிட்டிஷ் மந்திரிகள் அடிமை முறையையே ஒழிப்பது என்ற தீர் மானத்திற்கு வந்தனர். குடியேற்ற நாட்டு அலுவலகத்தில் உயர் பதவியிலிருந்த ஜேம்ஸ் ஸ்டீபன் என்பார் வில்பர்ஃபோர் ஸின் புதல்வராகையால் அக் கொள்கையை ஆதரித்தார். ஸ்டேன்லி (Stanley) என்ற அமைச்சரும் மேற்படி கொள்கையை வற்புறுத்தினர். எனவே, 1833ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் அடிமை முறை ஒழிப்புச் சட்டம் பாராளுமன்றத்தில் நிறை வேறியது. அதன்படி, ஆறு அல்லது ஆறு வயதிற்குட்பட்ட சிறுவர்கள் விடுதலை அளிக்கப்பட்டனர். ஏனையோர் 7 ஆண்டு களுக்குத் தங்கள் எஜமானர்களிடம் ஊதியம் செய்தபின் விடுதலை பெறுவர் எனக் கூறப்பட்டது. இந் நிபந்தனையும் 1838இல்

நீக்கப்பட்டது. அடிமைகளை வைத்திருந்தோர்க்கு இழப்பீடு (நஷ்ட ஈடு) அளிக்க 20 இலட்சம் பவுன்களைப் பாராளுமன்றம் ஒதுக்கியது. உண்மையில் இச் சட்டம் நிறைவேறியதால் பிரிட்டிஷ் மக்களுக்கு எவ்வித இலாபமுமில்லை. அதற்குப் பதிலாக நஷ்டமே ஏற்பட்டது. மேற்கிந்தியத் தீவுகளின் செல்வமும் வியாபாரமும் அதனால் குறைந்தன. ஏராளமான இழப்பீட்டைக் கொடுத்தே பிரிட்டிஷார் தங்களது பேரரசில் அடிமை முறையை ஒழிக்க முடிந்தது. அதனால், அவர்களது மனச்சாட்சி அமைதியடைந்தது. மரணப்படுக்கையில் கிடந்த வில்பர் ஃபோர்ஸின் உள்ளம் குளிர்ந்தது. சுயநலம் கருதாது வெறும் நல்லெண்ணம் காரணமாகவே பிரிட்டிஷார் இயற்றிய சட்டங்களுள் இச் சட்டம் தலைசிறந்ததென்பதில் ஐயமில்லை.

## தொழிற்சாலைச் சட்டம் (1833)
## (Factory Act)

19 ஆம் நூற்றாண்டுக்கு முன்னர், பேராசை பிடித்த முதலாளிகள் தங்களது தொழிற்சாலைகளில் சிறுவர்களை ஏராளமாக அமர்த்தி அதிக வேலைவாங்கிக்கொண்டு குறைந்த ஊதியம் கொடுப்பது வழக்கமாக இருந்தது. இந் நிலையை முதன்முதலில் மாற்ற முயன்றவர் பீல் என்னும் லங்காஷையர் பஞ்சாலை அதிபராவார். 1802இல் அவர் 'சுகாதார ஒழுக்கச் சட்டம்' (Health and Morals Act) என்ற ஒரு சட்டத்தைக் கொணர்ந்து சிறுவர்கள் 12 மணி நேரத்திற்குமேல் ஆலைகளில் வேலைசெய்வதைத் தடுத்தார். 1819ஆம் ஆண்டு ஏற்பட்ட இரண்டாவது தொழிற்சாலைச் சட்டமொன்று 9 வயதிற்குட்பட்ட சிறுவர்கள் தொழிற்சாலைகளில் சேர்க்கப்படுவதைத் தடுத்தது. வயது வந்த சிறுவர்களும் 12 மணி நேரத்திற்குமேல் வேலைசெய்வதை அது தடுத்தது. 1825 இல் ஏற்பட்ட 'ஹாப் ஹவுஸ் சட்டம்' (Hob-House-Act) சிறுவர்கள் உணவருந்தக் குறிப்பிட்ட நேரங்களில் வெளியே விடப்பட வேண்டும் எனவும், சனிக்கிழமைகளில் ஓய்வு அளிக்கப்படவேண்டும் எனவும் கூறியது. 1832 இல் இப் பிரச்சினை பற்றி அதிக ஊக்கம் எடுத்துக்கொண்டவர் ஆஷ்லி பிரபு (Lord Ashly) ஆவார் அவருக்கு ஷாப்ட் ஸ்பரி பிரபு (Earl of Shaftsbury) என்ற பெயரும் உண்டு. 1833 இல் அவர் தமது மசோதாவைப் பொதுமக்கள் சபையில் கொண்டுவந்து, ஆல்தார்ப் (Althorb) என்னும் சபாநாயகரின் பெயரில் அதைச் சட்டமாக்கினார். அதன் படி, 9 வயதுக்குப்பட்ட சிறுவர்களை எந்தத் தொழிற்சாலையும் வேலைக்கு நியமிக்கக்கூடாது. 9 வயதிற்குமேற்பட்ட, ஆனால் 13 வயதிற்குட்பட்ட சிறுவர்கள் நாளொன்றுக்கு 9 மணிகளுக்கு

மேலும், 13 வயதிற்கு மேலும் 18 வயதிற்குமுட்பட்ட இளம் வாலிபர்கள் (Youngsters) நாளொன்றுக்கு 12 மணிகளுக்கு மேலும் வேலைவாங்கப்படக் கூடாது. இந் நிபந்தனைகளைத் தொழிற்கூடங்கள் கடைப்பிடிக்கின்றனவா என்பதைக் கண் காணிக்க அரசு பல கண்காணிப்பாளர்களை நியமித்தது. தனி மனிதர்களின் வாழ்வில் அரசு இப்படித் துணிந்து தலையிட ஆரம் பித்தது இதுவே முதல் தடவையாகும்.

புகைக்கூண்டு துடைப்போர் சட்டம் (1840)

ஷாப்ட்ஸ்பரி பிரபு தொழிலாளர்களின் நண்பர். அவர் களது நன்மைக்காக இடைவிடாது பாடுபட்டவர். புகைக் கூண்டுகளைத்துப்பரவு செய்யும் அபாயகரமான தொழிலில் சிறுவர்கள் ஈடுபடுத்தப்படுவதை அவர் வன்மையாகக் கண்டித்து, அதை ஒழிக்க ஓயாது முயன்ருர். 1840ஆம் ஆண்டில் கொணரப் பட்ட ஒரு சட்டம் அவரது வேண்டுகோளை நிறைவேற்றியது. அவரது தூண்டுதலால் சுரங்கத் தொழிலாளிகளின் நிலையை ஆராய ஒரு ராயல் கமிஷன் 1840 இல் ஏற்பட்டது. அதன் சிபாரிசுகளையொட்டி 1842இல் சுரங்கங்கள் சட்டம் (Mines Act) ஏற்படுத்தப்பட்டது. பெண்களும் 13 வயதுக்குட்பட்ட சிறுவர் களும் சுரங்கங்களில் வேலை செய்யக் கூடாதென அச் சட்டம் கூறியது. இவ் வெற்றிகளால் உற்சாகம் பெற்ற ஆஷ்லி, தொழிற்சாலைச் சட்டங்கள் மேலும் சிலவற்றை ஏற்படுத்த முயன்ருர். 1844 இல் அவரது முயற்சியால் ஏற்பட்ட ஒரு சட்டம், பெண்களும் இளம் வாலிபர்களைப் போன்றே நடத்தப் படல் வேண்டுமென்றும், ஓடும் இயந்திரங்களைத் துப்புரவுசெய்ய அவர்களைப் பயன்படுத்தக்கூடாது என்றும் குறிப்பிட்டது. 1847 இல் அவரது மற்ருெரு சட்டம், பெண்களும் இளம் வாலிபர்களும் 10 மணிக்குமேல் ஆலையில் தொழில்செய்யக்கூடாது எனக் கூறியது. இதைத் தொடர்ந்து 19ஆம் நூற்ருண்டில் வேறு பல சட்டங்களும் உருவாயின. 1867இல் ஏற்பட்ட ஒரு சட்டம் தொழிற்சாலைக் கண்காணிப்பாளர்களின் அதிகாரத்தை அதிக மாக்கியதுடன். பெண்களையும், சிறுவர்களையும் அபாயகரமான தொழில்களில் நியமிக்கக்கூடாது எனவும் வரையறுத்தது. 1878இல் கிராஸ் (Cross) என்பவர் கொணர்ந்த ஒரு சட்டம், அதற்குமுன் இயற்றப் பெற்ற சட்டங்களையெல்லாம் ஒன்றுசேர இணைத்தது. 1880ஆம் ஆண்டில் ஏற்பட்ட சட்டம், தொழிலா ளர்கள் விபத்துக்குள்ளானுல் அவர்களுக்கு நஷ்டஈடு வழங்குவது முதலாளிகளின் பொறுப்பு எனக் கூறியது. 1901ஆம் ஆண்டில்

ஏற்பட்ட சட்டம் தொழிலாளர்களின் சுகாதார வசதி போன்ற வற்றைக் குறிப்பிட்டது.

## கல்விச் சீர்திருத்தம் (1833)

சீர்திருத்தப் பாராளுமன்றமானது கல்வித் துறையிலும் கவனத்தைச் செலுத்திப் புகழ்பெற்றது. அதுவரையிலும் ஏழை களின் கல்வியைக் கவனித்து வந்தவர்கள் திருச்சபையைச் சேர்ந்த வர்களே. ஆனால், 1833ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தில் ஆரம்பக் கல்விக்கென ஆண்டொன்றுக்கு 20,000 பவுன்கள் வீதம் ஒதுக்கப்பட்டது. அதைக்கொண்டு புதிய கல்விக்கூடங்கள் கட்டலாமென்று அச் சட்டம் கூறியது. 1839இல் இவ்வுதவிப் பணமானது 30,000 பவுன்களாக உயர்த்தப்பட்டது. இவ்வுதவிப் பணத்தை வழங்கும் அதிகாரம் பிரிவிகவுன்சில் கமிட்டி ஒன்றுக்குத் தரப்பட்டது. அக் கமிட்டி, பள்ளித்தணிக்கை யாளர்களை நியமித்தது.

## இரவலர் சட்டத் திருத்தம் (1834-35)
## (Poor Law Amendment Act)

ஆக்கத் தொழிற்புரட்சியினால் ஏற்பட்ட பல தீய விளைவு களில் வறியோர் தொகை நாளுக்குநாள் பெருகியதும் ஒன்றாகும் முதலாளிகள் வேண்டுமென்றே தொழிலாளர்களுக்குக் குறைந்த ஊதியம் கொடுத்தனர். மழையின்மையால் நாட்டில் விளைச்சல் குன்றியது. நெப்போலியப் போர்களினால் நாட்டின் வறுமை வளர்ந்தது. இவ்வாறு வறுமையுற்ற மக்களின் அவதியைப் போக்க 1795 இல் பர்க்ஷயர் மாஜிஸ்ட்ரேட்டுகள் சிலர் ஒன்று கூடி ஒரு திட்டம் தயாரித்தனர். அதற்கு 'ஸ்பீன்ஹாம்லாந்துத் திட்டம், என்று பெயர். அத் திட்டமானது வாழ்க்கைக்குப் போதிய அளவு ஊதியம் பெறாத தொழிலாளர்களுக்கு உதவிப் பணம் (Doles) வழங்கவேண்டும் எனவும், அதற்குரிய பணத்தைத் திரட்ட அந்தந்த பாரிஷ் (Parish) மக்களே 'வறியோர் வரி' ஒன்றைக் கொடுக்க வேண்டுமெனவும் கூறியது, இத் திட்டம் நாளடைவில் பல கவுன்டிகளுக்கும் பரவியது.

இங்ஙனம், இத் திட்டம் ஏழைகளுக்குப் பண உதவி அளித்து வந்தது எனினும், உண்மையில் அதனால் நன்மைக்குப் பதில் தீங்கே விளைந்தது. இத் திட்டத்தால் குறைந்த ஊதியம் பெறும் ஏழைகளுக்கு, அவர் தம் குடும்பத் தேவைக்கேற்ப உதவிப் பணம் (Dole) அளிக்கப்பட்டு வந்ததால், அவர்கள் வேலை அதிகம் செய்து

ஊதியம் அதிகம் பெறவேண்டுமென்ற கவலையின்றிக் காலங்கடத்தினர். உழைத்தாலும், உழைக்காவிட்டாலும் வேண்டிய அளவு பணம் கிடைக்கின்றது என்ற எண்ணத்தால் அவர்களுள் பலர் சோம்பேறிகளாக மாறினர். தொழிலாளர் பற்றுக்குறையை அரசு நிவர்த்தி செய்ததால், முதலாளிகளும் வேண்டுமென்றே ஊதியத்தைக் குறைத்தனர். அவர்கள் சுமக்கவேண்டிய பொறுப்பினை வரிசெலுத்துவோர் சுமக்க நேரிட்டது. இங்ஙனம் பல ஊழல்களைத் தோற்றுவித்த இரவலர்சட்டத்தைத் திருத்த கிரே பிரபுவின் மந்திரி சபை முயன்றது. ஆனால், நடைமுறையில் அதைக் கொண்டு வந்தது மெல்போர்ன் பிரபுவின் மந்திரி சபையேயாகும்.

1834 இல் ஏற்பட்ட இச் சட்டத்தின்படி உடலுரம் உள்ள ஏழைகளுக்குப் புறவுதவி (Out door Relief) வழங்குவது நிறுத்தப் பட்டது. அத்தகையோர் பலவந்தமாகத் தொழிலகங்களில் (Work Houses) சேர்க்கப்பட்டுத் தொழில் செய்யும்படி வற்புறுத்தப் பட்டனர். தொழிலகங்கள் ஏறக்குறைய சிறைச் சாலைகளைப் போல் பல அசௌகரியங்களைக் கொண்டனவாக இருந்தன. சார்லெஸ் டிக்கென்ஸ் (Charles Dickens) என்ற ஆசிரியர் எழுதிய ஆலிவர் ட்விஸ்ட் (Oliver Twist), டிஸ்ரேலி என்பாரெழுதிய 'சிபில்' (Sybil) போன்ற நூல்கள் தொழிலகங்களின் தன்மையை நன்கு எடுத்துக்காட்டுகின்றன. இக் கொடுமைகளுக்கு அஞ்சியாகிலும் சோம்பேறிகள் வெளியில் சென்று வேலை செய்யட்டுமே என்பதுதான் மேற்படி சட்டத்தைக் கொணர்ந்தவர்களின் நோக்கமாகும். ஆனால், உண்மையில் அத் தொழிலகங்களின் கொடுமையே 'சார்டிஸ்ட் இயக்கம்' போன்ற பயங்கர இயக்கங்கள் நாட்டில் தோன்றக் காரணமாயமைந்தது. உடல் நலமின்றி உண்மையாகவே பிச்சையெடுக்கத் தகுதியுள்ளவர்களுக்குமட்டும் மேற்குறித்த சட்டம் வெளியுதவி அளித்தது. பிச்சையெடுப்போர்க்கு உதவி வழங்க ஒவ்வொரு பாரிஷிலும் உள்ளவர்கள் பாரிஷ் கவுன்சிலுக்கு ஒரு வரி செலுத்துவது வழக்கம். 1834 ஆம் ஆண்டுச் சட்டப்படி அப்படிப்பட்ட பாரிஷ்கள் பல ஒன்றுகச் சேர்க்கப்பட்டன. அப்படிப்பட்ட ஒன்றியங்கள் (Unions) சிலவற்றைக் கண்காணிக்க 'மத்திய இரவலர் சட்டக் குழு' (Central Poor Law Board) ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. அது மத்திய பாதுகாப்பாளர்குழு (Central Board of Guardians) எனவும் அழைக்கப்பட்டது. ஆனால், அக் குழுவின் அதிகாரங்கள் மிகக் குறைவாகவேயிருந்தன. இலண்டனில் வாழ்ந்த இரவலர் சட்ட ஆணையாளர்களே பாரிஷ் யூனியன்களைக் கட்டுப்படுத்தினர். இக் குழு நாளடைவில் தல

அரசாங்கக் குழுவாக (Local Government Board) மாறியது. தற்போது அது சுகாதார மந்திரி சபை (Ministry of Health) எனப் பெயர் பெற்றுள்ளது.

சட்டத் துறையில் டோரிகள் ஏற்கெனவே பல சீர்திருத்தங்களைச் செய்தனர் என்பதை நாம் சென்ற அத்தியாயத்திலே கண்டோம். 1833 இல் ப்ரோஹாம் (Brougham) என்பவர் பல சீர்திருத்தங்களை அத்துறையில் ஏற்படுத்தினார்; நீதிபதிகள் இலஞ்சம் வாங்குவதை ஒழித்தார்; பொதுச் சட்டம் அமல் நடத்தப் பெறும்போது ஏற்படும் பல ஊழல்களை நீக்கினர். பிரிவி கவுன்சில் என்ற சபையில் முக்கியமான ஒரு சிலர் அடங்கிய குழு ஒன்றை ஏற்படுத்த, அதை மத வழக்குகள், கப்பற்படை வழக்குகள் முதலானவற்றை விசாரிக்கும் மேல்முறையீட்டு நீதி மன்றமாக (Appeal Court) அமைத்தார்.

## பொருளாதாரச் சீர்திருத்தம்

1833 இல் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் சாசனம் திருத்தி வெளியிடப்பெற்றது. அதன்படி அக் கம்பேனி சீன வியாபாரத்தில் பெற்றிருந்த தனியுரிமை (Monopoly) நீக்கப்பட்டது இந்திய மத்திய அரசாங்கம் இந்தியா முழுமைக்கும் சட்டமியற்ற லாமென்று கூறப்பட்டது. மெக்காலே பிரபு சட்ட உறுப்பினராகக் (Law Member) கவர்னர் ஜெனரலின் நிருவாக சபையில் நியமிக்கப்பட்டார்.

1834 இல் இலண்டனிலும், ஏனைய சுற்று மாவட்டங்களிலும் ஜாய்ன்ட் ஸ்டாக் பாங்குகள் (Joint Stock Bank) ஏற்பட அரசாங்கம் அனுமதித்தது; இங்கிலாந்து பாங்கானது (Bank of England) வட்டிகளை விருப்பம்போல் மாற்றிக்கொள்ளவும் இசைவளித்தது. அதோடு 5 பவுன் மதிப்புள்ள தாள்- நோட்டுகளை வெளியிடவும் அப் பாங்கு உரிமைபெற்றது. 1836 இல் செய்தித் தாள்களின் மீது விதிக்கப்பெற்ற முத்திரைக் கட்டணம் (Stamp Duty) நான்கு பென்ஸிலிருந்து ஒரு பென்னியாகக் குறைக்கப்பட்டது. தபால் கட்டணத்தைக் குறைக்க கிரே மந்திரிசபை நடவடிக்கையொன்றும் எடுக்கவில்லை. ஆனால், மெல்போர்ன் மந்திரி சபையின்போது 1840 இல் இங்கிலாந்தில் ஒரு பென்னித் தபால் முறை (Penny Postage) ஏற்பட்டது. அதனால், ஒரு பென்னி செலவழிக்கக்கூடிய வறியோர்களும் தபால்முறையின் நன்மைகளைப் பெறமுடிந்தது.

## மதத் துறைச் சீர்திருத்தங்கள்

ஆங்கிலத் திருச்சபையின் பொருளாதார அமைப்பில் ஒரு சிறிது மாற்றம் தேவைப்பட்டது. மதகுருமார்கள் தங்கள் ஆளுகைக்குட்பட்ட இடங்களில் வாழ்ந்த குடியானவர்களிடமிருந்து 'டைத்' (Tithes) என்னும் ஒரு வரியைப் பெற்றுவந்தனர். அறுவடைக் காலங்களில் அவர்கள் வயல்களுக்குள் நுழைந்து 10 இல் ஒரு பங்கு தானியத்தை அறுத்துக்கொண்டுவருவது வழக்கம். இந்த வழக்கத்தை மாற்றித் தானியத்திற்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட தொகை கொடுத்தால் போதும் எனக் கூறும் சட்டம் 1836 இல் ஏற்பட்டது. பதில்மாற்றுச்சட்டம் (Com mutation Act) என அஃது அழைக்கப்பட்டது. தானியங்களுக்குப் பதிலாகக் கொடுக்கப்படவேண்டிய தொகையானது சென்ற ஆண்டுகளில் நிலவிய சராசரித் தானிய விலையையொட்டிக் கணக்கிடப்படல் வேண்டுமென அச் சட்டம் கூறியது. மேலும் 'சமய ஆணைக்குழு' (Eccelesiastical Commsssion) ஒன்றும் இச் சட்டத்தால் ஏற்படுத்தப்பட்டது. இக் குழு சில பிஷப்புக்களையும் வேறு சில பிரமுகர்களையும் கொண்டதாயிருந்தது. ஓரளவு வருமானத்தைத் தேடிக்கொள்ளவும், அவ் வருமானத்தைக் கல்வி, சமய அறிவு இவற்றைப் பரப்பப் பயன்படுத்தவும் இந்த ஆணைக் குழுக்கள் அதிகாரம் பெற்றிருந்தன. திருக்கோயில்களும் அவற்றின் வருமானங்களும் இவ்வாறு ஒரு மத்திய நிறுவனத்தின் கட்டுப்பாட்டுக்குள் வந்தன. மேலும், திருச்சபையானது ஒரு சில விஷயங்களில் தனது கொள்கையை விட்டுக்கொடுத்தது. ஆங்கிலிக மதச் சோதனைகளின்றிப் பட்டம் வழங்கும் உரிமையை இலண்டன் பல்கலைக்கழகம் பெற்றது. இதனால் ஆங்கிலிகர் அல்லாதாரும் பட்டங்கள் பெற ஏதுவாயிற்று. 1836-ல் ஏற்பட்ட திருமணச் சட்டத்தின்படி ஆங்கிலிகத் திருச்சபைக்கு இணங்காதார் (dissentors) தங்கள் தங்களது திருக்கோயில்களிலேயே திருமணம் புரிந்துகொள்ளவும், ரிஜிஸ்திரார்கள் முன்னிலையில் திருமணம் புரிந்துகொள்ளவும் அனுமதிக்கப்பட்டனர்.

## தல ஆட்சித் துறைச் சீர்திருத்தங்கள்
## (Reforms pertaining to Municipal Corporation)

நகர ஆட்சிக் கழகங்களில் ஊழல்கள் மிகவும் மலிந்திருந்தன சில நகரங்களில் தேர்தல்களே நடப்பதில்லை, ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பட்ட நகரமன்ற உறுப்பினர்கள் வாழ்நாள் முழுவதும் பதவி வகித்தனர். ஓர் உறுப்பினர் பதவி காலியானால், உடனே மற்ற உறுப்பினர்கள் தாமே புதிய உறுப்பினரைத் தேர்ந்தெடுத்

தனர். ஒற்றுமையாக இருந்துகொண்டு அந் நகரமன்றங்கள் தங்கள் விருப்பம்போல் மக்களைக் கொள்ளையடித்தன. 1832ஆம் ஆண்டுச் சட்டப்படி நகரங்களில் குடியிருப்பு வசதியுள்ளவர்கள் எல்லாரும் வாக்குரிமை பெற்றனர். தல ஆட்சிச் சபைக்கும் அம் மாதிரியே வாக்குரிமை பெறவேண்டுமென அவர்கள் துடித்தனர். அதற்கேற்ப, 1835இல் நகராண்மைக் கழகங்களில் சீர்திருத்தச் சட்டமானது (Municipal Corporations Act) பாராளுமன்றத்தில் நிறைவேறியது. அதன்படி நகரமன்ற உறுப்பினர்கள் வரிசெலுத்தும் குடிமக்களால் மூன்றுண்டுகளுக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்படுதல் வேண்டும். மூன்றுண்டுகளுக்குப் பின்னரும் அவர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படலாம். பழைய முறைகளையே போற்றிவந்த பலர் இத்தகைய தேர்தல் முறையை எதிர்த்தனர். அவர்களை மகிழ்விக்க வேண்டி சபையின் 4-ல் ஒரு பங்கினரை அவர்களது சகாக்களே பார்த்துத் தேர்ந்தெடுக்கலாம் என்ற திருத்தம் சட்டத்தில் சேர்க்கப்பட்டது. அவ்வாறு தேர்ந்தெடுக் ஆல்டர்மென்கள் (Aldermen) எனப்படுவர். கப்பட்டவர்கள் ஆறு ஆண்டுகளுக்கு அவர்கள் பதவி வகிப்பர். அதன் பின்னர் மீண்டும் அவர்கள் தேர்ந்தெடுக்கப்படலாம், நகரசபைகளில் பல்லாண்டுகள் பயிற்சி பெற்றவர்களையே ஆல்டர்மென்களாக நியமித்தல் நாளடைவில் மரபாக ஏற்பட்டுவிட்டதால், மேற் சொன்ன முறை நல்ல பலன்களையே தந்தது. நகர சுயாட்சி முறையானது உண்மையிலேயே இங்கிலாந்தில் ஏற்பட்டது, 1835ஆம் ஆண்டுச் சட்டத்தின் பின்னர்தான் எனலாம்.

## இதர சீர்திருத்தங்கள்

1836இல் பிறப்பு இறப்புக் கணக்கெடுக்கும் முறையானது சீர்திருத்தப்பட்டது. சிறுவர்கள் தொழிற்சாலைகளில் வேலைக்கு அமர்த்தப்படுவதைத் தடுக்க வேண்டுமானுல், அவர்கள் வயது சரி வரத் தெரிய வேண்டும். எனவே, பிறந்த குழந்தைகள் எல்லோருடைய பிறந்த தேதிகளையும் பதிவு செய்யும் முறை கையாளப்பட்டது. மேலும், திருமணமான தேதிகளையும், இறந்த தேதிகளையும் பதிவு செய்யும் ஏற்பாடும் செய்யப்பட்டது. முதலாளிகள், தொழிலாளிகளுக்குக் கூலி கொடுப்பதற்குப் பதிலாகப்பண்டங்களை மிக உயர்ந்த விலைக்கு விற்றுவந்த பழக் கமும் நிறுத்தப்பட்டது. ஆல்தார்ப் என்பவரது முயற்சியால் வேட்டைச் சட்டங்கள் சீர்திருத்தப்பட்டன. அனுமதிச் சீட்டைப் பெற்றவர்களெல்லாம் அதனுல் வேட்டையாடும் உரிமை பெற்றனர். விக்குகள், மக்களின் கருத்து வெளியீட்டுரிமையைப் பேணி வளர்த்தார்கள். பலாத்காரத்தில் இறங்கினுலன்றிக்

கூட்டங்கள் எதையும் கலைக்க அவர்கள் முற்படவில்லை. சார்ட்டிஸ்டுகள் நடத்திய எந்தப் பத்திரிகையையும் அவர்கள் தடைசெய்யவில்லை.

1837-ல் நான்காம் வில்லியம் இறந்து, விக்டோரியா மகாராணியார் பட்டத்துக்கு வந்தபின் விக்குகள் சில ஆண்டுகள் வாளாவிருந்தனர். அதன் பின்னர் டோரிகள் சீர்திருதங்களில் ஊக்கங் காட்டலாயினர். 1842, 1847ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட தொழிற்சாலைச் சட்டங்களைக் கொணர்ந்தவர்கள் டோரிகளேவார்.

## தடையிலா வாணிபம்

பீல்என்பாரின் மிகப்பெரிய சாதனை தடையிலாவாணிகத்தை வளர்த்ததாகும். 1842-ல் அவர் இங்கிலாந்தில் இறக்குமதி செய்யப்பட்ட கச்சாப்பொருள்கள், செய்பொருள்கள் மீதிருந்த சுங்க வரிகளை நீக்கினர். அதனால் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடுகட்ட அவர் ஒரு வருமான வரியை மக்கள்மீது சுமத்தினர். 1845-ல் அவர் மேலும் பலவரிகளைக் குறைத்தார். 1845-ல் அயர்லாந்தில் ஏற்பட்ட பஞ்சத்தின் காரணமாக பீல் தமது கட்சிக் கொள்கைகளை முற்றிலும் மாற்ற வேண்டுமென எண்ணினர். 1846ல் அவர் தானியச் சட்டங்களை ரத்து செய்துவிட்டார். அதனால் விவசாயம் மேலும் வளர்ச்சியடைந்ததேயன்றிக் குன்றவில்லை.

மேற்கண்ட பல சீர்திருத்தங்களால், எல்லோரும் எச்சரித்தபடி, தீயபலன்கள் ஒன்றும் ஏற்பட்டுவிடவில்லை மக்களின் செல்வாக்கு நாற்புறமும் வளர்ந்தது; கூலிகள் உயர்ந்தன; வேலையில்லாத் திண்டாட்டம் பெரிதும் குறைந்தது. கைத்தொழிலும் விவசாயமும் வளர்ந்தன.

1850-க்குப் பின் மக்களின் நலன் கருதி அரசாங்கம் சீர்திருத்தங்களைச் செய்ய அதிகமாக முன்வரவில்லை. 1868-ல் கிளாட்ஸ்டன் பிரதமர் ஆன பின்னர்தான், மேலும் சில சீர்திருத்தங்கள் ஏற்பட்டன. ஆனால், மிக இன்றியமையாத சீர்திருத்தங்கள் எல்லாம் ஏறக்குறைய 1850-க்குள்ளாகவே இங்கிலாந்தில் ஏற்பட்டுவிட்டன எனக் கூறலாம்.

## ஹனோவர் வமிசாவளி அட்டவணை-1

முதலாம் ஜார்ஜ்

இரண்டாம் ஜார்ஜ்

- பிரடெரிக் வேல்ஸ் இளவரசர்
  - மூன்றும் ஜார்ஜ்
    - நான்காம் ஜார்ஜ்
    - நான்காம் வில்லியம்
    - எட்வர்டு (கென்ட் கோமகன்)
      - விக்டோரியா மகாராணி = சாக்ஸிகோபர்க் நாட்டு ஆல்பர்ட் இளவரசர்
        - ஏழாம் எட்வர்டு
          - ஐந்தாம் ஜார்ஜ்
            - எட்டாம் எட்வர்டு
            - ஆரும் ஜார்ஜ்
              - எலிசபெத் இராணியார்
        - விக்டோரியா = மூன்றும் பிரடெரிக் (ஜெர்மனி)
          - ஜெர்மன் நாட்டு இரண்டாம் வில்லியம்
    - எர்னெஸ்ட் கம்பர்லாந்து கோமகன் ஹனோவர் அரசர்
- கம்பர்லாந்து கோமகன் வில்லியம்

# மேற்கோள் நூற்பட்டியல்

## (BIBLIOGRAPHY)

### பாட நூல்கள் (Text Books)

1. Adams, G. B. English Constitutional History (also Tamil Translation).
2. Carter and Mears A History of Britain.
3. Keir, D. L. Constitutional History of Modern Britain, 1485-1937.
4. Keith Feiling History of England (also Tamil Translations
5. Ramsay Muir A History of Britain.
6. Rayner, R. M A concise History of Britain
7. Southgate, G. W. A Text Book of Modern English History (2 Vols.)
8. Taswell Langmead English Constitutional History (also Tamil Translations).
9. Trevelyan History of England (also Tamil Translationa),
10. Venkataraman, T. K. Constitutional History of Britain. Vol II.
11. ,, A Manual of British History, Part III
12. Warner, Marten & Muir A New Groundwork of British History.

### பார்வை நூல்கள் (Reference Books)

1. Basil Williams The Whig Supremacy (Oxford History of England).
.2 Bigham The Prime MInisters of Britain (1721—1924).
3. Bradley Fight with France for North America.

4. Bradley — Wolf - in English-men of action series
5. Burke — Reflections on the French Revolution
6. Davies, A. M. — George III and the Constitution
7. Harrison, F. — Chatheim
8. Hutton — John Wesley
9. Leadam — Politiøal History of England
10. Lecky — History of England in the 18th Century
11. Lodge — The Relations of Great Britain and Prussia during the 18th Century
12. Lord Rosebery — Pitt
13. Mahan — Influence of Sea Power in History
14. ,, — Life of Nelson
15. Morley — Walpole (in Twelve English Statesmen Series)
16. Macaulay — Eassys on Chatham, Clive and Warren Hastings
17. Marriott, J. A. R. — England Since Waterloo
18. Namier — Structure of Politics at the accession of George III
19. ,, — England in the Age of American Revolution
20. Napier — History of the Peninsular War
21. Paine — The Rights of Man
22. Plums — The First Four Georges
23. Robertson — England under the Hanoverians
24. Rayner, R. M. — England in Modern Times, 1714-1930
25. Seeley — Expansion of England
26. Toynbee — Industrial Revolution
27. Turberville — Johnson's England
28. Williamson — Short History of British Expansion
29. Workman — Methodism
30. Wrong — Hanoverian England

# கலைச்சொல்லகராதி

## A

Agrarian Revolution — விவசாயப் புரட்சி
Armed Neutrality — படைதரித்த நடுநிலைமைக் கூட்டுறவு

## B

Ballot Act — இரகசிய வாக்களிப்புச் சட்டம், மறைவு வாக்கீட்டுச் சட்டம்
Bicameral Legislature — ஈரங்க சட்டசபை முறை
Board of Control — மேற்பார்வைக் குழு

## C

Cabinet — கேபினட், அமைச்சரவை
Cashier-des, doleances — குறைவிளக்க அறிக்கை
Civil List — அரசரது செலவுப் பணம்
Combination Laws — கூட்டங்கூடல் தடுப்புச் சட்டங்கள்
Common Law — பொதுமைச் சட்டம்
Corn Laws — தானியச் சட்டங்கள்
Constituent Assembly — அரசியல் நிருணய சபை
Continental System — கண்டத் திட்டம், பொருளாதார முற்றுகைத் திட்டம்
Copy-holders — பத்திர மானியதாரர்கள்
Crown — அரசு, இறை

## D

Declaratory Act — அறிவிப்புச் சட்டம்
Declaration of Independence— சுதந்திர அறிவிப்பு
Declaration of the Rights of Man — மனித உரிமைகள் பற்றிய அறிவிப்பு
Democracy — மக்களாட்சி, ஜனநாயகம்
Direct taxes — நேர்முக வரிகள்

## E

Enclosure Movement — நில அடைப்பு முறை இயக்கம்
Enlightened Despots — அறிவு சான்ற வல்லரசர்கள்
Executive — நிருவாக நிறுவனம்

## F

Factory System — தொழிற்சாலை முறை
Family Compact — குடும்ப ஒப்பந்தம்
Federation — கூட்டரசு
First Lord of the Treasury — கருவூலத் தலைமை முதற் பிரபு
Flying shuttle — எறிநாடா
Free-holder — உரிமை மானியதாரர்
Free Trade — தடையிலா வாணிகம்
Franchise — வாக்குரிமை

## H

Heresy — புறச்சமயம்
Heretics — புறச்சமயிகள், சமயவிரோதிகள்
Homogenity — கருத்தொருமை
Humanitarianism — பரோபகார மனப்பான்மை, ஜீவகாருண்யம்
Humanism — மனித நோக்குடைமை

## I

Industrial Revolution — தொழிற்புரட்சி
Inventions — புதுமைப் படைப்புகள்
Inflation — பணவீக்கம்

## J

Jacobites — யாகோபியர்கள்
Jesuits — இயேசு திருச்சபையினர்

Justices of Peace — அமைதிகாண் நீதிபதிகள்

L

Laissez Faire — தலையிடாக் கொள்கை
Lay Peers — இலௌகீகப் பிரபுக்கள்
Lease-holders — குத்தகைச் சாகுபடியாளர்கள்

M

Materialism — உலோகாயதம்
Ministerial Responsibility — அமைச்சரவைப் பொறுப்பு
Militia — நாட்டுப் படை

N

Navigation Act — கப்பல் போக்குவரத்துச் சட்டம்
Nonconformists — (திருச்சபைக்கு) இணங்காதார்

O

Old Colonial Policy — பழைய குடியேற்ற நாட்டுக் கொள்கை
Olive Branch Petition — சமாதான விண்ணப்பம்
Octennial Act — எட்டாண்டுச் சட்டம்
Old Pretender — மூத்த போலி அல்லது புரட்டன்
Open Field System — வேலியிடா வேளாண்முறை

P

Parliament — பாராளுமன்றம்
Parliamentary Government — பாராளுமன்ற ஆட்சிமுறை
Penal Code — தண்டனைச் சட்டங்கள்
Peninsular War — தீபகற்பப் போர்
Permanent Settlement — நிலையான நிலவரி ஏற்பாடு
Power loom — விசைத்தறி

Q

Quadruple Alliance — நால்வர் கூட்டுறவு

R

Radicals — தீவிர சீர்திருத்தவாதிகள்
Reciprocity Treaties — பரஸ்பர வரிவிலக்குச் சட்டம்
Rent — வாரம், வாடகைத்தொகை, குத்தகை

Regent — இடைக்காலப் பாதுகாப்பாளர்
Reign of Terror — பயங்கர ஆட்சி
Rotation of crops — மாற்றுப் பயிர் வேளாண்முறை

S

Septennial Act — ஏழாண்டுச் சட்டம்
Socialism — சமதர்மம்
Social Contract — சமுதாய ஒப்பந்தம்
Speculation — ஊகவாணிகம்
Stamp duty — பத்திர முத்திரைக் கட்டணம்
South Sea Bubble — தென்கடல் நீர்க்குமிழி
Stock — இருப்பு நிதி
Suffragettes (பெண்கள்) வாக்குரிமை வாதிகள்
Subsidiary Alliance — படைத்துணை உடன்படிக்கை

T

Trade Unions — தொழிற் சங்கங்கள்
Triennial Act — மூவாண்டுச் சட்டம்

U

Unicameral Legislature — ஓரங்க சட்டசபை முறை
Utilitarians — பயனீட்டுவாதிகள்

V

Vested Interests — வேரூன்றிய சுயநலன்கள்

W

Wages — கூலிகள்
Warp — பாவு நூல்
Woof — ஊடு இழை
Water Frame — நீர்ச்சட்டம்
Whig Oligarchy — விக் பணக்காரச் சிறுகுழு ஆட்சி
Writ — கட்டளை

# பொருள் குறிப்பகராதி